# தொண்டைமண்டலசதகம்.

இஃது
தொண்டைமண்டல வேளாளர்மீது
படிக்காசுப் புலவரியற்றியது.

—:0:—

தொண்டை மண்டலாதீனம் ஸ்ரீநகரம்காஞ்சிபுரம் மெய்கண்ட
சிவாசார்ய மடாதிபராகிய தேவமாந்ய தேவஸ்ரீ ஞானப்பிரகாச
குருசுவாமிகள் கட்டளைப்படிக்கும், வேளாளரில் பலர்
வேண்டுகோளின்படிக்கும், இம்மண்டலத்து வெண்
குன்றக்கோட்டம் பெருநகர்நாடு ஷை பெரு
நகர் நத்தம் வளவந்தையார் கோத்திரம்

பிச்சையப்ப முதலியார் குமாரர்
அகஸ்தியப்ப முதலியாரால்
அணிந்துரையியற்றி,

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப்புலவர்

ம - ா - ா - ஸ்ரீ.

அ. க. அமிர்தம்பிள்ளை,

யவர்களால் பரிசோதிக்கப்பட்டு

வேலூர்:
விக்டோரியா அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1887.

# பூர்வம் பலபட்டடைச்

சொக்கநாதப்புலவரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்ததமிழ் வரைந்தவேட்டைப் - பட்டாலே சூழ்ந்தாலும் பூவுலகும் பரிமளிக்கும் பரிந்தவ்வேட்டைத் - தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்குந் துய்யசேற்றில் - நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டிலிட நளினந் தானே.

# தொண்டை மண்டல சதகம்

## சாரசங்கிரகம்.

முற்காலத்தில் திருஞானசம்பந்த சுவாமிகள் முதலிய சைவசமயாச் சாரியர்கள் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகளென்னும் அப்பர் வேளாளத்திருமேனியார் இவர் சமணரால் இடப்பட்ட நீற்றறைமுதலிய பல துன்பங்கள் தம்மை யணுகாதபடி அனேக வற்புதங்களை விளக்கித் தமிழ்வேத மென்னுந் தேவாரங்களை யோதித் திருவருளிற் கலந்தார்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் வேளாளத் திருமேனியார்பதின் மூவர். இவர்கள் முத்திபெற்று ஆலயங்கடோறும் பூசிக்கப் பெற்றிருக் கின்றனர்.

பரமசிவம் " உலகெலாமுணர்ந்தோதற்கரியவன் " என்று மடியெடுத் துக் கொடுக்கப் பெரிய புராணஞ் செய்தருளிய சேக்கிழார் சுவாமிகளும் வேளாளத் திருமேனியார்.

மகா பாகவதஞ் செய்த அனதாரியப்ப முதலியாரும், கண்ட சுத்தி பாடி யானைக்கன்றும் வளநாடும் பெற்ற கவி வீரராகவ முதலியாரும், சுப்பிர மணியக்கடவுளும் வேண்டப் பெற்ற பாடலியற்றக் கூடிய பொய்யா மொ ழிப் புலவரும் வேளாளர்களே. இவர்கள் மகா வித்துவான்களாக விளங்கினர்.

சடையப்ப முதலியார் மரபில் வந்த சுவேத வனப்பெருமான் என்னுந் திருநாம முடைய திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் சுத்தாத் துவித சித்தாந்தஸ்தாபகராய் சிவஞானபோத மென்னும் அருமை ஞானசாத் திரத்தைத் திரவிடத்தில் மொழிபெயர்த்துத் தந்தருளினர்.

திருக்குருகையில் காரிமுதலியார் சுபுத்திரராய் அவதரித்த நம்மாழ் வார் திருவாய் மொழிப் பிரபந்தத்தைச் செய்தருளி விசிஷ்டாத்வைத மத மூத்தாரணஞ் செய்தனர்.

இராமாயணத்தில் வியந்து சொல்லப்பட்டிருக்கும், திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியாரும், அயன்றைச் சடையப்ப முதலியாரும், வல்ல மாநகரம் காளத்தி முதலியாரும், திருநின்றையூர் காளத்தி முதலியாரும், ஏகம்பவாண முதலியாரும், இச்சதகத்திற் சொல்லப்பட்டிருக்கும், மற்ற னேகப் பிரபுக்களும் கங்கைக் குலத்தினரென்று விளங்குகின்றார்கள்.

## தொண்டை மண்டல சதகம்

இதன்றி, — வேளாளர் அம்மானை யென்னும் பிரபந்தத்தில்

சீராரிந்தத் தாரணியில் தெய்வதன்மையார் குலத்தார்
காராளும் வேளாளர் கங்கை குலமம்மானை
காராளும் வேளாளர் கங்கை குல மாமாயின்
பேராரு மாருப் பிரியா ரோவம்மானை
ஆறுகச செய்கையமைந்தாகாணமம்மானை

---

மீட்டு மறை யோதல் வேட்டல் விரும்பல் பொருளை
ஈட்டலுழல் கோகாத்த லென்றறு தொழிற் குடையார்
கூட்டு மறுதொழிலைக் கொண்டனரே யாமாயின்
காட்டுமறு தொழிலைக் காணுரோ வம்மானை
கரணத் தறுதொழிலார் கடவுளரே யம்மானை.

---

கோதனம் பூவினவசியம் கொண்டுலகி லெல்லோர்க்கும்
ஆதார மாகி யமருவா ரம்மானை
ஆதார மிவ்வுலகாக காய்த்தாரக மாகில்
மாதாதரவாகும் வசியரோ வம்மானை
மட்பாலர் மூன்று வசியருமா மம்மானை.

---

இன்னும் இவ்வாறுகத்தொண்டைமண்டலசதக விளுவிடை முதலிய பலநூல்களில் அனேக திருஷ்டாந்தங்களைக் காணலாம்.

இவ்வாறுய் மகிமைகளடங்கிய இத்தொண்டை மண்டல சதக மானது சிறிது நாட்கு முந்தி அச்சிடப்பட்டிருந்த சதகத்திற்கும் கையேட்டுப்பிரதிகட்கும் மிகுந்த பேதமுடைத்தாகி, எழுத்து, சீர், தளை, அடி, தொடை முதலியன, சிதைந்தும், பிறழ்ந்தும், வேறுபட்டிருத்தலை நோக்கிச் சுத்தபாட மாக்குவிக்கும் பொருட்டு ஒருவாறு திருத்திப் புத்துரையுடன் பதிப்பிக்கப் பட்டது. இதனை வாசிக்கும் எமது நண்பர்கள் இலக்கணபேத மேனும் பாடபேதமேனும் உரைகளிலடங்கிய கதாபேதமேனும் கண்டு தமதுகருத்தை ஞாயத்தோடு எமக்கு அனுப்புவார்களாயின் அவர்கள் கருத்தை எமது நண்பர்களோடாராய்ந்து சீர் தூக்கி அவர்கள் செய்த நன்றியையும் வெளிப் படக்காட்டி இரண்டாம் பதிப்பு அச்சிட முயன்றிருக்கின்றனம்.

இங்ஙனம்,

[illegible] பெருநகர், அகஸ்தியப்பமுதலியார்.

காஞ்சிபுரம் சடகோபநிலயம் பாடசாலை பிரதானபண்டிதர்
பேட்ரிம்மடி திருமலை லக்ஷ்மீகுமார கோடி கன்னிகாதானம்
வீரராகவ தாதாசாரியர் இயற்றியது.

---

[illegible] ௧ ||

[illegible] ௨ ||

[illegible] ௩ ||

[illegible] ௪ ||

[illegible] ௫ ||

---

ஷை யார் குமாரர் சதாவதானி
அரங்கநாததாதாசரியர் இயற்றியது.

[illegible] ௧ ||

[illegible] ௨ ||

[illegible] ௩ ||

---

திருவாவடுதுறை மஹாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கருளொருவராகிய வண்டுவனம் - க - சொக்கலிங்கஒதுவா மூர்த்தியார் இயற்றிய சிறப்புக்கவிகள்.

காஞ்சீபுரம் பச்சையப்பா இஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர் கணபதிப்பிள்ளைகளியற்றியது.

பொருந்துசொல்லிசையுநல்லிசைந்திரகவனசித்ததேவ
பாராருமபராகரணதிராகரணவினியோகபதசமூக
நேராருமபொருளிலங்கவிரித்தவுரையின்றோர்க்குநேயமூட்டிடன்
றாராருங்கந்தரநாதன்கருணையிதுவாமென்னக்கழறலாமே.

—*(*)*—

திருநெல்வேலி ஜில்லா சாத்தூர்தாலூக்கா - சிந்தம்பல்லி
சங்கரலிங்கமுதலியார் குமாரன், வீரப்பமுதலியார்

இயற்றிய ஆசிரியப்பா.

சீர்வளர்மார்புத்திருநெடுமாற ன், ஓர்தனிப்பதுமவுந்தியுதித்தோ,
னேர்பெறவகுத்தவெழுநிலவரைப்பி ற், றோதருகாவலநவெனும்பெரி ய,
நன்னிலமகஞ்சு நகைமதிமுகமா ங், தொன்மைசாறொண்டைமண்டலத்து
யர்நத, காஞ்சிமாநகர்வாழ்கருணைப்பரம்பொரு, ளாஞ்சிவ மலகண்டெசா
தாட்கன் பு, பூண்டமெய்ச்சைவம்பொருந்தியபுண்ணிய ங், காணடி
வர்மேன்மைக்கவிவலலோ ரு, மாசைகொள்செய்நதீ யருகுறுபெருநகர.
வாசனற்றொண்டைமண்டலவேளா ண், குலத்தவன்மேழிகக்கொடியின
ன்வாய் மை. கலத்தகுவலயகறுந்தொடைபுனைந்தோன், விண்புவிபாதல
வியன்மூவுல கும், வண்மையான்மதிக்கவளர்பிரசாதன், பொச்சநீங்கா
ரம்பூண்டியாவர் க்கும், பிச்சையீயகுவதாற் பிச்சையப்பனென ச்,
சற்பெயர்தரித்ததருவைநேசகா த், தற்புதக்குரிசிலகங்கனிந்தியற் று,
மெய்த்தவத் துதிததுவிளங்குவன்விச்சை, யுய்த்துணர்கேள்வியனென்று
நாற்கவியோ, டிலக்கணவிலக்கியமிசைந்தமுத்தமிழுந், தலக்கனேரவடி
வாய்த்தழைத்தநங்கோமா ன், பஞ்சமாவிலிங்கப் பதிட்டைபேமுதலா,
வெஞ்சலில்காயிகமெவறழையும்புரிந்தோ ன், முனனமேழகடலுமுண்
ண்டனமுதமு ணி, யென்றுமெம்மகத்தியப்பனீங்கருணைய ன், தன்னி
டம்ஞானபபிரகாசசறகுரு வு, பின்னருளசுரக திங்கிவர்படிக்கா சு,
கண்டெனக்கவிசொலலுங்காவலாபுக ழ்த், தொணடைமண்டலச்சதகமெ
றுயர்பெய ர், விளப்பியநூறகுவிரித்துரைசெய்கெ ன, யிருபததுநாலு
க்கோட்டமேம்பட் டை, மருவியவொன்பது வளம்பெறுநா டு, மாயிரத்
தொடுதெள்ளாயிரத்தமு ழ், சாயவிலாத்துவாதசசகதாகோத்திரமும்,
பொருந்தியெளிதுபுலப்படும்வகையாய் த, திங்களஞ்செஞ்சடைச்சிவன
ருளா லே, துங்கவநனூற்குரை துலங்கிடசசெய் து, ஒப்பருங்கீர்ததியோ
டோங்கிடவன்றோ ன, இபபுவிதனிலச்சியறறினன்மாதோ.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப்புலவர்

ம-௱-௱-ஸ்ரீ.

அ. க. அமிர்தம்பிள்ளை யவர்கள் இயற்றிய

## நேரிசையாசிரியப்பா.

மலர்தலையுலகிற் பலர்புகழ்திருவின்
அலர்கதிராழி வலனுயர்திருமா
லுந்தியந்தடமலர் செந்தாமரைமலர்
வந்துயாமறைதே ரந்தணன்பயந்த
நகிர்ப்பணிகளுநலு முதுநீராடைத்
துதிபெறுநிலமகண் மதிமுகமாகிப்
புத்தலர்கொன்றைக் கத்திகைவேணி
வித்தகப்படிவ முத்தனுமயனைச்
சிறையிடைவைத்து மறையறிவுறுத்துமை
யிறைவற்கோம்பொருண் முறையிற்றெரிதரு
சேயு முதலாந் தூயபுலவரும்
ஆயுந்தலைமை மேயகோட்டியினு
மவ்விரிறைவரிற் செவ்விதினுணர்ந்தாங்
கெவ்வந்தீர்ந்து கவ்வியதவத்தோன்
நகத்துயர்பொதியி லகத்தியன்றலையிய
விகப்பில்புலவருந் தகப்பொருளோந்திரத்
தல்காப்புலமைப் பல்காப்பியந்தெரி
யொல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியன்முத
லிரண்டுதொடர்பத்திற் றிரண்டமாணுக்கருட்
முரண்டெறவாய்ந்த வரண்டருகழகத்துட்
நக்கீரனைமுதன் மிக்கீரமுடையார

புக்கடல்புலவர் தொக்கசங்கத்தும்
தென்னவன்கூடன் மன்னத்தாணியாத்
துன்னிவீற்றிருந்தாங் கின்னியல்வடசொல்
இறைவிபற்பல துறையமைபொருளுங்
குறையறுசொல்லுந் திறைகொடுத்தேத்த
மற்றைத்திசையி னுற்றபல்சொல்லாம்
பெற்றிமைத்தலைவியர் குற்றேவல்புரிய
எழுத்துஞ்சொல்லும் வழுப்படாப்பொருளும்
பழிப்பில்தொடையும் விழுத்தகுமணியும்
நலத்தமைந்தேனைப் புலத்தமைசொற்போ
லலக்கணுற்றலையா திலக்கணநிறைந்து
தன்பேராணையா லென்புபெண்ணுதல்
வன்புறுகதவம் பின்புதிறத்தல்
வலியகல்புணையா வொலிகடன்மிதத்தல்
கலிகெழுகங்கையான் மலிசந்துநடத்தல்
முதலையுண்ட மதலையைத்தருதல்
முதலியவற்றீதம் விதிதொழுதோங்க
விளையார்வெண்டா மரையாதனத்தி
யுளைசால்தெய்வத் தரசெனுந்தமிழர
சாட்சிபுரிதமிழ் மாட்சிசேருலகத்துத்
தொண்டைமாநாடா மண்டர்நாயகனிடங்
கொண்டமர்காஞ்சிசூழ் தொண்டமண்டலத்தோர்
தஞ்சீர்ப் † பழமைக ளெஞ்சாதெடுத்துச்
செஞ்சொற்றமிழ்க்கவி யின்சுவைத்துறையான்
படிக்காசுக்கொரு முடிக்கிசைக்கவிசொலும்
படிக்காசனென்னு மிடுக்குடைப்பாவலன்
வண்டமிழ்த்தொண்டை மண்டலசதகமென்
றெண்டகுபெயர்தந் தியற்றினனென்ப
அன்னதன்பயனு மன்னியபழமைகண்
றறந்துபோதலி னிறைந்துளபண்பின்
ரன்விழுக்குடிக் கேளாம்பெரியோர்

---

† பழமை-பழமைப் பட்டகதை.

வேண்டுகோளை * மேற்கோள் செய்து
"ஙப்போல் வளை" யெனச் செப்பியபொருள்சேர்
இப்பழமொழியை யொப்பியுட்கொண்டு
பிரமீச்சரத்தொளிர் பெருநிதிதன்னைத்
தரமிகும்புலவோர் தஞ்சொற்றாக்கி
விட்டுநிறுத்தே யெங்கணும்விளக்க
முட்டின்றுதான்செயு முயற்சிபோலவே
கொங்குதேர்வாழ்க்கை யஞ்சிறைத்தும்பியி
னெங்கணுமுயல்வி னிளையாதுமுயன்று
பாட்டின்பயனெலாம் பற்பலவழியா
னீட்டித்திரட்டி யினையந்தமுறையின்
பொழிப்புரையெழுதிப் புகழ்சான்மரபினர்
பழிப்பில்கதையெலாம் பான்மையின்விளங்கி
யாங்காங்கின்றி யமையாப்பொருளெலாம்
யாங்கணுமீட்டி யவ்வயினிறைத்து
விரித்துரையிதென மெய்ப்புகழ்ப்புலவோ
ரருத்தியிற்புகழ வரிதுருவாக்கினன்
இன்னவனென்னை னென்பிராயிற்
பன்னருந்தமிழ்தெரி பாவலீர்சொல்வெண்
மலிதேரானெனு மாண்பாப்பொருளா
மொலிகெழுகாஞ்சி யுயர்பதித்தென்பாற்
பெருநகரென்னும் பிரமீச்சரத்து
வருபுகழீண்டும் வாழ்க்கைப் பெருமிதன்
தொண்டைவேளாளர் தொல்குடியதனில்
வண்டருசீர்வள வந்தையர்கோத்திரன்
"முழங்குமியத்துட ஞோர்பாவலனெ" னு
வழங்கும்பெருநகர்ப் பிச்சப்பன்" னெனு
முதலுமீறுமா முடிந்தபாட்டில்
நுதலியபொருளா னோன்பாவலனை
யிதமுறப்பூசித் திசைப்பொருணிறைந்த
சதகம்பெற்ற தண்டலில்வண்மையன்

---

* மேற்கோள்-தலைமேற் கொள்ளுதல்.

இச்சையிற்சிவனேச மிகமேயூறும்
பிச்சையப்பன்றன் பெருந்தவவழிமுதல்
அவநேசக்களை யணுகாதுகட்டுச்
சிவநேசப்பயன் சிறக்குமுளத்தன்
மாதானைமூதூர் மன்னியொருபான்
மாதானைம்முகன் வாழ்கோவிற்றிருப்
பணியும்பஞ்ச லிங்கப்பதிட்டையும்
எணுநவக்கிரக ரிசைதாபனத்தொடு
செய்துமுடித்த திருவருட்செல்வன்
பொய்தீர்கேள்விப் புலமைசான்ற
அமிர்தநேர்செஞ்சொ லணிபுலவோர்க்கெலா
மிமிர்கடல்வரைப்பி னெஞ்சாக்கிழமை
உழுவலன்பி னுயர்தருநண்பன்
வழுவிறென்சொல் வடசொல்லிரண்டினும்
பன்னூற்பயனெலாம் பயின்றபடிமையோ
னென்னுருயிருக் கின்றுணையானோன்
தன்மனமுவந்துந் தருகொடைக்குணனும்
நன்னெறியொழுக்கமு நவையறக்கொளலா
னென்னபுலவரு மியம்பும்புகழெலாந்
தன்னவாகத் தாங்குந்தக்கோன்
இகத்திற்பரத்தை யிணக்கு
மகத்தியனெனும்பே ரணிகுணவானே.

---

சாத்துகவிகள் வருமாறு.

இஃது

மதுராந்தகம் அமெரிகன் மிஷன் இஸ்கூல்

தமிழ்ப்புலவர்

ஆர்ப்பாகை கார்த்திகேய முதலியாரவர்கள்

இயற்றிய

வெண்பா.

பண்குன்று வண்ணம் பரவச்செய் தான்பாரில்
திண்குன்றம் போன்று திகழுமே - வெண்குன்றக்
கோட்டப் பெருநகர்வாழ் கோனகத்யப் பன்றொண்டை
நாட்டுச் சதகவுரை நன்கு.

## அகூர் முருகேசமுதலியார் அவர்கள் இயற்றிய,

### கட்டளைக் கலித்துறை.

ஐந்தருவென்னப் பெருநகர்மேவு மகத்தியப்பன்
செந்தமிழாரும் படிக்காசுநாவலன் செய்ததொரு
சந்தமிகுந்தொண்டை மண்டலமென்னுஞ் சதகந்தனைக்
கெந்தவுலகுங்கொண் டாடவுரைநன் கியற்றினனே.

---

## வேலூர் இந்து யூனியன் ஹைஸ்கூல்
## தமிழ்ப்பண்டிதர்
## திருமானூர் கிருஷ்ணையரவர்களியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

காரோறு தண்டலைசூழ் பெருநகருக்கதிகாரி
கருணைவாய்ந்தோன்
சீரோறு பிச்சையப்பக் கோமான்றன்
செய்தவத்தா லுதித்தசீலன்
ஏரோறு பெருமானூர் பிரமீசர் தளிப்
பணிக ளியற்றியங்கண்
நீரோறு கதிர்முதலா மொன்பது கோள்
களின் பதிட்டைநிலவச்செய்தோன் (1)

இத்தகைய பலவறங் களியற்று வித்தோ
னிளம்பிறைச் சேகரதெம்மான்றன்
நத்தமைந்த செங்கரத்து நாரணற்கு
நாடவொணா நளினபாதந்
தத்துதிரைப் பவக்கடலைத் தாண்டுவித்து
முத்தியெனுந் தடத்திற் சேர்க்கும்
உத்தம நற்பெருங் கலத்துக் காகரமா
கியவிதைய முற்றமேலோன் (2)

இப்பாரிற் சுகமடைதற் கின்றியமை
யாப்பொருள்க ளிலராயேங்கி
அப்பாவென் செய்குதுமென்றகங்கரியா
முகம்புலரா வடைந்தோர்ச்சேர்ந்த

ஒப்போதற் கரியபெரு வறுமைகரங்
　குலைத்திரங்கி யுறைசார்பின்றி
எப்பாவம் புரிந்தனமென் றின்னலுறக்
　கைம்மாறின் றீகைசெய்வோன் (3)

முச்சகமும் பரந்தபெரும்புகழாள
　னருங்கவிஞன் முதிர்ந்தோர்சொல்லை
இச்சையுடனமுதமென வேற்றிடுவோன்
　குவலயத்தார் புனையுமேந்தல்
அச்செனும் வேளாண்குலத்துத் தோன்றியகோ
　னகத்தியப்பப் பூமான்யாரும்
மெச்சுகவிப் படிக்காசு புலவர்சிகா
　மணிபுனைந்த மிகுநா றன்னில் (4)

ஏரணுகு தொண்டைமண் டலசதக
　வுரையினிய நயங்களோடு
வாரமுடனன் கியற்றி வழுக்கள்களைந்
　தேட்டிருப்பின் மற்றுஞ்சாரும்
ஆரவென வுணர்ந்தெழுத வில்லாத
　வெழுத்ததனி லமைத்தான்சீர்த்த
தீரமுறுபுலவர் செவிக்குணவுகிடைத்
　ததெனை மகிழ் சிறக்கமாதோ (5)

---

## வேலூர் அமெரிகன் மிஷன் பாலிகாபாட-சாலை

### உபாத்தியாயரும் கோலப்புத்தகவாசிரியருமாகிய

## பெருநகர் - ப - திருவேங்கடம் பிள்ளை இயற்றிய,

### ஆசிரியப்பா.

திருவளர்பொழில்சேர் செய்கதிருமும்
பெருவளஞ்சிறந்த பெருநகராளன்
கங்கையங்குலத்தான் கடிக்குவலயத்தான்
சங்கையினலத்தான் றனிக்கொடியலத்தான்
பிச்சையப்பேந்திரன் பெற்றிடுபாலன்
இச்சைமூன்றையு மிகந்திடுசீலன்

மறையவர்தமக்கு மாவருகூலன்
இறையவர்தம்மனக் கிசைந்திடுகோலன்
இரவலர்தங்களுக் கிலையெனுவாயன்
வரகவிகட்குயர் வரன்போற்சகாயன்
பூதலந்தனிற்பல புரியுமுபாயன்
சாதுசங்கத்திற் சந்ததநேயன்
பொற்புறுமடியார் புரிவெண்பொடியான்
மற்புயன்யாவையும் வைதுமேகடியான்
பவமெனும்பெரிய பரவையிற்படியான்
சிவனடியார்க டிருவடிக்கடியான்
உலகமூன்றினுநிறை வுற்றிடுபுகழான்
இலகுயிரொன்றையு மினலுறவிகழான்
நல்லோர்நினைவி னுளுமேதிகழ்வான்
அல்லோர்சமுகமா காவெனவகழ்வான்
விளையாரிதழி வெண்மதிப்பணியான்
பிரமீசராலயப் பெருந்திருப்பணியான்
உரமிலாதவரை யுகந்துமேபணியான்
தரமிலாமானமென் றமணியப்பணியான்
சத்தியஞானந் தயாவெனுநிதியான்
நித்யகர்ம்மத்தி னிலையுறுமதியான்
உவர்க்கடலுதிக்கு மொளிர்கதிர்முதலா
நவக்கோள்பதிட்டை நலம்பெறச்செய்தோன்
தடங்களுக்கேகுஞ் சனர்களின்பொருட்டுத்
தடங்களையெல்லாஞ் சமம்புரிவித்தே
வாராவதிகள் வயங்குறவியற்றினோன்
வாரமாமறுகின் வசித்திடுபிள்ளையார்
கோயில்கட்குறுபணி குறைவறவமைத்தோன்
ஊரகவரத ருறையாலயத்திற்
சிரதாகப்பல திருப்பணிபுரிந்தோன்
ஆயும்வேளாள ரருங்குலத்துதித்தோன்
சோதிடமெனப்படுஞ் சொல்லருநூலொடு
நீதிநூற் கணிதநூ னிலையுணர்நிபுணன்
பணிகுகநதிதென் பாற்பெரும்யாதைக்
கணித்தாகப்பரந் தண்டமளாவி
மாசில்விச்சுவேசர் வளர்விசாலாட்சிவாழ்
காசிராமேச்சரங் கண்டுசேவிக்கும்

பதிகரும் பக்ஷியும் பற்பலவுயிரும்
வதிதரமிகுபரி மளகிழலளிக்கும்
தேங்கரசான்மா திகழ்மாதளைவழை
கோங்குசண்பகங்கமு கொடுபலாவாழைமுன்
அடர்மாவனமு மதனிடையடியர்வீழ்
கடவுள்வீற்றிடமணிக் கான்மண்டபமும்
அப்பெருநகருக் கருகுவாணணவும்
முப்பிரிவாக முறைபிறழாமல்
இருந்திட † வளாகமு மிரும்பசியிரிதர
அருந்திடுமுணவு மருள்சத்திரமும்
பாகன் ‡ ஞொள்கலும் பருதிபாய்மாக்களின்
தாகந்தன்னையுந் தணிக்குநீர்ப்பந்தரும்
அமைத்திடுபுண்ணிய னமரருலோகத்
திமைத்திடுமமிர்த மியங்குநன்மொழியினன்
அகத்தினிலருண்மரீஇ யகத்தினில்விளங்கும்
அகத்தியனேயெனு மகத்தியப்பேந்திரன்
பலநூற்களைநெறி படிக்காசென்னும்
புலவர்புகன்ற புகழ்பெருந்தொண்டை
மண்டலசதக மன்னும்பாக்கட்
கெண்டகுபொழிப்புரை யெழின்மிகுபொருணலம்
சொன்னலமனைத்துந் தொகுத்தியற்றினனால்
இந்நிலத்தவர்க ளின்புறவிண்டல
நாடரு நன்கு மதிக்கச்
சேடனும்வாணனுஞ் சிரக்கரமசைக்கவே.

---

## அகூர் முத்துசாமி முதலியாரவர்கள் இயற்றிய

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நீர்கொண்டகடலுலகில் வாவிசெறிதண்ணடை
  நெருங்குவால் வளையுயிர்க்கும்
நிலவுபொழிதரளம்வெண் மதியமெனவெண்குமுத
  நெட்டிதழ் விரிக்கும் வயல்சூழ்

---

‡ வளாசம் - இடம். | † ஞொள்கல் - இளைப்ப

பேர்கொண்ட பெருநகரில் வேளாள குலதிலகன்
  பிச்சையப்பன் றவத்திற்
பெருமைபெறவந்தவ தரித்தவனகத்தியப்
  பன்பெறற் கரியசெல்வன்
சீர்கொண்டதாதைதமு தாதையர்கள்சஞ்சிதத்
  திரவியப் பொற்பேழையைத்
திறந்திரவலர்க்குப்பொருட் செலவுசெய்தல்போல்
  சிவசமய முதல்வராய
வேர்கொண்டகாராளர் தொண்டமண்டலசதக
  மென்னுநூற் பேழைத்திறந்
தெடுத்தரும்பொருள்கல்வி வல்லவரலார்க்குசெல
  விட்டனன் கொள்ளைகொளவே.

---

## தவசுகிராமம் ஆயுள்வேதபண்டிதரும்,

### ஸ்ரீ மகாபாரதப்ரசங்கியும், ஆகிய

## வி - உ - அரங்கசாமிபிள்ளையவர்கள்

## இயற்றிய

### எழுசீர்க் கழிநெடிலடி சந்த விருத்தம்.

திரைசெறிந்திரு மருங்கிலும்மணிகள்
  சிந்துகந்தநதிசூழ்ந்திடுந்
திருவிளங்குபெரு நகரில்வாழும்வள
  வந்தைகோத்திரசிலாக்கியன்
கரையில்கீர்த்திபுனை பிச்சையப்பமகி
  காயலன்றவபலத்தினால்
கருணையோருருவ மாயுதித்திமே
  கத்தியப்பனிறைகல்விமான்
புரைகடிந்தபடிக் காசனென்மதுர
  புலவன்மிக்கபரிவொடுசொலும்
பொருவிறொண்டைமண் டலமெனுஞ்சதக
  மெளிதினிற்பொருள்விளங்கவே
உரைசிறந்திட விளம்பினனதை
  யுணர்ந்துநாணமிகுசேடனும்
ஒளித்தனன்பணி தலத்திலன்னவனிவ்
  வுலகெடுப்பனெனல்பொய்மையே.

சாற்றுகவிகள் முற்றிற்று.

# இந்நூல் உரை யாசிரியர் கூறியது.

## கலி விருத்தம்.

மங்கலந்தரு வான்மதிமத்தந்தா
மங்கலந்தரு மாசுணணோர்மகன்
மங்கலந்தரு மாறவிர்மாநிக
மங்கலந்தமு கந்தொறுமன்னுவான்.

## நேரிசை யாசிரியப்பா.

மலர்தலைநன்னா மகடனிக்கொழுநன்
அலர்திருமின்னா ளணைநிறத்தொருவன்
விண்ணவராங்கவ ரண்ணன்முதலோர்
தேவரிறைஞ்சுந் திறன்மகாதேவன்
மூவர்வணங்கும் முதல்வனருளிய
5 அண்டகோடிகளி னவிர்தருமிந்த
அண்டம்பதினான் குலகுடைத்தவற்றுள்
நிலவுலகத்து மலர்தலையிற்றிகழ்
சத்ததீவுகளின் உத்தமநீரது
நாவலந்தீவென வோவறநவில்வர்
நற்றீவதினோர் நவகண்டங்களுள்
முற்றோர்ந்திசைக்கு முதன்மைத்தாயது
சரதகண்டங்கும் பரதகண்டம்மே
அப்பெருங்கண்டத் தளவில்தொல்சிறப்
புப்பெரும்பதிபல பொருந்துவவற்றுள்
காஞ்சிமுதலெழு கடிநகர்சிறந்தன
வாஞ்சையவற்றுளும் வளநகர்க்காஞ்சி
எண்டனிப்பதிசூழ் வரைப்பினைக்காஞ்சி
மண்டலமென்ன வழங்குநரன்றியும்
வேங்கடசைலம் வியனுத்தரதிசை
ஓங்குநீர்ப்பெண்ணை யொருவுதித்தென்றிசை
பவளமால்வரைப் பச்சிமத்திசை
தவளயானையான் றன்றிசைக்கடலா
வெல்லையேய்ந்த வித்திருமண்டலம்
வில்லைவாய்ந்த விறற்றுண்டீரனென்
கண்டீரவநிகர் காளையாண்டு
துண்டீரநாடெனத் தொக்கதொருபெயர்

தண்டகனென்னுந் தாரபதிதாங்கித்
தண்டகநாடெனத் தாங்கினதொருபெயர்
தொண்டைமானுமத் தோன்றல்காத்துத்
தொண்டைநாடெனத் துலங்கியதொருபெயர்
அத்திருமண்டல மெத்திசையும்புகழ்
வீசுங்கோட்டமும் வீறுறுநாடும்
ஆசினத்தமு மாமுட்பிரிவின்
விளங்கமலிந்து வளங்களியைந்தன
உரமிகுநத்தத் தார்தொறும்பலகோத்
திரமிகமேவுந் திரவேளாளர்
மற்றையவொவரினு மதிப்பருந்தொகுதியிற்
பெற்றமெய்ச்செல்வப் பெருமிதப்பகுதியின்
மிகுதிபற்றிய வழக்கான்மேம்படுந்
தகுதியையுற்றுச் சாற்றரும்வண்மை
மாட்சியிற்றொண்டை மண்டலக்காணி
யாட்சிக்குரிய ராகியிருந்து
விளைநிலந்திருத்திக் களைகளைபைங்கூழ்
விளைவித்துறுகண் களைவித்தரசர்க்
கிறைமுறையீந்து நிறைதிருநிரப்பி
பலகுடைநிழறங் குலகுடைநிழற்கீழ்
காண்பாரவகுடை நீழலொன்னும்
மாண்புரைக்கேற்ப மன்னரைநிறுவி
தொன்றுதொட்டுத் தொண்டைமண்டலத்
தென்றும்வதித லினித்தகைவேளாண்
மாக்களேதொண்டை மண்டலத்தாரென
நீக்கருமிகுதி பற்றிநிகழ்ந்திடும்
ஏதுநோக்கி யோதற்காயினர்
பாமகளின்னுரு வாமென்றுய்தமிழ்
நாவலர்தத்த நாவலரோபேல்
பூவலர்சூடும் புலவர்சிரோமணி
அருண்மொழிவானத் தமுதுகுகம்பர்
பொருண்மலிபாடற் புகழேர்இம்முதற்
சீரியர்புனைந்த திருக்கைவழக்கம்
ஏரெழுபதுவு மியற்றமிழ்மாலைக்
கலம்பகம்பிள்ளைக் கவிமுதனூல்களும்
நலம்புகர்சீர்த்தி நற்றனிப்பாக்களும்

ஆங்கவர்மேம்பா டேங்காதிசைத்தன
படிக்காசென்னப் பகரிசைப்புலவன்
இம்மண்டலத்தா ரியற்பெருங்கீர்த்தி
எம்மண்டலத்து மினிதுற்றுயரச்
சாற்றியதொண்டை மண்டலசதகத்
தேற்றம்பல்வள மிடுகையின்றிறமும்
சதந்தருமொழியும் விதந்துகூறினன்
பருத்துறை யந்நூல் பன்னெடுநாண்முன்
நிகழ்த்தியதாதலி னெடும்பனையேட்டே
பிரதிகளொன்றி னொன்றுபேதித்தும்
முரணியும்பிறழ்ந்தும் மூலமாகியும்
இருத்தலினதனைக் கருத்தினிலாய்ந்து
பாரம்பரியஞ் சாருமிடத்துப்
பொருந்துபுவிருந்த திருந்தியனவா
வேற்றனகொண்டு மாற்றுதலின்றிப்
பாத்தொறுங்குறிப்பி னேத்துறுஞ்சரித
மறைதல்செலலா துறைதல்கருதி
எவரும்விரும்பிச் சுவையறிந்தோதத்
தெரிக்குந்தகைமைச் சுருக்கியும்விரித்தும்
முன்னூல்விரியிற் பன்மேற்கோளொடும்
எளிவருநடையின் மிளிரும்பொழிப்புரை
எழுதுவதின்றி யமையாக்கடனென
சேயாற்றுந்துந் தென்காற்சுவைநீர்
ஓயாதுலவி யூறும்பழனப்
பெருநகர்வேளாண் மரபிற்பிறந்து
முத்தமிழ்க்கடலொடு கத்தலைச்சலதியும்
எண்மையிற்குடித்த தென்மலயத்துச்
சம்புவைநிகர்க்குங் கும்பமாமுனிவன்
பெயருற்றனமென் றயர்விற்களிக்கும்
அகத்தியக்கேய்ந்த வகத்தியப்பனென்
அகத்தியங்கார்வத் தகத்தியமென்சொல்
வழிவராதுள்ளத் தொழிவுறுதெழுதல்
அடங்காதெழுதினெ னாதலினிஃதோர்
மடங்காணெறியென மனங்கொண்டுவத்தல்
குற்றங்குணமெனக் கொள்ளும்
முற்றுமுணர்ந்த முதியோர்கடனே

# தொண்டைமண்டலசதகம்.

## வழிபடு கடவுள் வணக்கம்.

### அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

கொண்டலை நிகர்க்கும் வேளாண்
குடியொடு தழீஇயதொண்ட
மண்டலசதகந் தன்னை
வளமையான் வகுப்பதற்குப்
புண்டர நுதலிரண்டு
புயமிசை யிருந்திரண்டு
குண்டல நிகரிரண்டு
குமரனை வணக்கஞ் செய்வாம்.

[இதன் பொழிப்புரை.]

பருவப்புயலை (வரையாது கொடுக்குங் கொடையால்) ஒத்த வேளாண் குடி (ப்பிறப்பினரது சிறப்பினைத்) தழுவிய தொண்டை மண்டல (த்தைச் சுட்டிய நூறுபாடல்களான் முற்றிய) சதகமென்னும் பிரபந்தத்தை (ச்சொல், பொருள்முதலியவற்றின் நயம்) மிகுதிபடச் சொல்லுதற் பொருட்டு ; (திரு நீற்றுமுக்) கீற்று (விளங்கும்திரு) நெற்றியினையுடைய சிவபெருமானது இரண்டுதிருத் தோள்களினும் ஏறியிருந்து (அவரது திருச்செவியிலணியப்பட்டு விளங்கும்) இரண்டு குண்டலங்களைப்போல விளங்குகின்ற (அவரது) இரண்டு திருக்குமாரர்களாகிய விநாயகக்கடவுளையும் சுப்பிரமணியக்கடவுளையும் (யாம்) வணங்குதல் செய்வோம் என்றவாறு.

இனிநுட்பமாமாறு.

வேளாண் குடிப்பிறப்பினர் தம்மையடைந் தேற்போர்க்குக் கனவினுங் கைம்மாறு கருதாது வழங்கும் வள்ளியோரென்பதும் எவ்வாற்றான் உயர்ந்தோர்கட்கும் உலகியனடத்தற்கு இன்றியமையாக்கருவியாந்தன்மையுடையார் என்பதும், இங்ஙனம் வையகத்தார்க்கன்றி வானகத்தார்க்குங் குன்றாநன்றி குயிற்றுநரென்பதும், பிறவும் "கொண்டல்" என்னும் உவமக்குறியாற் பெறப்படுதலின் "வியனுறு மெதிரதூஉம் வீழாக்கொடையும் - பயனுறூஉந் தொழிலும்பழியாப்பண்பும்-வாய்மையுமறிவு மாஅன்பு மாண்மையுந்-தாய்

மையும்பொறையுந் தோற்றமுமன்பு-முளங்கொளிரக்கமு மொழுக் கமுமுதலா விளங்கு விழுக்குடி வேளாண்குடியே" என்றதனை வற்புறுத்தற்கு உவமான வளவையால் விளங்கவைத்து, "கொண் டலைநிகர்க்கும் வேளாண்குடி" என்றார் இந்நூலாசிரியனெனக் கொள்க.

இனி "கொண்டல்" என்பதனை "விட்டும் விடாத இலக்கணை" யால் கொண்டலூர்தி எனப் பொருள்கொண்டு; வேளாளர் தமது நல்லொழுக்கமென்னு மாணையாற் கொண்டலையாங் காங்கு பெய் வித்து நடாத்துதலும், ஐவகைத்திணையினு முய்வகைத்திணையாய் மருதத்திணையை வளம்படுத்துக் காத்தலும், வேள்விக்கு (வேளாண் மைக்கு) வேந்தராதலும் முதலிய தொழிலாதி பொதுத்தன்மை யமைந்து கிடத்தலின், கொண்டலைநடாத்தி மருதத்திணைகாத்து வேள்விக்கு இந்திரனை நிகர்க்கும் வேளாண்குடி என்பது மொன்று.

இன்னும் "கொண்டல்" என்பது உவமை யாகுபெயராகலின் திருமால் எனப்பொருள்கொண்டு; கடுகின்றெவ் வுயிர்க்கும் நுகர்ச்சி வருவித்தலும், பஙகைப்புலமுருக்கிப் பாதுகாத்தலும், திருவிற்பொலி ந்த சிறப்பினையுடைமையும், இன்சுவையமுத மிரந்தோர்க் கீதலும், பூமகட்குரிமை பூண்டுநிற்றலும், சத்துவதனிக்குணத் தானேபயிற லும், ஊக்கமுஞ் செவ்வியு முடைமையும்இன்ன ஆக்கமுடைய ராதல்பற்றிக் கொண்டலை யொத்த வண்ணத்தினையுடைய கடவு ளாகிய திருமாலை நிகர்க்கும் வேளாண்குடிப்பிறப்பினர் எனினும் ஒக்கும்.

இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ வெனின் "எந்நூலுரைப் பினும் முன்னர்ப்பாயிரம் உரைத்துரைக்க" என்பவாகலின், தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளுங் கூறுதலின். தற்சிறப்புப்பாயிரங் கூறுதனுதலிற்று. என்னை "தெய்வவணக்கமுஞ் செயப்படுபொரு ளும் எய்தவுரைப்பது தற்சிறப்பாகும்" என்றமையான்.

இனிவிரிப்பின் சாலப்பெருகும்.

## நூல்.

### கட்டளைக்கலித்துறை.

சீர்கொண்டகச்சித் திருவேகம்பத்தரன் செல்வமுக்கட்
கார்கொண்டமும்மதத் தைங்கரந்தாங்கிக் கடவிகடப்
பேர்கொண்டசக்கரப் பிள்ளையைத்தான்பெற்ற பேறதனால்
வார்கொண்டகீர்த்தி படைத்ததன் றோதொண்டை மண்டல
[மே.

[இதன் பொழிப்பு.]

சிறப்புற்ற காஞ்சிநகரில் திருவேகம்பமுடைய பரமசிவனது செல்வப்புத்திரனாகிய, முக்கண்களினின்றும் அருளாகியமும்மதம் மழைபோல வழிகின்ற உலகமனைத்தையும் வெல்லும் விகடயானை முகத்தினையும், ஐந்துகைகளையும் உடைய, விகடசக்கர விநாயகன் எனப் பேர்பெற்ற மூத்த பிள்ளையாரைத் தன்னிடத்துள்ள அவ்வாலயத்தில் எழுந்தருளி யிருக்கப்பெற்றமையால் (வேளாணமரபினர்க்குரிய) தொண்டைமண்டலம் மிகுகீர்த்தியடைத்ததாயிற்று. (க)

## விகடசக்கர விநாயகர்.

சிவபெருமானது திருவருளுக்குமாறாக தக்கன் விட்டுணுமுதலிய தேவர்களைக்கொண்டு யாகஞ்செய்யுங்காலத்துச், சிவபெருமானது நெற்றிக்கண்ணினின்றுதயமான அகோரவீரபத்திரக்கடவுள் எழுந்தருளி அந்தயாகத்தைச்சிதைத்துத் திருமாலைத்தாக்கினபோது, அத்திருமாலால் விடப்பட்ட சுதரிசனமென்னும் சக்கராயுதத்தை அவ்வீரபத்திரக்கடவுளது திருமார்பில் விளங்கிய தலைமாலையிலிருந்த தலைகளுள் ஒருதலைகவ்விக்கொண்டது. பின்பு அச்சக்கராயுதத்தைப் பெறும்பொருட்டு, வைகுண்டத்தில் வாயில்காப்போராகிய சேனைமுதலியாரென்னும் விடுவசேனர் வீரபத்திரக்கடவுளைவழிபாடுசெய்ய, வீரபத்திரர் கவ்வியதலை தானேகொடுக்கப் பெற்றுக்கொள்ளென்றருளிச்செய்தனர். பின்பு விடுவசேனர் வீரபத்திரக்கடவுள் சந்நிதியில் கொங்காணித்தாதன் கூத்துஎன்னும் குடக்கூத்தாடினர். அதுகண்டு அம்மாலைத்தலை சிரித்தவளவில் சக்கரம் கீழேவிழ அதனை விடுவசேனரெடுக்கும்போது விநாயககடவுள் தமது துதிக்கையை நீட்டி அச்சக்கரத்தைப் பறித்துக்கொண்டு தமது சந்நிதியிலும் அக்கூத்தாடும்படி அருளிச்செய்தனர். விடுவசேனர் ஆநந்தங்கொண்டு திருக்காஞ்சி ஆயிரக்கான் மண்டபத்தில் விநாயகக்கடவுள் சந்நிதியில் அவ்விகடக்கூத்தாடியதுகண்டு நகைத்து அச்சக்கராயுதத்தை அருளிச்செய்தனர் விகடக்கூத்துக்கு உவந்து சக்கரதானஞ் செய்தமையால், அன்றுமுதல் திருக்காஞ்சி விநாயகருக்கு விகடசக்கர விநாயகரெனப் பேர்வழங்கிவருகின்றது. பரப்பிரம்மசொரூபராகிய விநாயகமூர்த்தியார் ஒரு பிரளயம் உண்டாகும்படி திருவுள்ளமாகவும் பன்னிருசூரியரும் உதயமாகி நூறுவருடம் காய்ந்து உலகத்தை பஸ்மஞ்செய்து ஆதிசேடனையுந்தகிக்க அவன்

காளகூடவிஷத்தைக் கக்கியதும் சூரியர்கள்வெப்பமும் ஆதிசேட னையும் துவாதசாதித்தர்களையும் தகித்து பஸ்மமாக்கிவிட்டது. அந்த வெப்பங்களில் சத்தமேகங்கள் பிறந்து நூறுவருடம் விடா மழையாகப் பொழிந்தது, அதனால் எங்கும் ஏகாரணவமாக நிறை ந்தது அதில் வடவாமுகாக்கினி பிறந்து அந்த ஜலத்தை யெல்லாம் கிரகித்தது. அவ்வடவாமுகாக்கினி பிரசண்ட வாயுவிலொடுங்கி அவ்வாயு ஆகாயத்தில் ஒடுங்கி ஆகாயம் ஆத்மாவிலொடுங்கி ஆத் மா பிரம்மாவில் ஒடுங்கி, பிரம்மா விண்டுவிலும், விண்டு ருத்திர னிலும், உருத்திரன் மகேசுவரனிலும், மகேசுவரன் சதாசிவனிலும், சதாசிவன் விந்துவிலும், விந்து நாதத்திலும், நாதம் சத்தியிலும், சத்தி சிவத்திலும், சிவம் பரத்திலும், பரம் பராபரத்திலும் ஒடுங் கியது. இப்பராபரமே முடிவான பரப்பிரமசொரூபமாயிருந்தது, மீளவும் முறையே சிருஷ்டியாதி நடத்தும்பொருட்டு தமது முக் குணங்களினின்று மும்மூர்த்திகளையுண்டாக்கி பை, முட்டை, நிலம், வியர்வை என்னும் நால்வகைத்தோற்றமும், தேவர்கள் பதினொன்கு நூறுயிரம், மக்கள் ஒன்பது நூறுயிரம், விலங்கு பத்துநூறுயிரம், புள் பத்துநூறுயிரம், ஊர்வன பதினொருநூறுயிரம், நீர்வாழ்வன பத்துநூறுயிரம், தாவரம் இருபதுநூறுயிரமாம், ஆக எண்பத்து நான்குலட்சம் யோனி பேதங்களாம். ஆதிதெய்வீகம் மாதாவின்க ருப்பத்திலுழன்றும், ஜனனமரணத்தி லுண்டானதுக்கம், இயமத ண்டனை, நரகதுக்கம், ஆதிபௌதிகம் குளிர், வெப்பம், மழை, காற்று, மின்னல், இடி, சுவர்விழுதல், கல்விழுதல், இவைகளால் வருந்துன்பமும், ஆதியாத்மீகமாவது சரீரத்தினாலும், மனத்தினாலும், வருந்துக்கமுமாம், இவைகளை நீக்கி ஆன்மாக்களுக்கு தனுகரண புவன போகங்களையளித்து, மல சம்பந்தமான பாசபந்தங்களைப் போக்கி, முத்தியிற்சேர்க்கும் நிமித்தம், ஜீவாத்மாக்களை யெல்லாம் கன்மங்கட்கீடான சரீரங்களையெடுக்கும்படி கிருபைசெய்த, விநாய கனை தேவர்களும் மனிதர்களும் எந்தக்கருமத்தைச் செய்யத்தொட ங்கும்போது, முந்தி விநாயககடவுளை பூசித்துத்தொடங்குவார்கள்; இல்லாவிடில் விக்கினம்வந்தேவிடும் அதுநிறைவேறாது. கணேச மூர்த்தி ஆகமத்தில் சத்தகோடி மஹாமந்திரங்கள் சொல்லியிருக் கின்றன, அதில் சடக்கரமந்திரம் சிறந்ததாகும். அதினும் ஏகா க்ஷரமந்திரம் மேலானதாகும் அதை ஸ்நாநம் செய்து தீக்ஷைபெ ற்று வணக்கம், அன்பு, அருள், ஆசாரம், வேதாகமநெறியில் ஒழு குதல், நல்லோரிடத்தில் வணக்கம், மந்திரம் உபாசித்தல், ஆசை இவைமுதலிய நன்னடக்கையோடு ஊறுபாடில்லாத உத்தமஸ்தா

னத்திலிருந்து மந்திரஜலத்தினால் புரோக்ஷித்து பூதசுத்திமுதலிய வைகளைச்செய்து அகம் புறமாகிய விரண்டினுள்ளும் நியாசஞ் செய்து பிராணாயாமத்திலிருந்து இம்மந்திரத்தைச்செபித்து விநாயக மூர்த்தியினது திருவுருவத்தை தியானித்து அந்தரியாக பூசைசெ ய்து மந்திரத்தை தினந்தோறும் செபித்துவர எல்லாசித்தியும் பெறு வர். ஆணவமலசம்பந்தத்தை யொழித்து சிவன் முத்தி யென்னும் மேலான பதமும்பெறுவர்.

விநாயகர் அநேக அவதாரங்களைச் செய்தார் பிரமன் வேண்டு கோளால் அவன் புத்திரிகளான சித்தி, புத்தி என்னும், இருவரை யும் மணஞ்செய்தார். விஷ்ணுவின் பிரார்த்தனையால் அவன்புத்தி ரிகள் பன்னிருவரையும் விவாகித்துக் கொண்டார். சிவன் ஆக்கி னைப்படி பார்வதியார் யமுனைநதியில் தாமரைபுஷ்பத்தில சங்கமா கப் பிறந்திருந்து பின்பு பெண்குழந்தையாகி மரீசிமுநிவரும் அவர் பத்தினி தேவவல்லியும் எடுத்துவளர்த்த வல்லபையை சிவன் கணேசருபங்கொண்டு மணந்து மரீசிமுநிவருக்கு விசுவரூபதரிசனங் கொடுத்தார்.

ஆவணிமாதம் பூர்வபக்ஷத்தில் சதுர்த்தியில் சந்திரனைப்பார்க் கப்படாது ; மறந்தாவது பார்த்தாலும் தோஷம்வரும். இந்தசதுர் த்தி விநாயக விரதங்கொண்டு பூசித்து அவருடைய விரதங்களை அநுஷ்டிப்பதினாலும், அவரது ஏகாக்ஷர மந்திரத்தை ஜெபிப்பதி னாலும், அவரது திருவவதார மூர்த்திகளை பூசிப்பதினாலும், அவர் திருவடிகளை துதிசெய்வதினாலும், எல்லாநன்மையும் பெறுவார்கள். மாசிமாதத்தில் அமரபக்ஷத்தில் செவ்வாய்க்கிழமைகூடிய சதுர்த் தியில் இவ்விரதத்தைத்துவக்கி அன்று உதயத்தில் ஸ்நாநஞ்செய்து திருநீறுருத்திராக்கமணிந்து கணேசமூர்த்தி திருவடிகளையுன்னி ஏகா க்கரம் சடாக்கரம் திருநாமமந்திரம் இம்மூன்றினையுந் தியானித்து அன்னபானாதிகளை யொழித்து விரதமிருந்து சந்திரோதயமானபின்பு விநாயகமூர்த்தியை எழுந்தருளச்செய்து, விநாயகருக்கு பலபுஷ்ப மும் சந்தனந்தோய்த்த இரண்டு இரண்டு அறுகினாலும் அங்கபூஜை செய்து அஷ்டோத்ர சத சகஸ்ர நாமங்களால் ஓம் கணநாதா நமவென்று துவக்கி அர்ச்சிக்கவேண்டும். பின்பு சந்திரனுக்கும் பூஜைசெய்துமுடித்து வேதியருக்கு உண்டி முதலியவையளித்து அன்றிரவுமுழுவதும் நித்திரையின்றி விநாயகப்பெருமான் சரித்திரங் களை சிரத்தா பக்தியுடனிருந்து கேட்டு இப்படியாக ஒரு வருடம் வன்னிவிருக்ஷத்தினடியில் இருந்து இந்த சங்கடசதுர்த்தி விரதம்

அநுட்டிப்பவர்களுக்கு மகப்பேறு முதலியஎல்லாப்பேறுகளும் உண்டாகும். சக்தியில்லாதவர்கள் ஒருநாளாவது இப்படிஅநுஷ்டிக்க வேண்டும்.

சந்திரன் ஓர்காலத்தில் விநாயகரைநிந்தித்து அவன் ஒளியிழக்கவும் அவனைப் பார்த்தவர்கள் நிந்தனை யடையவும் சாபம்பெற்று வருந்தினான். அதினிமித்தம் சந்திரனும், தேவர்களும், விநாயகரை வருந்தி அரியதவத்தைச்செய்து மறுபடி பழயபடி ஒளிவுபெறவும், சதுர்த்திதினத்தில் தன்னையும் சந்திரனையும் பூஜித்தவர்கள் நன்மையைப்பெறவும் அநுக்கிரகஞ்செய்தார். அதனால் விநாயகசதுர்த்தியென்று உண்டாயிற்று. அந்தசதுர்த்திதினத்தில்மாத்திரம் சந்திரனைப்பார்த்தவர்களுக்கு தோஷம்வருமென்று விநாயகர் கிருபைசெய்தபடியினால் தெரிந்தபெரியோர்கள் சதுர்த்திதினத்தில் சந்திரனைப்பார்க்கமாட்டார்கள். இவரது சதுர்த்தி விரதத்தை அநுஷ்டிப்பவர்கள் சதுர்த்திதினங்காலையில் எழுந்திருந்து ஸ்நாநஞ்செய்து திருநீறுருத்திராக்கமணிந்து ஒருபூஜாமண்டபத்தை அழகுபெறச்செய்து பரிசுத்தமான விடத்தில் மிருத்திகையெடுத்துவந்து அதில் வேர்கள், செல்லுகள், முதலியசெந்துக்கள், கற்கள், இல்லாமற் பிசைந்து சிற்பப்படி விநாயக ரூபஞ் சமைக்கவேண்டும். இதனுடன் பொன்னினால் ஒரு உருவமும் சமைக்கவேண்டும். பூஜாமண்டபத்தில் தண்டுலைப்பரப்பி இழைசுற்றி நீர்நிரப்பி மாவிலை தேங்காய் தக்ஷிணையிட்டுவைத்த கும்பத்தை தர்ப்பை ஆசனமிட்டுவைத்து அருகில் பார்த்திபமூர்த்தியையும் சுவர்ணமூர்த்தியையும் எழுந்தருளச்செய்து அர்க்கியம், பாத்தியம், ஆசமநம், மந்திர பூர்வமாக உண்டாக்கி புஷ்பம், அக்ஷதை இவைகளைக் கொண்டு, மந்திரங்களைச் சொல்லி, தேன், பால், பழங்கலந்த பஞ்சாமிருத ஸ்நாநஞ்செய்வித்து வஸ்திரம் பூணுநூல், சாத்தி கந்தந்தரித்து மஞ்சள்பூசி பூந்தாதுகளை அப்பி மலர்களைச்சாத்தி பிரார்த்தித்து ஆலத்திசுற்றி சங்கற்பம் செய்துகொண்டு தியானதிகளைமுடித்து சாமரை, குடை, முதலிய சோடசோபசாரங்களுடன், வாத்தியங்கள் முழங்க நெய், பால், முதலிய சுத்தான்னங்களும், கறிகளும், பருப்பும் மோதகங்கள், உண்டைகள், தேங்கனி, வாழை முதலிய கனிகளும், பாகடையும் வைத்து பஞ்சதூபங்களைக் கொடுத்து பலதீபங்களைக்காட்டி விகிருத முதலிய சின்னங்களைவழங்கி கணநாதவாயென்னும் மந்திரபுஷ்பஞ்சாத்தி கர்ப்பூரநீராஞ்சனஞ்சுழற்றி வலம்வந்து திருவடிகளில் வணங்கி விநாயகஆகமமுறைப்படி தர்ப்பணம், ஓமஞ்செய்து மந்திரங்களை ஜெபிக்க அன்னதான முதலான பல தானங்களைச்செய்ய

வேண்டும். இப்படி மறுமாதம்வரையில் விரதமிருந்து முப்பதுநாளும் ஆகாரமின்றி உபவாசமாக இருக்கச் சக்தியில்லாமலிருப்பவர்கள் ஒருநாளாவது இப்படிச்செய்ய வேண்டும். பல அவதாரங்களாகையால் நூற்றெட்டு உருவங்கள் வரையில் வைத்து பூசிக்கலாம். அதனால் ஒன்றுக்கொன்று அதிகபலன்களைத்தரப்பெறுவார்கள். பின்னர் விநாயகமூர்த்தியை தமது மனதில்தியானித்து பொன்னாற்செய்த மூர்த்தியையும் குப்பத்தையும் பலதிரவியங்களோடு தானஞ்செய்து பிரிதிவி மூர்த்தியை வாத்தியகோஷ்டங்களுடன் எழுந்தருளச்செய்து ஜலவாசமாக தடாகம், நதிமுதலிய இடங்களில் எழுந்தருளச்செய்து, வீட்டுக்கு வந்து இஷ்டர்களுடனிருந்து போஜனம் செய்து இகபரசாதனம் பெற்று விநாயகமூர்த்தியினது பேரருளைப் பெற்று சுகித்திருப்பார்கள் இவைகளை புராணம் பதினெட்டில் ஒன்றாகிய பார்க்கவ மென்னும் விநாயக புராணத்தைப்பார்க்க.

இச்செய்யுளில் தெய்வம் பராவுமுகத்தானே

தலச்சிறப்புக் கூறுகின்றார்.

சேவடிசெய்வ தறியாதமாவலி முன்புசென்று
மூவடிவேண்டு திருமால்மருகனிம் மூவுலகும்
காவடியாக வொருதலைமேவிய காஞ்சிபுர
மாவடிமேவும் பெருமான்பதிதொண்டை மண்டலமே.

[இதன் பொழிப்பு.]

முன்னே சிறியனவாகக் காணப்பட்ட செவந்தபாதங்கள் பின்னேமிகவிரிந்து உலகமனைத்தினையு மளக்குமென்றறியாத மாவலிச்சக்கிரவர்த்தியிடம் முன்பு மிகக்குறுகிய குறளுருவாய்ச் சென்று மூன்றடிநிலம் யாசகித்த திருமால் மருகனாகிய சுப்பிரமணியக்கடவுள், பாலலீலையில் மூவுலகங்களையும் ஒருதட்டிலும் காஞ்சிபுரத்தை மற்றொரு தட்டிலுமாகவைத்துக் காவடியிட்டுத் தூக்கியபோது ஒருதலையாய் காஞ்சிபுரத்தட்டு தாழ்ந்ததையா லதன்கண் ஒற்றைமாமரத்தடியில் சிவபெருமானோடு வீற்றிருந் தருளினர் அத்தகைய காஞ்சிமாநகரத்தைத் தன்னிடங்கொண்டு சிறந்தபதி தொண்டைமண்டலம் ... ... ... ... ... (௨)

## சுப்பிரமணியக்கடவுள்.

### வரலாறு.

காசிபமுனிவரால் மாயையென்னும் அசுரப்பெண்வயிற்றில் சூரபன்மன், சிங்கமுகன், தாரகன், அசமுகி என்னும், நால்வரும் அசுரச்

சேனைகளும் பிறந்தனர். சூரபன்மன் முதலிய மூவரும் தவஞ்செய்து யாவராலுங் கொல்லவும் வெல்லவும்படாத வரத்தாலும் பலத்தாலும் பானுகோபன் முதலிய புத்திரர்களைப்பெற்று மிகவுயர்ந்து தேவர் முதலியாவரையும் வென்று திரிபுவனங்களையும் தம்மடிப்படுத்தி, இந்திரன்முதலிய தேவர்களனைவரையும் தமக்கு அடிமைத்தொழில் செய்யும்படிவருத்தி அண்டாண்டங்களின் பரிமாணங்களைதனது குல குரு சுக்கிரனாலறிந்து ஆயிரத்தெட்டண்டங்களிலரசு செலுத்திச் சூரபன்மன் அசுரேசனாய்த் தென்கடலிலும், சிங்கமுகன் வடகடலிலும், தாரகன் மத்தியதரையிலுமாக வசித்தார்கள். இந்திரன் முதலிய தேவர்களனைவரும் அடிமைத் தொழிலில் வருந்தமாட்டாமல் உருமறைத் தொளித்தோடிக் கைலாயகிரியி லெழுந்தருளிய சிவபெருமான்சந்நிதியின் முறையிட்டார்கள், பரங்கருணைத்தடங் கடலாகிய சிவபெருமான் கிருபைகூர்ந்து, நீவிர் நம்மைமதியாமல் தக்கன் வேள்வியிற் சென்றிருந்த பாதகத்தின் பயனிவ்வாறு உங்கட்குப்பலித்தது என்றருளிச்செய்து பின்னும் பருவதராசபுத்திரியாய் நம்மைக்குறித்துத் தவஞ்செய்து கொண்டிருக்கிற நமதுசத்தியைமணந்து ஒருபுத்திரனைத்தருவோம். அப்புத்திரனால் அவ்வசுரர்சங்கரிக்கப்படுவார்கள் நீவிருஞ் சுகமடைவீர்கள் என்றருளிச்செய்தனர். அதுகேட்டுதேவர் ஆநந்தமடைந்து சென்று சிலகாலம்மறைந்துழன்று, பிரமாவைச்சார்ந்து முறையிடப் பிரமா மன்மதனையேவ, அங்காமன் அக்காலத்தில் திருக்கயிலாய பருவதத்தில் கலலாலவிருக்ஷத்தின்கீழ் ஜநகர்முதலிய முனிவருக்காக யோகத்தி லெழுந்தருளியிருந்த தட்சணாமூர்த்தி சிவபெருமான்மேல் காமம்விளைப்பனவாகிய மலர்களையேவ, அக்கடவுள் தமது நெற்றிக்கண்ணைத் திறந்தவளவில் அம்மாரன் எரிந்து சாந்தனன் பின்பு சிவபெருமான் யோகத்தினின்றும் நீங்கி இரதியினது வேண்டுகோளுக்காக மன்மதனை அருபியாகவியருளி இமயமலையிற்சென்று பார்வதியைமணந்து கொண்டு திருக்கயிலாயத்தி லெழுந்தருளியிருந்தார். அப்போது தேவர்கள்சந்நிதியில்வந்து முன்கட்டளையிட்டருளியபடி புத்திரனையருளிச்செய்யவேண்டுமென்று துதித்து வணங்கச் சிவபெருமான் தமது ஊர்த்துவமுகமும் பாரிசமுகமாக ஆறுதிருமுகங்களோடெழுந்தருளியிருந்தனர். அவ்வாறுதிருமுகங்களிலுமுள்ள நெற்றிக்கண்களாறினும் ஆறுநெருப்புப்பொறிதோன்றிச் சந்நிதானத்தில் வியாபித்தது கண்டு பார்வதிதேவியார் அஞ்சியோடி யொளிக்கத் தேவருமஞ்சி யோலமிட்டுத் துதிசெய்யச் சிவபெருமான் உலகமெங்கும் வியாபித்த அக்காருண்யாக்கினியைச் சுருக்கி அக்கினிதேவன்

கையிற்கொடுக்க அவ்வக்கினிதரிக்கமாட்டாமல் வாயுவினிடத்தில்சும த்தவாயுதேவன் தாங்கமாட்டாமல் கங்கையில்வைக்க, கங்கை சரவண ப்பொய்கையில் பொற்றாமரையில்வைக்கப், பொற்றாமரைமலரில் ஆறுபொறிகளும் ஆறுகுழந்தைகளாயின. தேவர்கள் அக்குழந்தை கட்கு கார்த்திகைப்பெண்களால் பால்கொடுப்பித்தார்கள் பின்புசிவ பெருமான் பார்வதிசமேதராய்ச் சரவணப்பொய்கைக் கெழுந்தருளி இதோஇருக்கிற உனதுகுழந்தைகளை எடுத்துப்பால் கொடுவென்று சொல்லியருளப், பார்வதிதேவியார் வாரியெடுக்க ஆறுகுழந்தைக ளும் ஆறுதலைகளும் பன்னிருதோள்களும் ஒருடம்பும் இரண்டுபாதமு முள்ள ஒருகுழந்தையாகக்கண்டு மகிழ்ந்து, தனதுடத்துச்சுரந்த பால்கொடுத்து எடுத்துக்கொண்டு கயிலாயத்துக் கெழுந்தருளியிரு க்கும்போது, முன்னர் அக்கினியைக் கண்டஞ்சிப் பார்வதிதேவி யார் நடும்போது பாதச்சிலம்பிலிருந்து சிதறின நவமணிகளிலும் பார்வதிதேவியாரது சாயைபடிய அச்சைகளுருவாகி நவசத்திகள் தோன்றிச், சிவபெருமானைக்கண்டு மோகித்து கருப்பந்தரித்தார்கள் அதுகண்டபார்வதியார் சீறறங்கொண்டு கருப்பம் வெளிப்படாமல் தாங்குங்களெனச் சபிக்க அச்சத்திகள் கருப்பந்தாங்கமாட்டாமல் வருந்தியபோது அவரதுதேகமெல்லாம் வெயர்நீர்தோன்ற அவ்வெயர் நீரில் ஒன்பதுகோடி சுவேதவீரர்பிறந்தார்கள் பின்பு பார்வதியார் சிவபெருமான்வேண்டுகோளால் கருவுயிர்க்கும்படி சாபவிமோசனஞ் செய்ய நவசத்திகளும் வீரவாகுதேவர்முதலிய நவவீரர்களைப் பெற் றார்கள். இந்தநவவீரர்களையும் தோழராகக்கொண்டு சண்முகக்கட வுள் குழந்தைதிருவிளையாட்டுச் செய்யத்தொடங்கி, குலாசலங்களை மாற்றிவைத்தும், கடலைத்தரையாகவும் தரையைக்கடலாகவும் மாற் றியும், மேலுலகங்கீழும் கீழுலகமேலுமாகமாறறியும், திரிலோ கங்களையும் தராசின் ஒருதட்டிலும், காஞ்சிபுரத்தை மற்றொருதட் டிலும் வைத்துநிறுத்துக் காஞ்சித்தட்டு தாழவும் திரிபுவனத்தட்டு உயரவும்கண்டுமகிழ்ந்தும் இவ்வாறுபலபாலலீலைசெய்தும், பிரமனைச் சிறைவைத்து உலகசிருட்டிசெய்தும், சிவபெருமானது வேண்டுகோ ளால் அப்பிரமனைச்சிறைவிடுத்தும், சிவபெருமானுக்கும் பிரமனுக் கும் வேதப்பொருளருளிச்செய்தும் விநோதமாக நாள் கழித்தனர்.

பின்தேவர்கள் பூசித்துவேண்டச் சிவபெருமானிடத்து சத்தி யாகிய வேலாயுதத்தைப்பெற்றுக்கொண்டு, நவவீரரும், நவகோடி சுவேதவீரரும் பூதப்படையுஞ்சூழச்சென்று, மாயாபருவதத்தோடு தாரகனையழித்துச் சிங்கமுகனைக்கொன்று, இவர்கள்குலத்தை

வேரறுத்தும் பலவாறுமாயையாலுருமாற்றி வலியபோர்செய்த சூர பன்மனைத்தமது சத்திவேலால்தடிந்து, அவனுருவானமாமரத்தின் அடிக்கூறாகிய மயிலை வாகனமாகவும், மேற்கூறாகிய கோழிச்சேவலை த்துவசமாகவுங் கொண்டருளித் திருப்பரங்குன்றி லெழுந்து தேவ யானையம்மையைமணந்து தேவலோகத்திற்சென்று இந்திரனுக்குமுடி சூட்டியாளுவித்து, உற்பலபருவதத்திற்சென்று வள்ளியம்மையை மணந்து திருக்காஞ்சி குமரகோட்டத்திலெழுந்தருளினர் இது விவ ரங்களை பதினெண் புராணங்களிலொன்றாகிய ஸ்காந்த புராணத் தாலுணர்க.

கயிலையுங்கச்சியும் விற்கோலமுநற் கழுக்குன்றமும்
பயில்வலிதாயமும் பாசூருமச்சிறு பாக்கமுநல்
அயிலையும்வல்லந் திருவொற்றியூரு மரசிலையும்
மயிலையுமீசன் மகிழ்ந்ததன்றேதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு.]

சீகாளத்தியும், காஞ்சியும், கூவமும், திருக்கழுக்குன்றமும், பா டியும், திருப்பாசூரும், அச்சிறுபாக்கமும் அனேகதங்காவதமும், திரு வல்லமும், திருவொற்றியூரும், ஒழுந்தியாபட்டும், மயிலாப்பூரும், முத லிய முப்பத்திரண்டு திருத்தலங்களினும் சிவபெருமான் எழுந்தரு ளப்பெற்றுச் சிறந்தது தொண்டைமண்டலம். ... (௬)

இச்செய்யுள் திப்பியதலங்களை வரையறுத்து
மண்டலச்சிறப்புக் கூறுகின்றது.

கட்டளைக்கலித்துறை

ஈராறுட்டிரண்டு மலைநாட்டிலொன்றுகொங் கேழுவையை
வாராட்டீரேழ்நடு நாட்டெழுமூன்றொன்றைந் தாம்வடக்கில்
சோணாட்டுநூற்றுத்தொண் ணூறெனவோர்வர் துளுவத்தொன்று
நாணாட்டியதொண்டை நன்னாட்டிலாறைந் திருநகரே."

என்றதனால் இம்மண்டலத்துஅனையத் திருத்த லங்களுண்மை யுணர்க.

வடமொழியிலுள்ள காஞ்சித்தலபுராணம் நான்கிலட்சத்தைம் பதினாயிரஞ் சிவதலங்களெனவும் புராணங்களில் ஆயிரத்தெட்டு சிவாலயங்களெனவுங்கூறுகின்றது. சமயாசாரியர்களால் பாடப்பட் டிருந்த தேவாரத்திருமுறைகள் மறைக்கப்பட்டிருந்த அவைகளை

வேண்டி ஏகோ சிந்தித்திருக்கையில் திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையாரைபூஜிக்கும் ஓர்பிராமணருக்கு அவ்விநாயகர் கிருபையால் நம்பியாண்டார்நம்பி யென்கிற ஒருபுத்திரரிருந்தார் ஒருநாள் அவர் பிதா அயலூருக்குப் போயிருக்கையில் நம்பியாண்டார்நம்பி விநாயகரைப் பூசித்து நிவேதனத்தை யுட்கொள்ளும்படிவேண்ட விநாயகர் அப்பிள்ளையின் அன்புக்கிரங்கி நிவேதனத்தை யேற்றுக்கொண்டார் இதுசெய்தியை அவரது மாதாகேள்வியுற்று மகிழ்ந்திருந்தனள். சிலநாளைக்குப்பின்பு அவரது பிதாவந்தவுடன் தமதுபுத்திரன் பூசித்து அவரதுவேண்டுகோளால் விநாயகமூர்த்தி அன்னம்புசித்ததைக் கேள்வியுற்று மிகஆனந்தங்கொண்டு, அன்றையதினமும் தமதுபுதல்வனையே விநாயகரை பூஜைசெய்யும்படிசெய்வித்து அப்புதல்வரது செய்கையையெல்லாம் மறைந்திருந்து பார்த்துக்கொண்டிருக்கையில் அக்குழந்தைவேண்டிக்கொள்ளவும் விநாயகமூர்த்தியாரும் நிவேதனத்தை அருளுடன் புசிப்பதையுங்கண்டு பேரானந்தமடைந்து அன்றுமுதல் அப்பிள்ளையைக்கொண்டே பூசித்துவரும்படி செய்வித்துவந்தார் இவ்வற்புதச்செயலையே அபயகுல சோழமகாராஜன், கேள்வியுற்று, நம்பியாண்டார்நம்பி என்னும் பிள்ளையைக் கொண்டு திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள், அப்பர்சுவாமிகள், அருளிச்செய்த ஒருலட்சத்து ஈராயிரம் பதிகங்களில் தேவாரத் திருமுறைகளிருக்குமிடத்தை விநாயகரை பிரார்த்தித்து தெரிந்து அறிவிக்கும்படி வேண்டிக்கொண்டார் அந்தப்படி நம்பியாண்டார்நம்பி வேண்டிக்கொள்ள சிவசிதம்பரத்தின் நடேசராலயத்தில் மேற்கு கோபுரத்துக்கு அடுத்தாப்போல மதிலில்வரைந்திருக்கு மிடத்து உள்ளேவைத்திருப்பதாக விநாயகர் அருளிச்செய்ததை அறிவித்தார். அபயகுல சோழராஜன் அதை யெடுக்க எத்தனிக்கையில், அதைவைத்தவர்கள் வந்து எடுக்கவேணுமென்று தில்லைதீக்ஷதர்கள் சொல்ல சைவசமயாசாரியர்களான சம்பந்தர், சுந்தரர், அப்பர்சுவாமிகளுக்கு திருவிழாசெய்து அங்கெழுந்தருளச்செய்து கொண்டு திருமதிலினின்று எடுப்பித்த திருத்தேவாரங்கள் அநேகம் சிதலமாய்ப் போய்விட்டு எழுநூற்றுத் தொண்ணூற்றேழு திருப்பதிகங்களிருந்தன அவற்றைக்கண்டராஜன் துக்கிக்கையில், இக்காலத்துக்கு இருப்பதை வைத்துக்கொள்வதுபோதுமென சுவாமி அசரீரிவாக்கால் பிரசாதித்தருளினர். அவைகளை நம்பியாண்டார் நம்பி ஏழுதிருமுறைகளாக வகுத்தனர் அத்திருமுறைகளுக்கு அடங்கன்முறை யெனப்படும், அவைகளுடன் சுந்தரமூர்த்தியாரருளிய திருத்தொண்டத்தொகையு மிருந்தது. அதுமுதல்அவ்வரசனு

க்குத் திருமுறைகண்டசோழனென்று பெயராயிற்று. கல்வி யறிவு ஒழுக்கங்களாற் சிறப்புற்று விளங்கிய சிவாலயமுனிவர் அத் தேவார அடங்கன்முறையை சிரத்தையோடு பாராயணஞ்செய்ய முத்திசித்திக்கு மெனவுணர்ந்து அது நிறைவேறாது மனம்வருந்தி, சிதம்பரத்தையடைந்து நெடுங்காலம் அருந்தவஞ்செய்கையில் கனக சபையின்கண் சபாநாதர் திருவருளினாலே நீ பொதியமலையிலிருக் கும் அகத்தியமுனிவனிடத்தே போனால் உன்கருத்து நிறைவேறு மென ஓரசரீரிவாக்குண்டாயிறறு. அந்தப்படியே பொதியமலை யிடஞ் சேர்ந்து மூன்றுவருடகாலந் தவஞ்செய்திருந்தார். அகத் தியமுனிவர் பிரத்தியக்ஷமாகி அடங்கன்முறையை உபதேசித்து அதினின்று இருபத்தைந்து பதிகங்களை எடுத்துத்திரட்டி, இவை களை நாடோறும் பாராயணஞ்செய்பவர்கள். அடங்கன்முறை முழுவதையும் பாராயணஞ் செய்பவர்களாவார்களென்று திரு வாய் மலர்ந்தருளினார். இந்த இருபத்தைந்து பதிகங்களாகிய அக ஸ்தியர்திரட்டு என்பதை சிவாலயமுனிவர் நாடோறும் பாராய ணஞ்செய்து சிவபெருமான் றிருவருளையடைந்தனர். அத்தேவாரங் களையுடைய தொண்டைமண்டலத்துள்ள முப்பத்திரண்டு சிவதலங் கள்முதலியவைகளும், அவற்றிற்குரிய தேவாரத்திருப்பதிகங்களின் தொகையும் வருமாறு.

க-வது. "திருக்கச்சியேகம்பம்" மூர்த்தி. ஏகம்பநாதர், காமா ட்சியம்மை, தலமகத்துவம் - காமாட்சியம்மையால் ஏகாம்பரேசர் தாபிக்கப்பட்டுப் பூசிக்கப்பட்டது. அவ்வமலைதழுவ அவ்வேகாம் பரநாதர் குழைந்து வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பெற்றமை யும்; சுந்தரமூர்த்திநாயனாருக்குக் கண் கொடுத்தமையும், அற்புதத் தனிமாமர முடைமையும் முதலியன. தீர்த்தம், கம்பைநதி, வார தீர்த்தம் முதலியன. திருப்பதிகம் - கஉ.

உ-வது. அதற்கு வடமேற்குக் காற்கடிகை தூரத்தில் "திரு வோணகாந்தன்றளி" ஓணகாந்தீசுரர், காமாட்சியம்மை, சுந்தரர்க்கு ப் பொற்காசுகொடுத்ததலம்; ஓணகாந்தீர்த்தம் திருப்பதிகம் - க.

ங-வது. அதற்குத் தென்மேற்கில் காற்கடிகையளவில் "திருஅ நேகதங்காவதம்" கயிலாயநாதர் காமாட்சியம்மை; திருப்பதிகம் - க.

ச-வது. அதின் தென்மேற்கில் காற்கடிகையளவில் "திருமேற் றளி" (கச்சியின்மேற்றளி) கச்சியப்பர், காமாட்சியம்மை; திருப் பதிகம் - உ.

ரு-வது. அதினின்றும் வடகிழக்கில் இரண்டுகெடிகை தொலைவில் "திருக்கச்சிநெறிக்காரைக்காடு" காரைத்திருநாதர், காரார்குழலியம்மை, இந்திரதீர்த்தம் திருப்பதிகம் - க.

சு-வது. அதின் தென்மேற்கின் ஐந்துகடிகை யெல்லையில் "திருக்குரங்கணிமுட்டம்" வாலீசுரர் இறையார்வளையம்மை; குரங்கு, அணில், † முட்டம் பூசித்ததலம் ; திருப்பதிகம் - க.

எ-வது. அதன் தென்கிழக்கு ஏழேமுக்காற் கடிகையில் "திருமாகறல்" கலகங்காத்தவரதீசர், புவனநாயகியம்மை; திருப்பதிகம் - க.

அ-வது. அதற்குப் பதினேந்து கடிகைவழியில் "திருவோத்தூர்" வேதநாதீசர், இளமுலையம்மை; திருஞானசம்பந்தர் ஆண்பனையைப் பெண்பனையாக்கிய தலம் ; திருப்பதிகம் - க.

கூ-வது. அதற்கு வடமேற்கு எட்டிக்கடிகைதூரத்தில் "திருப்பனங்காட்டூர்" அல்லது "வான்பார்த்தான்பனங்காட்டூர்" பனங்காட்டீசர், அமிர்தவல்லியம்மை; பனம்பழம் சிவபெருமானுக்கு நிவேதனமாகுந் தலம்; திருப்பதிகம் - க.

க0-வது. அதற்கு வடமேற்கு அறுபது கடிகைதூரத்தில் "திருவல்லம்" வல்லநாயகேசுரர், வல்லாம்பிகையம்மை; திருப்பதிகம் - க.

கக-வது. அதற்குக் கிழக்கில் பதிநூறுநாழிகை வழியில் "திருமாற்பேறு" மால்வணங்கீசர், கருணைநாயகியம்மை; திருமால் பேறுபெற்றதலம்; திருப்பதிகம் - சு.

கஉ-வது. அதன் வடகிழக்கு ஐந்துகடிகையில் "திருவூறல்" அல்லது "தக்கோலம்" உமாபதியீசுரர், உமையம்பாள் : நந்திவாயில் கங்கையை வருவித்ததலம்; திருப்பதிகம் - க.

கங-வது. அதின் தென்கிழக்கு ஐந்து கடிகையில் "திருப்பாலம்பையங்கோட்டூர்" சந்திரசேகரர், கோடேந்துமுலையம்மை; திருப்பதிகம் - க.

கச-வது அதன் வடகிழக்கு ஒன்றரை கடிகையில் "திருவிற்கோலம்" அல்லது "கூவம்" புராந்தகேசுரர், புராந்தகியம்மை திருப்பதிகம் - க.

---

† முட்டம்-காகம்

கடு-வது. அதற்கு வடமேற்குப் பத்துக்கடிகையில் "திருவால ங்காடு" அமிர்ததாண்டவேசர்; வண்டார்குழலியம்மை; காரைக்கா லம்மையார் தலையால் நடந்து பங்குனிமாதம் சோதியில் முத்தி பெற்றதும், இரத்தினசபையையும் பலாமரத்தையும் உடையதலம்; மோட்சதீர்த்தம் திருப்பதிகம் - ச.

கசு-வது. அதன் றென்கிழக்கு ஐந்துகடிகையில் "திருப்பா சூர்" பாசூரநாதீசர், பசுபதிநாயகியம்மை; சிவபெருமான் மூங்கி லடியில் பாம்பாட்டியாய் வந்திருந்ததலம்; திருப்பதிகம் - ௩.

கஎ-வது. அதற்கு வடக்கு மூன்றுகடிகைதூரத்தில் "திருவெ ண்பாக்கம்" அல்லது "திருவிளம்பூர்" வெண்பாக்கீசுரர், கனிவாய் மொழியம்மை; சுந்தரமூர்த்திக்குக் கோல்கொடுத்ததலம்; திருப்ப திகம் - க.

கஅ-வது. அதன் வடகிழக்குப் பந்துக்கடிகையில் "திருக்க ள்ளம்" திருக்கள்ளியினருகில் சிவாநந்தீசர், ஆநந்தவல்லியம்மை; திருப்பதிகம் - க.

ககூ-வது. அதன் வடமேற்கு முப்பத்தேழுகடிகையில் "திரு க்காளத்தி" அல்லது "சீகாளத்தி" காளத்திநாதர், ஞானப்பூங் கோதை; கண்ணப்பநாயனார், நக்கீரர், சிவகோசரியார், சிலந்திப் பூச்சி, பாம்பு, யானை இவர்கள் பூசித்து முத்திபெற்றதலம், பொன் முகரிநதி; திருப்பதிகம் - ச.

உ0-வது. அதன் தென்கிழக்கு நாற்பத்தைந்து கடிகைதூரத் தில் "திருவொற்றியூர்" மாணிக்கத்தியாகர், வடிவுடையம்மை; தியாகேசர் மகிழமரத்தடியிற் சேவைகொடுத்தும், சுந்தரர்க்குச் சங்கிலியாரை மணம்புரிவித்தும், செக்கார்மரபில் "கலியநாய னார்" வைகாசிமாதம் அச்சுவினிநாளில் அவதாரஞ்செய்து திருவி ளக்குப்பணிவிடைத் திருத்தொண்டுபூண்டு ஒருநாள் தைலமுட்டு ப்பட்டால் தங்கழுத்தரிந்து இரத்தத்தைத் தயிலமாக விளக்கிட்டு, ஆடிமாதம் கேட்டைநாளில் முத்திபெற்றதுமானதலம் அன்றியும் பிரமன் பூசித்ததலம்; திருப்பதிகம் - அ.

உக-வது. அதன் தென்மேற்கு ஐந்துகடிகையில் "திருவலி தாயம்" அல்லது "பாடி" வலிதாயநாதர், தாயம்மை; திருப்ப திகம் - க.

உஉ-வது அதன் வடமேற்கு ஐந்துகடிகையில் "திருவடமு ல்லைவாயில்" பாசுபதீசுவரர் கொடியிடையம்மை; தொண்டைமான்

சக்கரவர்த்தியினது வெட்டுத்தாங்கிச் சிவபெருமான் வெளிப்பட்டதும் சுப்பிரமணியர் பூசித்ததுமானதலம்; திருப்பதிகம் - க.

உ௩ - வது. அதன் தென்மேற்கிரண்டுகடிகைதூரத்தில் "திருவேற்காடு" வேற்காட்டீசர் வேற்கண்ணியம்மை, அகத்தியர்க்குத் திருமணக்கோலங்காட்டியதும், சுப்பிரமணியர் பூசித்ததும், வேளாண் மரபிலே "மூர்க்கநாயனார்" மார்கழிமாதம் புனர்பூசத்தில் அவதரித்து சிவனடியார்க்கமுதளிக்குந் திருத்தொண்டுபூண்டு பொய்யறைச்சூதினையாற்குத்தி மூர்க்கரெனப்பெயர்பெற்று சூதில்வென்ற பொருளடனையெல்லாம் சிவனடியார்க்காக்கிக் கார்த்திகைமாதம் மூலநாளில்முத்தியடைந்ததுமான திருத்தலம்; வேலாயுததீர்த்தம் திருப்பதிகம் - க.

உ௪ - வது. அதற்குத் தென்கிழக்கில் பத்துக்கடிகைதூரத்தில் "திருமைலாப்பூர்" கபாலீசர் கற்பகவல்லியம்மை, திருஞானசம்பந்தர் வைசியருக்கு விடந்தீர்த்து அங்கம் பூம்பாவையாகப்பாடியருளியது வேளாளர்மரபிலே பங்குனிமாதம் உத்திரட்டாதியிலே "வாயிலார் நாயனார்" அவதரித்துச் சிவபெருமானை மானதமாகப்பூசித்து மார்கழிமாதம் இரேவதியில் முத்திபெற்றதும், திருவள்ளுவநாயனார் வசித்ததுமாகிய திருத்தலம்; கபாலிதீர்த்தம் திருப்பதிகம் - க.

உ௫ - வது. அதன் தென்கிழக்கு மூன்றுகடிகையில் "திருவான்மியூர்" மருந்தீசுவரர், வான்மீகத்தியாகர்: சுந்தரமாது, சொக்கநாயகியம்மை; வான்மீகமுனிவருக்குச் சிவபெருமான் நடனதரிசனங்காட்டியதலம்; திருப்பதிகம் - ௨.

உ௬ - வது. அதன் தென்மேற்குப் பதினைந்துநாழிகைவழியில் "திருக்கச்சூராலக்கோயில்" விருந்திட்டாசுரர், அஞ்சனாட்சியுமை சிவபெருமான் சுந்தரமூர்த்திக்கு அமுதுகொடுத்ததலம்; திருப்பதிகம் - க.

உ௭ - வது. அதன் தென்கிழக்குப் பத்துக்கடிகையில் "திருவிடைச்சுரம்" இடைச்சுரநாதர், இமயமடக்கொடியம்மை திருப்பதிகம் - க.

உ௮ - வது. அதற்குத்தெற்கு ஐந்துகடிகைவழி "திருக்கழுக்குன்றம்" வேதகிரீசர், பெண்ணினல்லாளம்மை, கழுகுகள்பூசித்ததலம் திருப்பதிகம் - ௨.

உ௯ - வது. அதன்தென்மேற்குப் பத்துக்கடிகையில் "அச்சிறுபாக்கம்" பாக்கபுரீசர், ஆட்சியீசுரர், சுந்தரமின்னம்மை மரகதவல்லியம்மை; திருப்பதிகம் - க.

௯௦ - வது. அதன் தென்மேற்குப் பத்துகடிகைவழி "திருவக்கரை" சந்திரசேகரர், வடிவாம்பிகை, வக்கிராசூரன் பூசித்ததலம் திருப்பதிகம் - க.

௯௧ - வது. அதன்கிழக்கு ஐந்துகடிகை "திருவரசிலி" அல்லது "ஒழுந்தியாபட்டு" அரசிலிகாத்தவீசர் பெரியநாயகியம்மை திருப்பதிகம் - க.

௯௨ - வது. அதன்தென்கிழக்கு இரண்டுகடிகையில் "திருவிரும்பைமாகாளம்" மாகாளேசுரர், குயின்மொழியம்மை; திருப்பதிகம் - க.

**இவைகளைக்கோயில்புராணம்-சைவசமயவிளக்கவினுவிடை-அகத்தியர்திரட்டு - அந்தந்த ஸ்தலபுராணங்களாலுமறிக.**

இளைத்தெழுவெண்பிறை யார்கச்சியேகம்ப ரின்னருளால்,
விளைத்தெழுநாலி லொருமருந்தாலும் விலக்கரிதாய்
முளைத்தெழுபொற்சிக ரம்போலுமம்மை முலைத்தழும்பும்
வளைத்தழும்பும்பெற் றிருப்பதன்றோதொண்டை மண்ட
[லமே.

[இதன் பொழிப்பு.]

ஆகாயத்திலெழுகின்ற இளமைபொருந்திய வெள்ளிய சந்திரப்பிறையையணிந்த கச்சியேகம்பநாதர் "தேவர்களால் விளைவிக்கப் பட்டு வளர்கின்ற அம்புமுதலிய ஆயுதங்கள்பட்ட காயங்களாற்றுவது (சல்லியகரணி) துண்டிக்கப்பட்ட அவயவங்களை ஒட்டுவிப்பது (சந்தானகரணி) பலவகைப்பட்ட புண்களை ஆற்றிமாற்றுவது (சமநீயகரணி) பிரிந்தவுயிரைப் பின்னுங்கூட்டிப் பிழைப்பிப்பது (சஞ்சீவகரணி)" என்னும் நான்கிலொன்ருகிய சமநீயகரணியாலும் மாற்றப்படாத விதமாகக், காமாட்சியம்மையினுடைய பொன்மலைச் சிகரம்போல முளைத்துவளர்கின்றமுலைத்தழும்பையும் வளைத்தழும்பையும் திருமேனியில் கிருபையால்பெற்றமர்ந்தருளியது தொண்டைமண்டலத்திலல்லாமல் வேறுமண்டலத்திலல்ல - என்றபடி. (௪)

வேதங்களை இயல்பாகவேயுணர்ந்த வியாசரால் சொல்லப்பட்ட ஸ்காந்தபுராணத்தின் உருத்திரசங்கிதையில் பிரமபுத்திரன் தக்கன் அரியதவத்தா லுயர்ந்தவரங்களைப்பெற்று வாழ்கையில் தனக்குப் புத்திரியாகவவதரித்த பார்வதியாரை பரமசிவன் விவாஹித்த பின்பு தான் கைலாயத்துக்குப்போனவிடத்தில் தனக்கு எழுந்து சுவாமி மரியாதை செய்யவில்லையென்று கோபித்துத் தானே பாத்

துவமாகநினைந்து யாகஞ்செய்யத்தொடங்கினான். அது தெரிந்து பார்வதிதேவியார் தக்கன்செய்யும் வேள்விக்குப்போக விடைகேட்டு மறுத்தும் கேளாமல் வேண்டி விடைபெற்று யாகத்துக்குப்போயும் தாய் தந்தையர் தன்னைவிசாரியாமல் அவமதித்தார்கள் அதைமன ம்பொறாது அவர்கள் வயிற்றிலுதித்து அவர்களால் வளர்த்த தேக மிருக்கக்கூடாதென்றெண்ணி அந்தயாகசாலை அழிந்து சுடலையாகப் போகக்கடவதென்று சபித்து தன்தேகத்தை யோகத்தினால் விட் டாள். அதனால் சாம்பமூர்த்தியாருக்குப் பிறந்தகோபத்தினாலே கோரரூபமாக ஆகாயம், பூமி பாதலம் நடுங்கும்படி வீரபத்திரர் தோன்றினார் அவரைப் பரமசிவன்பார்த்து தக்கனுடைய யாகத்தை அழித்துவரும்படி கட்டளையிட்டார். பரமசிவன்கட்டளைப்படி பூத கணங்கள்சூழ தக்கன் யாகசாலைக்குட்போய்ப் புகுந்து அங்கிரு ந்த அஷ்டதிக்குபாலராதி தேவர்களுடன் போர்செய்தார்கள் வீரப த்திரர்பாணத்தால் இயமனிறந்தான். அக்கினி ஏழுநாவையும் அ றுவுண்டான் யாககர்த்தாவாகிய கலைக்கோட்டுமகாரிஷி உடலும் உயி ரும் பிரித்து தோலையுரித்தெறிந்தார். யாகஸ்தம்பத்தைப் பிடுங்கி தக்கன் றலையையறுத்துத்தள்ளினார் அத்தலையை யொருபூதம்தின் றுவிட்டது. அங்கிருந்த உருத்திரக்கூட்டங்கள், அஷ்டவசுக்களை பதுங்கிக்கொண்ட முநீச்வரர்களை சூலாயுதத்தாற்கொன்றார். சூரி யனுடைய பல்லும் கண்ணும் கீழேவிழஅடித்தார். சரசுவதிநாவை யறுத்தார். சந்திரனைக்காலினால் தேய்த்தார் பூதகணங்களால் இறந்த தேவர்கள் பேயாய்வந்து மறுபடி யுத்தஞ்செய்தார்கள் வீரபத்திரர்பூ தகணங்க ளவைகளைக்கொன்றதுகள் அந்தயாகத்துக்குவந்திருந்த எல் லா தேவர்களும் வீரபத்திரர் அகோரயுத்தத்தில் மடிந்தார்கள். அவர் களை அக்கணமேபிரமன் படைத்துவந்தான். அவர்கள்மறுபடியும் யுத்த ஞ்செய்தார்கள்அந்தப்பிர்ம்மாவினுடையகைகளையறுத்துவிட்டுஅவன் மனதுக்குள்ளிருக்கும் பத்துப்பிரம்மாவையும் சூலத்தினாற்குத்தித்த ள்ளினார் வீரபத்திரர்மேல் விஷ்ணு அநேகபாணங்களைவிட்டார் வீரப த்திரர் கருடனைக்கொன்றார் விஷ்ணுவுந்தோற்று மச்சியமாக சமுத்தி ரத்தில் போய்ஒளித்தார் பிரமனையுங்கொன்றார் இப்படியாக யாகசா லையை நாசஞ்செய்துவிட்டு கைலாயத்தில் பரமசிவனைப்பணிந்தார். பரமசிவன் கோபந்தணிந்து எல்லாவுலகமும் பாழானதைப்பற்றி எல்லாதேவர்களையும் மறுபடியும் பிழைக்கும்படிச்செய்ய அவர்கள் அபசாரப்பட்டோமென்று முறையிட்டார்கள் பின்பு அவரவர்கள் தங்கள் உலகுக்குப்போகக் கட்டளையிட்டுத் தக்கனைமாத்திரம் அவன் கருவமடங்கும்படி ஆட்டுத்தலையை அவனுடலிற் பொருத்தி எழு

ந்திருக்கும்படி செய்தார் தக்கன் பெண்ணென்றிராமல் தேக
த்தைவிட்ட பார்வதியார் பர்வதராஜனுக்குப் பாரியாகிய மேனா
தேவியின்வயிற்றில் புத்திரியாக ஜனித்தார் தேவர்கள் கற்பகபுட்ப
ங்களை வருஷமாகவருஷித்தார்கள் சித்தாந்தமாகச் சொல்லப்பட்ட
சிவனிடத்திலே ஒன்றுபட்ட அபின்னாசத்தியாய்ப் பின்பு அச்சிவத்
தினின்றும் பின்னாசத்தியென்று வேறுபட்டபின்பு, ஞானாசத்தி,
இச்சாசத்தி, கிரியாசத்தி யெனமூவகையாகி, குடிலையினாலுண்
டாகிய நாதவிந்துக்களுக்குக் கொழுக்கொம்பாகி சுவாமிககு மூத்
தாகியும் பரமசிவனிடத்தில் உருத்திரன், விஷ்ணு, பிரமா முதலா
னவர்கள் உண்டாகிறதற்கு மூலமாகிய வித்தாகியும், எங்குநிறை
ந்த பார்வதியைப் பெற்றவர்க்குண்டாகிய பெருமையைச்சொல்ல
முடியுமோ. பின்பு பார்வதியார் பரமசிவனுக்குத் தொண்டுசெய்
திருந்தார். அந்தக்காலத்தில், தாருகாசூரன் உபத்திரவஞ் சகிக்கமா
ட்டாமல் தேவர்கள் பிரமாவுடன் யோசித்து அவன்சொன்னபடி
மன்மதனை தவத்திலிருக்கிற பரமசிவன்மேல் புஷ்பபாணங்களை
ஏவும்படி செய்யச்சொல்ல மும்மலசம்மந்தமில்லாத அக்கினிசுரூப
மாகிய சுவாமிபேரில் பாணப்பிரயோகம் செய்யமாட்டேனென்று
மறுக்கவும் இந்திரன் முதலானோர் வேண்டுகோளுக்கிரங்கி மன்ம
தன் தவத்திலிருந்த பரமசிவன்மேல் புஷ்பராகமென்கிற பாணங்
களை மோகவலையில் மயக்கும்படி வருஷித்தான். சுவாமி நெற்றிக்
கண்ணை விழிக்கவும் மன்மதன் பஸ்மமாக எரிந்துவிட்டான் சுவாமி
தவத்தை நீங்கி கைலாயத்துக்குச்சென்றார் பின்பு பார்வதியாரை
இமோர்ப்பருவதத்தில்வந்து திருக்கலியாணமாக விவாகித்துக்கொண்
டார்பின்பு ஓர்காலத்தில் பார்வதியார் சிவனைப்பார்த்து சூரிய சந்திரர்
யாவரென்றுகேழ்க்க அவர்கள் நமது நேத்திரமென்றுசொல்ல அம்
மன்வேடிக்கையாக அவர் இரண்டுகண்களையும் மூடினாள் அதனால்
தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், பறவைகள் முதலிய யாவத்து
ஜீவராசிகளும் கண்ணொளியிழந்து குருடாய்விட்டன விஷ்ணு
பிர்ம்மாதி தேவர்கள்எல்லாம் பரமசிவனிடத்தில் முறையிட்டுக்கொ
ண்டார்கள் சிவபிரான் நெற்றிக்கண்ணை கருணையோடுதிறந்தார்
பார்வதியாரும் கண்ணைமூடியிருந்த இரண்டு கைகளையும் வாங்கி
னாள். உலகெங்கும் கோடிசூரியோதயம்போல் பிரகாசமுண்டாயி
ற்று. அப்போது பார்வதியார்பயந்து 'சுவாமீ உமது கண்களை
மூடியபாவந்தீரத் தவத்தைச்செய்ய நல்லதலத்தை யருளிச்
செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தாள் சுவாமி கருணைகூர்ந்து,
மதுராபுரி, மாயாபுரி, காசி, அவந்திகாபுரி, துவாரகாபுரி, அயோ

த்தியாபுரி, இவைகளுள் சிறந்த காஞ்சித் தலமகிமையைச்சொல்லி நீ காஞ்சிபுரத்தில்போய் தவஞ்செய்யென்று சிவபூஜாவிதியையும் அருளிச்செய்தார் அம்மன் விடைபெற்று விமானத்தில் ஆரோகணித்து அஷ்டலக்ஷ்மிகளும் தாதிப்பெண்களும் சூழ்ந்து பணிந்துவர கங்காநதியில் மூழ்கி சிலநாளங்கிருந்து தொண்டைமண்டலம் வந்து பலவளம்பொருந்திய காஞ்சிநகரைச்சேர்ந்து ஈசான்யதிக்கில் ஓர்தீர்த்தமுண்டுபண்ணி மூழ்கிச் சங்கற்பஞ்செய்து வலக்கரத்தில் காப்புகட்டிக்கொண்டு அங்கு லிங்கம்வைத்து பூசித்தாள் அதற்கு காப்புதீர்த்தமென்றும் காப்புலிங்கமென்றும் பெயர், பின்பு காஞ்சிநகரச் சிறப்புகளை யெல்லாம் பார்த்துக் களிப்புற்று பிலத்தையுங் கண்டாள் உலகாணிக்கரையில் சேர்ந்து பலதருமங்களைச்செய்து கம்பாநதியிலும் ஆலயத்திலுள்ள பலதீர்த்தங்களிலும் மூழ்கி ஐவகைப்பிரமமும் அங்கம் ஆறும் விநாயகர்முதலியரை வணங்கிவந்து நந்தியைத் தரிசித்து சுவாமியைப்போய்க்கண்டு ஸாஷ்டாங்கமாகப் பணிந்தாள் ஒப்பற்ற மாவிருக்ஷத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனைக்கண்டு வணங்கித் தொழுது கைகூப்பிநிற்க நல்ல ஓர்சுபமுகூர்த்தம் பார்த்துச் சிவலிங்கப்பிரதிட்டைசெய்வதற்குக் கம்பாநதியில் ஸ்நானஞ்செய்து சங்கற்பஞ் செய்துகொண்டு அங்கந்யாஸம், அஹந்யாஸம் முதலிய சுத்தியும்செய்து பூசுரர்கள் ஏழைஜனங்களுக்குத் தக்ஷிணைகொடுத்து பரிசுத்தமாகிய பீதாம்பரத்தை யுடுத்திக்கொண்டு திருநீறு அணிந்து உருத்திராக்ஷங்களைத் தரித்து பலதேவர்கள் முனிவர்கள் ரிஷிக்கூட்டங்கள் சூழ்ந்து பலவாத்தியங்கள் வேதகோஷங்களுஞ் செய்ய அம்மன் தமதுதிருக்கரங்களால் மணலைலிங்கமாகக்குவித்து தேவர்கள் உபகரணசமித்து தருப்பை, நெய், பால், தயிர் காமதேனுவுங்கொடுக்கக் குற்றமற்ற பிர்ம்மாதியர்கள் சடங்கியற்றச் சுபமாக மந்திரலோபம் தந்திரலோபமில்லாமல் தவசைசெய்யும்படிக்கு பஞ்சாக்ஷரத்தை ஜபித்து ஆகமவிதிமுறையே சிவனை மனதில்தியானித்து ஒரேமனதாக ஆவாகனஞ்செய்து தேவர்கள் பூஜாதிரவியங்களை கொடுத்துக்கொண்டுநின்று அரகரவென்று வேதகோஷம் தேவதுந்துமிமுழங்க பார்வதி பூசிக்கத்தொடங்கினாள். எங்கும் ஒன்றாய், எப்பொருளாய், எப்பொருட்கும் இறைவனுமாய், தற்பரமாய், புண்ணியமாய், பூடகமாய் அங்கலிங்கமானார்க்கு ஆதனம்வைத்து சகளமாய், நிஷ்களமாய், நிற்குணமாய், சற்குணமாய், முத்தியுமாய், முப்பொருளாய், பத்தியுமாய் நின்ற பராபரத்துக்குப் பாத்தியமுங்கொடுத்து பூரணமாய், புருடோத்தமுமாய், காரணகாரியமாய், கண்டமுமாய், அகண்டமுமாய், நாரண

ஞானியர் போற்றும் ஆரணமாய் நின்றோனுக்கு அர்க்கியமுமளித்து சத்துவ, ராசத, தாமதமாய் சொல்வதற்கரிய சத்து சித்து ஆனந்தத் தத்துவத்தன்மையுடைய அத்விதமுடையோனுக்கு ஆசனமும்வைத்துதைலமாதி பஞ்சகவ்விய சந்தனகளப கஸ்தூரிகளால் ஆகமப்படி முறையே அபிடேகஞ்செய்து திகம்பரமாய் நின்றருளுகின்ற கடவுளுக்குப் பீதாம்பரத்தைத்தரித்து முப்புரிநூலும் சந்தனமுஞ்சாத்தி அக்ஷதையிட்டு நல்லவாசனைபொருந்திய தூயமலர்மாலைகளைச்சாத்தி அர்ச்சித்து தூபதீபம் பாகடையும் நாரிகேளகதளிகாதி பலங்களையும் அமுதும் நிவேதித்து ஆலாத்தியுஞ்சுழற்றி மீட்டும் அர்ச்சித்து அரகர வென்று வெண்சாமரை நிருத்தம் கீதவாத்தியமுழங்கச் சமர்ப்பித்து சாஷ்டாங்கமாக நமஸ்காரங்களுடன் பிரதக்ஷணஞ்செய்து சிரசின்பேரில் கைகளைக்குவித்துக் கொண்டு மனமுருகி பரமசிவன் பாதத்தைச் சிந்தித்துத் தோத்திரஞ்செய்து த்யானத்திலிருந்து அம் முதல் க்ஷம் ஈறாயுள்ள ஐம்பத்தோரக்கரங்களை நான்கக்கரங்களை மூலாதாரத்திலும் பம் முதலாயுள்ள ஆறக்கரங்களை சுவாதிட்டானத்திலும் டம் முதலாயுள்ள பத்தக்கரங்களை மணிபூரகத்திலும் கம் முதலாயுள்ள பன்னிரண்டக்கரங்களை அனாகதத்திலும் அம் முதலாயுள்ள பதினாறுயிர் அக்கரங்களை விசுத்தியிலும் ஹ, ள, க்ஷ என்னும் இம்மூன்றக் கரங்களை ஆக்கினையிலுமாக ஆறாதாரத்திலும், (அதாவது அவற்றிற்கு முறையே இடம், குதம், குய்யம், நாபி, இதையம், அடிநா, நெற்றி என்பனவாம்.) அந்தர்யாசஞ்செய்து ஆத்மசுத்தி, பூதசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி, என்கிற பஞ்சசுத்திகளை நடாத்தி மூலமந்திரத்தைச் செபித்து பிராணாயாமத்திலிருந்து ஆவாகனம், ஆஸ்தாபனம், சந்நிதாபனம், சந்நிரோதனம், சகலீகரணம், பரிமீகரணம், அவகுண்டனம், தேனுயோனி, அமுர்தீகரணம் என்கிற, திக்குபந்தனாதி மந்திரகிரியாபாவனைகளைக் கொண்டு பூசித்து அரியதவத்தைச் செய்யலுற்றாள், இப்படியாகச் செய்யும் பார்வதியாரது மனதை சோதிக்கவெண்ணி சுவாமி கம்பாநதியைப் பெருகும்படிச்செய்தார். அப்படிவரும் பெரும்பிரவாகமானது பூமியில் அகத்தியமுனிவர் குண்டிகையிற்கவிழ்ந்துவரும் காவிரியாறோ ஆதியில் அந்தமுனிவர் ஆசமித்துஉமிழ்ந்த சமுத்திரத்தின் பெருக்கோ பகீரதனுக்காக சன்னமுனிகாதின்வழியாக விடப்பெருக்கெடுத்துவந்த கங்காநதியோ என்று பிரமிக்கும்படி கம்பைநதி பெரும்பிரவாகமாக வருவதுகண்டு தாம் பூசைசெய்யும் (மணல் லிங்கத்துக்கு) அபாயம்வருமென்று பயந்து காமங்கொண்டஆசையால் அணைகிறவள்போலத் தனதுவளையணிந்த திருக்கரங்களாலும்

இரண்டு கொங்கைகளாலும் இறுக விறுகத்தழுவுதலும் திருமார்பு உருகிக்குழைந்து முகம்அழுத்தி அணைத்து லிங்கத்தைக்கட்டிக்கொண்டாள். அப்போது கம்பாநதி இரண்டாகப்பிரிந்து சுவாமியைச் சுற்றிக்கொண்டோடியது பார்வதியாரும் சுவாமியைத்தழுவியகைகளைக்குவித்து ஆதியும் அநாதியுமாய் நின்றாய்போற்றி, அறுகுணனேபோற்றி, எண்குணத்து ஈசாபோற்றி, இறைவாபோற்றி, ஏகனேபோற்றி, எங்குநிறைந்தவனேபோற்றி, தேவாபோற்றி, பேரின்பவடிவாயபெரியபோற்றி, உமதுதாளைமறவாது வணங்கியான்துதிக்கவரமருள்வாய்போற்றி என்று பலவாறாகப்போற்ற பரமசிவம் களிகூர்ந்து பாண்டியராஜன் அடித்ததழும்புகள் தோளிலும தேவர்கள் வணங்குந் தழும்புகள் திருவடிகளிலும், பார்வதியாரது திருக்கரங்களின் வளைத்தழும்புகளும் முலைத்தழும்பும் மார்பிலும் பிரகாசிக்கவும் விருஷபவாகனத்தின்மீது எழுந்தருளி பார்வதியாருக்கு எதிரில்தோன்றினார். அப்போது பார்வதியார் சுவாமியைதரிசித்து அநேகமாகத் தோத்திரஞ்செய்து உடல், பொருள், ஆவி மூன்றினையும் சிவனது திருவடியில் சமர்ப்பித்து ஆநந்தபாஷபம் பெருகக் கண்களிகூர்ந்து ஞானசுரூபியாகிய அம்மன்தமது ஹிருதயத்தில்கொண்ட அருளென்னுந் திருமஞ்சனமாட்டி, சாந்தமென்னும் சந்தனத்தைச்சாத்தி ஞானம், மோநம், தானம், தவம், தருமம், மனவூக்கம், கல்வி, கேள்வியென்கிற அட்டபுஷ்பங்களாலர்ச்சித்து தோத்திரஞ்செய்து நிற்கின்ற பார்வதியாரைப்பார்த்து சுவாமி தமது கண்களை மூடிய பாவவிமோசனஞ் செய்தார் அப்போது அம்மன் சுவாமியைவணங்கிப் பணிந்து ஆண்டாண்டுதோறும் பங்குனிமாதத்தில் திருவிழாவில் உத்திரநாளில் திருக்கல்யாணஞ்செய்து ஜனங்களுக்குக் காக்ஷிகொடுத்தருள வேண்டுமென வேண்டிக்கொண்டாள் அப்படியே ஆகுகவென பரமசிவன் கிருபைசாதித்தருளினார் அந்தப்படியே வருடந்தோறும் ஏகாம்பரநாதருக்குப் பங்குனிமாதத்தில் நடக்கின்ற திருவிழாவில் அம்மன் கம்பாநதியில் தவஞ்செய்யும் ஐதீகமும் திருக்கலியாணமஹோற்சவமும் நடந்துவருகின்றன. சுவாமி அம்மனுக்கு இந்தத்தலத்தில் தமதுகண்மூடிய பாபத்தைத தீர்த்தருளினோம் இனிதிருவண்ணாமலையில் தவஞ்செய்து நமது இடப்பாகம் பெறுவாயென வரங்கொடுத்து கைலாயத்துக் கெழுந்தருளினார். ஆதலால் வளைத்தழும்பும் முலைத்தழும்பும் சயநீயகரணியாலும் நீக்கப்படாமல் ஏகம்பர் திருமேனியில் எப்போதுமுள்ள தென்பது இஃது காஞ்சித்தலமான்மியத்தும் அருணாசலத்தலமான் மியததிலுங் கூறுகின்றது.

சேணூர்கழுகு பழகுதெய்வீகச் சிறப்புமன்றி
யேணூரும்பூதங் கொடுபோவதுமன்றி யெண்ணிறெருல்சீர்க்
காணுதுகாண்பது கச்சியிலேயென்று காசினியோர்
வாணாளவுந் துதிப்பதன்றேதொண்டை மண்டலமே.

[இதன் பொழிப்பு.]

ஆகாயத்திற் சஞ்சரிக்குங் கழுகுகள் வழிபாடுசெய்கின்ற தெய்வீகமுடையது கழுக்குன்றம் என்றும், பெரியபூதம் திருமாலைச்சுமந்து செல்லும் வீரத்தலம் வெஃகா, ஊரகம், பாடகம் என்றும், காணுதற்கரிய சோதி விருட்சமுதலியவற்றைக் காணுதற்கிடமாய்ப்பழமையாகிய சிறப்பினையுடைய அற்புதத்தலம் காஞ்சி என்றும் உலகிலுள்ளோர் தமது ஆயுள்நாள் முழுவதிலும் துதிசெய்யப்பெற்றது தொண்டைமண்டலம். (ரு)

வேதங்களே பருவதமாகிய காரணப்பெயர்பெற்ற வேதகிரியில் கிரேதயுகத்திலே சண்டன், பிரசண்டனென்பவர்களும், திரேதயுகத்திலே சம்பாதி சடாயுவென்பவர்களும், துவாபரயுகத்திலே சம்புகுப்த்தன் மகாகுப்த்தன் என்பவர்களும், கழுகுகளாகிச் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றார்களென்பதும்; தேவேந்திரன் பன்னீராட்டைக் கோர்முறை இடியேற்றுருவாய் வந்து பூசிக்கின்றானென்பதும், கோடிஉருத்திரர்கள் பூசித்துப் பேறு பெற்றார்களென்பதும்; ஒருகாலத்தில் நந்திகேசுரர் பூசித்துப் பேறு பெற்றார் என்பதும்; கலியுகபூர்வத்திலே சம்பு - ஆதியென்னும் முனிவர்கள் சிவபெருமானிடத்துச் சாபம்பெற்றுக் கழுகுகளாகிப் பரான்னகாலத்தில் கங்கையின் மூழ்கிவந்து மத்தியானத்தில் வேதகிரீசர் கோபுரத்தை வலஞ்செய்து தரிசித்து அங்கு உணவு முதலியவற்றாலுபசரிக்கப் பெற்று அபரான்னகாலத்தில் சிதம்பரத்தில் ஒடுங்குகின்றமையும் பிறவும்ஆகிய தெய்வீகங்கள் ஐதிகபிரத்தியட்சமன்றி பிரத்தியட்சத்திலும் காணப்படும்.

காஞ்சீபுரத்தில் காமாட்சியம்மை முப்பத்திரண்டறம் வளர்க்கும் நிமித்தம் வந்துகொண்டிருந்த பலபண்டங்களைத்தடுத்தழிவுசெய்தலும், மனிதர்களைப்புசித்தலும் செய்துகொண்டிருந்த ஓர் பூதத்தைத் துடுக்கடக்கும்படி அம்மை திருமாலையேவத், திருமால் அப்பூதத்தைப்பிடித்து அதன்மீதேறிநிற்க அப்பூதம் அதனுற் பராக்கிரமங் குன்றுதிருக்கக் கண்டுஅதன்மீது உட்கார்தலாலும் அடங்காதிருக்கக் கண்டு தன்னுடல்முழுவதும் படியும்படி அதன்மேற் படுத்துக்கொண்டபின் அடங்கியது என்பதும் அவ்வச்செயல் நிகழ்ந்தவிடங்க

ளில் "வெஃகா" "ஊரகம்" "பாடகம்" என்னுந்தலங்களுண்மையும், அத்தலங்களில் திருமால் நின்றதிருக்கோலம், இருந்ததிருக்கோலம், கிடந்ததிருக்கோலம் ஆகிஎழுந்தருளியிருத்தலும், அதுபற்றியே.

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்றா னிருந்தா னிருந்தா னிவையன்றே
மன்றார் மதிற்கச்சி மாண்பு."

என்னுஞ் செய்யுளுண்மையும் பிரத்தியட்சம்.

காஞ்சித்தலபுராணம் வீராட்டகாசப்படலம் ருக - ருஉ - ருங பாடல்களிலும், காஞ்சித்தெய்வீகவுலாவிலும், காஞ்சிபுரத்தில் விருட்சம் முதலிய அற்புதங்காணப்பட்டமையும் திருக்கழுக்குன்றத்து ஸ்தலபுராணத்திலும் விளங்கும்.

நீடார்துளப மணநாறுகச்சியி னீலமொன்றுங்
கோடாவிளக்கொடு சேர்நீலமொன்றுங் குலவுபுக
ழோடார்சுனையின் மலர்நீலமொன்றுமற் றெப்பொழுதும்
வாடாமற்காட்டவும் வல்லதன்றோதொண்டை மண்டலமே.

[இதன் பொழிப்பு.]

கச்சிப்பதியில் நீண்டதுளவமாலை மணங்கமழ்கின்ற நீலமணிபோலுந் திருமேனியையுடைய கரிவரதப்பெருமாளும், நீலமணி போன்ற தீபப்பிரகாசப் பெருமாளும், சுனையின்கண் இதழ்விரிகின்ற அற்புதநீலமலரும் எக்காலத்தும் விளங்குந் தெய்வீகவல்லமையுடையது தொண்டைமண்டலம். (ரு)

---

இச்செய்யுள் விஷ்ணுவின் திப்பிய திருத்தலங்களை வரையறுத்துக்கூறுகின்றது.

ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
யோர்பதின்மூன் றாமலைநா டோரிரண்டாம் சீர்நடுநா
டாறோடீ ரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

[இதன் பொழிப்பு]

திருநாடாகிய ஸ்ரீவைகுண்டத்தில் நித்தியமுக்தர் ஸேவிக்கும்படிக்கெழுந்தருளிய ஸ்ரீமந்நாராயணன் அபௌருஷேயமான

வேதங்களின் கருத்தை த்ரவிடப்பிரபந்தங்களாக நிலைநிறுத்தத் தந் திருவுளத்திலெண்ணி நித்யசூரிகளுக்குத் தலைவரான ஸேனைமுத லியாரைப்பார்த்து திருக்குருகாபுரியிலிருக்கிற சுத்தாகாரசுசீல வே ளாளகுல திலகராகிய காரிமுதலியார் அவர்பத்நி உடையநங்கை யுந் தவம்செய்கிறார்கள் அவர்களுக்குப் புத்திரராயவதரியுமென்று திருவருள்செய்தார் அப்படியே சேனைமுதலியார் பூலோகத்தில் காரி உடையநங்கையாருக்குக் கலியுகம்பிறந்த நாற்பத்து மூன்றாம் நாள் புத்திரராகப்பிறந்து ப்ராக்ருதசிசுக்கள்போல் அழாமலும் ஸ்த ந்யபானம் பண்ணாமலும் கண்விழியாமலும் அசைவற்று நாளுக்கு நாள் திருமேனி யபிவிர்த்தமாக இருந்தார் இவ்வாச்சரியத்தை மாதாபிதாக்கள்கண்டு பன்னிரண்டாநாள் மாறனென்று திருநா மம் சாத்தித் திருக்குருகூர் எம்பெருமான் ஸந்நிதியில் சேவிக்கப் பண்ணுவித்தார்கள் ஸ்ரீய:பதியானவர் சேனைமுதலியாரான நம்மா ழ்வாருக்கு ரஹஸ்யங்களை ப்ரசாதித்தருளினார் நம்மாழ்வாரும் சங் குசக்ராங்கிதராயும் ஊர்த்துவபுண்டரதரராயும் அதிகதேஜிஷ்டரா யுமிருப்பதைத் தாய்தந்தையர்கண்டு ஜூடவாயுவை நிராகரித்தவரா கையால் சடகோபனென்று உளமகிழ்ந்திருந்தார்கள் இருக்கையில் குருகாபுரியில் ஒருசோதியுண்டாயது அந்தஅடையாளத்தைக்கண்டு அயோத்தியிலிருந்து மதுரகவியாழ்வார்வந்து நம்மாழ்வாரைப்பணி ந்து பிரார்த்திக்க அப்போது ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீதேவிபூஷுணா யுத பரிசனங்களோடே பெரியதிருவடியின்மேல் எழுந்தருளினார். நம்மாழ்வார் திவ்யாத்ம சுவரூபதிவ்யமங்கள விக்ரஹ, திவ்ய, தேவீபூஷணாயுத திவ்யகுணசேஷ்டிதங்களையும் அனுபவித்து அவ் வனுபவத்தை ப்ரகாசிப்பிக்கிற ஸர்வவேதார்த்த ஸாரமான திருமந் திரார்த்தத்தை நான்கு ப்ரபந்தங்களாலே ப்ரகாசிப்பித்தருளத் திருவு ள்ளமாயிருக்கும் வேதசாரதிருவிருத்தம் அதர்வணவேதசாரமான பெரியதிருவந்தாதி, ஸாமவேத ஸாரமான திருவாய் மொழியை யும் மதுரகவிகளும் பட்டோலைகொள்ள அவருக்கு ப்ரசாதித் தருளினார், மதுரகவிகளும் அவைகளைப்பெற்று (மிக்கவேதியர் வேதத்தினுட்பொரு ணிற்கப்பாடிஎன்னெஞ்சுணிறுத்தின) நம் மாழ்வாரைக்காட்டிலும் (தேவுமற்றறியாதவராய்) என்னப்பனண் ணித் தென்குருகூர்நம்பி யென்றக்காலண்ணிக்குமமுதூறும்) என்று பாகவதசேஷத்வ ப்ரபந்தமாகக்காட்டத் திருவுள்ளமாய், ஆழ்வார் தம்மிடத்தில் பண்ணினகடாக்ஷ விசேஷத்தைப் பொலிந் துநின்ற பிரான் பிரசாதித்த மகிழம்பூமாலை சாத்திக்கொண்டு வகுளாபரணனென்கிற திருநாமத்தை யுடையவரான நம்மாழ்வார்

முப்பத்தைந்தாந் திருநக்ஷத்திரத்துக்குமேல் நித்யாநுபூதிக் கெழுந்தருளினார், பின்னர் நம்மாழ்வாரைத் திருநகரியில் அர்ச்சாரூபமாக திருப்ப்ரதிஷ்டைசெய்து ப்ரடந்த சதுஷ்டயத்தை ப்ரவப்ர ப்ரவர்த்திப்பித்தருளினார்; இதுவிவரத்தைக் குருபரம்பரா ப்ரபாவத்தாலுணர்க. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழி ப்ரபந்தத்தைச் சங்கத்தார் கேள்வியுற்று இது சங்கச்செய்யுளாமோ வென்று அப்பிரபந்தத்தையும் நம்மாழ்வாரையும் அலக்ஷியமாகச்சொல்ல பாகவதோத்தமர்கள் அது மனம்பொறாது அச்செய்தியை ஆழ்வார் ஸந்நிதியில் முறையிட்டுக்கொள்ளவும் கண்ணபிரான் பிராம்மண மூர்த்தமாய் எழுந்தருளிவந்து திருவாய்மொழியில் தொண்ணூற்று ஒன்பதாவது திருவாய்மொழி ஒராவது பாசுரம் ஒராவது பாதம் (கண்ணன் கழலிணைகள்) என்பதை ஓர்சிறுமுறியில் எழுதி சங்கப்பலகையில் வைக்கும்படி உத்திரவுசெய்தார், அந்தப்படி நம்மாழ்வார் பாகவதசிரேஷ்டர்களுக்கு அநுக்கிரகித்தார் அதுகொண்டு சங்கப் பலகையின்மீது வைக்க அது அம்முறியைமாத்திரம் தாங்கிக்கொண்டு சங்கத்தாரனைவரையும் நீரில்தள்ளிவிட்டது அவர்கள் கரையேறி அத்திருவாய்மொழியைப்பார்த்து அதிகவியப்படைந்து ஆழ்வாரை ஸ்தோத்திரமாக சங்கத்தாரனைவரும் பாட அவைகளனைத்தும் ஒரேபாடலாகவே முடிந்ததுகண்டு பிரமித்து அதிசிரத்தையுங்கொண்டு பின்னும் மகிழ்ந்தார்கள்.

அப்பாடல் வருமாறு - வெண்பா.

சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசனோ நாரணனோ தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கோ
உளவோ பெருமா னுனக்கு.

சகாத்தம் எண்ணூற்றேழில் இதிஹாசமாகிய த்ரவிட ராமாயணம் கம்பர்செய்த ராமசரிதத்தை அரங்கர் சந்நிதியில் அரங்கேற்றுதல் செய்ய எத்தனிக்கையில் நஞ்சடகோபனைப் பாடினையோ வென்று ஓர் அசரீரிவாக்கால் அரங்கேசர் ப்ரசாதித்தருளக் கொண்டு கம்பர் செய்த சடகோப அந்தாதியில்.

கட்டளைக்கலித்துறை.

நஞ்சடகோபனைப் பாடினையோவென்று நம்பெருமாள்
விஞ்சியவாதரத் தாறகேட்பக்கம்பர் விரைந்துரைத்த

செஞ்சொலந்தாதி கலித்துறைநூறுந் தெரியும்வண்ணம்
நெஞ்சடியேற்கருள் வேதத்தமிழ்செய்த நின்மலனே.

வேதத்தின் முன்செல்லு மெய்யுணர்ந் தோர்விரிஞ் சன்முதலோர்
கோதற்றஞானக் கொழுந்தின்முன்செல்லுங் குணங்கடந்தப்
போதக்கடலெங்கள் தென்குருகூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின்முன்செல்லு மோதொல்லைமூலப் பரஞ்சுடரோ.

## திருவரங்கக் கலம்பகம் காப்பு.

வேதந்தொகுத்துத் தமிழ்ப்பாடல்செய்த விமலன்பொய்கை
பூதன்மயிலையர் கோன்புகழ்ச்சேரன்புத் தூரன்றொண்டர்
பாதந்தருந்துகண் மாமழிசைக்குமன் பாணன்மங்கை
நாதன்மதுர கவிகோதைபாதங்கள் நண்ணுதுமே

என்று பாடப்பெற்ற நம்மாழ்வார் முதலிய ஆழ்வாராதிகள் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருக்குருகூர் முதலிய திருப்பதிகளாவது.

சோழ மண்டலத்தில் நாற்பது, பாண்டிநாட்டில் பதினெட்டு, மலை நாட்டில் பதின்மூன்று, நடுநாட்டிலிரண்டு, தொண்டைநாட்டில் இருபத்திரண்டு, வடநாட்டில் பன்னிரண்டு, திருநாடு ஒன்று ஆகிய நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் துண்டீரமண்டலமென்னும் இந்தக்காஞ்சிமண்டலம் சிறந்ததென்றுணர்ந்து ஓர்காலத்தில் பிர்ம்மாவானவர் யாகம்செய்யும் பொருட்டுச் சத்தியலோகத்தைவிட்டு காஞ்சிமாநகரில் வந்துசேர்ந்து யாகஞ்செய்ய எத்தனிக்கையில் இலக்ஷமிக்கும் சரசுவதிக்கும் நான்பெரியவள் நான்பெரியவள் என்று ஒருவர்க்கொருவர் சம்வாதம்நடந்து இருவருள் உயர்வு தாழ்வு என்பதைச் சொல்லவேண்டுமென்று பிர்ம்மாவிடத்தில்வந்து இருவரும் சொல்லிக்கொண்டார்கள் பிர்ம்மாவானவர் என்மாதாவாகிய லக்ஷமிதேவியார் உயர்வென்று சொன்னார் அதுகேட்டு மனம்பொறுது வடக்கே சரசுவதிநதியாகப் போய்விட்டாள் பின்பு பிர்ம்மாவானவர் வேதமுறைப்படி பத்தினியோடிருந்து யாகம்செய்யவேண்டியதாகையால் சரசுவதிதேவியை வரும்படிவேண்டியும் வராமல் மறுத்துவிட்டதால் சரசுவதியாரைப்போல் சுவர்ணத்தால் பிம்பம்செய்வித்து பக்கத்தில்வைத்துக்கொண்டு யாகம்செய்வது சரசுவதிதேவிக்குத் தெரிந்து நதிரூபமாகி அதிககோபா வேசங்கொண்டு பெரும்பிரவாகமாகி யுகப்பிரளயமாவதுபோல் பெரும்பெருக்கெடுத்து மேற்கிருந்து காஞ்சிபுரத்தின்மீது வேகமாகவருவதுதெரிந்து யாகத்

துக்குவிக்கிரம்வராதபடி மஹாவிஷ்ணுவை பிரம்மாவானவர் பிரார்த்தித்தார் பிரம்மாவின் வேண்டுகோளுக்கிரங்கினவராக விணாவில் மேற்குபிரதேசமாகிய பள்ளிகொண்டையிலும் அதற்குக் கிழக்குத்திருப்பாற்கடலிலும் அந்தப்பிரவாகத்திற்குத் தடையாக குறுக்கே சயனித்துக்கொண்டார், அங்கங்கே விஷ்ணுபள்ளிகொண்டதற்கு இருபக்கமும் பிரவாகம்பிரிந்து தெற்கேபாலிநதியாகவும் வடக்கே வேகவதியாகவும் அதிவேகமாகவோடி காஞ்சிபுரத்தின்மீது வந்ததுகண்டு பிரமன்பின்னும் விஷ்ணுவைதியானஞ்செய்தார் அப்போது கருணாநிதியாகிய விஷ்ணுவானவர் நிர்வாணமாக வெள்ளத்தை கிழக்கேபோகாவண்ணம் குறுக்கேபடுத்துக்கொண்டார் அந்தஅவசரத்தைப்பார்க்க சகியாது ஸ்திரீயாகையால் வெட்கி அதிவேகமாகவந்த வேகவதிநதியானது அந்தஎதோத்காரி பெருமாளின்பொருட்டு அந்தரவாகினியாக பூமியில்இறங்கிவிட்டது பிரம்மா யாகத்தைச்செய்துநிறைவேற்றினார். அந்தயாகாக்கினியில் இருந்து வரதராஜப்பெருமாள் உற்பவமாகி பிர்ம்மாவின் கோரிக்கைப்படிக்கு அவரது மனோபீஷ்டத்தை நிறைவேறும்படி அநுக்கிரகித்தார், அன்றுமுதல் இந்தக்காஞ்சிமாநகரத்துக்கு சத்தியவரத க்ஷேத்திரமென்றும் பெயருண்டாயிற்று ; இந்நகரம் திருக்கச்சி, அத்திகிரி என்னும் இந்தக்காஞ்சிமண்டலமாகிய தொண்டைமண்டலத்திலுள்ள இருபத்திரண்டு திருப்பதிகளும் அத்திருப்பதிகளின் பிரபாவங்களும் வருமாறு.

க-வது. திருக்கச்சி, அல்லது அத்திகிரி, வரதராஜப்பெருமாள், பெருந்தேவித்தாயார், புண்ணியகோடிவிமானம், ஸத்யவ்ரதக்ஷேத்திரம், அநந்தஸரசு, வேகவதிநதி, பிர்மமாமுதலியோர்களுக்கு ப்ரத்யக்ஷம், அழகியசிங்கப்பெருமாள், அரித்திராதேவித்தாயார்.

உ-வது. அட்டபுயம், ஆதிகேசவப்பெருமாள், அலர்மேன்மங்கை நாய்ச்சியார், கஜேந்திரபுஷ்கரணி.

ந-வது. திருத்தண்கா, விளக்கொளி, தீபப்ரகாசர், திவ்யப்பிரகாசர், மரகதவல்லித்தாயார், சரஸ்வதிதீர்த்தம.

ச-வது. வேளுக்கை, முகுந்தநாயகன், வேளுக்கைவல்லிநாய்ச்சியார், கநகசரசு.

ரு-வது. பாடகம், பாண்டவதூதர், ருக்மணிதேவி, சத்தியபாமை, மத்ஸ்யதீர்த்தம்.

சு-வது. நீரகம், ஜகதீசப்பெருமாள், நிலமங்கைவல்லிநாய்ச்சியார், அக்ரூரதீர்த்தம்.

எ-வது. நிலாத்திங்கள்துண்டம், நிலாத்திங்கள்துண்டத்தான், நேரொருவரில்லாவல்லி, சந்திரபுஷ்கரணி.

அ-வது. ஊரகம், உலகளந்தப்பெருமாள், திருவிக்கிரமன் அமுதவல்லிநாய்ச்சியார், நாகதீர்த்தம்.

கூ-வது. திருவெஃகா, சொன்னவண்ணஞ்செய்தபெருமாள் யதோக்தகாரி, கோமளவல்லிநாய்ச்சியார், புஷ்கரணிதடம்.

க0-வது. காரகம், கருணாகரப் பெருமாள், பத்மாமணி நாய்ச்சியார், அக்கிராயதீர்த்தம்.

கக-வது. கார்வானம், கள்வர், கமலவல்லிநாய்ச்சியார், கௌரிதடாகம்.

கஉ-வது. திருக்கள்வனூர், ஆதிவராகப்பெருமாள், அஞ்சிலவல்லிநாய்ச்சியார், நித்யபுஷ்கரணி.

கூ-வது. பவளவண்ணம், பவளவண்ணப்பெருமாள், பவளவல்லிநாய்ச்சியார், சக்ரதீர்த்தம்.

கச-வது. பரமேச்சுரவிண்ணகரம், பரமபதநாதன், வைகுந்தவல்லிநாய்ச்சியார், அயிரம்தீர்த்தம்.

கரு-வது. திருப்புட்குழி, விஜயராகவப்பெருமாள், மரகதவல்லிநாய்ச்சியார், ஜடாயுதீர்த்தம்.

கசு-வது. திருநின்றவூர், பக்தவத்ஸலர், பத்தராவிப்பெருமாள், என்னைப்பெற்றதாயார், வருணபுஷ்கரணி, வ்ர்த்தக்ஷீரநதி.

கஎ-வது. திருவெவ்வுள், வீரராகவப்பெருமாள், கனகவல்லித்தாயார், ஹர்த்தாபநாசதீர்த்தம்.

கஅ-வது. ஈகாரண்யவநம், திருநீர்மலை, நீலமுகில்வண்ணன், ரங்கநாயகன், நீர்வண்ணன், அணிமாமலர்மங்கைநாய்ச்சியார், மணிகர்ணிகதீர்த்தம்.

ககூ-வது. இடவெந்தை, நித்யகல்யாணர், கோமளவல்லித்தாயார், கல்யாணதீர்த்தம்.

உ0-வது. திருக்கடன்மல்லை, தலைசயனத்துறைவார், நிலமங்கைநாய்ச்சியார், கெருடநதி.

உக-வது. திருவல்லிக்கேணி, பிர்ந்தாரண்யக்ஷேத்திரம், பார்த்தசாரதி, ருக்மணிபிராட்டி, ரங்கநாதன், வேதவல்லித்தாயார், இந்திரதீர்த்தம்.

உஉ-வது. திருக்கடிகை, சோளங்கிபுரம், யோகநரசிம்மர், அமிர்தவல்லிநாய்ச்சியார், அமிர்ததீர்த்தம், தக்கான்பெருமாள், தக்கான்குளம் ஆக உஉ-ம் மற்றதிருப்பதிகள். அசு-ம் சேர்க்க - ௱அ. திருப்பதிகளாம்.

பரமபதநாதன்திருவடியடைதற்கு வைணவாகமமாகிய பாஞ்சராத்ரம் வைகானஸம் என்னுமிருவகைத்து இதனுள் ஆகமம், மந்த்ரம், மந்த்ராந்த்ரம் ,தந்த்ரம், தந்த்ராந்த்ரம், இவைகளையுணர்ந்த ஆசாரியர்முகமாக தாம் அவனது அடைக்கலப்பொருள் என்பதற்கடையாளமாக சங்கம், சக்கராங்கதம், சமாச்ரயணம், அட்டாக்கரம், உபதேசமும் பெற்றுத் துதிககவேண்டும் இப்படிப்பட்டவர்கள் அவரது பாதஸ்பரிசமாகிய திரிபுண்டரத்தை சதாதமதுடலத்தில் அணிந்திருக்கவேண்டும். இதிலும் பரமபதநாதனது நித்யமுத்தியடையவிரும்பி அவனது திருநாமமந்திரங்களைஸ்தா ஒதிவிவேகமடைந்தவன் க்யானமடைவான்.

க்யானமுண்டானவன் ஆசையையெல்லாம் ஒழித்துவிடவேணுந் தல்வேண்டும் இதனல்நிர்வேதியாவான்.

இப்படி ஆசையை யொழித்தவனே எல்லாவற்றிலும் விர்த்தியடைந்தவனெனப்படுவான்.

இதிலும்பாபத்துக்குப்பயந்தவன் பீதியடைந்தவனென்றுஞ்சொல்லப்படும்.

இவனுக்கே பிர்ம்மக்யானமுண்டாகும் வேறொன்றையும்சிந்தியாது பிர்ம்மக்யானத்தையே அனுஷ்டிப்பான்.

பிர்ம்மஞானத்தை அடையும்மார்க்கத்தை அறிவதற்கு இதே உபாயம்.

பின்னர் பிர்ம்மசரூபத்தைஅடைவன் இதுஉத்க்ரமணமாகும்.

எல்லாவற்றிற்கும் மேலானபிர்ம்ம சரூபமாகி மோக்ஷசித்தியடையப்பெற்றதால் எல்லாபலமும் தனதாகி தானேயடையப்பெறுவான்.

இதைபரமபத சோபானமென்னுங் கிரந்தத்தாலுணர்க.

வீறுார்நெருப்பிடை வீழ்த்தவும்பாடிமுன் வீழ்த்ததற்பின்
ஆறுநெருப்பினை யாறவும்பாடி யடியவரைச்
சீறுதெய்வத் திருஞானசம்பந்தர் செய்ததமிழ்
மாறுநிற்கப் படைத்ததென்பார்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு.]

மதுரையில் தமது திருக்கூட்டத்துடன் எழுந்தருளியிருந்த மடத்தில் சமணர்கள்இட்டதீ அவர்கட்கு சார்பாயிருந்த கூன்பாண்டியனுடலிற்பற்றவும், அவனதுவேண்டுகோளால் அது குளிரவும் திருஞானசம்பந்தர் பாடியருளிய திருத்தேவாரத்தமிழ்மணம் இத்தொண்டைமண்டலத்தில் நீங்காதிருக்குமென்று சான்றோர்கூறுவர். (எ)

துறைத்தியாகராயர்முன் சுந்தரர்க்காவொரு தூதுசென்ற
விரைத்தாமரைமணம் வீசுதல்போல்விடப் பாய்சுருட்டித்
திரைத்தாவணத்தி லொருபுலவோன்பின்பு சென்றசெந்தா
மரைத்தாண்மணமின்னு நாறுங்கண்டீர்தொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு.]

சுந்தரமூர்த்திக்காகப்பரவைநாச்சியார் மாளிகைக்குத் தூதுநடந் தருளிய முதற்கடவுளாகிய தியாகராஜரது வாசம்பொருந்திய பாததா மரைமலரின்மணம் திருவாரூரில் பரிமளிப்பதுபோலநஞ்சுள்ளபாம்பா கிய படுக்கையைச்சுருட்டிக்கொண்டு, வரிசையாகியமாடவீதி வழியே செந்நாப்புலவர்பின் சென்றருளிய திருமாலது சிவந்தபாதமாகிய தாம ரைமலரின் மணம்இன்னும்பரிமளிப்பது தொண்டைமண்டலம். (அ)

காஞ்சீபுரத்தையாண்ட சோழராஜன் அங்கு திருமாலேயேபாடித்துதித்துக்கொண்டிருந்த "செந்நாப்புலவரைத்,, தன்னைப்பாடும்படி வேண்ட, மாலையன்றிமன்னரையும் பாடேனென மறுத்ததற்குஅரசன் வெறுக்க, அப்புலவர்திருமால்முன்சென்று அரசன் என்னை வெறுத்து ப்போவென்றமையால் நான் இவ்வூரைவிட்டுப் போகின்றேன் என்னுடன்வருகஎன்றுசொல்லத்திருமாலவர்பின்னேயேபாம்பணையைச்சுருட்டிக்கொண்டு இலக்குமிதேவிதொடரச்சென்று குடந்தையைச்சார்ந்தமைகண்டு, அவ்வரசன் குடந்தையிற்சென்று அப்புலவரைப்பூசித்து வேண்டுதல்செய்யப் பின்னர்த்திருமாலும் புலவருங்காஞ்சியிலெழுந் தருளினரென்பது : மீனாட்சியம்மன்பிள்ளைத்தமிழில் "கணிகொண்ட தண்டுழாய்க் காடலைத்தோடுதேங் கலுழிபாய்ந்தளறுசெய்யக் கழனிபடுநடவையிற் கமலத்தணங்கரசொர் கையணைமுகந்துசெல் லப் பணிகொண்ட முடவுப் படப்பாய்ச்சுருட்டுப் பணைத்தோளொரு த்தலைப்பப் பழமறைகள் முறையிடப்பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சை ப்பசுங்கொண்டலே." என்பதனாலும் ;

"கணிகண்ணன் போவென்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீயிங்கி ராதே — துணிவொன்றிச்
செந்நாப் புலவன்யான் செல்கின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்ச்சுருட்டிக் கொள்."

என்பதனாலும் பிறவற்றாலுமுணர்க.

தருவுற்றகாளத்தி கச்சியந்தாதியுந் தண்டமிழ்தேர்
திருவொற்றியூரிற் குறுந்தொகைதானுந் திரைகடலைப்
பொருவுற்றகச்சி மலைதேனெனமுன் புகல்கவியும் [லமே.
மருவுற்றகூந்தன்மின் னேயுண்டுகாண்டொண்டை மண்ட

[இதன்பொழிப்பு]

மதுரைக்கடைச்சங்கத்துத் தலைமைப்புலவராகிய நக்கீரதேவரருளிச்செய்த கைலைப்பதியாகிய காளத்தியந்தாதியையும், தமிழ்ப்புலவராராய்ந்துணர வல்லதாகிய பட்டணத்துப்பிள்ளையார் செய்தருளிய கச்சியேகம்பக திருவந்தாதியையும், திருவொற்றியூர் ஒருபாவொருபஃதையும் பதினோராந்திருமுறையாக வுடையதன்றியும அலையையுடையகடலைபொருந்த கச்சிமலைத்தேனென்னும் முதற்குறிப்புப்பாடலையும்பெற்றுள்ளது தொண்டைமண்டலம் என்றுவாசம்பொருந்திய கூந்தலையுடைய மின்போல்பவளே நீ காண்க. (௯)

"மருவுற்றகூந்தன்மின்னே" என்றது மகடூஉமுன்னிலை.

தேமாம்பொழிறிகழ் சம்பந்தாவாழுஞ் சிரபுரம்போற்
றூமாதவஞ்செய்ந் நெதத்தனையோதென் றமிழியல்சேர்
பாமாலைசூட் மதுரநல்வாயிற் பதியுடனே
மாமாசிலாமணிச் சம்பந்தன்வாழ்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரவதரித்த திருத்தலமாகிய தேமாமரச்சோலைசூழ்ந்த சீகாழியைபபோலவே: அளவில்லாதபெருமை பொருந்திய தவங்களேவந்துதவஞ்செய்வதும், அழகியஇலக்கணமமைந்த தமிழ்ப்பாமாலை பாடுதற்பொருட்டு பெருமைபொருந்திய மாசிலாமணியீசரோடு திருஞானசம்பந்தமூர்த்திகள் எழுந்தருளியிருந்ததுமாகிய மதுரநல்வாயில் என்னும்பதியும் தொண்டைமண்டலத்துள்ளது. (௧௦)

சயிலைத்திருமுலைப் பாலுறுமட்டுண்ட தண்டமிழாற்
குயிலைப்பணிகொண்டு வெந்தறமாண்ட குடத்திலென்பை
யயிலைப்பொருகண் ணதிருபமென்கிளி யாக்குவித்த
மயிலைப்பதியுஞ் சிவநேசருந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

பருவதராஜபுத்திரியாகிய பார்வதிதேவியாரது அழகியமுலையிற்பெருகிய ஞானப்பாலையுண்டு, அப்பால்மணக்கும்படி தண்ணியதமிழால் தேவாரத்திருப்பதிகம் குயிலைமுன்னிலையாகப்பணித்துப் பாடியருளிய அராக்கோட்டட்டு மாண்டெரிந்த பெண்ணினது என்பைசிவநேசரது அன்புக்கிரங்கி வேலினுஞ்சிறந்த கண்களையும் பேரழகினையுமுடைய சொல்லாற்கிள்ளையையொத்த பெண்ணாக்கிய திருஞானசம்பந்தரது அற்புதச்செயலைவிளைத்ததலம் கபாலீச்சரம் என்னும் மைலாப்பூர்: அம்மயிலாப்பூரையுடையது தொண்டைமண்டலம். (கக)

நீண்டார்வணங்குந் திருவாலங்காடர்க்கு நெல்லமுதே
வேண்டாவெனக்கிந்த கூழேயமைகென்று வேண்டியகூ
ழாண்டாரொருவ ரறுபத்துமூவரி லன்புவைத்து
மாண்டாரவர்க்கு வளநாடுநீடொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

திருவிக்கிரமமூர்த்தியாகிய திருமால்வணங்குந்திருத்தலமாகிய திருவாலங்காட்டில் இரத்தினசபையின்கண் அமிர்ததாண்டவேசருக்கு நெல்லரிசியைஅமுதுசெயற்குக்கொடுத்துத்தனக்குக்கூழேபோதுமென்று கூழையேயுண்டு அறுபத்துமூன்று நாயன்மாரிடத்தன்புபூண்டு மாட்சிமையடைந்து முத்திபெற்றவராகிய கூழாண்டா[illegible]தவளநாடாகிய திருவாலங்காடும் இத்தொண்டைமண்டலம். (கஉ)

சீர்பொருந்திய வேதாகமங்களைத்திருவாய்மலர்ந்தருளிய அகண்டபரிபூரண சகள நிஷ்கள சத்துசித்தானந்தராய் விளங்காநின்றபரமசிவம் திருநடனஞ்செய்தருளுகின்ற திருக்கைலாயம்,சிவலோகம் இமோர்ப்பருவதம், சுவர்க்கலோகம், பத்திரபீடம், நேர்பாளம், காசி, காமருபம், மந்தாகிரி, கமலாநந்தகிரி, புயங்காசலம், கதலித்தானம், திருக்கேதாரம், திருவானம்,பரியாத்திரம், சந்திரத்தானம், சுமிந்திரம், மகமேருசண்பகவனம், துளசிவனம், பொற்கூடம், சிவாச்சிரமம், சித்திரகூடம், நந்திபுரம், சிரபுரம், சாளக்கிராமம், சிதம்பரம், இவைமுதலிய அநேகந்திருத்தலங்களுக்குள்ளே சிதம்பரத்திற்செய்யும் நடனம் ஆனந்தத்தாண்டவம் அது அடியவர்களது மலமாயைநீக்கி ஆனந்தத்தைத்தருவதாகும். திருவாலங்காட்டிற்செய்யும் தாண்டவம் சண்டதாண்டவம் இதுஜநநமரணங்களைநீக்கி முத்தியைத்தருவதாகும்மற்றையநடனதலங்களுக்கெல்லாம் இது அநாதிபாயுள்ளது. திருக்கயிலாயத்தில் சுனந்தமுனிவர், கார்க்கோடகன் இவர்கள்வேண்டுகோளுக்கிரங்கி திருவாலங்காட்டில் நடனதரிசனங்கொடுப்பதாக அருளியபடிக்குஇவர்க

ளிருவரும் திருவாலங்காட்டில் வந்து தவஞ்செய்திருந்தனர்.

இத்திருவாலங்காட்டில் நிம்பன், சும்பன் என்னும் அசுரர்களிருவரும் மதாந்தகாரங்கொண்டு முனிவர்கள், சித்தர்கள், மாணிடர்கள், தேவர்களைக்கூடவருத்திய துன்பம்பொறுது நாரதாதிரிஷிகள் தேவர்கள் முறையிட பரமேசுவரரின் நெற்றிக்கண்ணி லுற்டவித்த காளியானவள் இந்த இராக்கதர்களிருவரையும் சங்கரித்து அந்த கெர்வத்தால் அந்த ராக்ஷதர்களைக்காட்டிலும் அதிக கொடுமையை விளைத்துக்கொண்டிருந்தாள். இது காரணமாக தேவர்கள் பரமசிவத்தைநோக்கி முறையிட்டுக்கொண்டமையால், வயிரவமூர்த்தங்கொண்டு பூதகணங்கள்சூழ திருவாலங்காட்டுக்கு வந்து காளியுடன் போர் செய்வதற்கு ஸ்திரீயாகையால் அது தகாதென்றெண்ணங்கொண்டும் சுனந்த முனிவன், கார்க்கோடகன் இவர்களுக்கு அருளிய வண்ணத்தையுமுடிக்கவேண்டியும், காளியைப்பார்த்து நிர்த்தஞ்செய்வதற்கு உடன்படுத்திக்கொண்டுமுக்திதீர்த்தந்தினருகில்வந்து, சுனந்தன், கார்க்கோடகன்காண, நடனங்கத்துக்கு வேண கருவிகளாகிய தாளம் பிரமன் போடவும், மத்தளம் விஷ்ணு அடிக்கவும், சரஸ்வதி வீணை வாசிக்கவும், மந்தம், மத்திமம், தாரம் மூன்றுகிய கதிகளோடு கீதங்களை நாரத தும்புருடர்கள் பாடவும், சூரிய சந்திரர்கள் குழலிசையூதவும், நந்திகேசுரர் இராகம்பாடவும், தேவாகள் எல்லாம் நிறைந்து சூழ்ந்திருக்கவும், [illegible] எல்லா அங்கமும் பொருந்தி யிருக்க: பரமசிவமானவர் [illegible]சொல்லியிருக்கிறபடி கோசுகோட்டி என்னும் ஆடலை ஆட[illegible]தொடங்கினார்.—காளியும் அந்த நடனத்தை செய்யத்தொடங்கி, கைவழியே நேத்திரமிருக்க, கண்வழியே மனமிருக்க, நவரசங்களும் பொருந்தும்படி சரியாக ஆடினாள்.

அப்போது தான் சரியாக ஆடியதாக காளி கெர்விப்பது கண்டு பாண்டரங்கமென்னும் சண்டதாண்டவம்செய்யத்தொடங்கினார்; அது கண்டு தாளமத்தளமுதலிய வாத்தியங்களை பிர்ம்ம விஷ்ணுவாதிதேவர்கள் சரியாய் வாசித்தார்கள்; அப்போது ஓர் திருப்பதத்தை பூமியிலூன்றி ஓர் திருப்பதத்தை ஆகாயத்திலேற்றி ஓர் திருக்கையை ஆகாயத்திற்றூக்கிய பாதத்தில் கவசமாக வைத்து மற்ற மூன்று கைகளும் தான்மேலிருக்க அக்கரங்களினும், மற்றைய கைகளினும் மழு, சர்ப்பம், கிளி, தமருகம், சூலம், சதங்கை, கபாலம், அபயமென்றுகிய ஆயுதங்களெட்டையும் தாங்கி அட்டபுயத்தையும்நீட்டி சடைகளெல்லாம் ஆகாயத்திற்போய்பட்டு நக்ஷத்திரங்களுதிரவும், அண்டாண்டங்களும் நடுங்கும்படியாகவும், ஜீவராசிகளெல்லாம் வாய்விட்டரற்றவும், சண்டதாண்டவமென்னும் ஊர்த்ததாண்டவம் செய்கையில் காதிலிருந்த மணிக்

குழையானது நழுகிவீழ்வதை குனியாமல் வாயினுற்கவ்விக்கொண்டார் அப்போது தேவர்களெல்லாம் பார்த்து சகியாது வருந்தி தோத்திரம் செய்தார்கள். காளியானவள் கண்டு மயங்கி நாணி நின்றனள்; பார்வதியார்வேண்டிக்கொள்ளவும், சுவாமி கருணையோடு நின்றனர். இந்த ஆலவனத்தில்நமது ஆலயத்திற்கு அருகில் ஆலயமும் முன்பூசையுந் தந்தருளினேமென்று சுனந்தமுனியாகிய முஞ்சிகேச முனிக்கும், கார்க்கோடகனுக்கும் எப்போதுந்தமது சந்நிதானத்தி லிருக்கும்படி வரங் கொடுத்தார். இவ்விருவர்கள் நிமித்தமாகவே மார்கழி மாதம் திருவாதிரையில் சுவாமி நடனந் தந்தருளுகிறது. இத் திருவிழாவில் வெள்ளை சாத்துகிறதாவது திரோபாவம், அதாவது.—உலகத்தை மறைக்கிறது, மையிட்டுக்கொள்வதாவது,—பரமசிவன் அசுரர்களையெரித்து அந்தக் கரியை அணிந்துக்கொண்டனர் அதிதிக்கு அன்னம் படைப்பதன்பொருட்டு பத்தினியைக் கொன்ற உருத்திர சுவாமியென்கிற பிராமணன் திருவாலங்காட்டுக்கு வந்து முக்தி தீர்த்தத்தில் மூழ்கி பரமசிவன் சந்நிதியில் வணங்கி பாபங்களெலலாம் போக்கினது முக்தி தீர்த்தம், கிராதனென்கிற வேடவன் இந்த முக்தி தீர்த்தத்தில் மூழ்கி மோக்ஷமடைந்தான்: இதல்லாமல் சோம சாமி யென்கிற வேதியன் வேதங்கள், அங்கங்கள், சாஸ்திரங்கள், தர்க்கங்கள், வியாகரணங்கள் யாவும் தெளிந்தவனுகவும், விபூதி, உருத்திராக்ஷ சாதன முடையவனுகவும் பரமசிவத்துக்கன்பு பூண்[illegible]யாகவுமிருந்த ஒழுக்கு, வழக்கு தண்டத்துக் குட்பட்டு [illegible] முஞ்சி யரைஞாணும் சடையுமாக, த்ரிகாலஸ்நானம் [illegible]ருந்து உச்சியளவும் பிரம காயத்திரி உருப்போட்டு பின்பு சிவபூசை செய்துக்கொண்டிருந்தான்: இவன் ஊழ்வலியால் ஓர் மதங்கஸ்திரீயை சேர்ந்து நிலைதப்பி திரிந்துக்கொண்டிருக்கையில் வார்த்திகம் வந்து மரணமடையுஞ் சமயத்தில், முன்செய்த பூஜாபலத்தால், திருவாலங்காடுசேர்ந்து முக்தி தீர்த்தத்தில் மூழ்கி ஒருநாள் பட்டினியோடு இருந்து இறந்துவிட்டான்: இவனை சிவகணங்கள் விமானத்தில் கொண்டு போய் சிவபதம் சேர்த்தார்கள்: அறுபத்துமூவரிலொருவராகிய காரைக்காலம்மையார் தலையால் நடந்து கைலாயம்போய் சுவாமி கட்டளைப்படி பழையனூர் வந்துசேர சுவாமி எதிர்சென்று அம்மையே வாருமென்றழைக்க: அப்பனே வந்தேனென்று கூறினபடியால் அப்பழையனூரில் அம்மை யப்பனென்றும், தழுவக்குழைந்த ஈசனென்றம் பெயருண்டாய் பரமசிவம் விளங்குகின்றார். அக்காரைக்காலம்மையார் அத்தலத்தில் சுவாமியினருகில் பொற்றாளமிசைத்துக்கொண்டிருக்க முக்திபெற்றனர், காஞ்சிபுரத்து பிராமணன் தன்பெண்சாதியைக்

கொன்றதும் பின் செட்டியாகப்பிறந்ததும் நீலியால்இறந்ததும் உணர்ந்த பழயனூர்வேளாளர் முன்செட்டிக்குசசொல்லிய சத்தியமொழிதவருமல் தீயிலவீழ்ந்திறந்தார்கள், இப்படிப்பட்ட சத்தியம் பொறுமை அடக்கம் இரக்கம் ஈகை நடுநிலை கற்புடையஸ்திரீகள் உத்தமமைந்தர்கள் உபசாரவசனம் யோக்கியதை சற்குணம் புகழ் சீலம் ஆசாரம் சிவபத்தி உறுதி இவைகளையுடைய வேளாளர்கள் வாழ்ந்திருக்கும் பழயனூரை நகரமாகஉடையது திருவாலங்காடென்பது இத்திருவாலங்காட்டில் விளங்கும் பரமேசுவரதின் திருநாமம் தேவரசிங்காசன் வண்டார்குழலியம்மன் முத்திதீர்த்தம், சங்கச்சோழன்மச்சதீர்த்தம் என இரண்டுதிருநாமம்.

## திருஞானசம்பந்த ரருளிச்செய்த திருவாலங்காட்டுத் தேவாரப்பதிகம்.

துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும்பழயனூ ராலங்காட் டெம்மடிகளே.

## திருநாவுக்கரசுசுவாமிக ளருளிச்செய்த திருநேரிசை.

செந்தழலுருவர்போலுஞ் சினவிடையுடையர்போலும்
வெந்தவெண்ணீறுகொண்டு மெய்க்கணிந்திடுவர்போலு
கந்தமார் பொழிற்பழனை மல்கியவள்ளல்போலு
மந்தமிலடிகள்போலு மாலங்காட்டடிகளாரே.

## சுந்தரமூர்த்தியாரருளிச்செய்த திருவாலங்காட்டுந் தேவாரம்.

### திருத்தாண்டகம்.

பத்தர் சித்தர் பலரேத்தும் பரமன் பழயனூர்மேய
அத்தனாலங்காடன்ற னடிமைத்திறமேயன்பாகி
சித்தர்சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார் பரமனடியேபணிவாரே.

## காரைக்காலம்மையாரருளிச்செய்த திருவாலங்காடு மூத்த திருப்பதிகம்.

கொங்கைதிரங்கிநரம்பெழுந்து
குண்டுகண்வெண்பற் குழிவயிற்றுப

பங்கிசிவந்திருபற்கணீண்டு
    பரடுயர் நீள்கனைக்காலோர் பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்
    ருழ்சடையெட்டுத்திசையும்வீசி
யங்கங்குளிர்ந் தனலாடுமெங்க
    ளப்பனிடந்திருவாலங்காடே.

இத்திருத்தலமாகிய திருவாலங்காடென்னும் பழயனூரில் வேளாளரொருவர்தாம் விளைவித்த நெல்லையெல்லாம் சுவாமிக்கே அமுதுசெயற்குக்கொடுத்து தாமும் அதையுண்ணப்படாதென்று கேழ்வரகுகூழையேஉண்டு வைராக்கியமாகவிருந்து கூழாண்டாரெனப்பெயர்பெற்றார், இப்படி நீரசித்தன்வாழ்ந்தது தொண்டைமண்டலம்.

கொங்கலர்மாலையுங் கல்லாய்விடுமன்பு கொண்டெறிந்தா
லிங்கலராய்விடுங் கல்லானதுமென்ப தின்றறிந்தோஞ்
செங்கலினுலெறிந் தேசிவனுர்பதஞ் சேர்வர்சங்க
மங்கையின்மேவிய சாக்கியனுர்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

பரமசிவன்அடியாராய் பேறுபெற்றஅறுபத்[illegible] மார்களில் வேளாளகுலத்தோர் பதின்முன்றுபே[illegible] மிகள், மானக்கஞ்சாறநாயனுர், அரிவாட்டாயநாயனு[illegible] நாயனுர், கோட்புலிநாயனுர், முனையடுவார்நாயனுர், செருத்துணைநாயனுர், இளையான்குடிமாறநாயனுர், விறன்மிண்டநாயனுர், சத்திநாயனுர், இப்பத்துபேரும் பிறமண்டலஙகளில் வசித்துப் பேறுபெற்றார்கள் இத்தொண்டைமண்டலத்துள் திருக்காஞ்சிநகரின்கண் சாக்கியநாயனுர் பேறுபெற்றசரித்திரமாவது உள்ளன்பில்லாமல் வாசம்பொருந்திய மலர்மாலையைக் கொண்டர்ச்சித்தாலும் அதுகல்லாமென்பதும், உள்ளன்போடு கல்லை[illegible]டெறிந்தாலும் மலராய்விடும் என்பதும், இன்றறிந்துகொண்டோம்: எவ்வாறெனின், திருச்சங்கமங்கையில் புறத்தே சமணமதக்கொள்கை கொண்டிருந்தவராகிய வேளாளகுலத்தில்அவதரித்த சாக்கியநாயனுர் செங்கல்லைக்கொண்டு உள்ளன்போடு எறிந்து சிவனருள்பெற்று முத்தியடைந்தமையால்; இம்மகிமையுடையது தொண்டைமண்டலம். (௧௬)

[மேற்கோள்.]

தில்லைவாழந்தணரில் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியரென்பவர் பெரியபுராணத்தை நிதம்பாராயணஞ்செய்து முடிக்கக்கூடாமையைப்பற்றி மனம்வருந்தி சிவானுக்கிரகத்தால், பெரியபுராணத்திலுள்ள திருத்தொண்டர் புராணங்களை ஒவ்வொரு பாடலில் முடித்துப்பாராயணஞ் செய்துவந்தார் அத்திருத்தொண்டர் புராணசாரத்துள், வேளாளர்பதின்மூவருடைய புராணச்செய்யுளாவது:—

சாக்கியநாயனார் புராணசாரம்.

சங்கமங்கை வரும்வேளாண் டலைவர்காஞ்சிச்-சாக்கியரோ டிசைந்தவர்தந் தவறுஞ்சைவத், துங்கமலி பொருளுமுணர்ந் தந்தவேடந் துறவாதே சிவலிங்கந் தொழுவோர்கண்டோர், அங்கண்மலர் திருமேனியமுந்தச்சாத்தி-யமருநாண் மறந்தொருநா ளருந்தாதோடிச், செங்கலெறிந்திடமௌவின் மகிழ்ந்தநாதன் – திருவருளா லருலகஞ் சேர்ந்துளாரே.

இதனைப்பெரியபுராணந்தாலுணர்க.

பிணிக்கோர்மருந்தனை யார்வாயிலாரன்று பிற்றுகளுப்
பணிக்கோர்குறையின்றி யந்தரியாகத்திற் பண்ணுவித்த
வணிக்கோயிலும்பொற் சிகரமும்வீதியு மாடரங்கும்
மணிக்கோபுரமு முடையதென்பார்தொண்டை மண்டலமே

[இதன்பொழிப்பு]

திருமயிலாப்பூரிலே வேளாளர்மரபிலே அவதரித்துப், பாவமாகிய நோய்க்கு மருந்தாகிய வாயிலார்நாயனார் தம்மனத்துள்ளே மானதபூசையாக நிருமித்த அழகியபொற்கோவிலும், பொற்சிகரமும், திருவீதிகளும், திருத்தாண்டவச்சிற்சபையும், அழகியகோபுரமும் விளங்கச்சோழராஜனுக்கு தரிசிப்பித்தது இத்தொண்டைமண்டலத்திலே. (கரு)

(மேற்கோள்) புராணசாரம்.

வாயிலார் நாயனர்.

ஞாயிலார் மதிற்றெண்டை நாட்டுமேன்மை-நண்ணுமயிலாபுரியின் வேளாண்டொன்மை, வாயிலார்மலைவில்லா னடியேபோற்றி-மறவாமை தலைநின்ற மனமேசெம்பொற், கோயிலா வுயர்ஞானம் விளக்

*காஞ்சீராக்—குலவியவாநந்தமன்பே யமுதாக்கொண்டு, தாயிலா ளிரு சரண நிகழவேத்துந்—தன்மையா ரருள்சேர்ந்த நன்மையாரோ.*

ஏதிலுந்தொண்டர்க் கிசையாதனகுற்ற மின்பஞ்செய்தாற்
றீதிலுநன்மை பெறலாமெனவையந் தேறத்தெவ்வைச்
சூதிலும்வென்று புலனைந்தும்வென்றெம தூதனையும்
வாதிலும்வென்று வருமூர்க்கருந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கடவுட்கன்புடையோர் நீதியல்லாத செயல்களைச் செய்யினும் கடவுள் பொருட்டுச்செய்வராதலால் நன்மையேபயக்கும், கடவுட்கன்பிலார் நீதியேசெய்யினும் தீதேயாம் என்பது சந்தேகமறத்தெரிந்துலகுய்யும் பொருட்டு; திருவேற்காட்டூரில் வேளாண்குடியிற் பிறந்த மூர்க்கநாயனார் பலரையுஞ்சூதிலேவென்று ஈட்டியபொருளையெல்லாஞ் சிவனடியாருக்கே யுதவி, ஐம்புலனையும்வென்று, இயமதூதனையும் வென்று சிவபதமடைந்தனர்: இந்தலமுந்தொண்டைமண்டலத்துள்ளது. (௫௫)

(மேற்கோள்) திருத்தொண்டர்புராணசாரம்.

மூர்க்கர்.

தொண்டவள நன்னாட்டு வேற்காட்டூர்வாழ் தொல்லுழவர் நற்சூதர் சூதுவென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க்கமுதளிக்குங் கொள்கையினர் திருக்குடந்தை குறுகியுள்ளார், விண்டிசைவு குழறுமொழிவீணர்மாள வெகுண்டிடலான் மூர்க்கரெனா விளம்புநாமம், எண்டிசையு மிகவுடையா ரண்டர்போற்று மேழுலகு முடனாளு மியல்பினரோ.

அப்பர் சுவாமிகள்.

போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப்-பொருவில்கொறுக்கையரதிபர் புகழனார்பான், மாற்றருமன்பினிற்றிலதவதியாமாது வந்துதித்த பின்புமரு ணீக்கியாருந், தோற்றியமண் சமயமுறு துயரநீங்கத் துணைவரரு டரவந்த சூலைநோயாற், பாற்றருநீளிடரொய்திப் பாடலிபுத்திரத்திற் பாழியொழித் தரனதிகைப் பதியில்வந்தார்.

வந்துதமக்கையரருளா னீறுசாத்தி-வண்டமிழா ளேய்தீர்ந்து வாக்கின்மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி-வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி, யந்தமிலப்பூதிமகனரவுமாற்றி யருட்காசு பெற்றுமறை யடைப்புநீக்கிப், புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலைகண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினாரே.

### மானக்கஞ்சாறர்.

கஞ்சநகர் மானக்கஞ் சாறனார்சீர்க், காதன்மகள் வதுவைமணங் காணநாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவனாகி வந்துபுகுந் தவளளக மகிழ்ந்துநோக்கிப், பஞ்சவடிக் காமென்ன வரிந்துநீட்டும் பத்தரொதிர் மறைந்திறைவன் பணித்தவாக்கா, லெஞ்சலில்வண் குழல்பெற்ற பேதைமாதை யேயர்பிராற் குதவியருளெய்தினாரே.

### அரிவாட்டாயநாயனார்.

தாவில்கண மங்கலத்துள் வேளாண்டொன்மைத்-தாயனார் நாயனார் தமக்கேசெந்நெற், றூவரிசி யெனவிளைவ தவையேயாகத் துறந்துணவு வடுவரிசி துளங்குகீரை, யாவினிலோங் குடன்கொணரவோர் கமரிற்சிந்த வழிந்தரிவாள்கொண்டூட்டி யரியாமுன்னே, மாவடுவி னொலியுமரன் கரமுந்தோன்றி-வாள்விலக்கி யமரர்தொழவைத்தவன்றே.

### ஏயர்கோன்கலிக்காமர்.

ஏதமில் வேளாளர் பெருமங்கலத்துள் ஏயர்கோன் கலிக்காம ரிறையையேரோ, டூதுகொளு மவனாகி லென்றுமென்னுந் துணிவினர்பா லிறைவனருஞ் சூலையேவி, வேதனைவன் றொண்டன்வரில் நீங்குமென்ன வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேயநாவற், போதகமு முடலிகழ வெழுந்துதாழ்ந்து-போற்றியது விலக்கியருள் பொருந்தினாரே.

### கோட்புலியார்.

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவேளாளர்-கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற்கூடு, நிலவணிவார்க் கமைத்தாணை நிறுத்தியொன்னார்-நேர்மலைவார் திருவாணை நினையாதேநெற், சிலமிடியா லழித்தபடி யறிந்துவாளாற் சேர்ந்தபெருங் கிளைருடல்சிதறவீசி, யிலகுமொரு குழவியையு மெறிந்துநாதன்-எண்ணரிய கருணைநிழலெய்தினாரே.

### முனையடுவார்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழுநீடூர்ப்-பொருவிறிரு மலி வேளாண் டொன்மைமிக்கார், முன்னியவர் முனையடுவா ரிகலார் போரின்-முரணழிவார் தமக்காக மொழிந்தகூலி, மன்னுநிதி கொண்டுசெயங் கொடுத்துவந்த-வளர்பொருளா லிறைவனடிவழுவாவன்ப ர்க், கன்னமவர் நசையின்மிக மிசையநல்கு-மன்பர் துன்பமவையாவு மகன்றுளாரே.

### செருத்துணையார்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருதநன்னாட் டெழிலாரும் தஞ்சைநக ருழவரோத்துஞ், செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார் - செல்வமிகும் பல்லவர்கோன் றேவிவீழ்ந்த, மருத்துணை யார்மலெடுத்து மோப்பக்கண்டு-வளமலிபூங் கத்தியால வண்ணுக் கீர்ந்த, கருத்துணையார் விறற்றிருத் தொண்டினையேசெய்து, கருதல ருமமருலகங் கைக்கொண்டாரே.

### இளையான்குடிமாறர்.

மன்னியவே ளாண்டொன்மை யிளையைமாறர் - வறுமையா லுணவுமிக மறந்துவைகி, யுன்னருநள ளிருண்மழையி லுண்டி வேண்டி - யும்பர்பிரா னணையவய லுழுதுவித்துஞ், செந்நென்முளை யமுதுமனை யலக்காலாக்கிச் - சிறுபயிரின் கறியமுது திருந்தச்செய் து, பன்னலரு முணவருந்தற் கெழுந்தசோதிப் - பரலோக முழுதா ண்ட பான்மையாரே.

### விறன்மிண்டர்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண்டொன்மை - விறன்மிண் டர் திருவாரூர் மேவுநாளில், வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும் - வன்றொண்டன் புறகவனை வலியவாண்ட, துளங்குசடை முடியோனும் புறகென்றன்பாற்-சொல்லுதலு மவர்தொண்டத் தொ கைமுன்பாட, வுளங்குளிர வுளதென்று ரதனலண்ணல் - உவ்கை தர வுயர்கணத்து ளோங்கினாரே.

### சத்தியார்.

விரிதருகா விரிநாட்டு விரிஞ்சியூர்வாழ்-வேளாளர் சத்தியார் விமலர்பாதத், துரியவர்க ளடிபரவு மொருமையார்நா-வோவாமே யைகுதெழுத்து முறைக்குநீரார், இருளின்மிட றுடையபிரா னடியார்

...ம்மை-யிகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கிவாங்கி, யரியுமது திருத்
...ழிலா வுடையார்மன்றுள்-ஆடியசே வடிநீழ லடைந்துளாரே.

### திருத்தொண்டர்புராண வரலாறு.

...கு வாயிலார் சத்தியார் விறல்சேர் மிண்டர் வாக்கரையர்-சாக்கி
...கோட்புலி கஞ்சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முனைவித்தாக்கு
மிளையான்றன் குடிமாறர் மூர்க்கர்செங்கைத், தாயனார் செருத்து
ணையார் செருவில் வெல்போர்-சாதித்த முனையடுவா ராகநம்பி, பா
யிரஞ்சே ரறுபதுபேர் தனிப்போர்தம்மிற் - பதின்மூவர் வேளாளர்
பகருங்காலே.

விண்ணிற்பிறக்கும் புகழ்க்குன்றநாடன் விளங்குதமிழ்ப்
பண்ணிற்பிறக்கும் பெரியபுராணம் பகர்ந்தபிரா
னெண்ணிற்பிறக்கும் பததூளியென்றலை யெய்தவந்த [லமே
மண்ணிற்பிறக்கவும் வைக்குங்கொலோதொண்டை மண்ட

[இதன்பொழிப்பு]

ஓர்காலத்தில் சோழராஜன் தொண்டைநாடு சான்றோருடைத்
தென்று பெரியோர்களால் சொல்லியிருப்பதை சோதிக்கவெண்ணி
ஞாலத்திலும், கடலிலும், மலையிலும் மிகப்பெரிதுயாதென வினுக்களை
யெழுதி தொண்டைமண்டலத்தரசனிடத்தனுப்பி விடைகேட்டான்.
அத்திருமுகங்கண்ட தொண்டைமண்டலத்தரசன் தம்மிடத்துள்ள
ஆஸ்தானவித்வான்களில் முதன்மையாகிச் சிறந்திருந்த குன்றத்தூ
ர்முதலியார் இடத்தில் அதைக்கொடுத்து சீக்கிரத்தில்விடை யெழுதி
த்தரும்படிஉத்திரவுகொடுத்தார்அந்தக்காலவரைகடந்துபோவதைப்பற்
றியும் பதில்வரைவதற்குத்தமக்குஒன்றுந் தோன்றாமையைப்பற்றியும்
வியாகூலசித்தராயிருப்பதை அவரதுபுத்திரர் கல்விச்சாலையில் வித்
தியார்த்தியாயிருக்குஞ்சேக்கிழார் தமது தந்தை உணவுகொள்ளாமல்
வியசனமுற்றிருப்பதைக் கேள்வியுற்று அதற்குவிடைதர சுலபமாக
விருக்கிறதென்று நாயனார் திருக்குறளில் மூன்றுவினுக்களுக்கும்
உதாரணமாக மூன்று திருக்குறளை யெடுத்துக் காட்டிக்கொடுத்
தார் (கரு)

அச்செய்யுள்வருமாறு.

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
நன்மைகடலிற் பெரிது.

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

**என்னும்.**

இம்மூன்று திருக்குறள்களையுங் கேட்டுத்தமது புத்திரர், கல்வி புத்தி ஆகிய இவைகளிற்சிறந்திருக்குந்தன்மைக்கு ஆனந்தமடைந்து அவரைத்தழுவி சந்தோஷசித்தராகி வேந்தனிடத்து விரைவிற் சென்று தெரிவித்தார் அரசனதைச்சோழராஜனிடமனுப்பினர் அதைப் பார்த்து மிகுகளிப்புற்று அப்படிவிடைகொடுத்த கல்விப்பிரபுவைத் தம்மிடத்துக் கனுப்பும்படி பல்லக்கு வரிசைகொடுத்தனுப்பினன் அதைக்கண்ட தொண்டைமண்டலத்தரசன் ஆஸ்தானவித்வானை சோழனிடத்திற்குப்போகும்படி உத்திரவுசெய்தான்: அதற்கு அவர் தமது புத்திரன் சேக்கிழார் விடைகொடுத்தவராதலின் அவரையனுப்புவித்தார், அதிபாலியத்திலேயே அவருக்குண்டாயிருக்கும் வித்தை, புத்தி யுக்தி, சாமர்த்தியங்களுக்கு மிகுவியப்படைந்து சேக்கிழார் சுவாமிகளைத் தமது மந்திரிகளில் முதன்மந்திரியாக சோழராஜன்வைத்துக்கொண்டு அன்போடு ஆதரித்துவந்தான். பின்புசிலநாள் சென்றது அரசன் சமணரால்செய்த "சீவகசிந்தாமணி" என்னும் நூலை பிரசங்கித்துவர அதைஅதிகஆவலோடு கேட்டுவரவும் அந்தச்சபையிலிருந்து அதைக்கேட்கமனமில்லாதவராகி தினந்தோறும் சேக்கிழார் போய்விடுவதறிந்து அரசன்ஒருநாள் முதன் மந்திரியாரை நோக்கி யாவரும்வியக்கத்தக்க இச்சீவகசிந்தாமணி பிரபந்தத்தை நீர் கேளாமற் போய்விடுகிறதென்னவென்று வினவினர். இதுபொய்க்கதை திருத்தொண்டரது மோட்சார்த்தமாகிய வேறு கதைகளிருக்கின்றன அவைகளைக்கேட்கவேண்டுமென்றுசொன்னர். அவைகளைக்கொண்டுவந்து சொல்லும்படி ஒருகாலத்தை நிச்சயித்து அரசன்கட்டளையிட்டான் அங்ஙனேசேக்கிழார்சுவாமிகள் சிவசிதம்பரஞ்சென்று நடேசரைவணங்கி தினந்தோறும் அரியதவத்தைச்செய்திருந்தார். விண்ணுலகத்துஞ்சென்று பரவியபுகழுடையவரும் புலியூர்கோட்டத்தில் குன்றத்தூரினையுடையவருமாகிய சேக்கிழார்சுவாமிகளது அரியதவத்துக்கிரங்கி சிதம்பரநடேசர், "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என அடியெடுத்துக்கொடுக்க அத்திருவாக்கை முதலிற்கொண்டு; ௪௲௨௱௮௰௬ திருவிருத்தங்களாலிசைநிறைந்த பெரியபுராணத்தைச்செய்து

அரசன்கேட்கும்படி ஒருவருடம் நடேசர்சந்நிதியில் அரங்கேற்று தல் செய்தருளியவராகிய சேக்கிழார் சுவாமிகள். அவதரித்தி ருந்த அக்குன்றத்தூரிலே அவர்பதத்தூளி யென்றலையிற்படும்படி பிற க்கும்பாக்கியம்எனக்குக் கிடைக்குமோ இம்மகத்துவமுடையது தொ ண்டைமண்டலம் அல்லவோ ஆம் என்றபடி.

ஊரார்மலிபுலி யூர்க்கோட்டநற்குன்றத் தூரிலுள்ள
சீராவளமலி பாக்கிழவோன்புகழ் சேக்கிழவோன்
காராளன்கூடற் கிழவோன்முதுமொழிக் காஞ்சிசொற்ற
வாரார்புரிசைக் கிழவோனும்வாழ்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

புலியூர்க்கோட்டத்தைச்சேர்ந்த குடிகள்மிகுந்த நல்ல குன் றத்தூரிலிருந்த வளப்பம் நீங்காதபாக்கிழார், புகழ்மிக்கசேக்கிழார், காரையாள்வோராகிய கூடற்கிழார், முதுமொழிக்காஞ்சியென்னும் அறநூல்செய்த நெடியபுரிசைக்கிழார், இவர்கள் வாழ்தற்கிடமாகியது மித் தொண்டைமண்டலம். (கள)

"முதுமொழிக்காஞ்சி சொன்னபுரிசைக்கிழவோன்."

என்பதைப் பழயகாஞ்சி மான்மியத்திற்சொல்லப்படுகிற புரி சைக்கிழார் எனப்பொருள் கொள்வதுமொன்று. கிழாரொன்பது பரமசிவத்தினது அடியார்க்கடியராதல் பற்றி கிழாரெனக்காரண ப்பெயராதலின் கிழார்எனமருவியதுஎன்றறிக.

மேதைப்புலவரொண் ணேகாம்பரசம்பு மெச்சநெடுங்
காதைப்புலவ ரிரட்டையர்பாடுங் கலம்பகமு
மோதற்கரியநல் லேகம்பவாண ருலாவுமந்த
மாதைப்பனுவலும் பாராட்டிடுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

பேரறிவினையுடைய திருமால் முதலிய தேவர்கள் தியானித்து த்துதிக்கின்ற ஒற்றைமாவடியிலெழுந்தருளிய சிவபெருமானே மகி ழும்படி, நீண்டசரிதத்தையுடைய புலவராகிய இரட்டையர் பாடிய கலம்பகமும், பின்னுமவ்வேகம்பவாணர்மேல் அப்புலவராற்பாடப் பட்ட தெய்வீகவுலாவும், அவரால் அம்மைமேற் பாடப்பட்ட செய்

யுளும், அத்தலபுராணமும் ஆகியதிவ்யபிரபந்தங்களாற் சிறப்பித்துக் கொண்டாடப்படுவதித் தொண்டைமண்டலம். (கஅ)

சாய்த்திட்டவர்க்குத் திருமேனிமுன்கையைச் சந்தனமாத்
தேய்த்திட்டவர்க்கெவர் நேரொன்பராலங்கஞ் செந்தழலிற்
றோய்த்திட்டவருக்குச் சருவாங்கமுந்திரி தூள்படவே
மாய்த்திட்டவர்க்கரி தோவெளிதோதொண்டை மண்டலமே

[இதன்பொழிப்பு]

விரஞ்சீபுரத்தில் தன்னைப்பூசித்த ஒருபாலனுக்காகத்தனது திருமேனியைச்சாய்த்துக்கொடுத்தருளிய சிவபெருமானுக்குச் சாத்துஞ் சந்தனமாகத்தனது முன்கையைத் தேய்த்தவேளாளண் மகனொருவனுக்கும் ஒருவணிகன் பழிக்காகத்தமது சரீரமுழுமையும் வெந்துநீறுரும்படி சிவந்ததழலில் மூழ்கியுயிரைமாய்த்திட்டவராகிய வேளாண் மக்களுக்கும் பிறரொவரை நிகரொன்னல்கூடும் இத்தகைய வேளாளர்க்குத் தொண்டைமண்டலம் அரியதாமோ அல்ல பிறர்க்கரியதாம். (கக)

முன்கையைத் தேய்த்தமைக் குதாரணம்வந்துழிகாண்க.

பின்போர்தமைக்கண்டு பாவித்ததோவன்றிப் பின்புவந்தோர்
தன்போனடக்கப் பணிப்பித்ததோதமிழ்க் கேயிரங்கி
முன்போம்புலவர்க்குப் பின்போயினனு முகுந்தனிது [மே.
வன்போமனத்தினி லன்போசொல்வீர் தொண்டைமண்டல

[இதன்பொழிப்பு]

வித்துவஜனரை எல்லாவிதத்தாலும் உபசரித்து மகிழ்விக்குமியற்கையையுடைய தொண்டைமண்டல வேளாண் குடிப்பிறந்த முன்னோர்வழி அவ்வாறுஒழுக்கம்பூண்டு பின்புஅக்காலத்திருந்த வேளாண் மக்களைக்கண்டுதானும் அப்பாவனை பூண்டமையாலோ அவ்வாறன்றி பிற்காலத்து அவ்வொழுக்கம் விழுப்பமுடையதெனத்தான் ஆமோதித்துத் தானுமவ்வாறுருப்புறவொழுகித் தாபித்தவியல்போ அன்றிப்பின்னோர் இவ்வொழுக்கம் முன்னோரொழுக்க மாத்திரையன்றித் தெய்வசம்மத வொழுக்கமுமாமெனத்தேறிப் பின் பற்றியொழுகுதற்பொருட்டோ யாதெனவறிகிலம். காஞ்சீபுரத்தெழுந்தருளிய திருமாலானவர் செந்நாப்புலவர் கணிகண்ணனுடன் பின்

ங்கிக் கும்பகோணத்திற்குச்செல்ல அப்புலவர்பின்தானுங் காஞ்சிபுர த்தைத் துறந்து குடந்தையிற்சென்றிருந்தனர் திருமாலிவ்வாறுசெ ன்றது அரசனிடத்து வயிரங்கொண்டமையாலோ புலவரிடத்தன்பு கூர்ந்தமையாலோ அறிவுடையோரே சொல்லுங்கள் இவ்வாறுகட வுளரும் பின்பற்றும் ஒழுக்கமுடையோர்க்கிடமாகியது தொண்டை மண்டலமேயாம். (உ0)

கணிகண்ணன் வாவென்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீயிங்கி ராமல்-துணிவொன்றிச்
செந்நாப் புலவன்யான் செல்கின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.

என்னும்பாடலைச்சொல்லிப் பெருமாளை யழைத்துக்கொண்டு காஞ்சிநகரம்வந்தனர் என்பது.

முன்போம் புலவற்கு முதறிவாற் பாய்சுருட்டிப்
பின்போஞ் சவரிப் பெருமாளே யன்பாகப்
பேய்முலைப்பா லுண்டவனே பேதையே னின்னுமொரு
தாய்முலைப்பா லுண்ணமற் று

நூலார்கலைவல்ல செம்பியன்கேட்ப நொடித்துமிக்க
கோலாகலனொட்டக் கூத்தனையன்றுதற் கோலியென்று
மேலார்கவிசொல்லி நெய்த்தானத்தேசென்று வென்றுகொண்ட
மாலார்களந்தைப் புகழேந்தியுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

இலக்கணநூல்களும் மற்றைச்சாத்திரங்களுங் கற்று வல்ல குலோத்துங்க சோழமகாராஜன் ஒட்டக்கூத்தப்புலவர் சகிதமாய், தன்னையழைக்க நெய்த்தானமென்னுந் தலத்திற்சென்று நெய்த்தா னீசரைத் தரிசிக்கும்போது ஒட்டக்கூத்தரைக் கவிபாடச்செய்து பின்தன்னையும் பாடச்சொல்ல "தற்கோலி" என்னும்சிறந்தபாட லைப்பாடி, மிகுமேட்டிமையுடைய ஒட்டக்கூத்தப்புலவரை வென்ற வராகிய புகழேந்திப்புலவர் வாழ்ந்த மேகந்தவழுஞ்சோலைசூழ்ந்த களத்தூருந் தொண்டைமண்டலத்துள்ளது. (உக)

**ஒட்டக்கூத்தர் பாடல்.**

விக்கரவுக்காவித்தா விப்போய்விட்டார்கட்டார் சுட்டேர்புக்கார்
இக்காயத்தாசைப்பா டேற்றேயிற்றேடிப்போய் வைப்பீரிற்பீர்

அக்காடப்பேய்தொக்கா டச்சூழப்பாடத்தி வெப்பாடப்பூ
ணெக்காடக்கானத்தா டப்போநெய்த்தானத்தா னேத்தியாளித்தே.

புகழேந்திப்புலவர் பாடல்.

தற்கோலிப்பூசற்பா சத்தேதப்பாமற்சா கைக்கேகிற்பீர்
முற்கோலிக்கோலிப்பூ சித்தேமுட்டாமற்சே வித்தேகிற்பீர்
வற்றுநெட்டோடைப்பா ரைச்சேன்மைப்பூகத்தே நித்தாவிப்போய்
நெற்றுளூற்றுலேப்பா கிற்சேர்நெய்த்தானத்தா னேத்தியாளித்தே.

ஏரினியற்றுங் கலைக்கொட்டையீந்தன்ன மிட்டுநல்ல
பாரிபறித்தெனும் பாடல்கொண்டோன்பண்பு சேர்பழைய
னூரிலிருப்பவ னௌவைதன்பாடற்கு வந்தபிரான்
மாரியெனத்தரு கைக்காரியுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வளப்பம்பொருந்திய பழயனூரில் வசிப்பவரும், கார்காலமேக ம்போலவரையாது கொடுக்குங் கையையுடையவருமாகிய காரியென் னும்வள்ளல் தனக்கு மிக்கவறுமைவந்தகாலத்துப், பாரியென்னும் வள்ளலிடத்துச்சென்று தன்னிடத்துவந்த ஔவையாருக்குப்பரிசா கத்தனக்கு தற்காலம் சீவனத்திற்குக் காரணக்கருவியாயிருந்த ஏர்த் தொழிற்கருவியாகிய கலைக்கொட்டையுங் கொடுத்து, கலைகொத்து தலைவிட்டு வீட்டுக்கழைத்துக்கொண்டுபோய்த் தனக்கிருந்த அன்ன த்தையும்படைத்து, "பாரிபறித்தபறியும்" என்னும்பாடலைப் பெற்று மகிழ்ந்தார். இப்பெருமானாகிய காரிமுதலியார்வாழ்வுந் தொண்டை மண்டலத்து. (உஉ)

அப்பாடல் வருமாறு.

பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த கலைக்கொட்டும் -சேரமான்
வாரா யெனவழைத்த வாய்மையு மிம்மூன்றும்
நீலச் சிற்றாடைக்கு நேர்.

மோதிச்சிவந்த கவிகாளமேக மொழிந்தவெண்பா
பாதிக்குமுந்திப் பரிசளித்தோன்களப் பாளனென்று
மாதிக்கம்பெற்றவ னூமூர்முதலி யரசிருப்பா [மே.
மாதிக்கெலாம்புகல் கின்றதொல்சீர்த்தொண்டை மண்டல

[இதன்பொழிப்பு]

புலவோர்களைத் தருக்கவாதத்தால் தாக்கிவென்று செம்மைபெற்ற கவிவல்லோனாகிய காளமேகப்புலவன் வெண்பாபாட, பாதி வெண்பாப்பாடுதற்குமுன்னேயே பரிசளித்தவன் களப்பாளன் என்றுலகத்தார்புகழ ராஜீகம்பெற்ற ஆமூர்முதலி யரசிருக்குந்தானமென்று, நாற்றிசையினுமுள்ளோர் வியந்துசொல்லும்படி பழமை யாகிய சிறப்புடைய இத்தொண்டைமண்டலம். (உரு)

அப்பாடல்வருமாறு வெண்பா.

உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற வொருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே தெள்ளுதமி
ழாமூர் முதலி யரசர்பிரா னிங்கிருக்கப்
போமூ ரறியாமற் போய்.

காரார்களந்தைப் புகழேந்திசொன்ன கலம்பகத்தி
னோரானைநையும் படியென்றபாடலி னேரியர்கோன்
சீராகச்செப்பிய நற்பாடல்கொண்டவன் செஞ்சியர்கோன்
மாராபிராமனக் கொற்றந்தையூர்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

மழைவளம்பொருந்திய களத்தூரில் வாழ்ந்த புகழேந்திப்புலவர்பாடிய கலம்பகப்பிரபந்தத்தில் பொருத்தமாகிய "நையும்படி" என்றபாட்டில், சேரிமலைநாட்டார்க்கரசனாகிய சோழமகாராஜனைப் போலச் சிறப்பித்துப்பாடிய நல்லபாடலைப்பெற்றவனும், செஞ்சிநாட்டாருக்குத் தலைவனுமாகிய மாராபிராமன் வாழ்ந்த கொற்றந்தையூரும் தொண்டைமண்டலத்துள்ளது. (உச)

அச்செய்யுள் வருமாறு.

நையும்படியென்கொற்றந்தை நங்கோன்செஞ்சிவரைமீதே
யையம்பெறுநுண்ணிடைமடவா யகிலின்றூபமுகிலன்று
பெய்யுந்துளியோ மழையன்று பிரசத்துளியேபிழையாது
வையம்பெறினும் பொய்யுரைக்க மாட்டார்தொண்டை நாட்டாரே.

கையாறிரண்டுடைக் காளைதன்வாயிற் கவிதைகொண்ட
பொய்யாமொழிக்கும் புகலிடமானது பொய்கையெல்லாஞ்
செய்யார்கமல மலரில்வண்டானங்கள் சென்றுதிகழ்
மையார்குவளை வயல்புடைசூழ்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தடாகங்களிலெல்லாம் மலர்ந்திருக்கின்ற தாமரைமலர்களில் நாரைகள் சென்றிருக்கவிளங்குவதும் கருமைநிறமுடைய நீலோற்பல மலர்கள் மலர்ந்திருக்கின்ற வயல்கள் எப்பக்கங்களிலும் சூழ்ந்திருக்கப்பட்டதுமாகிய வித்தொண்டைமண்டலம்; பன்னிரண்டுகைகளையுடைய குமாரக்கடவுள் வேட்டுக்குமாரனாகிவந்து, தம்மைப்பாடியதற்கு ஈடாகத் தமதுதிருவாய்மலர்ந்து பாடியருளிய பாடலைப் பெற்றபொய்யாமொழிப்புலவர் வாழ்ந்த செங்காட்டங்கோட்டத்துறையூர் என்னுந்தலத்தை தன்னிடத்தே கொண்டிருக்கின்றமையால் அப்பொய்யாமொழிப்புலவருக்கும் புகலிடமாகியது. (உரு)

பொய்யாமொழி செங்காட்டங்கோட்டத்துறையூரில் வசித்தாரென்பது அவரது ஆசிரியர் அவரை ஆசீர்வதித்துப்பாடிய.

பொதியி லகத்தியனுப் பொய்யா மொழியாய்ச்
சிதைவில் புலவர் சிகாமணியாய்த் - துதிபெருகச்
செங்காட்டங் கோட்டத் துறையூ ரெனுந்தலத்தில்
தங்காட்டங் கொண்டிருப்பாய் தான்.

என்னும் வெண்பாவா லுணர்க.

சுப்பிரமணியக்கடவுள் ஒருகாலத்தில் தன்னைப்பாடும்படி பொய்யாமொழிப் புலவரைக்கேட்க அப்புலவர் இவர்குழந்தைஎன்னுமியல்பால் உன்றாய்தந்தையரையும்பாடி உன்னையும்பாடுவேனோ என்னும்பொருளடங்கப்பரிகாசமாகக் "கோழியையும்பாடிக் குஞ்சையும்பாடுவேனோ" என்றார், பின்பு பொய்யாமொழி பாண்டியதேயத்திற் சிற்றரசனாகிய தஞ்சையென்னும் ஊரையாண்ட சந்திரவாணன் பேரால் "தஞ்சைவாணன் கோவை" என்னும் அகப்பொருளந்தியை செய்யுளைப்பாடிப் பரிசுபெற்றுவரும் நெறியிலோர்காட்டில் சுப்பிரமணியர் வேட்டுக்குமாரனாகிவந்து அப்புலவரைவளைத்துக்கொண்டு, நீயார் நில்என்றார். புலவர் வழியிலடித்துப்பறிக்கும் வேடன்கையிலின்று அகப்பட்டோம் என்றஞ்சி நடுங்கி, நான்பொய்யாமொழிப்புலவன் என்றார், அதுகேட்டுவேடனாகிய சுப்பிரமணியர் புலவன்என்பது அகத்திய முனிவனுக்கல்லவோதகும், ஆயினும் கவிபாடு பாவலரையும் புலவரென்பதுண்டு உமக்குக்கவிபாடத்தெரியுமோ என்றார், அச்சொல்காதிற்புகுந்த வுடனே புலவர் இவன்வழிபறிக்

கும்வேடனுயிருந்தாலும் கல்வியருமைதெரித்தவனு யிருக்கிறான் நம்முயிர்க்கு மோசமில்லை யென்றுநினைத்து சந்தோடமும் துணிவுங்கொண்டு பாடுவேனென்றார். என்பேரால் சுரம்போக்குத்துறையமைய வொரு வெண்பாப்பாடுமென்றார். அதுகேட்டபுலவர் உயிர்க்குமாத்திரமல்ல நமதுகையிலுள்ள பொருளுக்கும் மோசமில்லையென்றுதெளிந்து, உன்பேர்என்னவென்றார் வேட்டுக்குமரன் என்பேர் "முட்டை" என்றார் புலவர் அப்பெயரைப் பாட்டுடைத்தலைவன் பேராகவைத்து உடனே.—

> பொன்போலுங் கள்ளிப் பொரிபறக்குங் கானலிலே
> யென்பேதை செல்லற் கியைந்தனளே - மின்போலு
> மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
> கானவேன் முட்டைக்குங் காடு.

என்னும் வெண்பாவைப்பாடினர். அதுகேட்டு வேட்டுக்குமாரன் இப்பாடலிற் பொருட்குற்றமிருக்கிறது, வெட்டிக்கிடத்தினும் காய்வதற்கு வெகுநாட்செல்லு மியல்புள்ளகள்ளி டச்சையாயிருக்கும்போதேவெந்து, பொற்பொரிபோல நெருப்புப்பொரியாய்ப்பறக்கச்செய்யும் பாலைநிலவெட்பத்தில், பச்சையாயிருக்கும்போதே தீப்ப[illegible]ல் வேகுமியல்புள்ளகாட்டு வேலமுள் வேகாதிருந்து காலில் தைப்பது இசையுமா? இப்படிப்பொருள் பிழைபடப்பாடுவது புலமைத்திறத்துக்கு இழுக்கல்லவோ? இதோநான் கவிசொல்லுகிறேன் அதிலிப்படிக் குற்றமிருக்கிறதா பாருமென்றுசொல்லி, அப்பொய்யாமொழிப்புலவரைப் பாட்டுடைத்தலைவனாகவைத்துச்சுரம்போக்குளென்னுந்துறையில் ஒருவெண்பா.

> "விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
> எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச் - செழுங்கொண்டல்
> பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே
> பொய்யா மொழிப்பகைஞர் போல்."

எனப்பாடினார் பொய்யாமொழிப்புலவர் வேட்டுக்குமரன் அகத்தியனும் பிழைசொல்லுதற்கரிய தன்பாட்டில் குற்றஞ்சொல்லியதையும், யாவராலுஞ்சிறிதுங்குற்றஞ்சொல்லரிய தன்பாட்டைத்தான் பாடியதையுங்கேட்டு வியப்பும் பிரமிப்புங்கொண்டு நின்றார்; அதுகண்டு குமாரக்கடவுள் தனதுசொரூபத்தைதக்காட்டி, இச்செய்தியிருக்கட்டும் அன்றொருநாள் "கோழியையும்பாடிக் குஞ்சையும்பா

டுவேனோ" என்றீரே இப்போது குஞ்சினுங் கோழியினும் முட்டைபெரிதாயிற்றே என்று திருவாய்மலர்ந்து அருள்நகைசெய்து மறைந்தாரென்பது.

வள்ளற்சிலைப்பெரு மாணச்சர்சாத்தர் வழுதிமுதற்
றன்னுவனார்க்குந் தலையானபேரையுந் தன்னுரையை
விள்ளுவனார்க்குந் திருக்காஞ்சிவாழ்பரி மேலழகன்
வள்ளுவனார்க்கு வழிகாட்டினன்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தனது கல்விப்பெருக்கத்தின் பயனாகிய, நூல்கட்குரைசெய்யுந்திறத்தால், வள்ளல்சிலைப்பெருமாள், நச்சர், சாத்தர், வழுதி முதலிய எவர்க்கும் மேலான உரையாசிரியர்களை வென்றவனாகிய காஞ்சீபுரத்தில் வாழ்ந்த பரிமேலழகன் என்னுமுரையாசிரியன் திருவள்ளுவர் நூலினுட்பொருளை உலகினர்கண்டெடுத்து உய்யும்பொருட்டுச்சிறந்தவுரையாகிய வழியையேற்படுத்தினார் அப்பரிமேலழகர் வாழ்ந்தகாஞ்சீபுரமும் தொண்டைமண்டலத்துள்ளது. (உசு)

"தருமர் மணக்குடையர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி-திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர்."

என்பதனாற் காண்க.

அந்தப்புரமு மறுநான்குகோட்டகத் தாருமொன்றாய்க்
கந்தப்புராணம்பன் னீராயிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல்லக்கையுந் தாங்கிக்குமரர்பொற் சந்நிதிக்கே
வந்தப்புராண மரங்கேற்றினார்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

சுப்பிரமணியரது சரிதமாகிய கந்தப்புராணத்தைப் பன்னீராயிரம் பாடலாகச்செய்த கச்சியப்ப சிவாசாரியரை அப்புராணத்திருமுறையோடு தந்தபல்லக்கின் மீதேற்றித் தாமேசுமந்து நகரிவலஞ்செய்வித்து, குமரகோட்டத்தில் அரங்கேற்றுவித்தவர் தொண்டைமண்டலத்து இருபத்துநான்கு கோட்டத்தும் காஞ்சிபுரத்தும் வாழ்ந்தவேளாளரே அன்றிப் பிறரல்லர். (உஎ)

டீடஞ்சூழுங்காரிகை யாப்பிற்குதாரண மென்றுகொண்ட
விடஞ்சூழரவென் றெழுவாயிற்றோற்றி வெறிகமழ்வேங்
கடஞ்சூழ்காடக் கடாக்களிற்றுனியற் காளிம்பன்மேல்[யே.
வடஞ்சூழெனச்சொன்ன பாமாலையுந்தொண்டை மண்டல

[இதன்பொழிப்பு]

தமிழுலகமனைத்திலுஞ் சூழ்ந்திருக்கின்ற யாப்பருங்கலக்காரிகையென்னு மிலக்கணநூலில் உதாரணமாக வெடுத்தாளப்பட்டதும், "விடஞ்சூழரவு" என்பதனை முதலிற்கொண்டு, "வடஞ்சூழ்" என்பது முதலியவற்றைப் பின்கொண்டு முடிந்ததுமாகிய பழமைபெற்றபுலவராற் பாடப்பட்ட பாமாலைபெற்ற, மதம்பொருந்தித் தன்னிழலைச்சூழ்ந்து மலையுங் கடாக்களிற்றுச் சேனையையுடையவனும், வேங்கடமலையைச்சூழ்ந்த தமிழ்நாட்டுக்கதிபனுமாகிய "காளிம்பன்" என்னுமியற்பெயரையுடையவனும் தொண்டைமண்டலவேளாளப்பிரபுகளிலொருவனே. (உஅ)

அப்பாடல்வருமாறு.

விடஞ்சூழரவி னிடைநுடங்க வில்வாள்வீசி வெறியார்வேங்
கடஞ்சூழ்நாடன் காளிம்பன் கதிர்வேல்பாடு மாதங்கி
வடஞ்சூழ்கொங்கை மலைதாங்தாம் வடிக்கணீல மலர்தாங்தாங்
தடந்தோளிணைமேல் வேய்தாந்தா மென்னுந்தன்கைத் தண்ணுமையே

என்பதனுலுணர்க.

ஈழந்திறைகொண் டெதிர்த்தோரைவென்ற விரவிகுலச்
சோழன்கவியு மவன்றேவிபாடலுஞ் சூட்டிக்கொண்டான்
வேழம்புனைசொற் கவிவீரராகவன் வீற்றிருந்து
வாழுந்தமிழ்மண் டலமல்லவோதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஈழதேயத்துச் சிங்களவரசனைவென்று, அவராற்கொடுக்கப்படும் கப்பம்பெற்றுப்பின்னும் எதிரிட்ட பலதிசைகளிலுமுள்ள அரசனையும்வென்று வெற்றிபெற்ற சூரியகுலத்தரசனுகிய சோழராஜன்சபையில் கண்டசுத்திபாடி, யானைக்கன்றும் வளநாடும் பரிசுபெற்றதன்றி, அச்சோழராஜனுலும் அவ்வரசனது தேவியாலும் தன்னைப்புகழ்ந்துபாடப்பட்ட பாடலையும்பெற்ற; கரும்பினிரசம்போலவினிக்கும் இன்சொற்றொடையாகிய கவிபாடவல்ல "அந்தகக்கவிவீரரா

கவ முதலியார்” அமர்ந்துவாழ்ந்திருந்த தமிழ்கமழ்மண்டல மிதொ ண்டை மண்டலமே. (௨௬)

### கவிவீரராகவ முதலியாரதுவரலாறு.

பொன்விளைந்தகளத்தூரிலே வேளாண்குடியிலே பிறவியிலேயே அந்தகராகப்பிறந்து, கச்சியேகம்பர் திருவருளால் கல்விநிறைந்து கவி யாற்சிறந்து, கவிவீரராகவமுதலியாரெனத் திசாமுகங்களிலெல்லாம் புகழப்பேர்பெற்று, தனக்கொத்தகுடியில் கல்வியாலுங் கற்பாலுஞ்சி றந்தபெண்ணை மணம்புணர்ந்துவாழும்நாளில் ஒருமுறை தலயா த்திரைபோய்த்திரும்பி மனைக்கேகும்போது, முன்சென்றதூதர் அவ ரது மனைக்கிழத்திக்கு முதலியார்வருகின்றனர் என்றறிவித்தார்கள் அம்மாதுசிரோமணி “கவிப்பெருமான் யானைக்கன்றும் வளநாடும் சோழவள்ளல் கொடுக்கப்பரிசுபெற்று வருகின்றனரோ” என்றுலீ லாவசனமாகக் குறிப்புச்சொல் விஞவாகச்சொல்ல, அதுகேட்டதூ தர் திரும்பிவந்து அக்குறிப்புரையைச் சொல்லக்கேட்ட அப்புலவர் சிகாமணி, சோழமகாராசன் போரில் வீரனுயிருத்தல்போலவே கல் வியிலும் தீரனென்பதும், தெய்வீகக்கவிக்கே யானைக்கன்றும் வளநா டுங்கொடுப்பேன் என்னுங் கொள்கையுடையான் என்பதும் நமது மனைவி கற்றுணர்ந்தவளாதலின் தெரிந்து அவ்வரசன் வியக்கக் கவித் திற முணர்த்தி அவ்வரசன் குறித்த பரிசுபெற்று உலகமெல்லாம் புகழ ப்படுவதன்றோ வித்துவசிரோமணியாகியநமதுநாயகர்க்கு அழகென்று ம் அவ்வகைச் சிறப்பினையுடையர் நாயகராயிருப்பதன்றோ நமதுகல்வி க்கும் கற்புக்கும் அழகாவதுஎன்றுங்கருதி அப்படிச்செய்ய நம்மை க்குறிப்புரையால் வற்புறுத்தினளென்றுட்கொண்டு மிகமகிழ்ந்து, மனைக்குச்செல்லாமலங்கிருந்து திரும்பிச் சோழமகாராசன் சபைக்கு முன்னர்ப்போய் வாயில்காப்போராலறிவித்தார் அதுதெரிந்தசோழன் இவர்பிறவியிலேயே அந்தகர்என்பதும், தெய்வீகத்தால் கல்வித்திற மும் கவித்திறமும் பெற்றவர்என்பதுங் கேள்விப்பட்டவனுதலால் அவர்கவியினது தெய்வத்திறஞ் சோதிக்கவெண்ணி, எழுதிரையி ட்டு, அதனுள் நாணேறிட்டு, அம்புகோத்தவில்லைக் கையிலேந்திச், சிங்காதனத்தி லிருந்துகொண்டு, புலவரையழைத்துவந்து எழுதிரை க்கும் வெளியே ஆதனமிட்டுஅதிலிருக்கச்செய்யும்படி கட்டளையிட் டான், வாயிலோர் அழைத்துவந்து திரைக்குவெளியிலிட்டிருந்த ஆத னத்தி லிருக்கச்செய்தார்கள். அப்போது உடனேபுலவர்பெருமான் சூரியகுலத்தா னுதலாலும், இலங்கைத்தீவை வென்றமையாலும்,

நிகரற்ற வீரனாதலாலும், இராமனைநிகர்த்த அரசனே இலங்காதி பனாகிய இராவணன் அன்றே மடிந்தான்மாயமானும் அன்றேமடிந் தது இங்கில்லையே, நாம் இலங்கைக்கோமானுமல்லம் மாயமானு மல்லமே கல்விமானன்றோ, நினையேஉமக்கெதிரோயிருக்கிற ஏழினை யும் எய்யத்தலைப்பட்டோம், என்பீரோல் உமதுதகைமைபெற்றவி ல்லில் அம்பேற்றுதற்குத் தக்கஏழுமராமரங்களல்லவே இவையே ழுந் துகிற்றினையன்றோ இவ்வாறாக நீர்இன்று அம்புகோப்புண்டவி ல்லை யேந்துதற்குற்றகாரணமியாது அதனையெமக்குச்சொல்லும் என்னும்பொருளடக்கி.

வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
யேழு மராமரமோ வீங்கில்லை - ஆழி
யலையடைத்த வண்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு.

என்னும் வெண்பாவைப்பாடினர் அதுஅரசன் செவிப்பட்டவு டனே கண்ணுள்ளவர்க்குந் தெரியாதிருந்த தனதுசெய்கையைக் கண்ணில்லாதவிவர் சொல்லிய தெய்வீகத்திற்கும், சொற்சுவை பொ ருட்சுவை பொலியப்பாடுங் கவித்திறத்திற்கும் அதிசயவானந்தங்கொ ண்டு தனதுத்தேசப்படி உயர்ந்தகளிற்றியானைகளையும் நல்லவிளைநி லங்களையும் பரிசாகக்கொடுத்ததுமன்றி; அவரிடத்துத் தனக்குள்ள நன்குமதிப்பும் அவரது அரியதெய்வீகக் கல்வித்திறமையுந்தோன்ற அப்புலவர் சிகாமணியின்மேல் அவ்வரசன்தானும்.

இன்னங்கலைமகள் கைமீதிற்புத்தக மேந்தியந்தப்
பொன்னம்பலத்தினிற் புக்கிருந்தாளென்ன புண்ணியமோ
கன்னன்களந்தைக் கவிவீரராகவன் கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக் கற்றுணெருமுத் தமிழையுமே.

என்னுங்கட்டளைக்கலித்துறைபாடிச் சிறப்புச்செய்தான் ராஜ மகிஷியும் மனங்களித்து அப்புலவர்சிகாமணிமேல் கவிபாடினள் புல வர் அவைபெற்று மனைக்குத்திரும்பிவர அவரது மனைக்கிழத்தியார் மிக மனமகிழ்ந்தானந்தித்துத் தனது அரிய காதலனைத் தழுவிவாழ்ந் திருக்குநாளில் குமுணராஜனால் விரும்பிவருவிக்கப்பட்டு அவ்வரச ன் சமஸ்தானத்தில் சென்றபோது, குமுணராசன் இவரது தெய் வீகக் கவித்திறமையைத்தான்கண்டு மகிழும்படிகருதி, புலவர்திலகனை ப்பார்த்து ஐயா! ஒரு கற்புடையபெண்தனது நாயகன் அருகிலி ருக்கும்போதே அவனது தந்தையாகிய தனது மாமனைப்புணர்ந்

தான்; இந்தப்புதுமை உலகத்துண்டோ? என்று கேட்டான் அச்சொல் செவிபுகாமுன்னே.

கோளரவேக் துலகிலிந்தப் புதுமையுண்டோ வெனவுரைத்த குமுணுகேளா - யாளானவர் தமைத்தோய்ந்த கற்புடைய பாஞ்சாலி யணைந்தவீமன் - வாளரிபோ லருகிருக்க மலையவெற்பி லிருந்துவந்த மாமனுரைச் - சாளரவா யிலைத்திறந்து வரவழைத்து முலையாரத் தழுவினுளே.

என்னுங் கவியைச்சொல்லினர், குமுணன்மிகவியப்புற்று, அவரைப்பூசித்துப் பலவரிசைகொடுத்தனுப்பினன் பின்னர்ப் பற்பல தலங்களிலும் சென்று, அங்கங்கே அச்சமயத்துக்கேற்றபடி தனிக்கவிகளும், பிரபந்தங்களும், திருக்கழுக்குன்றத்தலபுராணமும் பாடி வெகுகாலம் சிவானுபூதிச்செல்வராய் வாழ்ந்திருந்து, சிவபதமடைந்தனர். அக்காலத்திவரது பரிபூரணதசையைக் கேள்வியுற்ற சோழமகாராஜன்

முன்னுட்டுத் தவமுனியுஞ் சேடனும்வான் மீகனுமுன் முன்னில்லாமல், தென்னுட்டு மலையிடத்தும் பாரிடத்தும் புற்றிடத்துஞ் சென்றுசேர்ந்தார், இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே கவிவீரராகவா நீ, பொன்னுட்டுப் புலவருடன் வாதுசெய்யப் போயினையோ புகலுவாயே.

எனச்சரமகவிபாடினர். (இதுமுன்னோரது கர்ன்னபரம்பரைவழக்கு) இச்சரமகவியிலுள்ள வுபமானத்தால் இவர்வடமொழியிலும் வல்லவர்என்பது தெற்றெனவிளங்கும் இச்சரமகவி அவரது மனைவி பாடியதாகவும், சொல்வாருமுளர். சோழமகாராஜன்மகிஷிபாடிய செய்யுளெமக்குக் கிட்டாமையால் விட்டாம்.

கிளய்பார்கிளப்ப வடிமடக்காகக் கெழுமியசொல்
லளப்பாமதுரத் துடன்பூக்கமலமென் ருய்ந்தெடுத்த
களப்பாளனெற்குன்ற வாணனந்தாதிக் கலித்துறையே
வளப்பார்புகழை வளர்ப்பிக்குமாற்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

நெற்குன்றூர் வாழ்க்கையனுகிய களப்பாளனென்னும் வேளாண்டலைமகன் (செல்வத்தானும் வெற்றியானுமன்றிக் கல்வியானுஞ் சிறந்தோன் என்பதை) பிறிதொன்றனையும் வியந்துசொல்லாத புலவர்களும் வியந்துபாராட்டும்படி (திருப்புகலூரொன்னுந் தலத்தச்

சிவபெருமான்மேல்) அடிமடக்கும் சொல்லின்பமும் இலக்கண வின்பமும் பொருந்த, முதற்பாமுதலிலே "பூக்கமலம்" என்னுஞ்சொல்லை மங்கலமுதலியவற்றிற்கமைய ஆராய்ந்து எடுத்துமுடித்த கலித்துறையந்தாதியே (எடுத்துக்காட்டி) வளப்பம் பொருந்திய பூவுலகின்கண் தொண்டை மண்டல வேளாண்மக்களது புகழைவளரச் செய்யவல்லது. (௬0)

களப்பாளன் (செல்வமுதலியவற்ருன் மாத்திரமன்றிக்கல்வியானுஞ் சிறந்தோனென்பதை யவன்பாடிய வந்தாதிச்செய்யுளேயெடுத்துக்காட்டித் தொண்டைமண்டல வேளாளர் புகழை மலிவிக்கும் என்றவாருயிற்று.)

அக்கலித்துறை யந்தாதிவருமாறு.

பூக்கமலத்து விழிவளர்வானென்றும் போற்றியவூர்
மாக்கமலத்து மகிழ்கின்றவூர்மது வானிறைந்த
தேக்கமலத்து வழியேபரக்குந் திருப்புகலூர்
நோக்கமலத்துயர் சோதிநெஞ்சேநம்மை நோக்குதற்கே.

இவர்பாடினவொன்பதும் அவர்பேரும் அவர்தானேசொல்லிய:—

வளப்பாடிலாத வெருக்குமிதழி மலருமன்ப
ருளப்பாடுறைபுக லூரருக்காதலி னேதிமிக்கோர்
தளப்பாடிதுதமிழ்க் கென்னினுஞ்சாற்றுவன் சந்திரன்சொற்
களப்பாளனெற்குன்ற வாணனந்தாதிக் கலித்துறையே.
(என்னும் அவையடக்கச்செய்யுளானு முணர்க)

இன்னுமவர்வெற்றியதிகாரத்தாற் சிறந்தமை.

படுபெருந்துஞ் சூர்ப்பேயும் பல்விலங்கும் நாயும்
கொடியுங் கழுகுமிவை கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்.

என்பதனாலுமுணர்க.

சீருறும்பாடல்பன் னீராயிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ்சங்கப் பலகையிலேற்றிய வித்தகனூர்
பாரதம்பாடும் பெருந்தேவர்வாழும் பழம்பதிகாண்
மாருதம்பூவின் மணம்வீசிடுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

சிறப்புப்பொருந்திய பன்னீராயிரம் வெண்பாப்பாடல்களால் பாரதமாகிய இதிகாசத்தைப்பாடிச், செழித்ததமிழில் மிகவல்லவரா கிய மதுரையில் கடைச்சங்கப் புலவர்முன்னே தெய்வத்தமிழ்ச்சங் கப்பலகையின்மீது ஏற்றிவைத்த பேரறிஞராகிய பெருந்தேவனூர் வாழ்ந்திருந்ததும் தென்றலானது பூக்களிலுள்ள மணமனைத்தினையு ங்கொணர்ந்து எந்நாளும் வீசுகின்ற வித்தொண்டை மண்டல த்தே. (ருக)

தன்னூர்ச்சனகையிற் சன்மதிமாமுனி தந்தைமைந்த
நன்னூலுரைத்த பவணந்திமாமுனி நற்பதியுஞ்
சின்னூலுரைத்த குணவீரபண்டிதன் சேர்பதியு
மன்னூபுரத்திரு வன்னமின்னேதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

நிலைபெற்ற சிலம்பணிந்த பாதத்தையுடைய திருவையொத் து மின்னலை நிகர்த்தமாதே, சனகாபுரத்தைத் தன்னூராகக்கொண் டிருந்த சன்மதி மாமுனிபுத்திரரும், சீயகங்கமன்னனது வேண்டுகோ ளால் உலகோபகாரமாகத், தமிழினிலக்கண மைந்தனையுந் தொகை வகை விரியினன்னூல் செய்தவருமாகிய பவணந்திமுனிவர் வாழ்ந்த நல்ல அச்சனகைப்பதியும், சின்னநூலாகிய நேமிநாதம் என்னும் இலக்கணத்தைச்செய்த குணவீரபண்டிதர் வாழ்ந்தபதியும் இத்தொ ண்டைமண்டலத்துள்ளன. (ருஉ)

"மன்னூபுரத்திருவன்னமின்னே" என்றது மகடூஉமுன்னிலை.

பண்டைநிகண்டு திவாகரம்பிங்கலம் பன்னூரிச்சொல் [ந்தே
லெண்டிசையின்சொல் வடமொழிச்செய்யுளெல் லாமுணர்
தண்டமிழ்கொண்டு நிகண்டுசூளாமணி தானுரைத்த
மண்டலவன்குடி கொண்டதுநீடொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

அருகதேவனும் கணதரரும் பிறருஞ்செய்த, பழமையாகிய நிக ண்டுகளையும், திவாகரர்செய்ததிவாகரத்தையும், பிங்கலர்செய்த பிங் கலந்தைநிகண்டையும், புகழ்பெற்ற உரிச்சொல் நிகண்டினையும், திசைச்சொற்களையும், வடமொழியிலுள்ள நூல்களையும், முற்றுண ர்ந்து தமிழில் விருத்தச்செய்யுளாகச் சூளாமணி நிகண்டைச்செய்த

மண்டலபுருடன் வசித்த குன்றையூரும் தொண்டை மண்டலத்துள்ளது. (௯௯)

பொள்ளாறுழைவழி போய்த்தலைநீட்டும் புலவர்முன்சொல்
கள்ளாருஞ்செஞ்சொற் கலம்பகமேகொண்டு காயம்விட்ட
தெள்ளாறைநந்தி யெனும்தொண்டைமான்கலி தீர்ப்பதற்கு
வள்வார்முரச மதிர்த்தாண்டதுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஏகாந்ததலமாகிய தனது பள்ளியறைச்சுவரை துளைத்துக்கொண்டுள்ளேதலைநீட்டிச்சென்ற வொருபுலவன்சொல்லிய தேன்போலுமதுரிக்கின்ற செவ்வியசொற்களமைந்த கலம்பகச்செய்யுளை (மரணக்கரங்கள்அமைத்துப்)பாடியநந்தச்செய்யுளெனத் தெரிந்தேயும் சொல்லின்பத்தையும், புகழையும் விரும்பி, யுயிரை வெறுத்துக்கேட்டு ஆனந்தமடைந்துடலை விட்டவனும், தொண்டைமான் சக்கிரவர்த்தி வமிசத்தானும், படவேடென்னும் தெளிந்த ஆறைப்பதிக்காவலனுமாகிய, நந்தியென்னுந்தொண்டைமான் புலவோர் கலியைத்தீர்ப்பேன் என்று ஆசாரவாசலில் முரசறைவித்தாண்டது இத்தொண்டைமண்டலம். (௱)

நந்தி யென்னுந் தொண்டைமானது சகோதரன் ஏவலால் ஒரு புலவன் நந்தச்செய்யுளில் ஒரு பாடலை அரசன் ஏகாந்த சயனத்தலத்தின் சுவரைத்துளைத்துள்ளேசெல்ல தலையை நீட்டி ஓடிப்போய் விட்டான். அன்று முதல் அப்பாடல் முழுமையும் கேட்க விருப்புற்றிருந்தான். அவனது சகோதரன் புலமைத்திறம்பெற்றுத் தமையன்மேலிருந்த வெறுப்பால் வசைக்கலம்பகம் பாடிக்கொண்டு தாசி வீட்டில் மறைந்திருக்குங்காலத்து, ஒரு நாளரசன் நகர்சோதனைக்குச் செல்லும்போது, ஒரு தாசி வீணையில் தன்மேற்பாடிய வசைக்கலம்பகத்தின் செய்யுளைப் பாடிக்கொண்டிருக்கக்கேட்டு கவி யின்பத்தை வியந்து சாவதானாலும் இக்கவியைக்கேட்டுச்சாவதுதான் இன்பமும் புகழுமாம் என்று துணிந்து அன்று விடிந்தவுடனே தாசியைத்தருவித்து வினவ, அந்தப்பாடல் என் வீட்டிலிருக்கும் தங்கள் சகோதரனால் சொல்லப்பட்டதென்று வெளியிட்டாள். அரசன்வியந்து நமதுசகோதரனது கல்வித்திறத்தையுங் கவிநயத்தையுந் தெரிந்தானந்திப்பதற்கு உயிரைப் பரிசாகக்கொடுப்பதோ ரருமையா வென்று நினைத்து அப்புலவனாகிய சகோதரனை வருவித்து அவன்சொற்படி சுடுகாட்டுக்கும் அரண்மனைக்கும் மத்தியில் வரிசையாக தொண்ணூற்றொன்பது பந்த

விடுவித்து ஒவ்வொருபந்தலினின் ருெவ்வொரு கவியாகக்கேட்க, ஒவ்வொரு பந்தலுமுடனுக் குடனே வெந்துபோவதையும் பிரத்தியக்ஷமாகப்பார்த்தும் பதருமல் முற்றச்சென்று மயானத்திற்கட்டையடுக்குவித்து, அதன்மேற்படுத்துக்கொண்டு, வானுறுமதியையடைந்ததுன் வதனம், என்னும் முடிவுப்பாட்டையும் சொல்லக்கேட்டு உயிரைவிட்டுச் சகோதரனுக்கு மண்ணுலகத்தைக் கொடுத்து விண்ணுலகமடைந்து புகழைநாட்டிக்கொண்டான் என்பது.

(மேற்கோள்)

வானுறுமதியை யடைந்ததுன்வதனம் வையகமடைந்ததுன் கீர்த்தி
கானுறுபுலியை யடைந்ததுன்வீரங் கற்பகமடைந்ததுன் கரங்கள்
தேனுறுமலரா ளரியிடஞ்சேர்ந்தாள் செந்தழல்புகுந்ததுன் மேனி
யானுமென்கலியு மெவ்விடம்புகுவே மெந்தையேநந்திநா யகனே.

தொண்டைமண்டலச்சிறப்பு.

பூதவஞ்சூத முதலாகநின்றபொ தும்பிற்சந்தப்
பாதவம்போன்மிக்க வேளாளர்தங்கிய பான்மையினு
லாதவஞ்சூழ்தரு பல்கோடிதேய மனைத்தினுமா
மாதவஞ்செய்ததன் றேதமிழ்சேர்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஆல் மா முதலிய பற்பலதருக்கள் நிறைந்தசோலை நடுவில் சந்தனத்தரு சிறந்தமைபோல இம்மண்டலமெங்கும் வேளாளர்நிறைந்து விளங்குஞ்சிறப்பினுல் சூரியகிரண முலாவுகின்ற அநேககோடிமண்டலங்களினும் இத்தொண்டைமண்டலம் மிக்கதவஞ்செய்ததன்றே. (ருரு)

பாலிநதியின்சிறப்பு.

கசிட்டன்புடைய விராவணன்வீழக் கயிலையுறைந்
தசிட்டன்றிருவடித் தாமரைப்பூசிக்கச் சார்ந்தபசு
விசிட்டன்றிருமுலைப் பாலாறுகொண்டு விருப்பமுடன்
வசிட்டன்றவஞ்செய்த மண்டலங்காண்டொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு]

தீநெறிவிருப்பனுகிய இராவணன் வீழ்ந்து பாதலத்தழுந்தும்படி உறுத்தூன்றிக் கயிலாயபருவதத் தெழுந்தருளிய சிற்சொருப

ளுகிய சிவபெருமானது திருவடித்தாமரை மலரைச்சார்ந்து பூசித்த காமதேனு வென்னுந் தெய்வப்பசு சொரிந்தபால் நதியாயோடுகின்றபாலியாற்றுநீரைக் கொண்டு விசேடஞானியாகிய வசிட்டமுனிவர் தவஞ்செய்து கொண்டிருந்த நந்திபருவதத்தையுடையது தொண்டைமண்டலம். (௫௬)

## ராஜதானி கச்சிப்பதிச்சிறப்பு.

பொய்யகமாகிய மாயாப்பிரபஞ்சம் போக்குதற்குக்
கையகநெல்லிக் கனியதன்றேகச்சி யேபெரிதாய்
மெய்யகமேபுரி காரிகைப்பாட்டில்விளங்கவைத்த
வையகமென்னுந் தமிழேபுனைதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

மாயையினிடத்தேதோன்றிய பொய்யாகிய கரையேற்றும் பெரியகலம் கச்சியென உள்ளங்கைநெல்லிக் கனிபோலப் புலப்படச்சொல்லிய காரிகையென்னும் யாப்பியலிலே உதாரணமாகக் காட்டப்பட்ட "வையகம்" என்னும்முதற்குறிப்புப்பாடலை யணிந்துள்ளது தொண்டைமண்டலம். (௫௭)

அப்பாடல்.

வையக மெல்லாங் கழனியா-வையகத்துச்
செய்யகமே நாற்றிசையிற் றேயங்கள் - செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு - வான்கரும்பின்
சாறே யந்நாட்டுத் தலையூர்கள்-சாறட்ட
கட்டியே கச்சிப் புரமெல்லாங் - கட்டியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
யானேற்றான் கச்சி யகம் என்பது.

## மண்டலத் தரசன் சிறப்பு.

கண்ணார்கருணைக் கடற்றொண்டைமான்கைக்கடாசலத்தைத்
தண்ணாருமுல்லைக் கொடிதடுத்தாட்கொண்ட தன்மையெல்
[லாம்
பண்ணாருஞ்செஞ்சொற் றிருமுல்லைவாயிற் பதிகஞ்சொல்ல
மண்ணாழிகாலமு நிற்பதன்றேதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கருணைக்கடலாகிய தொண்டைமான் சக்கிரவர்த்தி தனது பட்டத்துயானைமீது செல்லுகையில் திருமுல்லைவாயிலில் முல்லைக்கொடி

யினால் தும்பிக்கையையும் மதத்தையுமுடைய கடாயானையைத் தடு த்து நிறுத்தி அவ்விடத்துச்சிவபெருமான் தரிசனங்கொடுத்துச் சக்கி ரவர்த்தியை ஆட்கொண்ட திருவருட்டன்மையினைத்தும் தேவாரத் திருப்பதிகங்கள் சொல்லும்படி உலகமழியும் உகாந்தகாலத்தும் அழியாது நிலைநிற்பது தொண்டைமண்டலம். (௬அ)

இந்த காஞ்சிமண்டலம் தண்டகனாலாளப்பட்டு தண்டகனாடெ னவும், அவனுக்குப்பின் தொண்டீரனாலாளப்பட்டு தொண்டீரமண் டலமெனவும் பெயராயிற்று. அதன்பின்னர் இக்காஞ்சிநாட்டைச்சார் ந்த சிற்றூர்கள்யாவும் அழிந்து காடுகொண்டு சரபசார்த்தூலமுதலிய மிருகங்கள் வசிக்கின்ற பருத்துயர்ந்த பற்பலதருக்கள் நிறைந்த வன மாகிவிட்டது.

பின்பு ஓர்காலத்தில் கரிகால சோழமஹாராஜன் ஸ்தலயாத் திரையாக இந்தவனத்தில்வந்து அங்குள்ள பற்பல்பக்ஷி மிருகங்கள் தருக்கள்இவைகளின் வளப்பங்களையும் பரிமளம்வீசி அழகுவாய்ந்துவி ளங்கும் சிங்காரங்களையும் கண்டு வியப்புடன் சஞ்சரித்துக்கொண் டிருக்கையில் ஒருமரத்தடியில் ஒருபிலங்காணப்பட்டது சூரதீரனா கிய அரசன் அங்கேபோனான் அதனருகில் ஓர் பூமரத்துநீழலில்இரு க்கும் மின்போலும் ஒருஸ்திரீயைத் தன்கணணாரக்கண்டான் பிரமித் தான் மூர்ச்சித்தான் இவள் பூமிதேவி முதலியோரில் யாரோன ஐய முற்றான் அவளது அவயவக்குறிப்பறிந்து தன்னிடத்தன்பு இருப்ப தாகத்துணிந்தான் தன்காமநோய்க்கு அவளதுபார்வையே நன்மரு ந்தாமெனவெண்ணித் தன்னைப்புணரும்படி வேண்டிக்கொண்டான். அப்பெண் இரங்கி அரசன் கருத்துக்கிசைந்து ராசாதிராஜனே உம திஷ்டப்படி உம்மைக் கூடினால் எனதுவயிற்றிலுதிக்கும் பிள்ளை க்கு உமது அரசையாளும்படி மகுடம்சூட்டி வைப்பீராவென்றுகே ட்டாள் அந்தப்படி செய்விப்பதாகப் பிரமாணம் செய்துகொடுத் தான்பின்பு நீரோ பூலோகத்தரசன் நானோநாகலோகத்து அரசன்கு மாரத்தி யான்இந்தலோகத்திலிருந்து வாழ்பவளல்ல நாமிருவரும் இந் தவனத்தில் கூடிப்பிரிந்து போய்விட்டால் சத்தியவாக்கு எப்படி நிறைவேற மார்க்கமிருக்கிறதென்று மறுத்து ஐயமுற்றுச்சொன்னாள் ராஜன்யோசித்துப் பெண்ணே நாம் இப்போது வசித்திருக்கும்மரமா கியஇவ்வாதொண்டை மலர்மாலையை உன்வயிற்றிலுதிக்கும் பிள்ளை யின்கழுத்தில்சூட்டி அனுப்புவையாகில் அந்த அடையாளத்தைக்கண்டு கொண்டுஅக்தப்பிள்ளைக்கு நாடாள மகுடம்சூட்டி வைக்கிறேனென்

றும் பின்னும்பலவாறாக சத்தியம் செய்துகொடுத்துச் சதிபதிகளாக இருவருங்கலந்து சையோக வைபோகமாக சம்போகஞ்செய்து இன்பக்கடலுளாழ்ந்து கிரீடாசுகமனுபவித்திருந்து ராஜன் தன்னகரத்துக்கு வந்துவிட்டான்.

நாககன்னி கருப்பமாயிருந்து வனப்பிற்சிறந்த ஓர் குமாரனைப்பெற்றாள் அந்தராசகுமாரன் நாளொருமேனியாய்வளர்ந்து அந்தவனத்து ரிஷிகளைப்பணிந்து அவர்களாசீர்வாதம் பெற்று வித்தை புத்தி சாமர்த்தியங்களுண்டாய் பாலப்பருவம் நீங்கி யெளவனப்பருவம் வரவும் ஓர்நாள் தன்தாயாரைவணங்கித் தன்பிதாயாரெனக் கேட்டுக்கொண்டான்.

நாககன்னியானவள் தனதுகுமாரனை உச்சிமோந்து முத்தமிட்டு தனதுடல்பூரித்து மிகுகளிப்புற்று கரிகாலசோழராஜனுக்கும் தனக்கும் நடந்த பூர்வவிருத்தாந்தங்களைச்சொல்லி ஆதொண்டைமலர் மாலையைத் தரித்து ஆசீர்வதித்து அனுப்பத் தாயைப்பணிந்து விடைபெற்றுக்காடு மலை வனம் வனாந்தரங்களைக்கடந்து சோழநாட்டைச்சேர்ந்து ராசசபையில்போய் அரசனைப்பணிந்து நின்றான் அப்பிள்ளை ஆதொண்டைமலர் மாலை புனைந்திருப்பதையும் அவனது அழகையும் ஒழுக்கத்தையுங் குறிப்பாலறிந்து சந்தோஷசித்தனாகி சபையார் யாவரும்கண்ட திசயித்திருக்க மைந்தனைத்தழுவி முத்தமிட்டுத் தன்னருகில் உட்காரவைத்துக்கொண்டான் அப்போது சபையிலுள்ள மந்திரிபிரதானிகள் முதலியயாவரும் அரசனையும் அப்பிள்ளையையும் பார்க்கையில்ஒருருவாகவே அமைந்துதோன்றலாலும் அச்சிறுவனை அரசன் அன்புடன் அணைத்து ஆதரவுசெய்தலையும்நோக்கி அதிவியப்பும் பிரமிப்பும்அடைந்து ஒன்றுந்தோன்றாமல் சித்திரப்பிரதமைபோல் மௌனயாயிருந்தார்கள் அப்போது சபையாரையும் அந்தப்பிள்ளையையும் அரசன்பார்த்தான் அந்தக்குறிப்பறிந்து அரசனாகிய தன்பிதாவை யெழுந்து வணங்கி நமஸ்கரித்து கைகட்டி நின்றுகொண்டு சபையாரைப்பார்த்து சிறியேன் விண்ணப்பஞ்செய்வதைக் கேட்டருளவேண்டுமென்று விநயமாக யாவருக்கும் சொல்லுகின்றான்.

இந்தக்கரிகால சோழமகாராஜனானவர் யாத்திரையாகக் காஞ்சிமண்டலத்தின் ஆரணியத்தில்வந்து அங்கேயென்தாயார் நாககன்னிகையை மோகித்து உன்வயிற்றிலுதிக்கும் பிள்ளைக்கு எனது அரசை ஆளும்படி பட்டாபிஷேகம் செய்விக்கிறேனென்று ஆகாசவாணி பூமிதேவி முதலியோரை சாக்ஷிவைத்து சத்தியஞ்செய்து கொடுத்

ததுமன்றி அங்கிருந்த ஓர் மரத்தின் மலர்ந்த மலர்மாலையை உன் வயிற்றில்பிறக்கும் பிள்ளைக்குத்தரித்து என்னிடமனுப்பினால் அந்த அடையாளத்தைக்கொண்டு எனது நாட்டைஅரசாக்ஷிசெய்யும்படி மகுடம் சூட்டிவைப்பேனென்று வாக்குத்தத்தம்செய்து கொடுத்துக் கூடியதாகவும் அதுவே கருப்பமாயிருந்து நான்பிறந்தேன் அதுமுதல் அந்தவனத்து ரிஷிகள் என்னையும் தாயையும் ஆதரித்து நான்குவேதம் ஆறுசாத்திரமுதலியசகலகலைகளையும் கற்பித்தார்கள் எனக்கு பாலப்பருவம்நீங்கி யௌவனப்பருவம்வரவும் என்பிதாயாவனென்று என்தாயை வணங்கிக்கேட்டேன் என்தாயார்நடந்த விருத்தாந்தங்களை எனக்கறியச்சொல்லி ஆதியில்குறித்தஆதொண்டைமலர்மாலையைச் சூட்டித்தங்களிடத்துக்கு அனுப்புவிக்க வந்தேனென்றுசொன்னான் அப்போதுயாவரும் வியக்கும்படி ராஜன் வனத்தில்நாககன்னியைக்கூடியிந்தப்பிள்ளைபிறந்ததும் நாககன்னிகைக்கு ராஜன் சத்தியம்செய்துகொடுத்ததும் உண்மையென்று ஓரசரீரிவாக்குஉண்டாயிற்று அப்போது கரிகாலசோழமஹாராஜன் சந்தோஷத்துடன் பிள்ளையைத்தழுவிக் கொண்டு பூர்வம்நடந்த சங்கதிகள் யாவும்சவிஸ்தார்மாகச்சொன்னான் அதுகேட்டுயாவரும் சந்தோஷித்தார்கள்.

அந்தப்பிள்ளை வருவதற்குமுந்தி தன்பட்டமகிஷியின் பிள்ளைக்கு இளவரசு பட்டங் கொடுத்திருந்தமையால் நீதிதவராமலிருக்கும்பொருட்டு அரசன் பலவாகயோசித்து ஜேஷ்டனாகியும் இளவரசாயுமிருந்தபிள்ளைக்கு நீர்நிரம்பியகாவிரி சூழ்ந்திருக்கும் காவிரிநாட்டைப் பட்டங்கட்டிவைத்து காடாகவிருந்த காஞ்சிமண்டலத்தை இளையபத்தினி நாககன்னிகுமாரனுக்குப் பட்டங்கட்டிவைத்து ஆதொண்டைச் சக்கிரவர்த்தியெனப் பெயருங்கொடுத்து ரத கஜ துரகபதாதிகள் முதலியவைகளெல்லாம் சூழத்தானும் காஞ்சிதேசத்துக்கு உடன்சென்று காஞ்சிபுரத்தை ராஜதானியாக்கி காஞ்சிமண்டலத்தைச் சீர்திருத்தி நாடுநகரங்களாக்கி ஆதொண்டைமண்டலமெனப் பெயரிட்டு ஆளும்படிச்செய்வித்தான். ஆதொண்டைசக்கிரவர்த்தி அரசாட்சிகாலத்தில் பின்னும் காடுகளைவெட்டி நாடுநகரங்களுண்டாக்கி குடிகளைக்கொணர்ந்து நிலங்களைச்சீர்திருத்தி நல்லநீர்வளமிகும்படி ஏரிகால்கள் உண்டுபண்ணிக் குடிவளமிகைபடச்செய்ய முயன்று எல்லாநாட்டினும் இந்நாட்டைச் சிறப்பாக்குவித்து நாடோறும் கொலுவிற்கு வரும்போது முதலில் தேவாலயம், பிர்மாலயம் குடிகளின்க்ஷேமங்களையும் சிரத்தாபத்தியுடனும் அன்புட

னும் விசாரித்துக் குடிகளைக்கொண்டு மருதநிலங்களைத்திருத்தி வரப்பேறப்போட்டு நீரோறக்கட்டி உழவறவுழுது எருதழைபோட்டு பலகலப்புப் பக்குவத்தாழ்ச்சி யில்லாமல் செய்நேர்த்திசெய்து நெல்லேற விளைவித்து ஆறிலொரு கடமைவாங்கியும், தேவாலயங்களில் காலந்தப்பாது பூசைநிவேதனமும் நித்தியோற்சவபிர்ம்மோற்சவ முதலியஅனைத்தையும் வேதாகமவிதிப்படிக்கு பிராம்மணர்களின் பிராதஸ்நானம், நித்தியதற் பணம், அக்கினிஹோத்திரம், வைசுவதமாத்தியாநிகம்,அனுஷ்டானமுதலிய காலக்கடன்கள் அனைத்தும் சிறிதேனும் வழுவாது நடத்தும்படிச்செய்தும்குடிகள்பெறும் ஐந்துபங்குக்கு தருமார்த்தமாகச் செய்யும்விருந்தினர், அதிதி, அப்பியாகதர், தெய்வம், தான்என்னும் தருமமாதி முப்பத்திரண்டும் நடத்தும்படிச்செய்தும் மாதமும்மாரிபெய்யவும் மனுவாதிசுருதிகளின் நியமந்தப்பாது யாவரையும் நடத்தும்படிச்செய்து தன்னுயிரைப்போல் மன்னுயிரையுங்காத்து இரட்சித்து யாவருந்தன்னை தாயைப்போலவெண்ணி அன்புண்டாக ஆதரித்து அரசுசெய்துவந்தான் அக்காலத்தில் இம்மண்டலத்திற்குப் பிறமண்டலங்களிலிருந்து நற்குடிநாற்பத்தெண்ணாயிரம பசுங்குடி பன்னீராயிரம் இந்தஅறுபதினாயிரங் குடிகளைக்கொண்டுவந்து முன்னிருந்த காணியாட்சிககாரரை உட்குடிகளாகவைத்து முழுதும் நிரப்பினான் இவ்வண்ணங் குடியுயர்ந்ததால் அரசன் நன்னீதியால் ஊரூர்கள்தோறும் ஆறுகள்பெருக்கெடுத்து சதாஜீவநதிகளாகமணல்கொழித்து நிர்மலாநந்தர்கள் மனம்போல் பரிசுத்தமாகிய ஜலம்பெருகியோடி நிறைந்துள்ள மடுக்கள், தடாகங்கள், ஏரிகள், கிணறுகள் குட்டைகளெலலாம் செந்தாமரை, வெண்டாமரை, குமுதம், நீலோற்பலம், நெய்தல், கருநெய்தல், செங்கழுநீர் முதலியபுஷ்டங்கள் அலர்ந்து பரிமளம்வீசவும் அவ்வூர்களைச்சுற்றிலும் வாழை, பலா, கமுகு, தெங்கு, மா, மஞ்சள், இஞ்சி, மாதளை, மந்தாரை, சண்பகம், கொன்றை, புன்னைமுதலிய பற்பலதருக்கள் நிறைந்த சோலைகள்தழைக்கவும் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூமுதலிய நந்தவனங்கள் சூழ்ந்து பிரகாசிக்கவும் வீதிகடோறும் அடர்ந்து உயரக்கட்டியிருக்கும் மாவிலைமுதலிய நானாவித மகரதோரணங்கள் ஆடும்விநோதங்களும் வீதிகடோறும் மெழுகிமொக்கிட்ட மங்களகோலங்கள் விளங்கவும் பிராம்மண வீதிகளில் வேதகோஷ்டங்களும்ஓமப்புகைகள் பட்டு யாவருக்கும் ஆயுள்வளரவும் பாரகாவியங்களைவாசிப்பவரும் அதைச்சிரத்தாபத்தியோடு ஆசாரநியமனத்

துடனிருந்து கேட்பவரும் அன்னசத்திரங்களைவைத்து உண்பித்து உபசரிப்பவரும் தருமார்த்தமாகப் பலதானங்களைக் கொடுப்பவரும் ஆலயங்கடோறும் மேளவாத்தியங்களின் ஓசைகள் ஒலிப்பதும் வீடுகளெங்கும் புதுக்கி அலங்கரித்துச் சித்திரித்து மங்களதீபங்கள் விளங்கவும் ரதகஜதுரகபதாதிகள் நெருங்கிய இராஜதானியைச்சூழ்ந்த நாடுகள்யாவும் கோடகோபுர பிராகாரமாடமாளிகைகளும் சர்வலட்சண சாம்பிராச்சியங்களுமுடைய தனதான்ய சம்பத்துடன் கூடிய குடிகளும் நிதம் மனவூக்கத்தோடு சர்வாலங்கார பூஷிதஸ்ரீமான்களாகத் தங்கள்தங்கள் மரபுக்குரிய ஆசார நியமனப்படி அநுஷ்டித்து வாழ்ந்திருந்தார்கள். அக்காலத்தில் இந்தத்தண்டகவனத்தில் இருபத்திநான்கு கோட்டைகளைக் கட்டிக்கொண்டு கொடுங்கோலரசாகவிருந்த குறுநிலமன்னரைவெல்ல நினைந்து அவைகளில்இருபத்துமூன்று கோட்டைகளைப்பிடித்துக்கொண்டு இவ்விருபத்து மூன்றுபேரிடத்தும் கப்பம்பெற்றுக்கொண்டிருந்த புழல்கோட்டத்துள்ள குறும்பவரசன் மீது யுத்தசந்நாகமாகி நால்வகைச்சேனைகளும் அறுவகைப்படைகளும் மந்திரியர், கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாக்கள் படைத்தலைவர், இவுளிமறவர், யானைவீரர்என்னும் எண்வகைத் துணைப் பாகர்களும் சூழஆரவாரங்களுடன் பட்டத்துயானைமீது தொண்டைமான் சக்கிரவர்த்தி செல்லுகையில் முல்லைக்கொடி யானையைத்தடுக்க சக்கிரவர்த்தி தனது உடைவாளால் வெட்டுதலும் அதனடியில் சிவபெருமான் வெட்டுண்டவாளோடு காக்ஷிகொடுத் தருளினமையின் அத்தலம் திருமுல்லைவாயில் எனப்பேர்பெற்றுச் சிவபெருமானுக்கும் வெட்டுத்தாங்கியீசர் எனப்பேருண்டாயிற்று. சிவபெருமான் கிருபையால் அரசன் முன்னின்ற பகைவனும் தன்படைகளுமழிந்து பரதேசம்போய்விட்டார்கள் தொண்டைமான்சக்கிரவர்த்தி சிவனருள்பெற்றுஐம்புலன்களையடக்கி நீதிசெலுத்துவதினால் மனிதர்களுக்குத்துர்ச்சோபம், துர்ப்பயம், துர்மரணம், துர்வியாதி முதலியவைகள் சேராது மாதமும்மாரிபெய்யும் யாகாதிகள்நடக்கும் பலம், தைரியம், ஜெயம், தேஜஸ, நெறி, முறை, நிதானம், தனம், குலம், கோத்திரம், புகழ், சம்பத்து, [illegible]ல்லபம், சற்கதி, யாவரும்பெறும்படி நித்தியகருமங்களைத் தப்பாது நடக்கும்படிக்கும். "தருமநியதிகளைப்பற்றி ஆதியில்பிரமன் பிரமதருமமென்று இலட்சம் அத்தியாயமாகச்செய்தார். அப்பிரமன் முகத்தில் பதினொரு உருத்திரர்கள் தோன்றி அதை உருத்திரதருமமென்று பதினாயிரம் அத்தியாயமாகச்

செய்தார்கள். இந்திரன் அதை ஐயாயிரம் அத்தியாயமாகச்செய்தான். பிரகற்பதி அதை மூவாயிரம் அத்தியாயமாகச்செய்தார். சுக்கிரர் அதை ஆயிரம் அத்தியாயமாகச் செய்தார்" இவ்வகைப்பட்ட தருமசாத்திரங்களையுணர்ந்து பொறுமையுடன் தருமங்களைத்தவறாது நன்னீதியோடு உலகத்தைக்காத்துரட்சித்து வருகையால் பிராம்மணர்கள் சுசி, ஆசாரம், செப, தபு, கரும, தரும அக்கினி, காயத்திரி வழுவின்றிபழியின்றி வேதமோதல், ஓதுவித்தல், தபசிருத்தல், தெய்வம்பேணுதல், ஔபாசனம்புரிதல், அக்கினிசாட்சியாய் மணம்புரிதல் புரிவித்தல், தானமேற்றல், ஈதல், அதிதி அப்பியாகதர்களுக்கு அன்னம் படைத்தல் நீரின்முன்ஜெபமும், நெருப்பின்முன்தபமும், பிராமணர் நடத்தவும் உழவு பசுக்காத்தல் வாணிபஞ்செய்து கோபமின்றி பொறுமையுடனிருந்துஉழுது பயிரிட்டு சந்நாசி தரித்திரன் பிதுரர் பாலர் தேவபக்திஆசாரியபக்தி பெரியாரை பசுவை காத்தலுக்குமாக ஐந்துபங்கு குடிகளுக்குக்கொடுத்து ஆறிலொருகடமைபெற்றும் மற்றும்பிரமசாரி இல்லறம் வானப்ரஸ்தம் சந்யாசம் இந்நான்காசிரமமும் முறையேநடத்தி, படைமாட்சியுடைமை, சிற்றினஞ்சேராமை பெரியாரைத்துணைக்கோடல், தலையாயார்நட்பும்பெற்றும். கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதைநல்காமை, வறியர்க்குச் செய்கூலிகொடாமை, உடையவனல்லான்விற்றல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகடத்தல், நிலவழக்கு, மாதர் ஆடவர்தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது ஒழிபு எனப்பதினெட்டும் இக்ஷுதில யந்த்ரம் போல நியாயக்கடலாகி கபடமைக்கண்டித்து நிஷ்களங்கஸ்படிக மாநஸராகவிருந்து மநுவிஞ்ஞானேசுவரமுறை நெறி வழுவாது சாமபேத தானதண்டமென்னுஞ் சாத்திரப்படி தன்னுயிரைப்போல் மன்னுயிரையும்பாதுகாத்து பூமியுள்ளளவும் ஆதொண்டை மண்டலமெனப் பெயரையடைந்திருக்கவும் ஆதொண்டை சக்ரவர்த்தியெனப் புகழவும் செங்கோல்செலுத்தி வாழ்ந்திருந்து பரலோகமுக்தி சாம்ராச்சியத்தையடைந்தான்.

இச்சரித்திரம்தேவாரத்திருப்பதிகம் திருமுல்லை வாயில்தல மகத்துவத்தும் மூர்த்திமகத்துவத்துஞ் சொல்லும்.

பண்டையோர்நாளிவி லோரோழ்கலிங்கப் பரணிகொண்டு
செண்டையுமேருவிற் றீட்டுவித்தோன்கழற் செம்பியன்செய்
தொண்டைநன்னாடு புரக்கின்றமகோனந்தித் தோன்றலெங்கள்
வண்டையர்கோனங் கருணாகரன்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தனது செண்டாயுதத்தை மகமேருவைத்தனது எல்லைக்கல்லாக்கொண்டு அதிலெழுதிவைத் துலகமுழுவதையுமரசாண்ட வீரகண்டாமணியணிந்த கால்களையுடைய சோழமகாராஜனுக்குச் சேனாதிபதியாய்ச்சென்று நடாத்தும் தண்டத்தலைவனாகிப் படையெடுத்துச் சென்று எழுவகைப்பட்ட கலிங்கதேசத்தைவென்று, அச்சோழமகாராஜனை வீரனாகக்கொண்டு பாடப்பட்ட (ஆயிரங்களிற்றி யானையைப்போர் முகத்துவென்ற வீரனைத் தலைமகனாகக்கொண்டு பாடப்பட்ட பிரபந்தமாகிய) கலிங்கத்துப்பரணியில் தன்னையும் வீரனாகக்கொண்டு பாடப்பெற்று, அச்சோழமகாராஜனால் திருத்தப்பட்டுச் செங்கோன்மை செய்யப்பட்ட தொண்டை மண்டலத்தை யாண்ட தலைவனாகிய நந்தித்தொண்டைமானென்று சொல்லப்பட்ட எமதுவண்டை நகரத்துத்தலைவனாகிய கருணாகரத் தொண்டைமான் வாழ்ந்ததுமித்தொண்டை மண்டலத்திலேயே. (௬௬)

இறைமொழிந்தளவி லெழுகலிங்கமவை
யெறிவனென்று கழறெழுதனன்,
மறைமொழிந்தபடி மரபின்வந்தகுல
திலகன்வண்டை நகரரசனே.

என்பதனாலுணர்க.

தொண்டைமண்டலாதீனம்.

ஞானப்பிரகாசசுவாமிகள்.

வானப்ரகாச புகழ்க்ருஷ்ணராயற்கு மஞ்சரிப்பா
கானப்ரகாசப் புகழாய்ந்துகச்சிக் கலம்பகஞ்செய்
ஞானப்ரகாச குருராயன்வாழ்ந்து நலஞ்சிறந்த
மானப்ரகாச முடையோர்வளர்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கொடைமிகுதியால் தேவருலகத்தும் விளங்குகின்ற புகழையுடையராகி யிம்மண்டலத்தையாண்ட கிருட்டினதேவர் பேரில் மஞ்சரிப்பாமாலையும்; இசைப்பாட்டையும், பிரகாசிக்கின்ற ஏகம்பரது புகழையுமாய்ந்து கச்சிக்கலம்பகமுஞ் செய்தருளிய ஞானப்பிரகாச குருசுவாமிகள் எழுந்தருளியிருந்ததும், அவரது சீடர்களாகிச் செல்வமுதலிய வளஞ்சிறந்து விளங்கிய வேளாண்மரபினர் அபிவிருத்தி

யடைகின்ற இத்தொண்டை மண்டலத்திலேயே. (௪௦)

## கோட்டச்சிறப்பு.

காஞ்சிபுரநகரின்கண் காமாட்சியம்மன் கோயிலுக்கு வடக்கிலிருக்கிற, இராஜ வீதியில் வேளாளருக்குப் பெருநாட்டு மடமென்று சொல்லும் ஓர் மடம் உண்டு; அதில் நத்தங்களில் வேளாளருக்கு, ஜாதி வழக்குண்டாகில் நத்தத்தார் கூடிப்பேசுகிறது.—அல்லது, நாட்டாரிடத்திலும், நாட்டார் கோட்டத்தாரிடத்திலும், கோட்டத்தார் அப்பெருநாட்டு மடத்திற்சேர்ந்து நாட்டாரையும், நத்தத்தாரையும வைத்துக்கொண்டு தங்களுக்கிருக்கிற எல்லா காரியங்களைப்பற்றியும் ஏற்பாடு செய்துகொள்ளுகிறது.

கோட்டமோ ரிருபானன்கு கூறுநா டெழுபத்தொன்பான்
றேட்டெழி லாயிரத்துந் தொளாயிர நத்தமாகும்
நாட்டெழு கோத்திரங்கள் சகத்திரம் பன்னிரண்டாம்
நாட்டிலவே ளாளர்தம்மை நவின்றிட வடங்கா மகம.

### மகாநாட்டுச்சிறப்பு.

மந்திரமனையதின்கட் டோண் மணிமுடி வளவன்சேரன்
சுந்தரபாண்டியன்றன் சுடர்மணிமகுடஞ்சூட
அந்தணர்குலமு மெல்லா வறங்களும்விளங்கவந்த
இந்திரனுலக்கம்போ லிருந்தது பெரியநாடே.

[இதன்பொழிப்பு]

அரசர் மகுடம் புனைதற்கும், அந்தணரும் அறங்களும் விளங்குவதற்கும், காரணபூதராகிய வேளாண் வாழ்க்கையர் காஞ்சிபுரத்திலிருக்கும் அப்பெருநாட்டு மடத்தில் இருபத்துநான்குகோட்டத்து வேளாளர் ஓர்காலத்தில் கூடியிருந்தது இந்திரனுலக்கம்போ லிருந்தது என்றார் கம்பநாட்டாழ்வார்.

### எல்லாவறங்களென்பது.

(தலங்கடோறும் உச்சிகாலக் கட்டளைகளும் நந்தனவனங்களும் மடங்களும் மடங்களில் அன்னதான முதலியனவும் ஆலயங்களில் பலதிருப்பணிகளும் அபிஷேகம் பூஜை நைவேத்திய முதலிய உற்சவங்களுமாம்) கிருஷ்ணராயர் மந்திரியாகிய * அம்பி அறம்வளர்த்தான் முதலியார் தமதுகாலத்தில் வேளாள கோத்திரந்

---

* அம்பி நூரர்

தில் சேர்ந்த சைவபண்டாரமென்னும் ஒருவனை அம்மடத்தில்வைத்து மேழி கலப்பை உண்டுபண்ணி அதில்வேளாளர் பெருமிதத்தைத்தவணை ந்துகொடுத்ததுமன்றி வேளாளரிடத்தில் உரிமைவாங்கி ஜீவிக்கும்படி பட்டயமுஞ்செய்து கொடுக்கப்பெற்று இதுகாறும் ஜீவித்துவருகின்ற னர்: அந்தக் கிருட்டிணராயர் இவ்வுலகையாண்டு, ஏகாம்பரநாதர்கோ வில்தெற்குவாயிற் பெரியகோபுரங்கட்டுவித்தனர். இவர்பேரால்தமிழ் மஞ்சரியென்னும் பிரபந்தத்தையும், கச்சிக்கலம்பகத்தையும் பாடியரு ளிய "ஞானப்பிரகாச குருசுவாமிகளது" மகிமையறியாத பிராமண ர்கள் பொறாமைகொண்டு, அவரைமயக்கி வசப்படுத்தும்படி அதி ரூபமுள்ள ஒருதாசியைப் பொருள்கொடுத்தனுப்ப, அவள்அவரிடத்துச் சென்று, தன்னை மயங்கும்படி மயங்கச் செய்ய வெத்தனிக்கையில் அக்குருராயரதனை யுணர்ந்து, நீ விரும்பிவந்த திதற்குத்தானே? இத னைக்கொண்டுபோவென்று கோசத்தையறுத்துக் கொடுத்துவிட்டனர் அத்தாசி அதனைக்கொண்டுபோய்ப் பார்ப்பாரிடத்துக் கொடுக்க, அப் பார்ப்பார் பார்த்துச் சுவாமிகளிறந்ததாகக்கருதி மறுநாள் சருவதீர் த்தத்திற்கு ஸ்நானஞ் செய்யப்போகும்போது, குருசுவாமி அதன் முன்னரே சென்று ஸ்நானஞ்செய்து பூசை செய்துகொண்டிரு க்கக்கண்ட அவ்வேதியர் அதிபீதியும் அதிவியப்பும் அதிசிரத்தையு ங்கொண்டு, அக்குருசுவாமியைப்பணிந்து பூசிக்க; ஏகம்பராலயத்துத் தென்கோபுரச்சந்நிதிவீதியில் கீழ்ப்பாரிசத்தில் மகிமைதங்கிய திருவம் பலமுடையார் திருக்கோவில்கொண்டு வீற்றிருந்தருளுகின்ற மடால யத்தில் மடாதிபதியாய், யாவரும் வணங்கித் துதிக்கப்பெற்று மான மேபொருளாகக் கொண்ட வேளாளர்கட்குக் குல குருவாகிவிளங்கி னர்எனக்கூறுவர்.

நாடாளகோட்ட மிருபத்துநான்கினு நற்றண்டகத்
தாடாதசெக்கு மனையாதவம்மியு மாகிவளர்
பீடாதிபீடத் திருக்காமக்கோட்டம் பிறங்குகச்சி
மாடாதிபரொனுங் காராளருந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தண்டகனூடு என்றுசொல்லப்பட்டு அதனுட்பகுக்கப்பட்ட இரு பத்து நான்கு கோட்டங்களிலும் காரையாள் வேராகிய வேளாள ரிருப்பதும்; அக்கோட்டங்களுள், ஆட்டாமலே யெள்ளிலெண்ணெ ய்பிரிப்பதாகிய செக்கினையுங் குழவிபிடித் தரைக்காமலே தன்னி

டைப்பட்டபொருளை யளிப்பதாகிய வம்மியினையுமுடையதாய்ச் செல்வம் வளர்கின்ற காஞ்சிபுரத்தில் பெருமைபொருந்திய ஆதிபீடமாகிய காமக்கோட்டம்போலப் பிரகாசிக்கின்றது மவ்வேளாண்மரபினர்க்கே யுரியதுமாகிய திருமடாலயத்திலே வேளாளரு மம்மரபினர்க்குக் குலகுருவுமாகி விளங்கும் ஸ்ரீஞானப்பிரகாச குருசுவாமிகளெழுந்தருளி யிருப்பதுமாகிய சிறப்பினையுடையது தொண்டைமண்டலம். (சக)

குஞ்சரமா முகன்குகன்கா மாட்சியொடுங் கம்பர்
குலவுகச்சியாதீனக் கோட்டமெண் மூன்றினுக்கும்
விஞ்சு-புகழ் வேளாளர் தங்கள்குல குருவாய்
விளங்குசச்சி தானந்த மெய்ப்பயனை யுணர்த்தி
அஞ்சுபவக் கடலில்வினைச் சுழலதனி லகப்பட்
டலக்கணுறு தடியோமை யருட்கருணைநோக்கார்
சஞ்சிதமா திகணீக்கித் தன்மயமே யாக்குந்
தனிஞானப்பிரகாசச் சாமிகளைப்பணிவாம்.

அழகுறுமே ழிக்கொடியார்தொண்டை மண்டலத்தா
ரருண்ஞானப் பிரகாசரடியார் கோட்டம்
புழல்புலியூ ரீக்காடு மணவூர்செங்காடு
புகழ்பையூ ரெயிற்றுமல் புனலூற்றுக்காடு
விழைவுறுக ளத்தூர்செம்பூராமூ ரீதூர்
வெண்குன்றம் பல்குன்ற மிளங்காடு படுவூர்
தழைசோலைக் காலியூர் சிறுகாரை கடிகை
சந்திரிகை குன்றபத்திரம் வேங்கடம் வேலூரே.

### வேறு.

நாடுபுகழுந்தொண்டைமகா நாட்டார்கோட்ட நாலாறு
நாடுமெழுபத்தொன்பதவர் நத்தம்பத்தொன் பதுநூறுங்
கூடிப்பன்னீராயிரங்கோத் திரத்தார்கொன்றை சூடியருட்
கூடுஞானப்பிரகாச குருதாள்போற்றிப் பணிவோமே

### வரலாறு.

பண்டைக்காலத்தில் ஒருமுறை பாண்டிநாட்டில் பன்னீராண்டளவும் மழைபெய்யாமையால் உக்கிரபாண்டியன் பொதியமலையில்வந்துபடிந்த மேகங்களைப்பிடித்துச் சிறையிட்டனன் அதுதெரிந்து தேவேந்திரன் அம்மேகங்களை மீட்டுக்கொண்டு போகும்பொருட்டுப்

பாண்டியனோ டெதிர்த்துப் போர்புரிந்து தோல்வியடைந்துபோய்ப் பாண்டியனுக்குச் சமாதான * முடங்கலனுப்பியும், பாண்டியனம் மேகங்களைச் சிறைவிடாமையால்; அவ்விந்திரனது வேண்டுகோளால், வேளாளர்தாம் அம்மேகங்களுக்காகப் பாண்டியனிடத்துப்பிணையிருந்து மேகங்களைச் சிறைவிடுவித்து உலகத்துமழை பெய்வித்தனர்: இதனால்வேளாளர் வெள்ளையானையும் வெண்குடையும் மேழிப்பதாகையும் செங்குவளைமலர் மாலையும் பூமிபாலர் என்னுஞ் சிறப்புப் பேரும் இந்திரன் நன்குமதித்து வரிசையாகக் கொடுக்கப்பெற்றனர்.

இதுபற்றியே வேளாளர்கட்குக் "காராளர், கார்காத்தார், பூபாலர்" எனப்பேர் வழங்கினவென்க.

திருவிளையாடற்புராணம் இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம்.

இட்டவன் சிறையைநீக்கி யெழிலியை விடாதுமாறு
பட்டநிந்தையனேயாகப் பாகசாதனனுக் கென்றும்
மட்டவிழ்ந்தொழுகுநிம்ப மாலிகை மார்பினானும்.
ஒட்டவனொருவேளாள னன்பிணை யென்றுதாழ்ந்தான்

இடுக்கண்வந் துயிர்க்குமுற்ற மெய்தினும் வாய்மைகாத்து
வடுக்களைந்தொழுகு வேளாண்மரபினா னுரையையாத்த
எடுத்துரை மறைபோற்சூழ்ந்து சிறைக்களத் திட்டயாப்பு
விடுத்தனன் பகடுபோலமீண்டன மேகமெல்லாம்.

வேளாளர் உற்பவமுங் கங்கை குலமென்பதும்.

மந்தாகினியிற் றிரிவேணிசங்கத்தின் மாண்டொருவன்
மந்தாகினியுற்ற பாதாளம்புக்கு வணங்கிநின்று
மந்தாகினிக்கு மகவாகக்கேட்ட வரங்கொடுப்ப
மந்தாகினிக்கு மரபானதுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கங்காநதியிலே யமுனை சரஸ்வதி நதிகள்வந்துகலக்கின்ற திரிவேணிசங்கத்தானத்தில் ஓர்வேளாளன் வீழ்ந்து ஆழத்தில் அமிழ்ந்திப் பாதாளத்தில் கங்கையுறைவிடத்தைச்சேர்ந்து கங்கையைத்துதி செய்யக் கங்கைகாட்சிகொடுத்துத் தன்புத்திரனென்கிற அபிமான

* முடங்கல்-ஓலை

த்தைப்பாராட்டி 'அவன்வேண்டியவரங்களைக்' கொடுத்தனுப்பப் பெற்றனன் இக்கங்காகுலத்தினர்க்குரியது இத்தொண்டைமண்டலம். (௯௨)

கங்கைபுராணம் சருக்கங்கள் ஆறில் வேளாளர் உற்பவச்சருக்கம்.

மஹாதேவ சிரோகங்கா மோட்சார்த்தி சகராந்தகா
பூமிபாலன கர்த்தவ்யம் கங்காபுத்ராச்ச கர்மண
வமசோத்பவந்து புத்ராணும் விஷ்ணுபாத ஜலோத்பவம்
கங்காபுத்ர விவாஹேச கல்யாணம் மங்களம் சுபம்.

మహాదేవశిరోగంగా మోక్షార్థి సగరాంతగా
భూమిపాలన కర్తవ్యంగంగా పుత్రాశ్చకర్మణా
వంశోద్భవంతుపుత్రాణాం విష్ణుపాదజలోద్భవం
గంగాపుత్రవివాహేచ కల్యాణం మంగళంశుభం.

வரலாறு:

சிவபிரானுடைய ஜடாமகுடத்தில் விளங்குங்கங்கைக்கு சிவகடாட்சத்தால் வேளாளர் உற்பத்தியானார்கள் அப்பிள்ளைகளுக்கு விஷ்ணுவின் பாதகங்கையிலுர்பவித்த பெண்களைப் பரமசிவத்தின் ஆஞ்ஞைப்படிக்கு தேவர்கள் எல்லாரும் கூடி விவாகஞ்செய்வித்துப் பூலோகத்தில் வேளாண்மைசெய்து ஜீவராசிகள் அனைத்தையும் இரட்சிக்கும்படி ஆசீர்வதித்து அவர்களுக்கு வேளாளரெனவும் பூபாலரெனவும் கங்கைகுலரெனவும் பெயருங் கொடுத்தனுப்பப் பெற்று அவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் பாதங்களிற் பணிந்தபோது அவர்களை ஆசீர்வதித்துத் தங்கள் தங்கள் பெயரை அவரவர்கள் கோத்திரமாக அனுஷ்டிக்கும்படிக்கு வரங்கொடுத்தார்கள். பின்னும் போதாயன ரிஷியைப்பணிந்துநிற்க அவர் தம்மாற்செய்த சாஸ்திரங்களை அநுஷ்டித்து நடக்கும்படி இவர்களுக்கு அநுக்கிரகித்தார். அதனால் போதாயனசூத்திரமும் உடையவர்களாகவும் பெற்றார்கள் இவ்வண்ணம் குல கோத்திர சூத்திரமும்பெற்று ஈசுவரன் கடாட்சித்த விருஷபத்தையும் இயமன்கடாவையும் இந்திரன் காமதேனுவின் குலத்தையும் கொடுக்கப்பெற்று பூலோகத்தில்வந்து சேர்ந்து பூமியைத்திருத்தி வேளாண்மைசெய்து சகல ஜீவராசிகளையும் இரட்சித்து வாழ்ந்திருந்தார்கள் இவ்வேளாண்மையைப்பற்றி இச்சதகத்தின் கொண்டலைகிகர்க்கு) மென்னூர் தெய்வ வணக்கமாகிய முதற்செய்

யுனின் உரையாற்காண்க. பின்னுங்கைலாயத்தில் பரமசிவத் தையாரா திக்கும் பஞ்சமுகோத்பவ பஞ்சரிஷிகோத்திர சிவாசாரியர்கள் வம் சஸ்தர்களால் வேதத்தினுஞ்சிறந்த இருபத்தெட்டு ஆகமங்களை உண ர்ந்து சிவதீட்சைபெற்றதால் அவர்களைத்தங்களுக்கு ஆசாரியராகவும் பெற்றார்கள். வேதத்தினும் ஆகமஞ்சிறந்ததென்பதற்கு (நான்குவே தங்கள் அண்டத்திலுள்ள எல்லாசராசரங்களின் இயல்பையெல்லாம் பற்றிச்சொல்லும் முதன்மையான தர்மநீதிநூல்களாயிருக்கின்றன) ஆக மமோ (பற்பலதேவதைகளை பிம்பங்களில் ஜீவபிரதிட்டை செய்யவும் அதைசிவாசாரியர்கள் ஸம்யோசித்து ஆரோகணஞ்செய்யவுமுள்ளது) இம்மகிமையுள்ளசக்தி வேதங்களுக்கில்லை இப்படிப்பட்ட ஆகமங் களைக்கொண்டு தங்களுக்குபதேசிக்கப்பெற்று சிவபிரானைவேளாளர் வணங்கப்பெற்றமையால் வேதத்தினும் ஆகமஞ்சிறந்ததாயிற்று. ஆத லின் சிவனைப்பூஜிக்கும் சிவாசாரியர்களின் சிஷர்களே சைவவேளா ளரா யிருக்கின்றார்கள் (சைவமென்னுஞ்சொற்கு சிவனைவணங்குவோ ரென்றுரைப்பர்) இதனைப்பின்வரும் (காவியமாகிய காமீகங்கண்டு) எ ன்னும் பாடலில் வருவனவற்றாற்காண்க.

## உலகோற்பத்திவரலாறு.

ஆயிர முகம் ஆயிரம் கண் ஆயிரம் கை ஆயிரம் கால் உள்ள வேதபுருஷன் முகத்தில் பிராமணன், பாஹுவில் க்ஷத்திரியன் துடையில் வைசியன், பாதத்தில் சூத்திரன், மனதில் சந்திரன், கண் ணில் சூரியன், இப்படி உற்பவமென்று புருஷ சூக்தத்தில் சொல்லப்ப ட்டிருக்கிறது. பிரமதேவன்முகத்தில் பிராமணர், தோளில் க்ஷத்தி ரியர், துடையில்வைசியர், பாதத்தில் சூத்திரர், பிறந்தன ரென்றும். காசிபராலும் தக்ஷபிரஜாபதியாலும் பிராணிகள் உற்பத்தியென்றும். சைவத்தில் சிவசக்தி சன்மீளனத்தா லுற்பத்தியென்றும். விஷ்ணுபு ராணம் அரங்கமான்மிய முதலியநூல்களில் வேறுவிதமான உற்பத்தி யும் சிலர்பஞ்சபூதத்தின் கூறென்றும். சிலர் அக்கினியிலுற்பத்தியெ ன்றும். சமணர் இவைகளுக்கெல்லாம் மாறாகஉற்பவமென்றும். சாக்தேயத்தில் சக்திபாதத்திலுற்பவமென்றும். மஹமதியர் கடவுள் மண்ணினால்பாவைசெய்து வாயினாலூதி பிராணிகளை உண்டு பண்ணி னரென்றும், கிறிஸ்தவர் கடவுள் ஆறுநாள்வரையில் உலகசிருஷ்டிசெ ய்து முடித்தாரென்றும், சிலர் பிறப்பு இறப்பு உண்டென்றும். சிலர் பிறப்பேஇல்லை இருக்கிறவரையில் இன்பதுன்பமே அனுபவிக்கும்

சுவர்க்கநரகமென்றும். நிர்வேதிகள்பிறப்பிறப்பு சுபாவம் வேறொன்று மில்லையென்றும். அத்வைதிகள் பரப்பிர்ம்ம சொருபமே ஜீவாத்மாக்களென்றும், உபநிஷத்து யோகிகள் யோகமே பெரிதென்றும் பலவாறாகக்கூறப்பட்டிருக்கின்றன, அப்படிக்கூறியவைகளில் உயர்ந்தஜாதியார் தாழ்ந்தஜாதியிலும், தாழ்ந்தஜாதியார் உயர்ந்தஜாதியிலும், கன்னிகைகள் சுமங்கலிகள் கைம்பெண்கள் பரபுருஷரைப்புணர்ந்து பிறந்தபிள்ளைகள் அநுலோமன், விலோமன், பிரதிலோமன், கானீனன், குண்டகன், கோளகன், முதற் பலஜாதிகள் உண்டென்றும், நிகண்டு திவாகரமுதலியநூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. இச்சாதிப்பிரிவுகள் பிரத்தியக்ஷ காக்ஷிப்பிராமணத்தாலில்லை பார்ப்பார் பிறக்கும்போது சூத்திரர், பின்பு கருமத்தால் பிரம்மகியானமுண்டாகிப் பிராமணரென்றும், அரசர் உழிஞிபட்டணத்தில்தூர்ஜாதியாரென்றும், வக்குவமஹாரிஷி யாகஞ்செய்து அந்த யாகாக்கினியில் - ௬000 -பேர்பிறந்து சுப்பிரமணியரை யுபாசித்து ... திரனிடத்தில் இரத்தினங்களைப்பெற்று வியாபாரம்செய்வந்தனரென்றும், சொல்லப்பட்டிருக்கின்றன. பிர்ம்மகியானம் யாவரிடத்தும் உண்டென்பது வேதத்தும் கபிலரகவல் முதலியநூல்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவனியை ஆண்டவர் யாவராகுலும் அரசரொன்றே வழங்குகின்றது. திருஷ்டாந்தரம்.

உலகமனைத்தினையும் படைத்தகாலத்தில் முன்புநீரையுண்டாக்கி அதனைக்காக்கும்பொருட்டு பூதங்களைப்படைத்து நீங்கள் இதனைக்காக்கக்கடவதென்றார் அவர்களுள் சிலர் பசியடைந்தமையால் ஜக்ஷாம (உண்போம்) என்றார். சிலர் பசியானமையால் ரக்ஷாம (காப்போம) என்றார். ஜக்ஷாம என்பவர் யக்ஷர், தேவர், ரக்ஷாம என்பவர் ராக்ஷசர் என்றுபெயரிடப்பட்டு இப்படி இரண்டுகூட்டத்தார் உண்டானதாக இராமாயணத்திலும். பிரமாண்டபுராணத்தில் பிரமனுடன் இலட்சுமியும், விஷ்ணுவுடன் பார்வதியும், சிவனுடன் சரஸ்சுவதியும், பிறந்து விஷ்ணு இலட்மியையும், பிரமன் சரசுவதியையும், சிவன் பார்வதியையும் விவாகித்து உலகவிருத்திசெய்தாரென்றும். சத்தியில் பிரமன் விஷ்ணு, ருத்திரன் தோன்றி, சிருட்டி, திதி, சம்மாரகிருத்தியங்களை நடத்தினரென்றும். சிவன் பிரம விஷ்ணுக்களைப்படைத்து படைத்தல் காத்தலை கொடுத்தாரென்று சிவபுராணத்திலும், விஷ்ணு பிரம ருத்திரர்களைப் படைத்தாரென்று விஷ்ணுபுராணத்திலும். பிரம, விஷ்ணு

ருத்திரன் இவர்கள் முறையே சிருஷ்டியாதிமுத்தொழில்களை யுடை
யவனென்று சிலநூல்களிலும் கூறுகின்றன. சூத்திர அங்கங்களாக
சாஸ்திரங்களில் கூறியபடி கொட்டல், உள்தல், ஏவல்செய்து அடி
மைகளாகிப்பலஜாதிகள் வழங்கிவருவனவன்றி கோத்ரசூத்ரமில்லா
மல் அவர்களில் குண்டகன், கோளகன் முதலியபேதங்கள் இருந்தா
லும் எந்தஜாதியிலிருந்தும் வேருகப்பிரிந்திருக்கவில்லை. அவர்கள் யா
வருமே சூத்திரரென்றுசொல்லுகிறார்கள். சண்டாளர் சிவாபராதஞ்.
செய்து சாபகிரஸ்தாளாகி கடைஜாதியாயினரென்று சொல்லுகி
றார்கள். பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நான்குவருண
பேதம், விந்தியபர்வதத்திற்கு வடக்கிலும், ஹிமாசலத்திற்குத் தெற்
கிலும், உள்ள ஆரியவர்த்தம் என்று சொல்லப்பட்ட மத்தியதேசத்
தில் ஆரியரால் வழங்கி வந்ததேதவிர. விந்தியபர்வதத்திற்குத் தெற்
கிலுள்ள நாடுகளிலிருக்கும் தெலுங்கர் திராவிடர், கன்னடர், கேர
ளர், [illegible] ராசகுப்பொருந்தினதல்ல. இதற்குப் பிராமணராலேயே
எழுதப்பட்ட பூர்வ சாஸ்திரங்களிலும் இதிகாசங்களிலும் அநேக பிர
மாணங்கள் உண்டு. மநுதர்மசாஸ்திரம் பத்தாம்அத்தியாயம் ௪௩-௪௪
ம் சுலோகங்களில்,"பௌண்டரகர் ஒட்டியர் திராவிடர் காம்போஜர்
யவனர் சகர் பரதர் பல்லவர் சீனர் கிராதர் தாதர் காசர் என்னப்பட்ட
ஜாதியார் பிராமண ஆசாரங்கள் அநுசரியாது யுத்தப்பயிற்சியுள்ள
வராயிருக்கிறார்கள்" என்று கூறியிருக்கின்றன. மேலும் மஹாபா
ரதம் அநுசாசனீகபர்வத்தில் "சகர் யவனர் காம்போஜர் திராவிடர்
கலிந்தர் புலிந்தர் உசிநர் கோலிசர்ப்பர் மஹிஷகர் என்னும் யுத்தப்பயி
ற்சியுள்ள ஜாதியார் பிராமணரைப் பார்க்காததினால் வர்ணாசிரம்
இல்லாதிருக்கிறார்கள்" என்று கூறியிருக்கின்றது. இன்னும் உதார
ணம் கூறிற்பெருகும் இதற்கு இணங்கவே, ஆதி காலத்துத் தமி
ழ்ச் சங்கநூல்களில் கங்கைக்கரையில் உள்ளவர்களை ஆரியர்என்றும்,
விந்தியபர்வதத்திற்குத் தெற்கில் உள்ளவர்களை வடுகர் தமிழர் கரு
நடர் இரட்டர்என்றும் குறித்ததுமன்றி, ஆரியபாஷையை வடமொழி
என்றும், தமிழைத் தென்மொழி என்றும், வழங்கிவந்திருக்கின்றன
இன்னும் க்ஷத்திரிய சேனைகளை யுத்தத்தில்வென்று கைப்படுத்தினதி
னால் "ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன்" என்றும், கங்கைக்கரைக்
குச்சென்று க்ஷத்திரிய மன்னரை ஜெயித்ததனால் "ஆரியமன்னர்
அடிபடுத்த வானவரப்பன்" என்றும் பலமன்னர் படைத்தொ
ழில் கூறியிருக்கின்றமையால், அக்காலத்து ஆரியரும் தமிழரும

ஒருவர்க்கொருவர் விரோதிகளா யிருந்தார்களேதவிர ஆரிய வர்ணு சாரங்களைத் தமிழர் அநுசரிக்கவில்லை என்று விளங்குகின்றது. திராவிடர் நான்கு வருணத்தில் உட்படாதவர்களானால் இவர்களுக்குள்ளே குலங்கள் பிரிக்கவில்லையோவெனில், உண்டு : இவர் குலங்கள் சங்கச்செய்யுள்களில் விரிவாய்கூறப்பட்டிருக்கின்றன. குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்து வகை நிலங்களிலே தமிழர் குடியிருந்ததாகவும், குறவர், மறவர், ஆயர், உழவர், பரதவர், என ஐந்து வகைக் குலங்களாய்ப் பிரிந்திருந்ததும் அச் செய்யுள்களால் நன்கு விளங்கும். குறவரில் உயர்ந்தோன் பொருப்பன், மலையன் என்றும், மறவரில் உயர்ந்தோன் விடலை, காளை என்றும், ஆயரில் உயர்ந்தோன் குறும்பன் என்றும், உழவரில் உயர்ந்தோன் ஊரன், கிழவன் என்றும், பரதரில் உயர்ந்தோன் சேர்ப்பன் என்றும் பெயர் வழங்கிவந்ததாக அகத்திணைச் செய்யுள்களிலும், அகத்திணை இலக்கணங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. உழவரில் உயர்ந்தோராய்க் கிழவர் என்னும் பட்டம் பெற்றிருந்தவரோ வேளாளர். கரிகால சோழன் குறும்ப வரசர்களை ஜெயித்துத் தொண்டைமண்டலம் ஏற்படுத்தி இருபத்து நான்கு கோட்டம் வகுத்து, குடித்தலைவராய் ஸ்தாபித்த சேக்கிழார், புரிசைக்கிழார், குளப்பாக்*கிழார், முதலானவரும் வேளாளர்தாம். இவர்கள் சந்ததியே இந்நாளிலும் தொண்டைமண்டலத்துவேளாளமுதலியார் எனப்பிரசித்தமாயிருக்கின்றார்கள். இது நிற்கஅகஸ்தியருடையமுதன்மாணுக்கரும்,ஜமதக்கினி மஹாரிஷிபுத்திரருமாகிய தொல்காப்பியரால்இயற்றப்பட்டுஇரண்டாம் சங்கத்திலே பாண்டியன் மாகீர்த்தியுடைய சபையிலே அரங்கேறப்பெற்ற தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தில் மரபியல் அதிகாரத்தில் தமிழ்நாட்டு அக்காலத்திருந்த குலங்கள் கூறுமிடத்து பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரவென்று கூறாது, பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர் என்று வகுத்து, வேளாளருக்கு உழு தொழிலே உரித்தென்றும், வேந்தனால் குடை, கொடி, சாமரம் பெற்று வேந்தர்களுக்குத் தூது போதலும், படைத்தொழில் நடத்தலும்,† வேந்தற்குப் பெண் கொடுத்தலும் உண்டென்று சொல்லியிருக்கிறது. க்ஷத்திரியவென்று தமிழ

---

* கிழார்=பெரியோர்.

† வேந்தற்குப் பெண் கொடுத்தார் என்பது, அரசாண்டவேளாளருக்குப் பெண் கொடுத்ததாக, கொங்குவேளாண் மாக்கதை என்னும்பிரபந்தத் திற்கூறுகின்றது.

ர்க்குள்ளே குலம் கூறுகததனுலும், அரசர்தாமே ஒருகுலம் ஆகமாட்டா ராதலாலும்,வேளாளரே தமிழ்நாட்டில்படைத்தலை வராயிருந்தார்கள் என்பது தோன்றுகின்றது அப்படியிருந்தும் தொல்காப்பியர்முதலா கப்பிற்காலத்து தக்ஷண தேசத்துவந்து குடியேறியபிராமணர் வட தேசத்தில் தாங்கள் அனுசரித்து வந்த வருணுசாரங்களைத் தென்றேய த்தில் பொருந்தாவிடத்தும் பொருத்தமுயன்றனர் வேளாளரில் உயர் ந்தவரை க்ஷத்திரியர் என்றும் மற்றையோரைச் சூத்திரர் என்று ம் வகுத்தார்கள் இம்முறைப்படி கடைச்சங்கத்திற்கு ஏறக்குறைய ஆயிரம்வருடம் பின்னிட்ட அனுபாய சோழசக்கிரவர்த்தி காலத்திலு ம் அவ்வரசர்க்குமந்திரியாயிருந்த சேக்கிழார் இயற்றிய பெரியபுரா ணத்தில் வேளாளரைச் சூத்திரர் என்றுசொல்லி யிருக்கிறார் இவர்ம ந்திரியாயிருந்தாலும் ஆரியர்க்குடன்பட்ட அரசர்க்குப் பந்தப்பட்ட வ ராதலாலும் அவ்வாறு கூறினர் அந்நூலிலேயே வேளாளர் அரசருடை ய படைத்தலைவராய்ச் சேநாதிபதி பட்டம் பெற்றுப் புறத்தேசம் செ ன்று அத்தேசம் கைப்படுத்தின தாகவும் மந்திரிதந்திரிகளாய் அதிகார ம் நடத்திவந்ததாகவும் கூறியிருக்கின்றார் இதனல் அநுபாய சோழ ன் காலத்திலும் தமிழ்நாட்டில் க்ஷத்திரியகுலம் வேறே இல்லாமலி ருக்க வேளாளகுலத்தாரை சூத்திரகுலத்தார் என்று வகுத்தது உண் மைக்கு அதிகவிரோதமென்றும் ஸ்பஷ்டமாய் விளங்குகின்றது.

சீரொன்றுதேவர் முதலாதலாற்றில்லை வாழ்முதலி
யாரொன்றுநாமம் படைத்ததுபோன்மற் றவருமந்தப் [வோ
பேரொன்றுபெற்றது வேளாண்முதன்மையைப் பெற்றல்ல
வாரொன்றாபூண்முலை யாயெளிதோதொண்டை மண்டல
[மே.

[இதன்பொழிப்பு]

இரவிக்கையும் ஆபரணங்களையு மணிந்த தனங்களையுடைய கல் விமாதே! தில்லைவாணராகிய நடேசர் சிறப்புப்பெற்ற திருமால் பிர மன், முதலியதேவர்க்கெல்லாந்தலைவராயிருத்தலால், "தில்லைவாழ்மு தலியார்" எனப்பேர் பெற்றமைபோல, வேளாண்மரபினர் வேளாண் மைசெய்து உபகாரஞ்செய்யுந்தன்மையில் மற்றையெல்லாக்குலத்தா ரினும் முதன்மை பெற்றமையால் "முதலியார்" எனப்பேர் பெற்ற னர் இவ்வேளாளரையுடைய தொண்டைமண்டலம் எளியதோ ? வலி யதோ ? நீசொல்வாயாக. (சுரு)

(க) இளங்கோக்கள். } இவ்விரண்டனுள் முதலாவது நிலம்
(உ) மன்னர்பின்னர். } பொழுது இரண்டிற்குந் தலைமைபெற்ற அரசர்போலாது நிலமென்பதொன்றற்கே தலைமைபெற்றுள்ளாராதலின், இவர்கள் இளங்கோக்கள் என்பதாம்.

(ரூ) இப்பர். } யாவர்க்கும் இம்மைப்பயனுவோராதல்பற்றி
(ச) எட்டியர். } யிவர்கருச்சிறப்புப்பட்டப் பெயராயிற்று.

(ரு) காராளர். கார்என்றது மழைக்கும் ஓர் பருவத்திற்கும் நீரிற்கும் பெயராதலால் இநிலை யாள்வோரென்பதாம்.

(சா) வேளாளர் கொடைவல்லோர் என்றது வேளாண்மை-கொடை இக்கொடைக்குக்காரணம் உழவும் வேளாண்மையென்பதே.

இவைகளை நிகண்டு திவாகரங்களிற்காணலாம் இஃதன்றியும் தேசபேதத்தால் ஆங்காங்கு பட்டப்பெயர் பேதப்பட்டுவழங்குகின்றன இவர்களுக்குச்சிறந்தது முதலியார், என்பதேயாம்.

அரசருக்கு வேளாளர் முடிசூட்டுவோ ரென்பது.

வெல்லாமல்வென்றுநற் சந்தனக்காட்டத்தின் மேலிருந்து
நல்லாறைநந்திக் கலம்பகங்கேட்டபி னற்றுணைக்குக்
கொல்லாபுரிச்சந் திரன்முடிசூட்டக் குடைகவித்து [மே.
மல்லார்புரித்தொண்டை மானனதுந்தொண்டை மண்டல

[இதன்பொழிப்பு]

நல்ல ஆறையென்னும் ஊரிலரசாண்டிருந்த நந்தித்தொண்டைமான் தன்சகோதரனுல் போரிலன்றித் தமிழ்க்கலம்பகச் செய்யுள் பாடி வெல்லப்பட்டு, சந்தனக்கட்டை மீதிருந்து அக்கலம்பகத்தைக்கேட்டுப் பூதவுடம்பைவிட்டுப் புகழுடம்பிற் பிரவேசித்தபின்பு, அச்சகோதரன் கொல்லாபுரியில்வாழ்ந்த சந்திரனென்னும் ஓர் வேளாளனுல் முடிசூட்டப்பெற்று, முத்துவட்டக்குடைகவித்து, பலம்பொருந்திய அவ்வாறைநகரிலிருந் தரசாண்டு, தொண்டைமானெனப்பேர்பெற்றது மித்தொண்டை மணடலத்திலேயே. (சச)

வேளாளர் மற்றை எல்லாவருணத்தார்க்கும் உபகாரியாயினமையின் முதல்வரெனப்பேர்பெற்றமை இதனுனும்விளங்கும்.

முடிசூட்டப்பெற்ற அரசன் தனது செய்ந்நன்றி யறிதலுடைமையை வெளிப்படுத்தும் பொருட்டுத் தனக்கு முடிசூட்டியவுடனே கொல்லாபுரிச்சந்திரவாண முதலியார்மேற்கைக்கிளைத்துறையமைத்துப்பாடிய பாடல்வருமாறு.

நேற்றினுமின்று மிருந்ததுகாத ஸிலவெனுங்கூன்
கூற்றினுமன்னே கொடியள்கண்டாய்மள்ளர் கொன்றபழுஞ்
சேற்றினுமேதிக் குளம்பானெருக்குண்ட செங்கருட்பஞ்
சாற்றினுஞ்சங்கந் தவழுங்கொல்லாபுரிச் சந்திரனே.

இதனாலும் இராமாயணச் திருமுடி சூட்டுப்படலத்தா னுங்காண்க

வேளாளருக்குரிய மருதநிலச்சிறப்பு.

படையிற்கொடையிற் பெரியோனேயக்கணம் பாடக்கம்பற்
கடையிற்கொடுத்திட வாங்கினனலரு மந்தமுத்தைக்
கடையிற்கடைசிய ருப்பிற்குமாறக் களகளென
மடையிற்றரளஞ் சொரிவயல்சூழ்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

சதுரங்கசேனையாலும் கொடையாலும் பெரியோனென்னட்ப ட்ட முத்துடைத்து என்ற தென்னாட்டை யாளும் பாண்டியனைக் கம்பர்பாட உடனேயவர்க்குப் பரிசாகத் தனக்குச்சிறந்த நிதியாகிய முத்துக்களை வாரிப்பாண்டியன் கொடுக்கக் கம்பர்பெற்றார் அதுபெ ற்றகம்பர் அவ்வரியமுத்துக்களைப் பள்ளப்பெண்கள் முறங்களில்வாரி க்கொண்டுபோய்க் கடையில் உப்பிற்குமாறறுவதையும் அவ்வாறு வாரும்படி முத்துக்களைச் சங்கினங்களும் இப்பிகளும்மடைவாயின் கண்ணேகளசளவென்றோசை யுண்டாம்படிச் சொரிவதையும் அத்த கையமடைகளையுடைய வயல்கள் தொண்டைமண்டலத்தைச் சூழ்ந் திருத்தலையும் அறியார்போலும் (பாண்டியனுக்கும் அரிய முத்துக ளைத்தொண்டை மண்டலத்து வயன்மடைகளில் எளிதாகப் பெறலாம்) (சுரு)

போய்சொல்லாரென்பது.

கேட்டாலுமின்பங் கிடைக்குங்கண்டீர்சொண்ட கீர்த்தியொடு
பாட்டாலுயர்ந்த புகழேந்திசொன்ன படியறிந்து
பூட்டார்சிலைமன்னன் வையம்பெறினும்பொய் தானுரைக்க
மாட்டாரெனச்சொன்ன நாட்டார்திகழ்தொண்டை மண்டல
[மே.

[இதன்பொழிப்பு]

உலகத்தவர்களே, சீர்த்தியினாலும் பாட்டினாலும் உயர்வுபெற்ற

புகழேந்திப்புலவரால் புகழ்ந்து கொண்டாடப்பெற்ற தொண்டை மண்டல வேளாளர் நாணிபூண்ட வில்லேந்திய அரசனது உலகமனைத்தையுந் தமக்குச்சொந்தமாகப்பெறவந்த காலத்தும் பொய்சொல்லார் என்று பாடப்பெற்றிருப்பதால், அவர்கள்வாழும் நாடாகியவித் தொண்டை மண்டலத்தின் சிறப்பையொருவர் சொல்லக்கேட்கினும் இன்பம் விளையும் எனல் காண்மின்கள். (௪௬)

உலகத்தில் வருணாச்சிரமமென்பது நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு இந்நான்கும் வாய்ந்த கற்புடைய பதிவிரதையை மணந்து, மாதா பிதாவைப்பூசித்து விருத்தர், பாலர், பெண்கள், நோயினர், இவர்களைப் போஷித்து, அதிதி, அப்பியாகதர், பிதுர்தேவதை முதலியவர்கட்கு விருந்தூட்டி பொய், கொலை, கள், களவு, காயம் என்னும் பஞ்சமகா பாதகங்களுக்கிடங்கொடாது, பிறர் பொருளை, பரதாரத்தையிச்சியாது, ஓரம், வழக்கழிவு, உரையாமல், பரநிந்தை புரியாது, கோபமின்றி இரப்பவர்க்கிட்டு, பந்துக்களைப்பாதுகாத்து மன்னுயிர்களைத் தன்னுயிர்போலாதரித்து, தெய்வ பத்தி, குரு பக்தி, விரதம், தர்ப்பண முதலியதும் முறையே செய்து, முயற்சி அறிவும் பெற்று, சத் கருமங்களின் வழியிற் சம்பாதித்து, தருமம், தானம், சாவடி, மடம், ஆலயம், ஏரி, குளம், வனம், தோப்பு, தரவு இவைகளைச்செய்வித்து, சாந்தம், சத்தியம், தயை, சீவகாருண்யமுடையனாய் † ஆசார நியமனத்துடனிருந்து சிவபூஜை முதலிய ஜபதப நமஸ்காரம் புரிந்து, *இல்லொழுக்கத்தினின்றும் வழுவாது நடப்பவனுக்கு, பூமியிற் செல்வமாகிய இம்மைப்பயனும், சொர்க்கபோகமாகிய அம்மைப்பயனும், மேற்கிடைக்கு மோட்சமாகிய உம்மைப்பயனும் சித்திக்குமென்னும், உறுதியுள்ளவர்களாதலாலும், பஞ்சமகா பாதகங்களில் பின் நான்கிற்கும் காரணமாக முன்னிற்பது பொய், அந்தப் பொய்யையே சொல்லாரெனின், மற்ற நான்கும் வேளாளரிடத்தில் இல்லையென்பது விளங்குகின்றமையாலும், (வையம் பெறினும் பொய்யுரையார் என்று கூறினர். துயில்கின்ற மகளிரை நோக்கல், காலை மாலையிற்றுயிலல், தனிவழிப்போதல், கையினால் ஜலத்தையுண்டல், இந்திரவில்லைக் காட்டுதல், தனிப்போய் மடிமையா விருந்துயில்புரிதல துயிலிடையெழுப்பல், யானையோட்டுதல், தூங்கியெழுந்து தயிர் வெண்ணெய் மோர் பருகல், அதிகரித்திரை, யாழ்நாடக மிகப்பயிற்சி பகல்நித்திரை, காலைவெயில் காய்தல், வீட்டில்மயிர்கழித்தல், விரிகுழல் நடப்பு, பரிகலத்துண்ணல், பிறர்துகிலணிதல், மயானப்புகைப

டல், குளித்தபின் கையாற்றுடைத்தல், சூது சொக்கட்டானுடல், தன்னைப்புகழ்தலு மாகாதனவாம்,

* ஒரு வன்தன் தவம் உடையவருக்குச் சேராவண்ணம் ஊருணி குளம், கிணற்றிலாடி, இருகை மண்ணைவாரி வெளியிற்போடவேண்டும், நல்லவர்களுடன் சேர்ந்து நல்லவைகளே செய்யவேண்டும், நல்லவெண்ணமாக இருக்கவேண்டும், காலம் இடங்கருதி நல்ல தானங்களைச்செய்யவேண்டும். மெய்யாகிலும் தகாத காரியத்தையும், தீமையுண்டாம்படி பொய்யையும் சொல்லப்படாது, சூது முதலிய பொருள்களைத் தொடப்படாது, அக்கினி-அந்தணர்-பசுவாதிகளை நிந்திக்கப்படாது, சிரார்த்த தினத்தில் வேறொருவன் சிரார்த்தத்தில் புசிக்கப்படாது இவ்வண்ணம் தவறாது அனுஷ்டித்தலாம்.

( * தயிர் இரவிலும், பால், வெண்ணெய்ப் பகலிலும் புசிக்கப்படாது. பிறர் துயர் தனதென்றெண்ணி ஐம்பொறிகளையுமடக்கி நடப்போர் மெய்வருந்தித்தவஞ்செய்து பொருளடைவதல்லது நற்கரும மமையாது பயன்படாது, இன்பமெய்தாது, ஆதலால் தருமமாகிய நல்ல கருமத்தைச்செய்ய வேண்டும். கன்னிப் பருவத்தில்தானே விவாகம் செய்து கொடுத்தலும் பூப்பதன்முன் மணஞ்செய்வித்தலும் வேண்டும். )

புரவி, ஆடுகளுக்கு முகத்திலும், பசுவிற்குட்பின்புறத்தும், மறையவர்க்கு திருஷ்டியிலும், மங்கையர்க்கு உடல் முழுவதும், புநிதம். நதி பிரவாகத்தால், வெண்கலம் சாம்பரால், செம்பு புளியால், சுத்தமாம். விருந்தினர் வரக்கண்டபோது நன் மொழியுரைத்து இருக்கச்செய்து மிக்க மகிழ்வோடு முகமலர்ச்சியடையும்படிச்சொல்லி அருகிலிருந்துண்பித்து போம்போது பின்றுடர்ந்து வழிவிடுதல், இப்படியாக விருந்தினரையுபசரித்தல் வேண்டும். எதிரொன்றும்பின்னொன்றும் பேசப்படாது, பிறர்பொருள்கவரப்படாது, துர்ச்சனர்களுக்குக் கொடுக்கப்படாது.

தன் மனையாளை, அடைக்கலப்பொருளை, தன்னையடைந்தவனை, தன் மரபினொழுக்கத்தை, இருப்பை, மனையாள் கொணர்ந்த சீதன திரவியத்தை, தன் மகவை, தன் மகவிருக்கத் தன் பொருளை, தன்னுயிர் நீங்குவதானுலும் பிறருக்குக் கொடுக்கப்படாது. முன்னவனிருக்கப் பின்னவன் கலியாணம், துறந்தவர்கள் பெண்போகமும் செய்யப்படாது. உண்டபின் வாயில் ஜலத்தை யுமிழாது உட்கொ

ண்டால் பிதுர்களுக்காகாது,தீது றுகனவுகாணில் பின்ஸ்நானஞ்செய்து தெய்வங்களைத் தெற்கு நோக்கித்துதிக்கவேண்டும், ஈமத்தநிக்கிய கட்டையைத்தீண்டில் ஸ்நாநஞ்செயல் வேண்டும். அந்தணரிடத்தில் தேவாலயத்தில் உண்ணப்படாது. ஜலம் தெளித்ததன்மேல் இலையில் அன்னமிட்டுண்ணவேண்டும். கட்டிலின்மேல், பீடத்தின்மேல், கப்பரையில் உண்ணப்படாது. மாதர் கலவியிடத்தும், அந்தணருயிரிழக்கும்போதும், பசுவைக்காக்கவும், கலியாண நிமித்தமும் மெய்யிலும் பொய்சொல்வது நலம். பொருள்கொடுத்து மயிர்கழிக்கவேண்டும்.

பேசும்போது துரும்பைக்கிள்ளப்படாது. ஆசாரியர்சொற்றவரப்படாது. விளக்குமாறினால் தூற்றப்படாது. தீபம் அவிப்பது,சாப்பாட்டில் நஞ்சிடுவது ஆகாது,பொய்சொல்லப்படாது, கோபங்கூடாது தேவதார்ச்சனை செய்து ஓமம் வளர்த்தி ஆகுதியால் திருப்தி செய்வித்தால் ஆயுள் வளரும். விசேஷகாலத்தில் சமுத்திரஸ்நானஞ்செய்து பசுவிற்குப் புல்கொடுத்து போஷித்துத் தானங்கொடுப்பவர் கோலோகம் அடைவர். பிதுர்க்கருமம், தர்ப்பணம், சிரார்த்தம், செய்வது பிதுர்தேவதைகளுக்கு பிரதானமான எக்கியமாம். இஃது ஐந்து எக்கியத்திலும் பிரதானமானது. இதை தினமும் புண்ணிய தீர்த்தங்களைக்கண்டபோதும் செய்யலாம் மாதா பிதா இறந்த திதியில் திவசங் கொடுக்கவேண்டும். இவ்விதமாக மனுவிக்கியானத்தில் சொல்லியிருக்கிறது. பூமியில் விரதமிருத்தல்வேண்டும்தானம் கொடுப்பதில் சிவன் வீரியமாகிய இரணியத்தை தட்சணையாகக் கூடவைத்துக் கொடுத்தல் வேண்டும், இவ்வண்ணம்—இல்லறம், துறவறம், தூய்மை, ஆசாரந் தப்பாமல் நடந்து பெரியோர்களை வணங்கி நடப்பதாம்.

உலகிலுள்ள மாந்தர்களுக்குத் திசைமாறித்தெரிந்தால்—மூன்று வருடம். சூரியமண்டலந்தோன்றாதாயின்—இரண்டு வருடம். தன்னுடற்சாயை துவாரமாகக்கண்டாலும், தெரியாவிட்டாலும்—ஒரு வருடம். தன் சாயை பற்பலவிதமாய்க் கண்டால்—ஆறு மாதம். வாய் ஜலத்தையுமிழ்ந்தால் இந்திர தனுசைப்போல வீழாவிட்டாலும் ஆறு மாதம். தங்கள் இரு காதையும் இரு கைகளாலும் மூடிப்பார்க்க சத்தமில்லாமலிருந்தால்—ஒரு மாதம். கண்ணாடி பார்க்கையில் தலை தெரியாதாயின்—ஒரு மாதம். சூரிய சந்திரன் இரண்டாய்த் தோன்றில் சில நாளிலுந், தப்பாது மடிவார்கள் என்று

காலத்ரயமாகிய பூத பெளஷ்ய, வர்த்தமானங்களென்னும் வருகாலம், செல்காலம், நிகழ்காலங்களைத் தெரிந்து நடத்தல்வேண்டும். சூரியன் சத்தியத்தைக்கொண்டு ஒரு சக்கிரம் உடைய தேரில் ஏழு குதிரைகள் பூட்டியும்,முடவனாகியசாரதியை யுடையவனாகவிருந்தும், சதா அந்தரத்தில் சஞ்சரித்து உதயமாகிறதும், அஸ்தமானமாகிறதும், சந்திரன்முதலாகிய எட்டு கிரகங்களை தனக்கு உபக்கிரகங்களாகவும், தன் துவாராயாவரும் மோட்சவீடுபோய்ச்சேரவும் அதிகாரம் பெற்றிருக்கிறான். வேத சாஸ்திர புராணங்கள் இதிகாசமுதலியவைகளை கேள்வியுற்று தபசிருப்பவன் புத்தியில் சிரேஷ்டனாவான் அதிதியாய் வரப்பட்டவர்கட்கு போஜனங்கொடாமல் புசிப்பவன் ஜீவசபமென்னப்படும். அக்காலத்தில் வீரத்துடன் யுத்தஞ்செய்து மாண்டவன் வீர சொர்க்கம் சேர்ந்து கீர்த்தி அடைவான். அதிதியாய்வந்தவர்களை பூஜித்தவர்களும்,ரோகிக்கு வைத்தியமும், கிரகஸ்தனுக்கு சத் பாரியாளும், இரந்தவனுக்கு தர்மமிடுபவனும் பரம மித்திரனென்று சொல்லப்படும். சர்ஜனனுக்கு ஆகாயம், பூமி, ஜலம், அன்னமும், ஆதாரமாம். விப்பிரர் தனத்தை அபகரித்தால் அது விஷமாகும். சர்வஜன சம்மதமாக யாருக்கும் பிரியனாகவும் கோபமில்லாமல் கர்வமில்லாமல் பசியென்பவர்களுக்கு அன்னம் கொடுக்கப்பட்டவனே தன சுகவந்தன். பதி சிசுருஷை செய்யப்பட்ட பதிவிரதையே வீட்டுக்கு அழகாம். தாட்சண்யம்,தருமம், கீர்த்தி,தானம், சத்தியம்உடையவர்சுரலோகபதம்பெறுவர்.ஆத்மஜனசத்புத்திரன்சத் பாரியாள் இவர்கள் ஆத்ம பந்துக்கள், ஜீவ இம்சை செய்யாதவனே தர்மிஷ்டன். கோபத்தையடக்கினவனே உத்தமபுருஷன் என்னும் சுஜனனாவான். தம்மிற் பெரியோர் தம்பந்தியிலிருந் துண்ணுமிடத்து முந்தியுண்பதை உண்டு. முந்துற வெழுந்திருத்தல, குரவர் கொடுப்பதை ஒரு கையால் வாங்குதல், தாமொருகையால் கொடுத்தல், அந்திப்பொழுதில் விளக்கினைத் தொழாதிருத்தல், இரு தேவர் நடுவும்,பார்ப்பார் பலர்நடுவும், ஊடறுத்துச்செல்லல். புல், விளைநிலம், ஆப்பி சுடலை, வழி, தீர்த்தம், தேவர் கோட்டம், நிழல், ஆனிரை நிற்குமிடம், சாம்பல் இப்பத்தின்கண்ணும் உமிநீரையும, மூத்திர † புரீடங்களையுஞ்சொரிதல் பாபம். என்று பாரதம் சாந்திபர்வம் அநுசாசநீகபர்வம் இவைகளில் விரிவாகச் சொல்லப்படும்.

---

† புரீடம்-மலம்

சுகம்.

இளம்பெண் ... மாலையில் பல் விளக்குவது, குளிப்பது, நல்லா டைதரிப்பது, இரத்தத்தையும் மாம்சத்தையும் விருத்திசெய்யும் உண் டங்களைப்புசிப்பது, வீட்டில் சுகம், பக்கங்களில் நாற்றமுமில்லாமையு ம், சன்னலும்படித்தலும், காற்றோட்டமும், சரித்திலில்லாத வீடுகளில் வசிப்பதும, உண்டவுடன் நல்ல காற்றுள்ள வெளியில் உலாவுதலும் ஸ்திரீபோகம் மிதமாகசசெய்தலும் நலமென்பர்.—இன்னும் சுகா தார விளக்கத்தைதப்பார்க்க.

அசுகம்.

பகற்றூக்கம், பல்கால போகம், இரவில் தயிரருந்தல், பழையபதா ர்த்தம் பழய கனிகள் சருகுநீர் அருந்தல், மூத்த ஸ்திரீகளைக் கூடல, இவைகள்கூடாதன. இஃது தேறையர் வைத்திய நூல்களிலும், தரும சாத்திரங்களிலும், சொல்லபபட்டிருக்கின்றன.

கற்புடையரென்பது.

கூட்டுங்கரநதங் கொழுநர்ககல்லாமற் கொடிவெருவ
வோட்டும் பொழுதுங் கரங்குவியார முதட்டுதற்கு
மூட்டுந்தழற்கொரு முன்றினில்லார்கற்பு மூட்டியெரி
மாட்டுந்திறமனை தோறுமுண்டேதொண்டைமண்டலமே.

இதன்பொருள்.

தததங் கணவரை வணங்குதற்குமாத்திரம் தமதிரு கைகளும குவிக்கப்படுதலன்றிக் காக்கையஞ்சி யோடுமெபடி யோட்டுதற்குந் தங் கைகளைக்குவியாதவரும், அமுது சமைபபதற்கு மூட்டும் நெருப்பிற் காகவேனும் அயன்மனைவாயினில்லாராய்த்தமது கற்பாகிய அனலை மூட்டி யெரிக்குங் கற்புத் திறத்தினையுடையவருமாகிய மாதர் வே ளாளர் வீடுகடோறுமிருப்பதுஇத்தொண்டைமண்டலத்திலே. (௪௭)

கற்புடைய ஸ்திரீகள், பிரதிதினமும் உஷத்காலத்திலெழுந்து காலைக்கடன் கழித்து பாக்குக்கரிப்பொடியால் பல்விளக்கி முகம் கால் கை சுத்திசெய்து புனிதைகளாய் இஷ்ட தெய்வத்தைப்பிரார்த்தித்து சமஞெத்தகிலத்தை அலகால் எறும்புமுதலியவைகளுக்கு இம்சை யில்லாமல் விளக்கி தூசுகுப்பையைப் போக்கி புதியநீரில் இளங்கன் றின் பசுவின் சாணமெடுத்து கையிலொட்டாமல் குழைத்து மெல்லி ய ஆடைகொண்டு மெழுகி நன்றாக உலர்ந்து ஈரமற்றுள்ள கெல்லரி மா, குங்குமம், மஞ்சள்பொடி, வாசனையுள்ள பச்சிலைப்பொடி, மஞ்ச

ளோடு கலந்த அரிசி, குங்குமத்தோடு கலந்த அரிசியுங்கொண்டு வாழ்க்கைக்குரிய மனையெதிர் முற்றம், வேதிகை(திண்ணை) உள்வேதிகை, நடை, கூடம், தாழ்வாரம், உள் முற்றம், தேவக்கிரகம், யாகசாலை, தவச்சாலை, தருமச்சாலை, விவகார கூடம், பண்டசாலை, மடைப்பள்ளி, சயனக்கிரகம், பசுக்கொட்டில், நீர்க்கரை, வில்வவடி, அரசடி, பிருந்தாவனம், தேவஸ்தானம், சத்திரம், பொதுத்தெற்றி, மண்டபம், யானைக்கூடம், தேர்நிலை முதலியவைகள் கோலமிடு மிடமாம்.

கோலமாவது.

தேவசமுகம், அரசசமுகம், தவச்சாலை, தருமச்சாலை, குடும்ப வாழ்க்கைக்குரியமனை முதலியவற்றின் முகப்பில் காரிய சித்தியின் பொருட்டு அமைத்தற்குவேதாகமங்களில்கிரியாகாண்டத்தில் விதிக்கப்பட்ட அஷ்டமங்கலமாகிய இணைக்கயல், கண்ணாடி, கவரி, ஜீவர்சம் தோட்டி, பாலிகை, பூரணகும்பம், சுவஸ்திகம் என்பவற்றுள் சுவஸ்திகமென்பது சுத்தஞ்செய்த நெல்லரிமாவையும், பஞ்சவண்ணப்பொடியையும் கொண்டு கைவல்ல கற்புடைய சுமங்கலிகளாலமைக்கப்படுவது தருமார்த்தகாம மோக்ஷமிவைகளைப் பெறவேண்டிலௌகிக வைதிக, கருமங்களில் இடஞ்சுத்திசெய்தே கோலமிட்டுப்பின்செய்கருமந் தொடங்குவதாதலால், சாஸ்திரமரபு, சமயமரபு, சம்பிரதாயமரபுக்குரிய விதிப்படி இன்னகாலத்தில் இன்னவிடத்தில் இன்னகோல மிடவேணுமென்றறிந்திட்டால் அறிவு விசாலம், நாகரிகவிருத்தி, சோம்பலின்மை, மறதியின்மை, பகற்றூக்கமின்மை, சூக்குமபுத்தி, முயற்சியில் ஊக்கமுடைமை, மனச்சோர்விலாமை, மனக்கிளர்ச்சியோடிருத்தல், மனைவாழ்க்கைநடத்தும் உபாய வூகங்களும், போக பாக்கிய அனுபவபாதுகாப்புத்திறம் நுண்ணறிவுமுண்டாமென வேதமோதுகின்றது.

விஞ்ஞானமென்னுஞ் சிற்பசாஸ்திரத்துள் கல், மலை, புல், மரமுதலிய நிற்பனவும், மிருகம் பறவை தவழ்வன முதலிய அசைவனவுமாகிய சொரூப சுபாவ குணம், பிரயோகம், உபயோகமிவற்றுள் மக்கள்முன்னறிவது சொரூபமாத்திரையாம். அச்சொரூபமாவது புள்ளி, விந்து, பிறை, வட்டம், கோணம், சதுரம், கோடு, கீற்று, வரி குழல், குடம், புள்ளடி, உடுமுதலிய முப்பத்திரண்டாம். இவைகளை யறிந்தியற்கையாயிடப்பட்டால் கோலமெனவும் மொக்குனவும் பெயர். தன்கொழுனனையன்றி வேற்றுருவத்தியற்கையை முழுமனத்தால் சிந்தித்தலில்லாது சாமானியநோக்கத்தால் கண்டு

கொள்பவராது இயற்கையேமாதர்க்கு மரபு. ஆதலால் சூரியோதய மானபின்பும், மணவாளன் புறம்போனபின்பும் சாணந்தெளித்தல் மெழுகல்கூடாது செய்தாலது அசுபக்குறியாம். ஒருகோடு இழுக்கப்படாது அபரக்கிரியையாம் அபரக்கிரியைக்கு இரட்டைக்கோடு மாகாது. ஈனுப்பசுவின்சாணம் எருமைச்சாணம் எருதின்சாணம், ஆடு, கடமை, மான்களின் பிழுக்கை நோய்கொண்டபசு, சினைப்பசு, கிழப்பசு, மலந்தின்னும் பசு இவைகளின் சாணமுமாகாது. இவைகளால் மெழுகின் வறுமைமிகும். சுத்தபசுவின்சாணங் கிடைக்காத பக்ஷத்தில் சுத்தபசுவாகிய கோசலத்தோடு கலந்த நன்னீரால் சுத்தஞ்செய்க. தேவக்கிரகம். யாகசாலை, பொக்கிஷசாலை, தவச்சாலை, முனிவர்வாஸம், சயனக்கிரகம் இவைகளில் சந்தனமுதலிய களபங்களால். மெழுகுபவர்க்கு ஆயுராரோக்கியம், செல்வம், புகழ், சுகம். உண்டாம். சிரார்த்தாதிகாலத்திலும். ஆசூசகாலங்களிலும் தன்புருஷன் வெளியில் போயிருக்குங் காலங்களிலும். சாமானிய கோலமிடலாம் புழுங்கலரி மா நவதானியமா சுக்காங்கல், காவிக்கல், சுண்ணாம்புக்கல், சுதை, கேழ்வரகுமா, வரகுமா, வரகு, கரி ஐவண்ண மண்களுமாகாது. கோலமிட்டால வாஸ்துதேவன், விசுவதேவர் தேவதைகளாலும் சபிக்கப்பட்டு பழிபாவங்கள் விளையும் இவற்றுள் எள் வாஸ்து கோலத்திற்கும் அபர கருமத்துக்குமாம். நவதானியங்கள் நவக்கிரகங்களுக்காம். மரப்பட்டை கருக்குப்பொடி சுபத்துக்காகாது, அபரகருமத்துக்காம். விகிருத ரூபமாகிய கோலங்கள் தைவிகம் பௌதிகம் என விருவகையுள் தைவிகம்என்பது வைதிகம் தாந்தரிகமெனவும் இருவகைத்தாம் இது கோஷ்டம் மண்டலமெனவும் வழங்கும் யாகசாலை, தேவாலயம், நதிதீரம் முனிவராச்சிரமங்களினு முபயோகிக்கத் தக்கது.

பௌதிகமென்பது மாந்தரிகம் பாஹரிகம் எனவிருவகை. இவற்றுள் மாந்தரிகம் சாதாரணம் விசேஷமென்னு மிருவகையாம். சாதாரணமென்பதை சாரூபிகம் எனவும் இது விஷ்ணுபஞ்சாயுதம், சூலம், வச்சிரம், துவசம், கல்பகம், பாசம், அங்குசம், சுவாலை முதலியவை அமைத்து இடுங்கோலமாம். விசேஷத்தை அந்தரிகமெனவும் வழங்கும். இது பிந்து, திரிகோணம், பஞ்சகோணம், ஷட்கோணம், அஷ்டகோணம், வட்டம், ஆவரணம், துவாரம், சோபான முதலியவைகளாம் மந்திரசாஸ்திரத்துள் பிரசித்தி லௌகிகத்துள்ளுஞ் சிறிது வழங்கும். மாந்தரிக பேதமிரண்டையும் பாதஸ்பரிசம் படாத விடங்களில் அமைப்பதுநன்மை. பாஹரிகமென்பது வல்லி, சாகை, துவந்

தம, ஐகஸ்யம என்னும் பேதங்களால் ஏழுவகைத்தோற்ற ஆகாரங்களின் திரிபு பெயர்களைக் கொண்டு வாழ்க்கைமனை, ராஜகிரகம், பொதுமண்டபம், தருமச்சாலை, வீதி முதலிய எல்லாவிடங்களிலும் கோலஞ் செய்யப்படும். இக்கோலமிடுங்கால் விஷமரேகை, விகிர்தசந்தி, கிறுக்கு, சிதைவு, பழுதுபாடு தெளிவில்லாமை முதலிய குற்றங்கள் வாராதவண்ணம் கையினாலாவது குழல்தட்ட முதலிய கருவிகளாலமைக்கலாம் வாழ்க்கைக்குரிய மனைட்டியே கோலமமைக்கவேண்டும் மறதி, சோர்வு தீவிரம் முதலிய குணபேதங்களால் பழுதுபட்டு சிதைக்க நேர்ந்தால் வலக்கையால் துடைத்து நீர தெளித்து சுத்தஞ் செய்து மறுபடியிடவேண்டும் இடக்கை, கால்களால் துடைக்கலாகாது. கூலிக்காரர் அல்லது பிறராலமைப்பிப்பது பழுது. இவ்வாறு செய்பவர்களுக்கு அறிவு, செல்வம், புகழ், நோயின்மை, சுகமுதலியன நாளுக்கு நாள் வளருவதன்றி வசீகரசத்தியு முண்டாம் சோரபயம், இராக்ஷஸபயம், ரோகபயம், பீடைபயம், கிரகபயம், காலபயம், மிருத்தியுபயம், முதலானது நீங்கும்மென்பர்.

## கற்பிலக்கணம்.

கற்புடைய ஸ்திரீகள் கொழுநனுண்ட பின்னுண்பர் துயின்றபின்துயில்வர் எழுதன்முன் னெழுவர் புருஷன் முன்னம் பணியணிந்திருப்பர் பிரிந்தபோ தணியணியார்கள் கோபிக்கையில் எதிர்மொழி சொல்லார்கள் முனிந்தெதைச் சொல்லினும் அதையுஞ் சந்தோஷமாகவே கொள்வர். செய்தாயிற்றேறுவென்றால் ஆயிற்றென்பர் நோன்புறுதல், தீர்த்தயாத்திரைசெய்தல், பெரியோரைத்தொழுதல் முதலியவைகளைச் செய்யார்அவர் பெய்யெனப்பெய்யுமழை தன்னணிகளை புருஷன் அந்யஸ்திரீக்கு கொடுத்தாலும் கோபியார் மூப்புவந்த காலத்துந் தாங்கள் பிறர் மனைப்போகார் கணவர் ஆயுள் குன்றுமென்று கண்டு அவர்கள் நாமத்தைச்சொல்லார் எப்போதும் எதிர்நிற்க மாட்டார்கள் காதலர் எச்சிலை அமிர்தமாகக்கொண்டு புசிப்பர். காதலர் மனதினினைப்பதைக்குறிப்பறிந்துசெய்வர் புருடர்களை அலர்தூற்றும் பெண்கள் முகம்பாரார்கள். துறந்தவர்கள் இரப்பவர்கள் தொழில்செய்பவர் சுற்றத்தார், தெய்வம், பசு விருந்தினர்களுக்கு அன்னம் படைத்துப் பின்னுண்பர் இல்லறத்துக்கு வேண்டியவைகளைச் செய்வர் வீண் செலவு செய்யார் கணவராயுள்வளர மஞ்சள்பூசிக்கொள்வர் கணவன் சொற்கடவாத கொள்கையன்றி வேறுதருமம் தவம், வணங்கித் தெய்வம்பூசிப்பதும் பழுதென்பார்கள் அழகுகுன்றி இடர்தப்பி வார்த்

தைகுழறி நோயில்மெலிந்து வருந்துவராயினும் கேள்வரை வெறுக்கார், நிந்தியார் கணவன் சந்தோஷிக்கும்போது சந்தோஷமும் துன்புற்றாற் றுன்பமுமடைவர். தங்கணவர் திருவடிகளை மும்மூர்த்திகளின் திருவடிகளாகவே பாவித்து கங்கையாற் சுத்திசெய்து அதையுட்கொள்வர் புஷ்பவதி பூத்த மூன்றுநாளும் புருடர்முகம் பாரார்கள் அவர்கள் கேட்கும்படி வசனியார். நீராடியபின்னர் நாயகர்முகம் பார்ப்பர் நீராடியதினத்திற் புருடர் வேறிடமெய்திடில் வேறொருமுகம்பாராமல் சூரியனைப்பார்ப்பார்கள். தங்கள் தாய் தந்தையரோடிருந்தாலும், புசித்துக்கொண்டிருந்தாலும், அவைகளைவிட்டு புருடரழைத்தக்கணமே ஓடிவருவார்கள். தந்தை தாயார் சோதரர் பிள்ளைகளைவிட அதிகம் புருடரிடத்தன்பு வைத்திருப்பார். உரல், அம்மி, உலக்கை, வாயிற்படி முறம், இவைகளிற் சேர்ந்தால் லக்ஷ்மி போய்விடுமென்று சேரார்கள். தங்கணவரைப் பணியாமல் வேறு நோன்பு கொள்பவர் கொடிய நரகத்திற் சேர்வார்களென்பர் கணவனோடிறக்க நினைப்பவர் மறுபிறப்பில் நல்ல புருடனையும் புத்திரசம்பத்தையு மடைவர். கணவனுடன் செந்தழல் குளிப்பவர் சுவர்க்கத்தில் புருஷனுடன் போகங்களை யனுபவிப்பார். பதிபாவியாயினும் தழலில் மூழ்குங் கற்புடையவளால் அவனை காலதூதர் அணுகார். சூரியன், சந்திரன், அக்கினி, அருந்ததி இவைகளின் காந்தியும் கற்புடை யஸ்திரீயின் காந்தியைக்கண்டால் மழுங்கும். கற்புடைய மாதரைப்பெற்றவர் மரபும், காதலன் மரபும், சுற்றத்தார்மரபும் நற்கதியடையும். கற்புடையகன்னியர் அடிவைக்குமிடமெல்லாம் புண்யஸ்தலங்களாகும் கங்காநதிமுதலிய மஹாநதிகளும் கற்புடையமாதர்வந்து ஸ்நாநஞ்செய்வார்களாவென்று எதிர்பார்க்கும் கற்புடைய நாயகியில்லாத இல்லம்பேயிருக்குமிடமாகும். அவர்களை காற்று, கடல், சந்திரன், சூரியன், அக்கினி இவைகள்தொட்டால் தங்களுக்குச் சுடுமென்றஞ்சும். கற்புடையமாதர் மங்கலமிழந்தகாலத்துப் பகலில் ஒருவேளையுண்பது வெற்றிலைபாக்கு தள்ளுதலுடன் பாயிற்படுத்தலுங் கூடாது. நிலத்திற்படுத்து அரிய விரதமியற்றி தன்னுயிர்போகாது காய், கனி, சருகுகளைப் புசித்திடவேண்டும். இப்படி விரதம்பூண்டவர்கள் நற்பதவியடைந்து நல்ல போகத்தை யனுபவிப்பர் ஐந்தொழிலையுடைய சிவனுக்கும்படி அறு தொழிலையுடைய வேளாளன் மனைவி வேள்விக்கு வேந்தனுயிருந்து வேள்வித்தீ வளர்ப்பிப்பதுபோல அவர்கள் விருந்தினர் பசித்தீயையும் அவிப்பர் பாகம் செய்வதில் புருடனுக்கு இனியவையறிந்து நவமாகச் சமைப்பர் முன்னுள் எரிந்த குறைக்கட்டை

யைத்தொடார். மூட்கள் எரிவிராய்க்காகா காலையில் பாத்ரசுத்தி செய்துவைத்து தடாகத்தில் போயிறங்கி ஸ்நாநம் செய்யும்போது மஹாநதிகளை நினைத்து ஸ்நாநஞ்செய்வர். பகலில் எடுக்கும்ஜலம் பானம், பாகம், சிவபூசைக்கும் ஆம் நிசியில் எடுக்கநேர்ந்தால் விளக்கைக்காட்டி நீர் எடுப்பர், இல்லையாயின் பொன்னைக்காட்டி யெடுப்பர். அதுவும் இல்லாவிடின் மந்திரஞ்சொல்லி யெடுப்பர். ஜலம் திரட்டித் தோளிலுந் தலையிலும் வைக்காமல் இடுப்பிற்கொண்டுவருவர் வீடு புகாமுன் முன்றிலில் கையிற் கொணர்ந்தஜலத்தால் கால்சுத்தி செய்து மனை புகுவர். புருடர்க் கன்னம்படைப்பதற்கு நிலத்தில் ஜலம் தெளித்து சுத்திசெய்து முருக்கு, இரளி, தாமரை, புன்னை, எருக்கு, ஆமணக்கு இவ்விலைகள் ஆகாவென நீக்கி வாழையிலை, மாவிலை, பலா, கமுகு, அத்தி, தாழை, இவைகளில் ஒன்றை நீரினாற் சுத்திசெய்து முந்திஉப்பிட்டு பதார்த்தங்களைப் பரிமாறி அறுசுவையோடன்னம் அன்புடன்இடுவர் பக்கத்தில் ஆபோசனத்துக்கு ஜலமும் இடக்கையால் தாகநீர் அருந்தாமல் வலக்கையால் நீரருந்தத் தொன்னையும் வைப்பர். சாதத்தைக் கீழேசிந்தியறியார்கள். புருஷன் இச்சையுடன் உட்கொள்ளும் பதார்த்தத்தைக் குறிப்பாகப் பார்த்திருந்து பின்னும் படைப்பர். புருடர் வாய்திறந்துகேட்டு படைத்தறியார், புசிக்கும் இடையில் மூக்கைச்சிந்தினால் கையலம்ப ஜலம்விடுவர் துர்நிமித்தங்களாகச் சொப்பனங்கண்டால் ஸ்நாநஞ் செய்வர் நான்காநாள் நல்ல ஆகாரம் புசிபபவளுக்குப் பிறக்கும்பிள்ளைக்கு அதிக அழகுண்டாம் நாலாநாள் நீராடி தன்புருடனை அல்லது சூரியனைப்பாராமல் அன்னியபுருடனைப்பார்த்தால் பிறக்கும் பிள்ளைக்கு அழகுகெடும். நிந்தை வரும். புருஷன் கை, கால் சுத்திசெய்து திரும்பிப்பாராமுன் பரிகலமெடுத்துக் கையைத்தூக்காமல் சாணமிட்டுச் சுத்திசெய்வர் அதிதிகளைக்கண்டவுடன் தவிசளித்தல், கைகழுநீர்தரல், கால்கழுநீர்தரல், ஆசமனநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தரல், தேய்வைபூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசிதூவல், நறும்பு கைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றுதல், அமுதேந்தல், அடைக்காய் தரல், மந்திரமலராலருச்சித்தல் இப்பதினாறு உபசாரமும் செய்வர். இன்னும் விரிவாக மநுவிஞ்ஞானேச்சுரம், சாந்திபர்வம், அநுசாசநீக பர்வம், காசிகாண்டம், திருவள்ளுவர் குறள், முதலியவற்றுட் காணலாம்

☞ இந்நூலிற் சிலபாடல்களின் உரையின் கீழ்சொல்லிய சில உதாரணங்கள். பொருத்தமின்றிப் பலவாறு விருத்துவப்படக்கூறி

யிருந்தாலும், கல்வியிற்சிறந்த ஆன்றோர்கள் மன்னித்துகுற்றங்கொள்ளாது குணத்தைக்கொண்டு, தங்கள் தங்கள்பாலர் பாலிகைகளை வாசித்துணரும்படி முயற்சி புரிவிப்பது நம்மரபினர்க்குரிய கடமையே யாம்.

அறஞ்செய்பவரோன்பது.

எண்ணுண்கறந்தொண்டை மண்டலத்தார்க்கன்றி யில்லையெனத்
தண்ணார்வயலுழன் றன்சொலவேந்தன் றலைதடிந்த
தெண்ணுமன்மன்னனு மப்படியேசொல விப்படியின்
மண்ணுளும்வேந்தன் வரிசைபெற்றான் றொண்டைமண்டலமே.

இதன்பொருள்.

அரசன் தனதுசபையில் வந்த பலசாதியாரையும் பார்த்து, முப்பத்திரண்டு தருமமுஞ் செய்வோர் எச்சாதியாரென்று கேட்க, "இடங்கின்பெருமாள்முதலியின் தந்தையாகிய ஓர் வேளாளன்" தொண்டைமண்டல வேளாளரே முப்பத்திரண் டறமும் செய்வோர் பிற சாதியாரல்லர் என்று சொல்ல எனக்குமில்லையாவென்ன இல்லையென்று பின்னுமறுத்துச் சொல்ல அதுகேட்ட அரசன்சினந்து அவன்றலையை வெட்டிவிட்டுச் சிலநாள் சென்றபின் வெட்டுண்டோன் புத்திரனாகிய இடங்கின்பெருமாள் முதலியார் தனக்குப் பேருதவி செய்தது கண்டு, அரசன் தான் முனிந்ததையு மறந்து, தானே தொண்டைமண்டல வேளாளரையன்றி முப்பத்திரண்டறம் வளர்ப்போரில்லையென்று கொண்டாடிச் சிறப்புச்செய்ய அம்முதலி பெற்றனன். (இச்சிறப்பு தொண்டைமண்டல வேளாளர்க்கே யன்றி மறறையர்க்கில்லை) என்பதாம். (௬௮)

பேருதவியாவது அரசன்புத்திரனைப் பகைவர் கொல்ல வரக்கண்டு அப்புத்திரன் இடங்கின் பெருமாள்முதலி வீட்டில் அடைக்கலம் புகஅவன் தன்புத்திரனை,கொல்லவந்தோர்க்கு ராசபுத்திரனுக்கீடாகக் கொடுத்து ராசபுத்திரனைப் பாதுகாத்துவிட்டமை அரசன் தெரிந்து, நாம் அவன்தந்தையைக் கொன்ற பழிவாங்கச் சமயம் நேரிட்டும் அப்படிச்செய்யாமல் அடைக்கலம் புகுந்தோனைப் பாதுகாக்கின்ற தனது குலதருமத்தையே விளக்கினமையால், இவன் மரபோரே முப்பத்திரண்டறம் வளர்த்தற்குரியோரென்று மிகப்புகழ்ந்து கொண்டாடி, அம்முதலிக்கு விருதுமுதலியன கொடுத்துச் சிறப்புச் செய்தான் என்பது.

௩௨ - அறங்கள் வருமாறு.

நேரிசை ஆசிரியப்பா.

க. ஆதுலர்க்கடையச் சாலையமைத்தலும்.

உ. ஓதுநர்க்கருங்கலை யோதுவித்தோதுநர்க் குறுசுவையுணுடை முதலிய வுதவலும்.

௩. அறுசமையத்தோர்க் கன்னமளித்தலும்

௪. பசுவுக்குணவிட்டுப் பாதுகாத்தலும்

௫. சிசுவுக்குப்பால் தெளிமருந்துதவலும்

௬. சிறைப்பட்டோர்க்குத் தினவுணளித்தலும்

௭. அறச்சோ றிரப்போர்க் களைத்துக்கொடுத்தலும்

௮. விளைபயனனைத்தையும் விழைந்துணக்கொடுத்தலும்

௯. களைகணற்றோரைக் காத்தினிதோம்பலும்

௰. ஆதரவற்ற பிள்ளைகட்கருத்தித் தீதறவளர்த்துச் சிறப்புறவுய்த்தலும்

கக. அநாதியாயுயி ரகன்றகளேபரந் தனதெனவெடுத்துத் தகனஞ்செய்தலும்

கஉ. ஏழைமைமணத்துநல் லியங்கலிப்பித்தலும்

க௩. கோழுடைபாகுசுண் ணத்தொடுகொடுத்தலும்

க௪. பிணிப்பட்டோர்க்குப் பெறலருமருந்து தணிப்பிலன்போடு தந்திரட்சித்தலும்

க௫. வலியற்றோர்க்கு மாசுடைத்தூசினை யொலித்துக்கொடுக்க வண்ணானுதவலும்

க௬. தலைமயிர்கழிக்கத் தருபொருளிலர்க்கு விலைதந்தேமயிர் வினைஞனையுதவலும்

க௭. முன்னுறமுகந்தெரி கண்ணாடிகொடுத்தலும்

க௮. கன்னியர்க்காதணி யோலைகொடுத்தலும்

க௯. கண்ணோவகற்றுங் கண்மருந்துதவலும்

உ௰. எண்ணெய்பின்னுக்குத் தலைக்கிடவீதலும்

உக. காமசத்திரங் கட்டிநடாத்தலும்

உஉ. ஏமமாயிடர்ப்பட் டோர்குறையிருத்தலும்

௨௩. நெடுவழிச்செல்வோர் விடாய்க்கு நீர்ப்பந்தரும்

௨௪. படுபசிதீர்க்கப் பாலூண்மடமும்

௨௫. ஊர்தொறுஞ்செல்லற் குறுநன்னெறியும்

௨௬. சேர்பவர்வெம்மை தெறுநிழற்சாலையும்

௨௭. மக்கள்விலங்குபுள் ளாதியமன்னுயிர்
தொக்கமர்தண்ணிழற் சோலையமைத்தலும்

௨௮. பெற்றமுரிஞ்சப் பெருங்கன்னாட்டலும்

௨௯. மற்றையுயிர்க்கும் நீர்நிலைவகுத்தலும்

௩0. ஆவினஞ்சூல்கொண் டருங்குலமபல்கச்
சேவினம்வளர்த்துத் தேவர்க்குவிடுதலும்

௩௧. கொல்லப்படுமுயிர்க் குறுவிலைகொடுத்தே
யொல்லையின்மீட்டவற் றுயிர்பிழைப்பித்தலும்

௩௨. கைப்பொருளில்லாக் காளையைக்கன்னியை
மெய்ப்படுநன்மண விதியிற்புணர்த்தலும்
இன்னவாமுப்பா னிரண்டெனவிதந்து
சொன்னவறங்களின் றொகையுந்துறவும்
வேந்துயர்குடையும் விதிச்செங்கோலும்
ஆய்ந்துயர்கலைகளு மமரர்தஞ்சிறப்பும்
வழுவில் வாணிகப் பயனும்
உழுநர்தந்தொழிலி னுண்டாவனவே.

௩௨ - தருமங்களின் விவரம் வருமாறு.

**ஆதுலர்க்குச்சாலை.** க. பசித்துவரும் ஏழைகளுக்கு அறுசுவையோடு அன்னமளித்தலும், அலங்கரித்த பஞ்சணை, தீபம், ஜலம் வைத்து துயிலுமிடம் அமைத்து சத்திரங் கட்டிவைத்தலும், நிரந்தரமாய் குடியிருக்க ஏழைகளுக்கு வீடுகட்டிக்கொடுத்தலும்.

**ஓதுவார்க்குணவளித்தல்.** உ. கல்விச்சாலை வைத்து பிள்ளைகளுக்குக் கல்விகற்பித்து அவர்களுக்கு அன்னம் ஆடை அணிமுதலியவை கொடுத்தலும்.

௩. தன்சமையம் பிறச்சமையமென்று பேதமெண்ணமல் அவர்

அறுசமையத்தார்க்குஅன்னமளித்தல் — களுக்கு அறுசுவையோடு அன்னமளித்தலும்.

௪. பசுக்களுக்கு மரத்தடி நிழலில் பசும்புல்லைக்கொடுத்துப் பாதுகாத்தலும்.

பசுவுக்குவாயுறை.

௫. ஈன்றவளில்லாமலும் தாயிருந்தும் பால் இல்லாமலும் இரு

சிசுவிற்குப் பால் மருந்துதவல். — க்கும் பிள்ளைகளுக்குப் பால் கொடுப்பித்தலும் மருந்து முதலியவும் கொடுத்திரக்ஷித்தலும்.

௬. அரசனால் சிறைப்பட்டவர்களுக்கு தினந்தோறுந் தேடி

சிறைச்சோறு. — உணவிடுதலும்.

௭. கூன், குருடு, செவிடு, ஊமை, நோயாளிமுதலியவர்க்கும் பரதேசிகளுக்கும் அன்னக்காவடி முதலியன

அறச்சோறு. — வைத்து தாமே எதிர்கொண்டழைத்துஅன்னங்கொடுத்தலும்.

௮. பிணங்கின பிள்ளைகளுக்கு விளை புலங்களில் கம்பு, எள்ளு, துவரை, காராமணி, காய் கதிராகவும் [illegible]ங்க

சிற்றுண்டிநல்கல். — ளில் தானியமாகவும் மாவு, பொரி, சு[illegible]ல், அப்பவகைகளை ஆசையோடு சிற்றுண்டி[illegible]கக் கொடுத்தலும்.

௯. [illegible]கரவற்ற ஏழைகளின் பலவித துன்பங்களை நீக்கி [illegible]ருப்

[illegible] — பத்துடன் காப்பாற்றலும்.

சோலை. — [illegible] வும குளிர்ந்த நிழலைத்தரும் பல தருக்கள் நெருங்கிய சோலைகள் வைத்தலும்.

௨௮. பசுக்கள்முதலிய பிராணிகள் தினவிற்கு உராய்ந்துகொள்ள மந்தைவெளிகளிலும் அவைகள் தங்கும்

தறி(கல்.) — மற்ற விடங்களிலும் கற்கம்பங்களை நட்டுவைத்தலும்.

௨௯. மனிதர் கரி பரி முதலிய விலங்கினங்கள் வானரம் பட்சி நீர்வாழ் முதலிய எல்லாஜீவராசிகளும் உண்டு

தடாகம். — களிக்க அஹிக ஆமுஷ்மிக பலனைத் தரத்தக்க தடாக முண்டுபண்ணுவித்தலும்.

கஉ. விலைகொடுத்துப் பெண்வாங்கி கூறை மாங்கலிய முதலிய மற்றெல்லாச்செலவுஞ் செய்து விவாகஞ் செய்வித்தலும் ஏழைகல்யாணங்களில் தருமமாக வாத்தியங் கொட்டுவித்தலும்.

கன்னிகா தானம்.

கங. வெற்றிலை பாக்கு சுண்ணும்போடுகொடுத்தலும்.

சுண்ணமளித்தல்.

கச. நோயாளிகளைக் காலையும் மாலையும் தானேதேடிப்போய் இனியவை கூறித்தருமமாக மருந்துகொடுப்பித்துப்பிணிதீர்ப்பித்தலும்.

நோய்மருந்து.

கரு. அழுக்குவஸ்திரம் உடுத்தியிருப்பவர்களையும் வலியற்றோரையும் கண்டவுடனே தாமே வேண்டி அவைகளை வாங்கி ஒலித்துக்கொடுக்க வண்ணானை உதவிசெய்தலும்.

வண்ணான்.

கசா. கூலிகொடுத்து க்ஷவரம் செய்துகொள்ள நிர்வாகமில்லாமல் தலைமயிர் வளர்த்திருப்பவர்களுக்கு நாவிதனை உதவிசெய்தலும்.

நாவிதன்.

கஎ. விபூதி, திருமண், சந்தனம், குங்குமம் இவை நெற்றியில்தரித்துக் கொள்ளவும் முகம் பார்த்துக்கொள்ளவுங்கண்ணாடி கொடுத்தலும்.

ண்ணாடி.

கன்னிட் பெண்கள்காதுவளர்ப்பதற்கு செவ்வ[illegible]
யவனு [illegible] (க)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை (உ)

(இ-ள்.)

இல்லறத்தான் பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, இவர்களுக்கு பசி நோய், குளிர் இவற்றால் அவரொழுக்கங்களுக்கு இடையூறின்றி உண்டி முதலியவைகொடுத்துத் தவராது நடத்துதலினாலும் ஆதரவற்றவர்க்கு வேண்டுவன செய்தலாலும் வறுமையர்க்கு உணவு முதலியவை கொடுத்தலாலும் இறந்தவர்க்கு நீர்க்கடன் முதலியவை செய்து நற்கதியடைவித்தலாலும் நல்லாற்றினின்றதுணை யென்றார்

உக. காமச்சத்திரம். காமச்சத்திரங் கட்டுவித்து கொக்கோக முதலிய நூல் அறிந்த விலைமாதர்களை அதிலிருக்கச்செய்து வஸ்திராபரண சந்தன புஷ்ப தாம்பூல முதலியன கொடுத்து காமத்தை நீக்குவித்தலும்.

உஉ. இடர்தீர்ப்பது. கடன்பட்டு வருந்துவோர்க்கு அக்கடனைத்தீர்த்து ரக்ஷித்தலும்.

உங. நீர்ப்பந்தல். சூரியன் உதயமாகாமுன்புதுப் பாண்டத்தில் நீரைக்கொணர்ந்து மணலில் வைக்கப்பட்ட குளிர்ந்த ஜலமும் மோரும் வெந்நீரும் சாந்தாற்றியுங் கொடுத்துஇளைப்பாறத்தண்ணீர்ப்பந்தல் வைத்தலும்.

உச. மடம். தீர்த்தயாத்திரை ஸ்தலயாத்திரையாகவரும் அடியார்களுக்குப் பாலுடன் அன்னம் பகரும் மடங் கட்டி வைத்தலும்.

உரு. தடம். மனிதர் மாடு குதிரை முதலிய பிராணிகள் வருந்தாமல் நடப்பதற்கு நல்லவழிகளை செப்பமிட்டு வைத்தலும்.

உசா. சாலை. வழிப்பிரயாணம் செல்பவர்க்கு வெயிலினால் துன்பமடையாமல் பாட்டைகளின் இருபக்கங்களிலும் நிழலுண்டா யிருக்கும்படி பலவிருட்சங்களைச் சாலை வைத்தலும்.

உஎ. யனுபவிப்பா[illegible] விருந்தோம்பல். நர மிருக பக்ஷிஜாலங்கள் வெயில் மழை பனி காற்று இவைகளால் வருந்தாமல் தங்கவும் காய் [illegible] முதலிய[illegible] வும கு[illegible]

கூ - அதி -ரு-வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி மிச்சின் மிசைவான் புலம். (எ.)

(இ - ள். ) விருந்தினரைக்காப்பவன் விளைநிலம் தானேவிளையும்.

உழவு.

கoச - அதி -க- சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா லுழந்து முழவே தலை (அ.)

(இ - ள். ) உலகம் ஏருடையார் வழியதாயிற்று தலைமையான தொழில் உழவேயாம்.

௩0. பசுக்கூட்டங்கள் விருத்திக்க ரிஷபங்களை வளர்த்து சூலம் சக்கரம் போட்டுவிடுதலும் தேவாலயங்களில் மேளங்கொட்டவிடுதலும்.
ரிஷபம்.

௩௧. பக்ஷிமுதலிய ஜெந்துக்களை பிடித்துவந்து கொன்றுதின்னும்படி விலைக்குவிற்பதை விலைகொடுத்து வாங்கி விட்டுவிடுதலும்.
உயிர்காத்தல்.

௩௨. கைப்பொருளில்லாத ஏழைப்பிள்ளைகள் பெண்களுக்கு பொருளுதவிவிவாகஞ்செய்வித்தலுமாம்.
தருமகல்யாணம்.

## அறமென்பது.

அறம், பொருள், இன்பம், வீடு எனநான்கு இவற்றுள் வீடென்பது மோக்ஷார்த்தம் இதைஎவ்விதத்தாலும் விரித்துச்சொல்வதல்ல சாத்திரம் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலும் அறமேயாம். அஃது ஒழுக்கம், வழக்கம், தண்டம் எனமூன்று வகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலியோர் அறநெறிவழிநிற்றல். வழக்கென்பது, கடன் கோடன் முதலிய பதினெட்டு பதார்த்தமாம். தண்டமென்பது ஒழுக்கம், வழக்கு இவைகளில் தப்பிப்போவதைப் பற்றி நடத்துவதேயாம்.

ஒழுக்கமே அறமெனத்திருவள்ளுவர் குறளில் துறவறத்தையன்றி இல்லறவியல்பே பெரிதாகக்கொண்டு கூறுகின்றனர்.

## குறள் ரு - அதிகாரம் இல்வாழ்க்கை.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை ... மையையுடையவனு ...தயம் இரோவதி என்றுப்பத்திரண்டறமும் செய்பவனென்பதாயிற்று

சாதாரணமாக வேளாளரகத்தில் காலைமாலை அன்னமும், களப்பிச்சை சுதந்தரமும் பெற்று ஜீவிப்பதனாலும், ஏவல்செய்தாலும் அரசனால் மற்றையதருமங்களைச் செய்யக்கடமைப்பட்டவர்கள் தங்கள் வேளாண்மை ஐந்துபாகம் பெற்றுக்கொள்பவராதலாலும், முப்பத்திரண்டறமுஞ்செய்வது வேளாளருக்கேயியறகையாயுடையதாயிற்று

## திருத்தொண்டர் புராணவரலாறு.

இமயமலை யரையன்மக டழுவக்கச்சி
யேகம்பர் திருமேனி குழைந்தருளான்று

ஷை அதி ௩-தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றுனென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை. (௩.)

(இ - ள். ) பிதுரர், தெய்வம். அதிதி, சுற்றத்தார், தான் என்
னும்இவ்வைந்துக்கும் ஐந்துபங்கு வேண்டுவதால் வெளாண்மையில்
அரசனுக்கு ஆறில் ஒருபங்காயிற்று.

ஷை அதி ச- பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். (ச.)

(இ - ள். ) பாவத்திற்கஞ்சி பொருள்தேடி அன்பும் அறனும்
குணமும் பிரயோசனமும் பெற்றுவாழ்பவன் சந்ததி யெப்போதுங்
குறைவதில்லை.

ஷை அதி ௰-வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். (௫.)

(இ-ள்.) கற்பே காவலாகட்பெற்ற மனையாள் கிடைத்தல் நன்மை நல்
லபுத்திரரைப்பெறுதல் அந்நன்மைக்கு ஆபரணம் இப்படி இல்லற
த்து வழுவாது நடப்பவன் தெய்வத்துள் ஒருவனாக மதிக்கப்படு
வான்.

அன்புடைமை,

அ-அதி-ரு-அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. (௬.)

(இ - ள், ) இம்மண்ணுலகத்து இன்புற்றவர்கள் வேள்வியைச
'சய்து விண்ணுலகத்தும் தேவராய்ப்பிறந்து அங்கும் இன்பத்[illegible]ம்,

கச. பிணர்தள்: [illegible] 'திச்

சிறப்புப்பூசனையன்போடு தந்திரட்சித்தலும் ', ஆது [illegible]ரை
யூட்டிப், பல்லறம்புரிந்து, அக்[illegible] னோர் யூட்டு
தலாம். (பொன்னோர்=தலையோர்)

## இவற்றுள் நிலக்கூறு காலக்கூறியாவன.—

மலை, காடு, வயல், மணல், முரம்பு முதலியவைந்திணைவகைப்பும்
(முரம்பு-பாலை) கார் கூதிர் முதலிய பெரும் பொழுதும்; காலை, நண்
பகல் முதலிய சிறுபொழுதுமாகிய முதற்பொருளின் பொதுவியல்
புகளும் ; செந்நிலம், வெண்ணிலம், கருநிலம், களிநிலம், உவர்நிலம்
அளற்றுநிலம், வன்னிலம், மென்னிலமுதலியவும் பக்கங் கிழமை
நாள் ஓரை யோகங் கரணமுதலியவுமாகிய சிறப்பியல்புகளுமாம்.

ஷை-அதி-உ உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்று
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. (கூ.)

(இ - ள்.) உலகத்தாராகிய தேர்க்கு உழுநர் அச்சாணியாவா ரென்றும்.

ஷை-அ-ரூ உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். (கo.)

(இ - ள்.) உழுதுண்டுவாழ்பவரே வாழ்பவர் மற்றையரிவர்க்குத் தொழுதுண்டு பின்செல்பவர் என்றும்.

ஷை-அ-சு பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர். (கக.)

(இ - ள்.) இரப்போர்க்கெல்லாம் ஈதலேக்கித் தங்குடைக்கீழ்தம் மரசனுக்கு வெற்றியைத்தருவர் எனவும்.

ஷை-அ-ரு இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். (கஉ.)

(இ - ள்.) உழுதுண்பவர் யாசியார் இரப்பவருக்குக் கொடுப்பர் எனவும்.

ஷை-அ-சு உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. (கரு.)

(இ - ள்.) உழுமவன்கைமடங்குமாயின் யாவரும் விரும்பும் [illegible] என்றும்.

[illegible]போதல்,—புதன், வெள்ளி கூடுதல், [illegible]
தல்,—சுக்கிரன். மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை என்னும்
ஐந்து நக்ஷத்திரத்துடன் கூடி மேற்கிலும், சுவாதி, அனுஷம் கேட்
டை என்னு மூன்று நக்ஷத்திரத்தோடு கூடி கிழக்கிலும் போதல்—
பூரம் சித்திரை சதயம் இரேவதி என்னும் நான்கு நக்ஷத்திரத்தி
லும் சந்திரன் குரூர கிரகங்களோடு கூடியிருத்தல், புரட்டாசி மாச
த்தில் இருபக்கத்திலும் வரும், அட்டமிதிரயோதசியில் கிரகங்கள்கூ
டலும்,—சூரியனும் சந்திரனும் ஆண் நக்ஷத்திரத்திலும பெண்நக்ஷத்
திரத்திலும் மாறிக்கூடுதலும் மழைக்குறியாம்

## ஆடிமூ உத்திராடக்காற்று.

காலைக்கொண்டல் பின்மாரியதே—நிசமன்றிசைத்தேற்
சிறுநாட்கலகம்—தென்மேற்றுபிற் செறிவிளைவின்றே
கோடைவடந்தை குளிர்பெயறலையும்—குடவாடைக்கே
கொள்புழுவிட்டின்முன்—நோய்பிறவென்ப நுண்ணறிஞர்

சமயமவை யாறினுக்குந் தலைவிக்கீசர்
தந்தபடி யெட்டுழக்கி ராழிநெல்லு
முமைதிருச்கு டகக்கையாற் கொடுக்கவாங்கி
யுழவுதொழி லாற்பெருக்கி யுலகமெல்லாந்
தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும்வேளாண்
டலைவர்பெரும் புகழுலகிற் றழைந்ததன்றே..

### உழவுநன்னுட்கோடலாவது.

கரியமேகமானவை மங்கலம்படமழை பெய்யுங்காலத்தின் கண்ணே, காராளராவார்தமது ஏரானுழுதொழிற் றொடங்குங்கால், நிலக்குறி, காலக்குறி, விளைபொருட்பகுதி முதலிய நன்குணர்ந்து, மழைத்திறமும், வெயிற்றிறமும், காற்றின்றிறமுதலியவுங் குறி[illegible]ாலே பொதுச்சிறப்பு வகைகளானறிந்தபின்னர், சித்திரைதிங்களும், முற்பக்கமும், சனி ஞாயிறொழிந்த கிழமையும், நவமியுமிரட்டித்த திதியுமொழிந்தனவும், நீரோரை, தீயோரை, சிலையோரைநீக்கி, நிலவோரையுள்ளும், (ஓரை=இராசிப்பொது) உரோகணி, மூலம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி, புனர்பூசம், பூசம். அத்தமென்னு நாளுங்கூடிய வழி, சோதிடநூலோர் கூறியவா[illegible].) அலப்படைகோட்டங் கீறி யிருபானேழ் [illegible] றன க்கு மங்நாட் [illegible] பக்கத்து இன்புற்றவர்கள் வேள்வியைச் [illegible] ம், து வண்ணுலகத்தும் தேவராய்ப்பிறந்து அங்கும் இன்பத்[illegible] இச் [illegible]ர்கள். [illegible] ழும. [illegible] சிறப்புப்பூசனை[illegible] [illegible] ஆது [illegible]ரை யூட்டிப், பல்லறம்புரிந்து, அக்[illegible] [illegible]ர்னோர் பூட்டுதலாம். (பொன்னேர்=தலையேர்)

### இவற்றுள் நிலக்குறி காலக்குறியாவன.—

மலை, காடு, வயல், மணல், முரம்பு முதலியவைந்திணைவரைப்பும் (முரம்பு-பாலை) கார் கூதிர் முதலிய பெரும் பொழுதும்; காலை, நண்பகல் முதலிய சிறுபொழுதுமாகிய முதற்பொருளின் பொதுவியல்புகளும் ; செந்நிலம், வெண்ணிலம், கருநிலம், களிநிலம், உவர்நிலம் அளற்றுநிலம், வன்னிலம், மென்னிலமுதலியவும் பக்கங் கிழமை நாள் ஓரை யோகங் கரணமுதலியவுமாகிய சிறப்பியல்புகளுமாம்.

## வித்துமுதலிய விளைபொருட் பகுதியாவன.

கருப்பொருட்டிறங்கள் ஈண்டுகருப்பொருள் பதினான்கனுள்வற பனகொள்க. கொள்வனவற்றிற்கும் விடுப்பனவற்றிற்கும் காரண மும், இயைபுபநிமித்தமும், வகையும், பிறவும் விரிந்தநூலுட் காண்க.

மழைத்திறம், வெயிற்றிறம் காற்றின்றிறமுதலியன, மிகுதி, குறைவு, சமநிலை என்பன. இவற்றைக்குறிகளாலே பொதுச்சிறப் புவகையானறிகையாவது கோணிலைப்பற்றியும், வானவில், பரிவேடம் நாள், மழைமுதலியபற்றியுமுணர்தல். அவைவருமாறு.

> வானவர் தானவர் மந்திரமொழுகை—மேனிலைவீழ்கை
> வெள்ளிசுன்முன்னுறல்—புந்திசுங்கன்புணர்ச்சி யாலோ
> னீரிராசி நிற்கை மகமுதல்—ஐவகைநாளிற்
> குணக்கினுங் குடக்கிற்—சோதிமுன்மூன்றினுரு
> சுங்கன்செலவு—வானநாடியென வழுத்துறு பூரம்
> சித்திரைசதயந்திகழிரேவதியின்—மதியொடு தீக்கோன்
> மருவுதல்காரின்—உவாவணை பகல்கடேய் பிறையுப்பால்
> எட்டேபன்மூன்றிரவி கன்னியில்—ஆண்பெண்ணுளி
> னலரிமுயற்கறை-மாறியநாளுமழைநாளென்ப. எனவும்.

(இ - ள்) குரு, சுக்கிர வுதயம், அத்தமயம்,—வெள்ளி சனிக்கு முன்போதல்,—புதன், வெள்ளி கூடுதல்,—சந்திரன் ஜலராசியேறு தல்,—சுக்கிரன். மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை என்னும் ஐந்து நக்ஷத்திரத்துடன் கூடி மேற்கிலும், சுவாதி, அனுடம் கேட் டை என்னு மூன்று நக்ஷத்திரத்தோடு கூடி கிழக்கிலும் போதல்— பூரம் சித்திரை சதயம் இரேவதி என்னும் நான்கு நக்ஷத்திரத்தி லும் சந்திரன் குரூர கிரகங்களோடு கூடியிருத்தல், புரட்டாசி மாத த்தில் இருபக்கத்திலும் வரும், அட்டமிதிரயோதசியில் தீக்கோள்கூ டலும்,—சூரியனும் சந்திரனும் ஆண் நக்ஷத்திரத்திலும் பெண்நக்ஷத் திரத்திலும் மாறிக்கூடுதலும் மழைக்குறியாம்.

### ஆடிமாத உத்திராடக்காற்று.

> காலைக்கொண்டல் பின்மாரியதே—திசமன்றிசைத்தேற்
> சிறுநாட்கலகம்—தென்மேற்குயிற் செறிவிளைவின்றே
> கோடைவடந்தை குளிர்பெயறலையும்—குடவாடைக்கே
> கொள்புழுவிட்டின்முன்—நோய்பிறவென்ப நுண்ணறிஞரு

ணர்ந்தோர்—ஆடியுத்திராடத்தமைகாற்றுக்கே-பூரணையற்றைப் பொருந்தப்பொலிவு—பானுவை யெழிலி படியிற்பெருமழை வைகறைநாடன் மரபென்றிசினே. எனவும்.

உதயத்தில் கீழ்காற்றடித்தால் } பின்மழையுண்டாம்.

அக்கினிமூலைக்காற்றுந்தென்காற்றுமடித்தால் { கலகமும் பஞ்சமுமுண்டாம்

தென்மேற்கு காற்றடித்தால் } விளைவில்லை

மேற்காற்றும்வடகாற்றுமடித்தால் } நல்லமழையுண்டு.

வட மேற்குகாற்றடித்தால் } மிருக கலிப்பும் விட்டிலும், புழுவும் வண்டுமாகும்.

வடகீழ்காற்ற டித்தால் } முன்மழையுண்டாம்

அப்பொழுது பூரணையுங் கூடினுல் } உத்தமம்

அன்று உதயத்தில் பொழுதுகாட்டினுல் } நல்லமழையுண்டு.

### ஆடிமுற்பிறையாதும் பஞ்சமி.

ஞாயிறுசிறுமழைநயமதிவெள்ளம்—ஆரல்போரோயாங்காண் மதிமகன் வியாழன்விளைவேவெள்ளிபெருமழை—மந்தன்பாழென மதித்தனர் கொளலே. எனவும்.

(இ - ள்) ஆடிமீ வளர்பிறை பஞ்சமி ஞாயிற்றுக் கிழமையில வரின். } கொஞ்சமழை.

| | | | |
|---|---|---|---|
| ,, | திங்கட்கிழமை வரின் | | } வெள்ளங்காணும் |
| ,, | செவ்வாய் | ,, | } சண்டையுண்டாகும் |
| ,, | புதன் | ,, | } பெருங்காற்று |
| ,, | வியாழம் | ,, | } நல்லவிளைவு |
| ,, | வெள்ளி | ,, | } பெருமழை |
| ,, | சனி | ,, | } விளைவில்லை. |

### ஆடித்திதிக்குறி.

நண்டுமுற்பக்கநவமிசோதி—மண்டிற்சூன்முகின்மழைகாற்றுருமின் முன்மாரிபத்துமுறத்தொடையுறி—னடுமாரியுருத்திரனுடத்தி னண்ணிற்—பின்மாரிபிற்பிறைபேருருச்சகடம்—பத்துமப்பின்னும் பற்றப்பகன்மறைந்—துற்றவேன்மாரியென்றேதினர்புலவர்.

எனவும்.

(இ - ள்) ஆடிமீ வளர் பிறை நவமியும் சுவாதி நக்ஷத்திரமுங் கூடிய நாளில். } மந்தாரம், மழை, காற்று குமுறல், மின்னல், இது களில் எதுஉண்டானுலும். { முன் மழை.

,, தசமியும் - விசாகமும் } ,, { நடுவில் மழை.
,, ஏகாதசியும் அனுஷமும் } ,, { பின்மழை

ஆடிமீ தேய்பிறையில் தசமி அல்லது ஏகாதசியுடன் உரோகிணி கூடியபொழுது. } பொழுது கட்டினால் { நல்லமழை.

(பரிவேடக்குறி.)

ஆடி யுவாமதியை யப்பரிவே டம்முற்பால்
கூடிற் றலைமாரி கூறுநடு-நாடிற்றேண்
மாரியா மூன்று மருவுபத்து நாழிகையேற்
சேருந் தனுவின்மழை தேர். எனவும்.

ஆண்டளப் பான்புக ராலோ னுடன்வேடம்
பூண்டாற் பெருமழையாம் புந்திகால்-நீண்டசேய்
மந்தனேன் மாரியிலை மன்னர்படு வாராவா
னந்துநாட் சந்திரனை நட்டு. எனவும்.

(இ - ள்) பரிவேடம் என்றால் சூரியன் அல்லது சந்திரனைச் சூழத்தோன்றும் வட்டம் இதனைக்கோட்டை கட்டுதலென்பாருமுளர்

ஆடிமீ பூரணையில் } முதல்பத்து நாழிகையில் சந்திரனைப் பரிவேடமிட்டால் { ஐப்பசியில் மழையாம்
,, உ-ம் - பத்து ,, கார்த்திகையில் ,,
,, ௩-ம் - பத்து ,, மார்கழியில் ,,
,, இரவு முழுமையும் ,, ஷை ௩-மீ மும் அடையாமழையாம்

சந்திரனைச் சுக்கிரனுடனே பரிவேடமிட்டால் } நல்லமழை.
செவ்வாய் சனியுடன்பரிவேடமிட்டால் } மழையில்லை.
கிரகணகாலத்தில் பரிவேடமிட்டால் } இராஜாக்களுக்காகாது

மகவோட்டம்

காணுமாசிக் கலைமதியங் கருதுமகமீனென்கவையும்
பேணுந்தென்பான்மிகச்சேரிற் பெரிதாமஃகந்தானென்ப
பூணிலொன்றுகாலிரண்டே லரையாமூன்று முக்காலாம்
சேணில்வடபான் மீன்சேரிற்செகத்திலன்னஞ் சிறுகாதே

(இ - ள்) மாசிமீ பூரணையில் சந்திரனும் மகநக்ஷத்திரமும் உச்சமாகும்போது சந்திரனுக்குத் தெற்கில் ஒருநக்ஷத்திரம தள்ளில் } காற்பங்குநாசம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | இரண்டு | தள்ளில் | அரைப்பங்கு | ,, |
| ,, | மூன்று | ,, | முக்காற்பங்கு | ,, |
| ,, | நான்கு | ,, | முழுமையும் | ,, |

சந்திரனுக்கு வடக்கில்தள்ளில் } மிகவும்சவுக்கியம்

மூன்றாம்பிறை.

மீனுடு தெற்குயர மிக்கெட்டு மேவடக்காம்
தான்மகர கும்பஞ் சரியாக—மானேகேள்
சொன்னபடி சோம னிராவெனன்னிற் கோன்மடிவ
னன்ன மரிதாய் விடும். எனவும்.

(இ-ள்,) பங்குனியும்,சித்திரையும். } தென்கோடுயரவேண்டும்.
வைகாசி முதல் மார்கழி வரையில் } வடகோடுயரவேண்டும்

தையும் மாசியும் சமனாக விருக்கவேண்டும் மேற்கண்டபடியில் லாவிடின் கலகமும் பஞ்சமுமுண்டாம்.

கிரகணம்.

அருக்கனையுஞ் சோமனையு மைமூன்று நாளி
னெருக்கி யரவமது தீண்டிற்—பெருக்கவே
மன்னர்மடி வார் மடியாரோ யாமாகி
லன்ன மரிதாய் விடும். எனவும்.

(இ-ள்.) சூரிய சந்திர கிரகணம் ஒருபக்ஷத்தில் வந்தால் கருப்பு கலகமாம்

நேர்ப்போட்டகலக்ஷணம்.

தநுசில் சூரியனிருக்கும்போது பூராட நட்சத்திரத்தில் சூரியன் பிரவேசித்த நாள்முதல் அந்த நட்சத்திரத்தில் இருக்குமளவும் கெர்ப்போட்டகமென்று பெயராம். அந்தப் பூராட நட்சத்திரத்தில் - கரு நாளும்-அ-நாழிகையும்-கரு-விநாடியும் சூரியனிருப்பான். எந்த வருடத்திலும் இப்படியே சஞ்சரிக்கும், ஆனி மாதத்திற்கு கெர்ப்பநாள்-கவ ஆடிக்கு நாள்-உளு - ஆவணிக்கு நாள்-உளு புரட்டாசிக்கு நாள்-உளு ஐப்பசிக்கு நாள்-உளு கார்த்திகைக்குநாள்-ளுமார்கழிக்கு நாள்-ளு தை மாதத்திற்கு நாழிகை-கரு மாசிக்கு நாழிகை-கரு பங்குனிக்கு நாழிகை-கரு சித்திரைக்கு நாழிகை-கரு வைகாசிக்கு நாழிகை-ககளு இந்தப்பிரகாரம் கெர்ப்போடகம் ஓடும் இந்த வருடத்தில் கெர்ப்போடகமானது மறு வருடத்திற்கே வருடத்திற்குள்ள பலனைக்கொடுக்கும்.

இதின் இலட்சணமாவது:

௧ - அந்தியப்ரம் - மப்பு. ௫ - அதிதாபம் - குளிரில்லாமை.
௨ - அதிவாயு - காற்று. ௬ - அதிவருஷம் - அதிகமழை.
௩ - அதிசீதம் - குளிர். ௭ - அதிகெற்ஜனம் - குமுறல்
௪ - அதிஉஷ்ணம் - வெயில். ௮ - அதிதுகினம் - மூடுபனி.

இந்த-அ-குறியில் எந்தக்குறி யுண்டாயிருந்தபோதிலும் கெர்ப் போடகமென்று சொல்லப்படும்.

வானவிற்குறி

ஆனியுட னுடி யாவணியித் திங்களிலே
கூனியே வான்விற் குணதிசையில்—மானேகேள்
மேவின் மழையறுமே விண்ணு டறக்குமே
பூவின் விழுவறுந்து போம்.

(இ-ள்) ஆனி, ஆடி, ஆவணி. இந்தமாதங்களில் கிழக்கே இந் திரவிலலுண்டானல் பஞ்சமுண்டாகும்

சுவாதி மின்னற்குறி

துலைச்சோதி சூரியன்சேர் காற்கிழக்கின் மின்னி
னிலைப்பஞ்சம் வையத்தி னெண்ணுய்-நிலைத்ததொரு
சிங்க மதிமுதலிற் சேரைந்து நாளுமிடி
தங்க மழைக்கில்லை தவறு எனவும்.

(இ-ள்) ஐப்பசிமீ சுவாதி நக்ஷத்திரத்தில் சூரியன்வரும் நாளில் கிழக்கில் மின்னினுல, மழையுண்டு

மழைக்குறி.

வைகாசி மாத மதிகுறைந்த நாலாநாள்
பெய்யுமே யாயிற் பெருமழையாம்—பெய்யாக்கால்
ஏரி குளமு மெழிற்கிணறு நீர்வற்றும்
பாரின்மழை யில்லையாம் பார். எனவும்.

(இ-ள்) வைகாசிமாதம் தேய்பிறை சதுர்த்தியில் மழைபெய் தால் அவ்வருஷம் நல்லமழையுண்டு.

தேதி மழை.

" மலர்பத்துப் போதெட்டு வானரும் பேயாறு,
மிலைநான்கே கொம்பிரண்டே வேரொன்றே, வேரின்
முதலொன்றே முந்திரை வாய்க்கு."

(இ-ள்.) [illegible]மீ கoஉ ஆடிமீ அஉ ஆவணிமீ சுஉ புரட்டாசிமீ சஉ ஐப்பசிமீ உஉ கார்த்திகைமீ கஉ மார்கழிமீ கஉ இந்ததேதிகளில் மழை தூறினால் அவ்வருஷம் நல்ல மழை எனவும் வருவன பல. அவையெல்லாம்உள்ளமுடையான் முதலியதமிழ்ச்சோதிட நூலுள்ளும், நாராயணியம், வராகம், பிருகச்சங்கிதை முதலிய வடநூலுள்ளுங் காண்க. இவை முற்றும் உலகப்பொதுவி னிகழுங் குறியாம்.

இனி யொவ்வொரு தேயத்திற்கும், ஒவ்வோ ரூரிற்கும், அம்மழை முதலியனவற்றை யிற்றெனவறியுஞ் சிறப்புக் குறிகளுமுள்ளன அவற்றை மேற்குறித்த நூலாராய்ச்சி வல்ல கணிதன் அவ்வவ்வுழியிருந்து வெயிற்காலாதிய குறி நாடோறு மிருந்தெண்ணி யாராய்ந்துணைக்கற்பாற் றென்றறிக.

### சித்திரைமாதப் பிறப்பு.

| | | |
|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமையில் | வந்தால் | அற்பமழை. |
| திங்களில் | ,, | வெள்ளம். |
| செவ்வாய் | ,, | கலகம். |
| புதன் | ,, | காற்று. |
| வியாழம் | ,, | சுபம். |
| வெள்ளி | ,, | பெருமழை. |
| சனி | ,, | மழையில்லை |

இதுபோல்வன அநேகங் குறிகளுமுண்டு.

### வருஷபணி சக்கிரம்.

| ஊர்த்துவ நாடி. | சூரிய நாடி. | தகன நாடி. | ஜீவ நாடி. | சௌமிய நாடி. | ஜல நாடி. | அமிர்த நாடி. |
|---|---|---|---|---|---|---|
| திருவாதிரை. | புநர்பூசம். | பூசம். | ஆயிலியம். | மகம். | பூரம். | உத்திரம். |
| மூலம். | கேட்டை. | அநுஷம். | விசாகம் | சுவாதி. | சித்திரை. | அஸ்தம். |
| பூராடம் | உத்திராடம். | அபிசித்து. | திரு[ம் வோண | அவிட்டம். | சதயம். | பூரட்டாதி. |
| மிருகசீரிடம. | ரோகிணி. | கிருத்திகை. | பரணி. | அசுவனி | ரேவதி. | உத்திரட்டாதி. |
| சண்டவாயு. | வாயு. | அநாவிருஷ்டி. | அதிவிருஷ்டி. | சொற்பவிருஷ்டி | சுவிருஷ்டி. | பிரளயவிருஷ்டி |

அபிசித்தாவது உத்திராடத்தில் ஒரு பாதமும் திருவோணத்தில் இரண்டுபாதமும் அபிசித்தென்று சொல்லப்படும். இச்சுபநாடிகளில் சந்திர சுக்கிர குரு பிரவேசிக்கும் காலத்தில் விசேஷவிருஷ்டி. அசுபநாடிகளில் பிரவேசகாலத்தில் சாமானியவிருஷ்டி. அசுபநாடிகளில் ரவிகுஜ சனிராகுபிரவேசிக்கும் காலத்தில் அனுவிருஷ்டி. சுபநாடிகளில் பிரவேசிக்கும் காலத்தில் துஷாவிருஷ்டி.

சமுத்திரத்தில் மாசப்பிரவேசமானால் மகாவிருஷ்டி. தீரத்தில் அற்பவிருஷ்டி. பருவதத்தில் துஷாவிருஷ்டி. குக்ஷியில் சொற்பவிருஷ்டி.




இக்குறிகளெல்லாமறிந்த வேளாளர் பின்னர் உழவுச்சிறப்புச்செய்வர். அதாவது.

கருவிமழைப்பெருக்கு நீருலாவருதற்றொழிலை மேற்கொண்டவதனால், பல்வளனும் வளர்ந்த எவ்வகைப்பட்ட நிலத்தின் கண்ணும் தம்

முடைய புகழ்பரவிக்கொள்ளும்படி விளக்கஞ்செய்யும்செல்வம் இடையீடுபடாநீங்காது பெருகுதலையாளுதல்வல்லார் உழுதலாய விழாவைத் தொடங்குங்கால்.

| | | | |
|---|---|---|---|
| ௮ - எருது பூட்டுவது | உத்தமம் | ௪ - எருது பூட்டுவது | அதமம். |
| ௬ - ,, | மத்திமம். | ௨ - ,, | அதமாதமம் |

## உழவுக்கேற்றவெருத்திலக்கணம்.

ஊனமும், இளைப்புமற்றவுறுப்பினவும், நோயற்றனவும், திருத்திபெற்றனவும், செருக்கிமுழக்கஞ் செய்வனவும், ஆண்டன்மைகுன்றுதனவுமாம்.

## உழவிற்காகாதன.

பசிதாகத்திளைப்புற்றனவும், மேற்கூறியனவற்றிற்குமாறுனவுமாம். இவற்றைப்பாரம் சுமப்பித்தலும், உழப்பித்தலும் ஆகாவாம்.

## இனிதொழில்கொள்ளும் வகையாவன.

கூறிப்போந்த விலக்கணமுடைய வெருத்தினை உச்சிக்குள் பூட்டித்தொழில்கொள்வது, உழுதுவிட்டபின்னீராட்டி ( யுபசரிப்பது உழுங்கால் உங்காரத்தாற் செலுத்துவதேயன்றி உலர்ந்த இலையுடைச்சிறுவளாரினுலு மொருக்காலே சிறிது அதட்டிஒட்டுதலாம். கயிறு தடி பெருங்கோல்முதலியவற்றாலடித்தலும்பலகாற்றுரட்டலும் ஆகா. இங்ஙனமுழுதனவற்றைவைக்கோல் நீர்முதலியவற்றால இளைப்பாற்றுவித்துப்,பின்னர் தாம் பசியாறுதன் முதலியபுரிப.ஒருயாமப்போது வேலை கொள்ளுதனன்மரபு.தொழிற்றிறநோக்கி யிரண்டியாமமுமாம் அப்பால்தொழில்,எத்திறத்தாயினுமாகாவாம்.அளவைகடந்தசுமையும் உழைப்புமாகா.நடுப்பகல்,மாலை,இரவுகளில் தொழிலன்றியேமத்திருத்துப.ஒரோவழிவழிநடைக்கணிருபோதுமாம்.

இங்ஙனம் உழவுக்குண்டையைவருத்திய தீமையற இருப்பினர் மூவரும்,தவம்,தேவர்பூசனை, வேள்வி,வேதமோதல்பல்காற்புரிவதன்றி வேதியரை நாடோறு முண்பிக்க.

> "எருதுடையான் வேளாள னேலாதான் பார்ப்பான்
> ஒருதொடையான் வெல்வது கோழி—உருவோ
> டறிவுடையா ளில்வாழ்க்கைப் பெண்ணெனன்பாள் சேனைச்
> செறிவுடையான் சேனு பதி."

என்ற இடைச்சங்க வாணராகியகாகனூர் கூறியவெண்பாவானு முணர்க.அவ்வானிரை காத்தலையுங்கூறுவான் கருதினூர்.தாமேரெழு

பதெனவுழவுத் தொழிற் சிறப்பொன்றனையே கூறியபுக்காராதலினீ ண்டுக்கூறின், மற்றொன்று விரித்தலாமாகலினிங்ஙனம் கூறியபடி.

**இனி அவ்வானிரைகாக்குந் திறமாவது.**

அவை நீர்பருகியவழித்தாம்பருகலும் படுத்தவழியிருத்தலும், அலந்து கிடந்தனவற்றை யெழுப்பாமையும், பசியவளார் முருட்டுக் கட்டையானன்றிச் சருகுடைய வுலர் வளாராற் கான் முதலிய விடங் களின் மெல்லத்தீண்டிச் செலுத்தலும் மேடு பள்ளஞ் சேறுளையுடைய நீர்நிலை செலுத்தாமையும், வறுநிலம் போக்காமையும், புனிற்றுக் கன்று, முதுபெற்றம், நோயுடைப்பசு போல்வனவற்றிற் கியன்றன புரிந்து துன்பப்பீழையாற்றலும், கள்ளர், புலி முதலிய வூறு அகற் றலும் பிறவும்போல்வன.

**காலமறிந்து விதை விதைத்தற்கு நக்ஷத்திரபலன்.**

ஓண மாதிரை பூச முரோகிணி
நீணி லுத்திர மூன்று சதயமும்
ஆணி யான வவிட்டத்தோ டொன்பதும்
பூண லாகுமே ஞெக்கும் பயிருக்கே, (க)

பரணி கார்த்திகை பாம்பு விசாகமும்
முரண மூல முப்பூர மகத்துடன்
கிரண மான கிழங்கு பதித்திட
தரணியிற் றழைத தோங்கிடு நாள்களே. (உ)

சோதி சித்திரை சோம ஞெடு பரி
ஆதி யத்த மனுஷ மிரேவதி
நீதி கேட்டை நிகழ்புரர் பூசமும்
வீதி யாக விளங்கிப் படருமே. (ங)

| ஊர்த்துவமுக நக்ஷத்திரம். | அதோமுக நக்ஷத்திரம். | திரியக்முக நக்ஷத்திரம். |
|---|---|---|
| க. உரோகணி. | க. பரணி. | க. அசுவனி. |
| உ. திருவாதிரை. | உ. கார்த்திகை. | உ. மிருகசீரிஷம். |
| ங. பூசம். | ங. ஆயிலியம். | ங. புனர்பூசம். |
| ச. உத்திரம். | ச. விசாகம். | ச. அஸ்தம். |
| ரு. உத்திராடம் | ரு. மகம். | ரு. சித்திரை. |
| சு. திருவோணம். | சு. பூரம். | சு. சுவாதி. |
| எ. அவிட்டம். | எ. மூலம். | எ. அனுஷம். |
| அ. சதயம். | அ. பூராடம். | அ. கேட்டை. |
| கூ. உத்திரட்டாதி. | கூ. பூரட்டாதி. | கூ. இரேவதி. |
| இவைகளில் நன்செய்புஞ்செய் காய் தானியம் செடி முதலிய மேனோக்கும் பயிர்செய்யஉத்தமம் | இவைகளில கீழ்நோக்கும் பயிர்களான கிழங்குகள் நடவும் ஏரி குளம் கால்வாய் வெட்டவும் வரப்பு கோலவும் உத்தமம். | இவைகளில் பொன்னேர் பூட்டவும் ஓடிப்படருங்கொடி நடவும் உத்தமம். |

இஃதன்றியும் அசுவனியில் கரும்புவைக்கவும் ஆயிலிய மூலத்தில் வெற்றிலைக்கொடி பதிக்கவும். அனுஷம் சதயத்தில எள்ளு விதைவிதைக்கவும் உரோகணியில் மரம வைக்கவும் பரணியில் கத்திரி முதலியவை நடவும். சித்திரையில் பயறு விதைக்கவும். உத்தமம்

விதைக்கும் காலம்.

(பருவத்தே பயிர் செய்) என்ற முதுமொழியை நன் குணர்ந்து பயிர் செய்யவேண்டும். பருவமாவது

| | | | | |
|---|---|---|---|---|
| (க) | கார் பருவம் .. | ஆவணி . | புரட்டாசி | இவை மாரிக்காலம். |
| (உ) | கூதிர் ,, ... | ஐப்பசி | கார்த்திகை | |
| (ங) | முன்பனி ,, .. | மார்கழி | தை | பனிக்காலம். |
| (ச) | பின்பனி ,, | மாசி . | பங்குனி | |
| (ரு) | இளவேனில் | சித்திரை | வைகாசி | கோடைகாலம். |
| (சு) | முதுவேனில் | ஆனி . | ஆடி | |

கோடைகாலத்து புன்செய்நிலத்தை உழுது புழுதியாக்கி கிடைகட்டி எருவிட்டும் நன்செய் நிலத்தைச் சேறாக்கிப் பதப்படுத்தி மாரிகாலாரம்பத்தில் விதைத்து நாற்றாக்க வேண்டும்.

### பயிரின் கால வளவை.

| | | | | |
|---|---|---|---|---|
| அறுபதாங் குறுவை | மாதம் | உ | நாள். | ௰ |
| புன்செய் பயிர்கள் முதலியவை | ,, | ௩ | ,, | 0 |
| ஊசிகுந்தாணி அன்னதானச்சம்பா முதலியவை .. ...... | ,, | ௩ | ,, | ௰ |
| மணவாரி முதலியவை | ,, | ௪ | ,, | 0 |
| வாடஞ் சம்பா முதலியவை | ,, | ௫ | ,, | 0 |
| செம்பாளை கடம்புக்கார் முதலியவை | ,, | ௬ | ,, | 0 |
| மல்லிகைச் சம்பா கைவிரிஞர்க்குச்சம்பா முதலியவை ... | ,, | ௭ | ,, | 0 |
| கல்லுண்டை மூத்துச்சம்பா காடைக் கழுத்தன் முதலியவை | ,, | ௮ | ,, | 0 |
| ஒட்டம்முதலியவை | ,, | ௯ | ,, | 0 |
| அறுபதாங்குறுவை | ,, | | ,, | ௬0 |

ஒட்டம் வேறு விதையுடனுங் கலந்து விதைப்பது. மடிவிழுங்கி மடியில விதைத்தாலும் நீரின்மேலெழுந்து கதிர் விடும். மலைகுலுக்கி மலையில் விதைத்தால் குலுங்கப் பயிராகும்.

சாதாரணமாக சம்பா கார் இனிசு நெல் அநேகமாயுள்ளன.

ஜீவ, மூல தாதுக்கள் என்னும் எருவையிட்டால் எருக்களை மண்உண்டு நிலம் சத்துண்டாகும் அந்த சத்தை வேரின் மூலமாக உறிஞ்சு பயிர்செழிக்கும் அம்மூலவாய்மாகிய பயிருக்கு ஓர் கூறு நீரும் ஓர் கூறு வாய்வுமாம் தரையிலுள்ள ஆகாரம் நீரிற் கரைந்து வேர்வழியாக ஏறும் வாய்வினின்று ஆகாரம் இலைவழியாக இறங்கும் எரு விடாவிட்டால நிலம் சத்து குறைந்துவிடும் விளையாது. நில வேற்றுமையும் பருவ காலத்துக்குத் தக்க விதையும் அறிந்துவிதைக்க வேண்டும். (இதின் விரிவை விவசாய நூலுட்காண்க.)

(வேளாளர் தராங்கமென்பதற்கு.)

யுகமேழுகோடி யிருபதிலக்கமு முள்ளமட்டுஞ்
சகமேழுமேழும் புகழேறிறுத்தித் தமிழ்புனைந்து
புகழ்மேழிவாகைப் பதாகையும்விரப் புகழ்க்கொடியு
மகமேருவிற்சென்று நீட்டியதாற்றொண்டை மண்டலமே.

(இதன் பொழிப்பு.)

ஏழுகோடியே யிருபதுலக்ஷம் யுகமளவும் பதினான்கு லோகத்தும் புகழும்படிக்குள்ள தமிழ்ப்பாமாலை புனைந்து புகழப்பட்ட மேழி

க்கொடியையும் தங்கள் வீரத்தாலும் புகழாலும் பெற்ற மற்றைக்கொடிகளையும் மகமேருவிற்சென்று அம்மகம்மேருமலையில் வேளாளர் எழுதிவைத்திருக்கின்றதும் இத்தொண்டைமண்டலத்திலே. (சுசு)

## வரலாறு புராணசாரத் திரட்டு.

நெடுநீர்வேலி புடவிபோர்த்த — மன்னுயிரொவைக்கு
நன்னயத்துதவுங்—கொடைமடங்குறித்த
கொள்கையிராதலின்—வேளாளரென்ன
வியத்தகுபெயரும்—வருணமாச்சிரமும்
வகையுளித்தாங்கி—திருநிலநிலைத்தலிற்
றிகழ்மேருமலையும்—நல்குரவொழியப்
பல்வளம்பரப்பி—அறங்கடைநிறுத்தி
யனைத்தையும்புரிதஞ்—செய்தவிற்கங்கைத்
திருப்பேர்யாறும்—கோடாமரபின்
வாடாவாகையின்—மன்னரைக்காக்குநா
டெழுபாரெனன்பதும்—அன்னவர்க்காக்க
முன்னியநகர—மொன்றொழியாயிர
மென்றதுமிந்திரற்—கினமுகிலூர்தி
தந்ததூஉமன்றி—அமுதவன்குடிபெறத்
தமரவாரணமுன்—கடைதாவோடதி
கவின்பெறவளிப்ப—நாரணனிசைத்தவள்
வாரணக்குரகத—வூர்தியுந்தொழிற்றிற
முறுகணிக்கருவித்—தாவறக்காட்டுந்
தனிக்குறிக்கொடியாக—சிங்கம்குயிலொடு
திகழ்தருமேழியும்—பொழுதளவறுக்கும்
விழுமியகுறியிற—திங்களனேர்மலர்செங்
குவளைத்தாருங்—கலிப்பகைநெறுபடை
யலப்படையாகவும்—ஆதுலர்விளிக்கு
மருட்கொடைமுரசெனச்—சீரியற்றசாங்க
மார்கவியுலகத்து—செம்மைசிரொன்றே
திகழ்த்தவெங்கணுமேமன. (எ-து)

(௧) பெயர்—வேளாளர்
(௨) மலை—மகமேரு
(௩) ஆறு—கங்கை
(௪) நாடு—௭௯
(௫) நகர்—௯௯௯
(௬) ஊர்தி—ஐராவதம், உச்சைச்சிரவம்
(௭) மாலை-செங்குவளைமலர்
(௮) கொடி—மேழி, குயில்; சிங்க முதலியவை
(௯) படை—கலப்பை
(௧௦) முரசம்--கொடை.

எல்லாமண்டலங்களினும் இத்தொண்டை மண்டலஞ் சிறப்புற்று மகமேரு மலையையும், கங்காநதியையும் தன்னிடங்கொண்டிருப்பதால் கடல் சூழ்ந்த பூவுலகம் யாவும் வேளாளர் பாலதென்றறியப்படும்.

(பலகொடிகள் வந்ததற்குக் காரணம் )

ஆதிகாவியம் என்னும்

கிரந்தத்தி லிருந்து அரங்கமா நகரம்

நம்பியார்

மொழிபெயர்த் தருளியதாவது.

ஓர்காலத்தில் தேவலோகத்துள்ள விசுவகர்மன் வைகுண்டத்தில்திருமால் சந்நிதியிற் சென்றபோது நமஸ்காரமின்றி கர்வித்து வந்தானென்று கோபித்து நீ பூமியிலுள்ள வோர் வேளாளனால் ஒழியக்கடவா யென்று சாபமிட்டபோது விசுவகர்மன் சுவாமிபாதங்களில் வணங்கி அபசாரமென்று முறையிட அப்போது விஷ்ணுவானவர் கிஞ்சித் கிருபாநோக்கம்புரிந்து, நமது சாபம் நீ அனுபவித்தேதீர வேண்டும் ஆயினும் அவ் வேளாளனோடு போர்புரிந்து தோல்வியடைந்து வேளாள குலத்தார்க்கு நீ உன் வம்சத்தோடு ஏவிய பணியாற்றி ஜீவிக்கக்கடவாயென்று அநுக்கிரகித்தார், அவ்வாறே பூமியில் வந்து காசிதலத்துக்குச் செல்லுகையில் முன் ஒரு வெளாளன் பாதலம் புக்கிருந்து வெளிப்பட்டுவருங்கால் எதிர்ப்பட்ட விச்வகன்மன் அவனுடன் பொறாமைகொண்டு போரிட்டு பூர்வ சாபத்தால் தோல்வியடைந்து மூர்ச்சித்து பின்பு தெளிந்து மறுபடியும் பெரும்போர்புரிந்திளைத்துத் தேவலோகம் புகுந்தான். பின்னர் பூவசியன் அங்குமிலாந்துசென்று கைப்பிடியாகக்கொண்டுவந்து பூமியில்விட்டனன் பின்பு சிவன், விஷ்ணு, பிரமன், இந்திரன், குபேரன் முதலானோர் அங்குவந்து அவ்வேளாளன் வீரபராக்கிரமத்தைக் கண்டு பலவாறு வாழ்த்தி இவன் வேளாண்மைக்குள் யாவும்

வசியப்பட்டுள்ளன ஆதலின் வேளாள குலத்தார்க்குவைசியரென்னும் பெயரையும் தங்கள் தங்கள் கொடி முதலியவைகளையும் கொடுத்துப் புகழ்ந்தார்கள். அப்பிரமதேவன் தனது அரியாசனத்தையுங் கொடுத்தனன். அஷ்டலட்சுமிகளும் அஷ்டசம்பதத்தையுங் கொடுத்தார்கள். முருகக்கடவுளும் குவளைமாலையை யளித்தனர். மற்ற தேவர்களும் மயில், குயில், மீனம், சிங்க முதலிய கொடிகளையீந்தார்கள் அத்தேவர்களில் இந்திரன் தன் புத்திரியையும், குபேரன் தன் குமாரத்தியையும் அன்புடன் தங்கள் குருவாகிய போதாயனருஷியைக்கொண்டு விவாகஞ் செய்துகொடுத்தனர் அது முதல் அவ் வேளாளன் தன மரபை விளக்கினதைப் பற்றி மூவர்களும் தேவர்களும் மரபாலனென்னும் ஓர் திருப்பெயருங் கொடுக்கப் பெற்றனன். அதன்பின் விச்வகர்மா, மரபாலன் முதலிய வேளாளரைப்பார்த்து தன திருகரங்களையுங் கூப்பி பிரயனறிய ஓர் வார்த்தை கூறுகின்றனன், என்னெனில் யானும் எனது சந்ததியில் வருகின்றவர்கள் யாவரும், உமதுவமிசத்தார் ஏவிய தொழில்களைச் செய்து ஜீவித்து வருகின்றனம் என்றுரைக்க, மரபாலன் வமிசத்தார் சமமதமுற்றுக் களிப்புற்றிருந்தனர்.

## இதற்குதாரணம் விருத்தம்.

விண்ணுலகத்துவாழும் வியன்புகழ் விச்சுவகற்மன்
நண்ணரும்வைகுந்தத்தி னணணினனகங் கரிததே
கண்ணனுமிக வெகுண்டு காராளனொருவன்றன்றால்
எண்ணநீத்தொழிவாயென்ன விட்டனன் சாபமனறே (க)

தச்சனுஞ்சாபமேற்றுச் சாமிசேவடியில் வீழ்ந்து
முச்சகம்புகழுமைய முனிவொரீஇக்காத்தி யென்ன
அச்சுதனமதுசாப மறுபவத்திடுத லன்றி
மெச்சுறும்வேளாளன்றன் மீதமர்வுரிதல் வேண்டும். (உ)

ஆற்றியபெரும்போர்தன்னி லரியவவ் வேளாளர்க்கு
தோற்றுநின் குலமுநீயுந் தொண்டுசெய்பணியுமாற்றி
ஊற்றபோடிருந்து ஜீவித்துறைகுவா யென்றுமாயன்
சாற்றினன்றபதிமண்ணிற் சார்ந்துகாசியி லடைந்தான். (ங.)

வருமரபாலன்றன்னை வழியினிற்கண்டு கன்மன்
பொருதனனிடைந்தான் மாயன் புகன்றசொற்கொடுமையாலே
வெருவியுள்ளழிந்துவாடி மீளவும் பொருதுதோற்றுத்
தருவுறையமரர்பாடு சார்ந்தனனவனுஞ் சார்ந்தான். (ச)

(வேறு) அப்பதிபுகுந்திடு மமரர் தச்சனை
கைப்பிடியாக்கொடு களித்தவன்றனோ
டிப்புவியணைந்தனன் வசியனீங்கிவன்
றுப்பினையிற்றெனச் சொல்லலாமரோ. (௫)

பூமழைபொழிந்தாரும்பர் புரந்தரனயன்மாலீசன்
வாழுறுநிதிக்கோனாதி மறையவராகிசொற்று
தீமையில்வசியர்பத்துத் தெசாங்கமுமடைகவென்னத்
தாமுரைத்தவர்கள்தேவ சம்பந்தமானவுஞ்சொற்றார் (௬)

வேதங்கள்முழங்காநின்ற வேதியரகமகிழ்ந்தார்
ஓதமுங்கிளர்ந்தாற்போல வொலித்தபல்கருவியெல்லாம்
நீதங்கொள்மரபாலன்று நெடியவனயன்வலாரி
மாதங்கவுரியானின்னோர் கழல்களில்வணங்கினானே (௭)

அரியுமரனுமுவந்தெடுத் தணைத்துவாழ்த்தியன்பாகக்
கருடன்றன்னோடிடபமுறுங் கனத்தகொடிகடையளித்தார்
அரியபிரமதேவனுந்தன் னரியாசனத்தைவியந்திந்தான்
திருமாமகளோடெண்மர்களுஞ் செல்வமெனுஞ்சம்பத்தளித்தார்

வயமுறுஞ்சுரரைக்காத்து வாளசுரர்களைக்கொன்று
அயிலகரதத்தேந்துவேல ரணிகுவளையினையீந்தார்
மயில்குயிலமீனஞ்சிங்க மன்னியதுவசமாக
இயலுறுதேவமொல்லா மின்பமோடளித்துப்பின்னர். (௯)

முளைவாரியமுதமிட்டோர் முனமணிப்பிச்சையிட்டோர்
விளையுநல்லறம்வளர்த்தோர் மிக்கமுத்தொழிலோர்வேலை
வளர்கங்கைகுலத்தில்வந்தோர் வசியர்தங்கண்மேன்மை
அளவாலுமளக்கலாமோ வென்றனரமரர்மாதோ (௧௦)

நிரம்புறுசெல்வமிக்க நிதிக்கோனுமுவகைமிக்கு
அரனாதியோர்கள்கூடி யாற்றியவேள்விதன்னில்
பெரியதாந்தவப்பேறென்னப் பிறந்ததன்பெண்ணையன்பால்
மரபலாற்கீவனென்றே வரிசையோடளித்தான்மாதோ (௧௧)

(வேறு) தேவர்கோனுமிந்திராணியுந்தேர்ந்துநீள்
ஆவலோடருள்வேள்வியையாற்றிட
தேவியென்னத்திகழ்ந்தபுதல்வியை
பூவசியனுக்குப்புகழ்ந்தீந்தனன் .(௧௨)

தேவர்கள்தச்சன்றானும் வசியர்க்குச்செங்கைகூப்பிப்
பூவினோனறியவொன்று புகலுவனெனதுமைந்தர்
ஏவுறும்பணியியற்றி யிருப்பர்களென்றுகூற
தாவில்சீர்மரபாலன்றான் சம்மதித்திருந்தான்மன்னோ (கங)

எண்ணரு மறையோருக்கு மிசைபெறும்வேந்தருக்கும்
அண்ணலாருரைத்தவாறே யறைந்தனன்றமிழான்மிக்க
நுண்ணியபொருள்களாரு நுவலாதிகாவியத்தை
நண்ணியவேளாண்மக்கள் தங்களில்நலமிக்கோரே. கச)

இச்சரித விஷயத்தைப்பற்றி கொண்டலைநிகர்க்கு மென்னு முதற்பாடலானும் மந்தாகினியென்னும் சஉ-வது பாடலானும் அறிக.

## கரிகாலசோழன் வரலாறு.

## வேளாளர் புகழ்க்கரையேறினரொன்பதற்கு.

சென்னியிற் சென்ற துகிலோடுசென்று சிலரிழிந்தார்
பன்னியிற்சென்றது போலிழிந்தார்சிலர் பாங்குடனே
பொன்னியிற்சென்று கரையேறினாைப் புணர்ந்ததன்று
வன்னியிற்சென்று கரையேறினார்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

இந்தக் காஞ்சிமண்டலத்திலிருந்து பிறமண்டலங்களுக்குச்சென்று வசித்திருந்த வேளாளரை பழையபடி இத்தொண்டை மண்டலத்தில் ஸ்தாபிக்கும்படி கரிகாலசோழவரசனும் ஆதொண்டைச்சக்கிரவர்த்தியும் அழைத்துவரும்போது கூட அநேகஜாதியாரும் வந்தார்கள் வருகையில் இடைவழியில் பெருகியோடுங் காவிரியாற்றைக்கடக்க ஆற்றிலிறங்கியவர்களுள் சிலபெண்கள் துகிலைத் தலையிலிருந்து பாதம்வரையில் உடுத்தியபடிக்கும். சிலபெண்கள் நாணமில்லாமல் பாதம்வரையிலும் உடுத்திய ஆடையை துடைவரையில் தூக்கிக்கொண்டும். கரையேறினார்கள் இவருள் துகிலுடன் தலைகவிழ்ந்து நாணத்துடன் கரையேறினவர் உயர்ந்தகுடிகள் வேளாளஸ்திரீகளென்றும் மற்றையர் இவர்க்குபரிஜனங்கள் எனத்தெரிந்து முன்னிருந்த வேளாளர்களுடன் வேளாளர்களை காணியாளராகவும் மற்றையரைத் தொழிலாளிகளாகவும் குடியேற்றப்பட்டார்கள் இத்தன்மைய தொண்டைமண்டலவேளாளமாக்கள் பொன்னிநதிப் பிரவாகத்துக்கஞ்சி

சிற்காமல் மானத்துக்கஞ்சிய கற்புள்ள மனைவியையுடையரா யிருப்பத
ன்றித் தாமும் அரசன் பொருட்டு அக்கினிப் பிரவாகத்திலிறங்கிக்
கரையேறினார்கள் இத்தகையவேளாளர் வாழ்வதித்தொண்டை மண்
டலம் (௯௦)

## வரலாறு.

திரிசிராமலைக்கு மேற்புறத்து ஒருகடிகை தூரத்துள்ள திருமுக்
கீச்சரம் என்னும் திருஉறையூரை இராஜதானியாக்கி அரசாண்டுவ
ந்த அரசருள் ஓரரசன் திரிசிரகிரிச் செவந்தீசரைப் பூசித்துக்கொ
ண்டிருந்த சாரமாமுனிவருக்கு அபசாரஞ்செய்தமையால் மண்மாரி
பெய்ய உறையூரழிந்தது அம்மாரிப்பிரவாகத்தால் அந்நகரத்திருந்த
எல்லாஉயிர்களுமடிந்துபோகக் கருப்பவதியாயிருந்த பட்டத்தரசியை
மாத்திரம் பொன்னியென்னுங் காவிரிப்பிரவாகம் சிறிதும் தீங்கின்றி
அவ்வுறையூருக்குக்கிழக்கே ஐந்துநாழிகைதூரத்துள்ள செருக்குவார்
பாளயமென்னுங் கிராமத்திலொதுக்கிக் கரையேற்றிவிட்டது. அங்
கிருந்த முனிவரொருவர் இராக்கினியென்று தெரிந்துகொண்டு பா
துகாத்துப் பிரசவித்தபின் குழந்தைக்கு அரசக்கிரமப்படியே சடங்கு
களனைத்தையுஞ்செய்துகல்விமுதலியவற்றைக் கற்பித்துப்பாதுகாத்து
வந்தார் அக்குழந்தைக்குப் பன்னிரண்டு வயதான பருவத்தில் அரசி
ழந்தநாடாய்த் தேசந்தலைதடுமாறி இருந்தமையால் அப்போதிருந்த
பெரியோர்கள்கூடி ஆலோசித்துச் செவந்தீசர் திருவருளின்படியே
பட்டத்துயானையை யலங்கரித்து அதன்கையில் திருமஞ்சனநீரும் மா
லையுங் கொடுத்துவிட அவ்யானை செருக்குவார்பாளயத்தில் சென்று
காவிரியருகு இளமரக்காவில் விளையாடல் செய்துகொண்டிருந்த
சோழராஜகுமாரனைக்கண்டு அக்குழந்தையினது சிரசில மஞ்சனப்
புனிதநீரை வார்த்து மஞ்சனஞ்செய்வித்து கழுத்தில் மாலையைப்போ
ட்டுத்தன்மத்தகத்தில் வைத்துக்கொள்ளுதற்காகத் துதிக்கையால் தூ
க்கக் குழந்தை சிறிதும் அசைவற்று நின்றமையால் தன்னாலியன்றமட்
டும் பார்த்தும் அசைக்கவுங்கூடாமல் வலிய கடாயானை சலித்துநி
ன்றது அச்செயலையும் தாய் அஞ்சி நிலைகுலைதலையுங் கண்ட முனிவர்
அரசியைத்தேற்றி அக்குழந்தையினது இடக்காலில் கரிக்கோடுவரையு
ம்படி யேவினர் தாய்அப்படியே யக்குழந்தைகாலில் கரியைக்கொ
ண்டு கோடு கிழித்தவுடனே பட்டத்துயானை அக்குழந்தையைத்தூக்
கிப்பிடரின்மேல் வைத்துக்கொண்டுபோய் புதுக்கியலங்கரிக்கப்பட்
டிருந்த உறையூர் அரண்மனைச் சிங்காதனத்தில் வைத்தது உடனே

பெரியோர் முதலிய வெல்லோருங்கூடிப் பட்டாபிஷேகச்சடங்கு நடத்த கரிகாலசோழமகாராஜன் எனப்பேர்பெற்று அவ்வரசகுமாரன் அரசியல் நடத்தினன்.

இக்கரிகாலசோழவரசன் தன்காலத்து காடுமேடு கொண்டிருந்த காஞ்சிமண்டலத்தை திருத்தி நகரங்களுண்டாக்கி தனதிளயமனைவியின் குமாரனுகிய ஆதொண்டைமலர்மாலை புனைந்த ஆதொண்டையனையரசனுக்கி ஆதொண்டைச் சக்கிரவர்த்தியெனப் பேர்கொடுத்து ஆளுவித்தான் அதுமுதல் இது ஆதொண்டைமண்டலமெனப் பெயராயிற்று இம்மண்டலத்திருந்து பிறமண்டலங்களுக்குச்சென்று வஸித்தவர்களை கரிகாலசோழவரசனும் ஆதொண்டைச் சக்கிரவர்த்தியும் அழைத்துவருகையில் இடைவழியில் பெருகிவந்த காவிரியாற்றில் சிலபெண்கள் சென்னியில் இருந்து பாதம்வரையில் மூடியபடிக்கே உடையாடை நனைவதற்கஞ்சாமல் இறங்கிக்கரையேறிவந்தார்கள் சிலர் துடைவரையில் உடையைதூக்கிக்கொண்டு சிரசில்துகிலில்லாமல் இறங்கிக்கரையேறினுர்கள் கரையினின்று இச்செயலைப்பார்த்துக்கொண்டிருந்த ஆதொண்டைசக்கிரவர்த்தியுங் கரிகாலசோழனும் பார்த்து இடைத்துகில் தூக்காமற் கரையேறினபெண்களை உயர்ந்தகுடியினர் வேளாளஸ்திரீகளென்று தெரிந்து அக்குடும்பத்தினர்க்குத் தக்க மரியாதைவரிசைகள் கொடுத்து குடியேற்றி மற்றைய குடிகளை அவர்களுக்குக்கீழ் பரிசனங்களாக விருக்கும்படிச் செய்தார்கள் இத்தகையகற்புடைய வேளாளஸ்திரீகள் பொன்னிநதிக்கரையேறிப் புகழ்க்கரையு மேறினர் இவர்களை மனைவியராயுடையவேளாளர் அக்கினிப்பிரவாகத்திலிறங்கிக் கரையேறினுர்கள் அது எப்படி என்றால் ஓர்காலத்தில் சோழராஜன்தனது குமாரனுக்கு மகுடம்புனைவிப்பதற்கு வேளாளரைமாத்திரம் வரவழைக்க அப்போது வேறுஜாதியாரும் தாங்கள் மகுடம்சூட்டவெண்ணமாக வந்தார்கள் அரசன் சந்தேகித்து தனதுசபைக்கு முன்னர் அக்கினியைவளர்த்தி வேளாளராயினேரை நோக்கி இத்தீயிலிறங்கிக்கரையேறிவந்து மகுடம்சூட்டுங்களென உத்திரவுசெய்தான் அதைக்கேட்டபலஜாதியாரும் ஓடிப்போனுர்கள் வேளாளர்மாத்திரம் அந்த செந்தழலி லிறங்கிக்கரையேறிவந்து 'மகுடத்தைத் தங்கள் கைகளால் தாங்கி யெல்லோரும் ஆசீர்வதித்து சோழகுமாரனுக்கு முடிசூட்டினுர்கள் இப்படி அக்கினிப் பிரவாகத்திலிறங்கிக் கரையேறினவர்களன்றே தொண்டைமண்டல வேளாளர் என்பது.

## சீர்த்தியை விரும்பும் நல்ல சித்தமுடையரோன்பது.

தெள்ளத்தெளிந்தவர் செய்தக்கதோர்முறை செய்யிலையா
எள்ளத்தனைமலை யத்தனையாமென்ப இன்றறிந்தோ
முள்ளற்கரிய துடையாடைகிழிய தொன்றுமொரு [மே.
வள்ளற்றகைமையோ டொத்துளதாற்றொண்டை மண்டல

(இ-பொ.) நூல்களைக்கற்றுத் தெளிந்த அறிவுடையோர் தாஞ் செய்யத்தகுஞ் செயல்களிலொன்றை அவ்வளவாக நிரம்பச்செய்யாமல் ஒருவகையாற்றி சிறிது செய்யினும் அது எள்ளத்தனை சிறிதாயினும், பிறர்க்கு மலையத்தனை பெரிதாகும் எனச் சொல்லுவதற்கு உதாரணம், (வெண்ணெய்நல்லூர் சடையப்ப முதலியார் அரசன் சமுகத்தில் விலையுயர்ந்த தனது துடை யாடையைக் கிழித்த விச்சிறு செயலிலேயே கண்டோம்) எவ்வாறெனில், அவர்செய்த அச்சிறு செயலும் அரசனும் பிரமிக்கத்தக்க பெருஞ் செயலாயிருந்தது: இத்தகைய வேளாண் குடிமையையுடையது தொண்டைமண்டலம்.(ருக)

கதைவருமாறு:— வெண்ணெய்நல்லூர் சடையப்பமுதலியார் பெருஞ்செல்வனெனப் புதிதாகப் பட்டாபிடேகம் பெற்ற சோழராசன் கேள்வியுற்று, அவர் தன்னைவந்து காணாமையால், அவர் வறியராம்படி அவரது செல்வப் பொருளையெல்லாங் கவர்ந்துகொண்டபின்னுமவர் அரசனைப்போய்க் காணாமலிருந்தார். அக்காலத்தில் சீனந்திலிருந்தொரு வர்த்தகன் இழையாயிரம் பொன்பெற்ற பட்டொன்று கொண்டுவந்தரசனிடத்துக் காட்டினான் அரசனதனை வாங்கவிரும்பியுந் தனது கருவூலத்தில் அதற்குவேண்டும் விலைப்பொருளின்மையால் ஏங்கித் தனக்கப்பட்டு வேண்டாமென்று வியாபாரியையனுப்பிவிட்டான். அவ்வர்த்தகன் அப்பட்டைச் சடையப்பமுதலியாரிடத்தில் கொண்டுபோக, அவர்வாங்கித் தரித்துக்கொண்டார். இச்செய்தியை அரசன் கேள்வியுற்று, அவமானத்தால் பொறாமைகொண்டு மனம் புழுங்கி அப்பிரபுவை வலாத்காரமாகத் தன்சமுகத்தில் வரவழைத்து தானழைத்ததற்கு நீரேன் வராமல் மறுத்தீரென்றுகேட்க அப்பிரபு துடையிற் சிலந்தியென்றதை அரசன் நம்பாமையால் அவ்விலையுயர்ந்த பட்டைக் கிழித்துத் துடைபுண்ணைக்காட்டினார், அரசன் தனதுசெல்வத்தைவிட மிகமீறியபட்டையிவர் வறுமைக்காலத்தில் வாங்கியதைப் பார்க்கில் அதனை மிகவலக்ஷியப் பொருளாக மதித்துக் கிழித்தது மிகவாச்சரியமென்று மிகவதிசயித்துப் பிரமித்து இவர்

தெய்வீகச் செல்வப்பிரபு (யாருடைய்கும் குளமூளவீறுசால் மன்னர் விழையுங்குடியுள தொன்மரபின் வேதமுறுவனபாட்டுள வேளாண் மை வேள்வியோடொப்பவுள) என முன்னோர் சொல்லிய சொல்லி ற்கு உதாரணமாகிய இவரது செல்வமே பெருஞ்செல்வம் இவரேபி ரபு வென்று மதித்து இப்பிரபுவை அரசர்தாமே சென்றுகாண்பது வழக்கம்என்பதுந் தெரிந்துகொண்டு மகிழ்ந்திருந்தனன் (எ - று)

தாயினுநல்ல தயையுடையோர்க டமதுடலம்
வீயினுஞ்செய்கை விடுவர்கொல்லோதங்கண்மெய்ம்முழுதும்
தீயினும்வீழ்வர் முதுகினுஞ்சோறிட்டுச் சீறரவின்
வாயினுங்கையிடு வாரவர்காண் டொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வேளாண் மரபினர் குழவிகளிடத்துக் குறைவிலன்புடைய நற்றாயினும், பிறவுயிர்களிடத்தன்புசெய்தலின் மிகநல்லோர்: ஆதலி ன், தங்களுடம்பிற் கழிவு நேரிட்டாலும் தமதுநற்செய்கையாகிய நோன்மைக்கைவிடார் எங்ஙனமெனில் இவ்வேளாளருள் எழுபதுபேர் ஒருசெட்டியினுயிர்க்காகத்தீயில் வீழ்ந்திறந்து பழிகொ டுத்தனர், ஒருவர்தன்வீட்டில் விருந்தாய்வந்த புலவரொருவருக்குப் பூரணகர்ப் பிணியாகிய தனது மனைவி முதுகிலன்னமிட்டுண்பித்தார், ஒருவர்பாம்பின்வாயிற்கையிட்டு மாணிக்கமெடுத்து வந்தபுலவர்க்குக் கொடுத்துதவினார் இத்தகைய வேளாளர்க்குறைவிடமாயுள்ளது தொண்டைமண்டலம்: (௩௨)

வரலாறு: வெண்ணெய் நல்லூர் சடையப்பமுதலியாரிடத்து பகைபாராட்டிய சோழராஜன் ஏவுதலினால் வித்வக்கூட்டங்கள் இர வில் விருந்தினராக வந்தவர்களுக்கு, அமுதூட்ட இல்லிலொன்று மிராமையால் சடையப்பமுதலியார்தனதுமனைவி தரித்திருந்த மாங் கலியத்தை விற்று சாமக்கிரியைகொணர்ந்து பாகஞ்செய்து அரிய விருந்திட்டுபசரித்தும் பரிசுகொடுக்கப் பொருளில்லாமையால் இல்லை என்னமல் பிராணனைவிடத்துணிந்து தன்வீட்டிற்கருகிலுள்ள புற்றி ல்கையிட்டார் அதிலிருந்தநாகம் வந்து கையைமோந்து இதுமஹாபி ரபுவாகிய சடையப்பமுதலியார் கரமென்றும் வெறுப்பினால் பிராண னைவிடக்கருதியதையு மறிந்து இப்புண்ணியவானுக்கு உபகாரமேசெ ய்யவேண்டுமென்று அக்கரத்தில் தனது மாணிக்கத்தை யுமிழ்ந்து கொடுக்க பிரபு எடுத்துப்பார்த்து பேரானந்தமுற்று அவ்விலையுயர்ந்த

ரத்தினத்தை அப்புலவர்களுக்கே சன்மானங் கொடுத்தனுப்பினார் இச்செய்திகளைப் புலவர்களாலறிந்த வரசன் சந்தேகித்து முதலியாரிடத்துவந்து இம்மாணிக்க முமக்கேதென அவர்நிகழ்ந்ததை யுரைக்க அரசன் அப்புற்றிடத்திற் போயிருந்து இப்போது கையையிடுமென்றார். அப்படியேமுதலியார் மறுபடி புற்றில் கையையிட அந்நாகம் தன் ஜீவரத்தினத்தை கக்கிக்கொடுத்தது, அதைக்கண்டவரசன் அதிகவியப்புற்று சடையனுதப்பிரபுவினுடைய வுதாரத்துவத்தையும் பக்தியையும் புகழ்ந்து கொண்டாடி பகைதீர்ந்து பிரபுவை முன்னினு மதிகசிறப்பாக வைத்திருந்தார் இஃதன்றியும் இவர் சமுகத்திருந்த மஹாவித்வானாகிய கம்பர் வீட்டில் நடந்த அம்பிகாபதி கலியாணப்பந்தரில் கடையாக சடையப்பமுதலியார் உட்கார்ந்திருப்பதைக் கண்ட கம்பர் மனைவியார் தம்மை தங்கைமுறைமைபாராட்டி சகல வரிசை வண்மை நடத்துபவராய் குடும்பசம்ரக்ஷகராயிருக்கும் நண்பினராதலால் எங்கள் அண்ணனை இவ்விடத்திலா இருக்கவைத்தீர்களென்று சொல்லி மனோசஞ்சலப்படும் மனைவிக்கு மஹாவித்வானாகிய கம்பர் நம்ம பிரபுவினுடைய பெருமை விளங்க நான் வைக்குமிடத்தில் வைக்கிறேனென்று யாவரும் சந்தோஷிக்கும்படி சொன்னார்- பின்பு வடமொழியிலிருந்த மஹாகாவியமாகிய இராமாயணத்தைத் திராவிடத்திற் செய்யவேண்டுமென்று அவரைபிரார்த்தித்து அவர்செய்த ராமாயணத்தில் ஒவ்வோரமையத்திலும் சடையனுதப் பிரபுவின் குணாதிசயங்களைச் சிறப்பித்து உபமானந் தோன்றப்பாடி இருக்கின்றார் என்றுங் கேள்வியுற்று அன்றுமுதல் அவரை தனக்குற்ற சினேகராயிருக்கும்படி வேண்டிக்கொண்டு ஒற்றுமையாக இருவருமகிழ்ந்திருந்தார்கள்.

மே - ஸ்ரீ இராமாயணம்,
பாலகாண்டம் ரு - வது பாடல் தனியன்.

வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப்பன் வாழ்த்துபெறத்
தாழ்வாருயரப் புலவோரகவிருள் தானகலப்
போழ்வார்கதிரி னுதித்ததெய்வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச்சிந் திப்பவர்க்கியாது மரியதன்றே.

[இதன்பொழிப்பு]

பெருஞ்செல்வ வாழ்க்கையிலமர்ந்த திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்ப முதலியார் (தன்னையுபசரித்து இராமாயணஞ் செய்வித்தமையால்) எல்லாராலும் வாழ்த்துதலைப்பெறவும், அறிவின்மை

யால் தாழ்ந்தவர்களெல்லோரும் அதனைப்பெற் றுயர்ச்சியடைய வும், வித்துவான்களது மனத்துள் நிறைந்த (அகர்தையாகிய) இருள் தானே விலகிப்போகவும்; இருட்படலத்தைப்பிளந்து கொண்டு உத யஞ்செய்கின்ற நீண்டகிரணத்தையுடைய சூரியனைப்போலத் தோன் றியகம்பநாட்டாழ்வாரது பாதங்களை மனத்துட்கொண்டு துதிக்கும் என்போன்றூர்க்கு எல்லாப்பொருள்களும் எளியனவாகப் பெறப்ப டும் (எ - று)

ய - அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

எண்ணிய சகாத்தமெண்ணூற் றேழின்மேற் சடையன்வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய ராமகாதை பங்குனி யத்தநாளிற்
கண்ணிய வரங்கர்முன்னே கவியரங் கேற்றினானே.

(பொ - ரை) கம்பரானவர் எண்ணிக்கணித்த சாலிவாகன சகாத் தம் எண்ணூற்றேட்டாம் வருடத்திலே சடையப்பமுதலியாரது வா ழ்வமைந்த திருவெண்ணெய் நல்லூரிலே ராமசரிதத்தைக் காவியமா கப்பாடி, அவ்வருடம் பங்குனிமாதம் அஸ்தநட்சத்திரமமைந்த சுபதி னத்திலே தேவர் முதலியோர் துதிக்கின்ற திருவரங்கநாதர் திருவரங் கநாயகியார் சந்நிதியிலே (தன்பேராற்கட்டப்பட்டுள்ள கம்பர் மண்ட பத்தின் மத்தியிற் கமலபீடத்திலிருந்து) அக்காவியத்தை அரங்கேற்று தல் செய்தார் (எ-று)

பாயிரம் - கலிவிருத்தம்.

நடையினின் றுயர் நாயகன் றோற்றத்தி
னிடைநிகழ்ந்தவிரா மாவதாரப்பேர்த்
தொடைநிரம்பிய தோமறுமாக்கதை
சடையன்வெண்ணெய் நல் லூர்வயிற்றந்ததே.

(பொ - ரை) உலக நாயகராகிய திருமாலினது மூர்த்தமாகிய பர சுராம பலராம அவதாரங்களுக்கிடையிலே தோன்றிய ரகுராமாவதார மூர்த்தியினது நல்லொழுக்கத்தாலுயர்ந்து குற்றமற்ற கதையமை ந்த செந்தமிழ்ச்செய்யுள் நிறைந்த இப்பெருங்காப்பியமாகிய இதிகா சத்தை சடையப்பமுதலியார் வாழும் திருவெண்ணெய் நல்லூரிலி ருந்து செய்து முடித்தேன் என்றார் கம்பர்.

வேள்விப்படலம் (க) அறுசீர்விருத்தம்.

விண்ணவர்போய பின்னர்விரிந்தபூ மழையினாலே
தண்ணெனுங்கானநீங்கித் தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்கு மருந்தனசடையன்வெண்ணெ
யண்ணறன்சொல்லேயன்ன படைக்கலமருளினானே.

(பொ - ரை) பிறராலேநிருவகித்தற்கரிய தவத்தைச்செய்த கோசிகமுனிவர் தேவர்கள் போயினபின்பு, தருக்களில் மலர்ந்த மலர்களை மழைபோலக் கொட்டுவதினாலே குளிர்ந்த காட்டைக்கடந்து தனது யாகசாலையை யடைந்து, பூவுலகத்துள்ள மக்களது வறுமையாகிய நோய்ப்பிணியைத் தீர்க்க அருமருந்தாய்த்தோன்றிய திருவெண்ணெய் நல்லூரில் வாழும் சடையப்பமுதலியா ரென்னும் பெருமையாளனது (வாயினின்று வெளிப்படுஞ்) சொல் (சிறிதும் வழுவாதுபயன் படுத்துவது) போன்ற (பிரயோகிக்கப் பட்டால் எண்ணியவாறு சிறிதும் வழுவாது பயன்படுத்தியேவிடவல்ல) அம்புகளையும் (அவற்றைத்தொடுத்தற்குரிய) வில்லையும் (அவ்வம்புகள் பயன்படுத்தித்திரும்பிவந்து தங்குதற்குரிய) தூணியையும் (ராமலட்சுமணருக்குக்) கொடுத்தருளினார் (எ - று)

அகலிகைப்படலம், யஅ. கலித்துறை.

அரமடந்தையர் கற்பகாவநிதியமுதம்
சுரபிவாம்பரிமதமலை முதலியதொடக்கத்
தொருபெரும்பொரு ளின்றியேயுவரிபுக்கொளிப்ப
வெருவியோடின வெண்ணெய்வாழ்கண்ணன்மேவாரின்.

(பொ - ரை) துர்வாசமுனிவரது சாபத்தாலஞ்சி, தேவேந்திரனுக்குப் பெருஞ்செல்வமாகிய இலக்குமி முதலிய தெய்வப்பெண்களும், கற்பகமுதலிய பஞ்சதருக்களும், சங்கநிதி பதுமநிதி முதலியநவநிதிகளும், தேவாமிருதமும் காமதேனுவும், உச்சச்சிரவம் என்னும் தாவுகின்ற வெள்ளைக்குதிரையும், அயிராவதம் என்னும் மதம் வழிகின்ற மலைபோன்ற வெள்ளையானையும், ஆகிய பெரும்பொருள் வரிசையில் ஒன்றேனும் தங்காமல், திருவெண்ணெய்நல்லூரிலே வாழும் திருமாலையொத்த சடையப்பமுதலியாரிடத்தே பகைமைகொண்டவர் அஞ்சியோடிக்கடலில்விழுவதுபோல, ஓடிக்கடலுள் ஒளித்தன (எ - று)

மிதிலைக்காட்சிப்படலம்,

எசு - அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

வண்ணமாலைகைபரப்பி யுலகைவளைந்தவிருளெல்லாம்
உண்ணவெண்ணித் தண்மதியத்துதயத்தெழுந்த நிலாக்கற்றை
விண்ணுமண்ணுந்திசையனைத்தும்விழுங்கிக்கொண்டவிரிநன்னீர்ப்
பண்ணைவெண்ணெய்ச்சடையன்றன்புகழ்போலெங்கும்பரந்துள
(வால்,

(பொ - ரை) புல்லியநிறத்தோடு தோன்றிய மாலைக்காலம் (ஆகி யதலைவன்தனதுபல) கைகளைவிரித்து உலகம் (அனைத்தினையும் வளை த்துக்கொண்டாற்போல) வளைத்துக்கொண்டஇருள் (கூட்டத்தை) எல் லாம்விழுங்கிவிடக்கருதி யுதயஞ் செய்தகுளிர்ச்சிபொருந்திய சந்தி ரனில்தோன்றிய (குளிர்ந்தவெள்) ஒளிக்கூட்டம்; நல்லநீர்பரவியவள ம் பொருந்திய கழனிசூழ்ந்த திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியாரது புகழ் (விரிந்து விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தை யும் தன்மயமாகச்சூழ்ந்து மூடிக்கொண்டமைபோலவிரிந்து வானத் தையும் பூமியையும் விழுங்கினாற்போல மூடிக்கொண்டிருந்தன (எ-று)

யுத்தகாண்டம் சேதுபந்தனப்படலம்-கூ-கலிவிருத்தம்.

மஞ்சினிற்றிகழ்தரு மலையைமாக்குரங்
கெஞ்சுறக்கடிதெறிந் தெறியவேநளன்
விஞ்சையிற்றாங்கினன் சடையன் வெண்ணெயிற்
றஞ்சமென்றோர்களைத் தாங்குந்தன்மைபோல்.

(பொ - ரை) (அனுமன்முதலிய) பெரியவானர வீரர் (மலைக ளைப்பெயர்த்து வலிந்து தாங்கிவந்துபோடச், சமுத்திரத்திலணைகட்டு ந் தொழில்செய்யும் நளனென்பவன் அவ்வலியமலைகளை யெளிவாக த்தாங்கி வரிப்படுப்பதுகண்டு, அவ்வானர வீரர் வீறுகொண்டு அந் நளனது வலிமை கெட்டுத்) தளரும்படி (செய்யக்கருதி அத்திசையி லுள்ள) மேகம்படிந்துயர்ந்து விளங்குகின்ற (பாரப்பெரிய) மலைக ளையெல்லாம் பெயர்த்து (ஒருசேரக்கொண்டு வந்து ஆலவருஷம் போல இடைவிடாது ஒன்றின்மேலொன்றாய்) அதிவிசையாய் (வீ ழும்படி அதிவேகமாக) எறியவும், நளன்தனது மந்திரபலத்தினாலே (அம்மலைகளையெல்லாம்) திருவெண்ணெய்நல்லூரிலே சடையப்பமுத லியார் (தன்னை) அடைக்கலமென்று வந்தடைந்தோ ரெல்லோரையும் ஏற்று ஆதரித்து அமைதிசெய்யும் தன்மைபோல, எளிதாகத்தாங்கி யணைகட்டினான் (எ - று)

### உகூ௱-நாகபாசப்படலம் எழுசீரடி ஆசிரியவிருத்தம்.

வாசங்கலந்த மணர்சாணூலின் வகையெனபதென்னமழைபெடன்
ருசங்கைகொண்ட கொடைமீளியண்ணல் சராமன்வெண் } ணையனூர்
தேசங்கலந்த மறைவாணர்செஞ்சொலறிவாளரொன்றிமுதலோர்
பாசங்கலந்த பசிபோலகன்ற பதகன்றுரந்த வுரகம்.

(பொ - ரை) பாவத்தொழில்செய்யும் (அரக்கனாகிய) இந்திரசித்தென்பவனால் விடப்பட்ட (பிரயோகிக்கப்பட்டால்தனக்கிலக்காயினோரை விரைந்தடைந்து தன்செயலை முடித்தேவிடுமியல்புள்ளதாகிச் சிராமன் முதலியோரை மரணத்தை விளைத்தேவிடுமாறு பந்தித்துக்கிடந்ததும், வலியதுங் கொடியதுமாகிய) நாகபாசமானது (கருடோதயமாத்திரததால்) வாசம்பொருந்திய தாமரைத்தண்டிலுள்ள நுண்ணியநூல்போல அற்றநீங்கியது: என்று (உவமைகொடுத்துச் சொல்லுவாருமுளர். இவ்வுவமையில், உவமேயமாகிய நாகபாசத்துக்குரியனவாகிய யாவராலும் விலக்கப்படாமை) கொன்றேவிடுந்தன்மை முதலியவன்மைச் சிறப்பு உவமையாகிய தாமரை நுண்ணூலுக்கு இயல்பாகவே இன்மையாலும், அது ஒரு பொருளை வலிந்துபற்றியிராமையாலும்; அவ்வின்மையால், நிமித்தகாரணமாகிய கருடபகவானுக்கு இயல்பாயுள்ள அதனையழிக்கவல்ல தெய்வீகவன்மைக்கு இழுக்குண்டாமாகலாலும்; இவ்வாறு பொருத்தமில்லாத ஒப்புமை, சொல்லுதலாற் பயனில்லை. (ஆதலால், ராவணாதிதலைவரும் மூலபலாதி சேனைகளும் சேனாதிபருமாகிய அரக்கர்கள் எதிர்ந்தகாலையில் அவ்வவரது சுபாவபலம் வரபலம் மாயாபலங்களுக்கிசையவொவ்வொருவருக்கும் ஒன்று நூறு ஆயிரங் கோடியாக ஏககாலத்தில் சரவருஷம் வருஷித்து அவ்வனைவரையும் வலியழித்த) சரப்பிரயோகதீரனாகிய சிராமனையொத்து (த்தன்னைவந்தடைந்தோரெல்லோர்க்கும் அவரது தரித்திரம் கெடும்படி, அதனது மிகுதி குறைவுக்கேற்பவும் அவ்வவரது கருத்துசொல் தகுதிகளுக்கேற்பவும் மணிபொன் முதலியவற்றை அளவின்றி வாரிவாரி இடைவிடாது சொரிதலினாலே, பயன்பெற்றோரும்கண்டோரும் கேள்வியுற்றோரும் பருவகால) மேகந்தானோ (மானுடனுருவாய் வந்தது) என்று சந்தேகமடைதற்குரிய வெற்றிக்கொடைவீரனும் பெருமையாளனுமாகிய சடையப்பமுதலியாரது வாஸஸ்தலமாகிய) திருவெண்ணெய் நல்லூரை 'அடைந்தமாத்திரத்தில்' மாயாபந்தத்தால் (ஜன்மாந்தரத்தில் தம்மை

யுண்டாக்கினவலையே பின்வருஞ் சனனந்தோறுந் தொடர்ந்துபற்றித் தம்பயனை விளைத்தேதீர்வனவாகிய புண்ணியபாவங்களுள் பாவத்தின்பயனாய் (பலதேசங்களில் வசித்தவேதியர்கள் இலக்கணச்சொற்றேர்ச்சியுள்ள (பலவிதபாஷா) வித்துவான்கள் என்றுசொல்லப்பட்ட இவர்முதலாயினோரை (வகுத்தகாலமளவும் அவரனுபவித்தே தொலைத்தற்குரியதாய்) அடைந்தவறுமையானது (புண்ணியஞ்செய்துடையோர் அடைதற்குரியபயனாகிய செல்வம் தனக்குவகுத்தளவு செய்யப்படாதகாலத்திலேயே வந்துஅவருக்கு இன்பமூட்டும்படி, தான் துன்பமூட்டுதற்கமைந்திருந்த காலவரையறையை எதிர்பாராமலே அவரை) விட்டுநீங்குதல்போல (ச்சிராமமூர்த்தி முதலியோரைக்கொன்றே யொழிதல் யாவராலும் விலக்கப்படாமை முதலியதனது இயல்பை நோக்காமலே விட்டுநீங்கியது என்பதேஅமையும். (எ-று)

உயுத்தகாண்டம் திருவபிடேகப்படலம்,

௩௭ - அறுசீரடி யாசிரிய விருத்தம்.

அரியணை யனுமன்றாங்க வங்கதனுடைவாளேந்தப்
பரதன்வெண்குடைகவிக்க விருவருக்கவரிவீச
விரைசெறிகுழலியோங்க வெண்ணெயூர்ச்சடையன்றங்கண்
மரபினோர்கொடுக்கவாங்கி வசிட்டனேபுனைந்தான்மௌலி.

(பொ-ரை) அனுமான் சிங்காதனத்தைத்தாங்க, அங்கதன் வீரவாளேந்தி யெதிரேநிற்கப், பரதாழ்வான் வெள்ளியமுத்து வட்டக்குடையைப்பிடித்துக் கொண்டு பின்னேநிற்க, லட்சுமணசத்துருக்க ரிருவரும் இருபுறத்தும்நின்று வெண்சாமரைவீசப், பரிமளம் நிறைந்தகூந்தலையுடைய ஜானகியார் இடப்பாகத்திலிருந்து விளங்க, (சுக்கிரீப விபீஷணர்கள் வலப்பக்கத்தில்நிற்ப, வானரசேனையும், மண்டலத்தரசர்களுஞ்சூழ்ந்து நிற்க, முனிவர்கள் வேதமந்திரகோஷஞ்செய்து கொண்டெதிரிருக்க, நடனகீதவாத்திய மோங்கி சீராமமூர்த்தியைச் சிங்காதனத்திலெழுந்தருளி யிருக்கச்செய்து, திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்ப முதலியாரது குலமுதல்வராய் (அக்காலத்தில்) இருந்தவேளாண் குடித்தலைவர் நவரத்தினகிரீடத்தைத்தமது கையாலெடுத்துக்கொடுக்கக், குலகுருவாகிய வசிட்டமுனிவர் அக்கிரீடத்தைவாங்கி அவ்விராமமூர்த்தியின் சிரசில்தாமே தரித்தார். (எ-று)

இன்னும் கம்பர் இப்படிப்பட்ட அநேக பிரபந்தங்களும் வண்ண முதலியபலவும் சடையப்பமுதலியார் பேரில் செய்திருக்கின்றனர்

மீனவனாட்டினுஞ் செம்பியனாட்டினும் வில்லவர்கோ
னானவனாட்டினு மிக்கதென்பார்க ளதிசயமோ
கோனவனாட்டின் முளையமுதாகிற் குலவமுதார்
வானவர்நாட்டினு மிக்கதன்றோ தொண்டை மண்டலமே.

(இ-பொ.) மீனக்கொடியுடையபாண்டியனது நாட்டைப்பா ர்க்கிலும் சோழனது பொன்னிநாட்டைப் பார்க்கிலும் விற்கொடியை யுடையவனும் வில்வீரருக்கெல்லாம் அரசனுமாகிய சேரனது நா ட்டைப்பார்க்கிலும் இந்த ஆதொண்டைக்கோனது தொண்டைநாடு சிறந்ததென்று அறிந்தோர் சொல்லுகிறார்கள் இது ஒரு புதுமைய ன்று: ஏனெனில், நள்ளிரவில்வந்த அரியவிருந்தினர்க்குக் கழனி யில் முளைத்த செந்முளை அமுதாகுமானால் கட லமிர்தத்தைக் கொள் கின்ற தேவரது சுவர்க்கநாட்டினுஞ் சிறந்ததல்லவோ இந்த தொண் டைமண்டலம். (௫௩)

(கதைவருமாறு)

திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார்யாசகர்க் குக் கொடுத்தமையினாலேயே செல்வங்குறைந்து இனி யாசகர்க்குக் கொடுக்கவொன்றும் இயலாமையால், இரப்போர்க்கு இல்லையென அஞ்சி விதேசகமனஞ் செய்யக்கருதி ஓரிரவில் தன் மனைவியுந் தா னுமாக நித்திரையின்றிப் படுத்திருக்கும்போது, இரட்டைப்புலவர் முதலிய வித்துவக்கூட்டம் அங்குவந்து தங்கிப் பசி மிகுதியால் வெண்ணெய்நல்லூர் சடையநாதப்பிரபுவினிடஞ்செ ல்லவும் நமது பசிநோய்தீரவும் எப்போது பொழுதுவிடியுமோ என்று வாய்விட்டுச் சொல்லி வருந்தியதுகேட்டு; தன்பேர்சொல்லி பின் னும் அவர் வருந்தநேரிட்டது பொறாமல், உடனே தன்மனைவியோடு சென்று, தன்கழனியில் விதைத்திருந்த செந்முளையைவாரி அலம்பி வீட்டிற் கொணர்ந்து தீமூட்டிப் பதப்படுத்திக் குத்தி யரிசியாக்கி அன்னமுதலிய பாகஞ் செய்துகொண்டு தம்மகத்தில் வந்துசேர்ந்த அப்புலவர் கூட்டத்திற்கு உண்பித்து திருப்திசெய்தான் இப்படிப்பட் டபுண்ணிய செயல்களையுடைய சடையப்ப முதலியார் மரபில் அவதரி த்த மெய்கண்ட தேவருக்கு பரஞ்சோதிமாமுனிவர் உபதேசித்தரு ளியது ஆதியாக மெய்கண்டதேவர் மடம் திருவாவடுதுறை மடாதீன முண்டாய் பரம்பரையாவது.

### காஞ்சிபுராணம்.

கயிலாயபரம்பரையிற் சிவஞானபோதநெறி காட்டும்வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன் றிருமரபுநீடூழி தழைகமாதோ.

திருக்கயிலாச மலையிலே அருள்வடிவாகிய கல்லாலமர நிழலி லே தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளிய பரமசிவன்பால் ஆகமங்களை யெல்லாம் கேட்டருளிய நந்திப்பெருமான் வணங்கி காமிக முதலிய சைவாகமங்களின் ஞானபாதப் பொருளின் உண்மை போதித்தருள வேண்டுமென்று செய்ய ரௌரவாகமத்து பன்னிரு சூத்திரத்துள் சிவஞான போதமென்பதோர் படலம். அதை நந்திப்பெருமானுக்கு பரமசிவன் அருளிச்செய்தார் நந்திப்பெருமானும் தம்மாணாக்கர் சனற் குமார முனிவருக்கும் அவர் சத்தியஞான தரிசிகளுக்கும் அவர் பரஞ் சோதி முநிவருக்கும் அருளிச்செய்தார்.

பரஞ்சோதி மகாமுநிவர் திருக்கயிலாச மலையைநீங்கி தமிழ்நாடு செய்ததவத்தானே திருவெண்ணெய் நல்லூரில் வேளாளர் சடையப்ப முதலியார் மரபில் அவதரித்தருளிய இரண்டு பிராயத்திற்றானே மெ ய்யுணர்வுமிக்கு சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத் திருநாம முடைய மெய்கண்டதேவர்பால் வந்து சிவஞான போதத்தைச், சத் தியஞானதரிசனிகள்பால் தாங் கேட்டவாறே வகுத் தருளிச்செய்து நீங்கினார். மெய்கண்டதேவர் சகலாகம பண்டிதர் அருணந்தி சிவா சாரியருக்கும் அவர் பெண்ணாகடத்தில் அந்தணர் மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கும் அவர் தில்லை வாழந்தணர்களுள் உமாபதி சிவாசா ரியருக்கும் அவர் கொற்றங்குடியிலிருந்துகொண்டு வடமொழியி லே பௌஷ்கராகமத்துக்கு வியாக்கியான முதலிய எட்டு சைவசித் தாந்தம், கோயிற்புராணம், திருத்தொண்டர்புராணசாரம், திருமு றைகண்ட புராணம், சேக்கிழார்நாயனார் புராணம், திருப்பதிக்கோ வை, திருப்பதிகக்கோவை, என்னும் பிரபந்தங்களைச் செய்தருளினார் உமாபதி சிவாசாரியர் அருணமச்சிவாய தேவருக்கு உபதேசித்தருளி னார் அவர் நவகோடி சித்தவாசபுரமென்னும் திருநாமமுடைய திரு வாவடுதுறையிலே சித்தமூர்த்திகளாக எழுந்தருளியிருந்து சித்தர் சிவ ப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினார் சித்தர் சிவப்பிரகாசதேசி கர் திருமுவலூரிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே திருவ வதாரஞ்செய்து பிரமசாரி நிலையிலே துறவறத்தினராய்ச் சத்தியபா

தத்துத்தமராய் எழுந்தருளியிருந்த நமச்சிவாய மூர்த்திகளுக்கு உபதே சித்தருளினுர் அதுமுதலாக திருவாவடுதுறை மடாதினமென்றும் கைலாய பரம்பரை என்றும் பெயர் புகழப்பெற்று விளங்கி இருக்கின்றது. திருவெண்ணெய்நல்லூரில் சடையப்ப முதலியார் வசித்த திருமாளிகை சடையப்பார் மடமென்றும் மெய்கண்டதேவர் மடமென்றும் பிரசித்தமாகி வழங்கிவருகின்றது.

* ஸ்ரீ லஸ்ரீ நவகோடி சித்தவாசபுரமென்னுந் திருவாவடுதுறை மடாதின தருமபுரி மடாதின காஞ்சீபுரம் ஞானப்பிரகாச மெய்கண்ட சிவாசார்ய மடாதினம் இச்சந்நிதானங்களுக்கு காசி, ராமேச்சுரம் சிதம்பரம், திருவண்ணுமலை, மதுரை திருநெல்வேலி முதலிய அநேக ஸ்தலங்களிலும் மடங்கள் பிரகாசித்திருக்கிறதும் தவிர அந்தந்த மடங்களுக்குட்பட்டதாக சென்னை முதலிய பட்டணங்களில் வேளாளர்களுக்கு குலகுருவாகிய அம்மடாதிபதி சுவாமிகளது அநுக்ஞைப்படிக்கு மாணுக்கர்கள் சிஷ்யசைதன்யங்களுக்கு சிவாகமப்படி தீக்ஷா விதிகள் நடத்திவருகின்றூர்கள்.

வேளாளர் ஆகமங்களை கற்றெழுதுவரென்பது.

காவியமாகிய காமீகங்கண்டுகங் காகுலத்தோ
ரோவியபாத்திர ராகவிருபத்து நான்குயர்ந்த
மேவியகோட்டத்தி லுங்கரிகால வளவன்மிக்க [மே.
வாவியமேன்மை கொடுத்தளித்தான்தொண்டை மண்டல

[இ - பொ]

புராண காவியங்கள் காமீகாதி ஆகமங்கள் முதலியவற்றைக் கற்றெழுதும் கங்காகுலத்தினராகிய வேளாளரதியல்பைக் கரிகால சோழன்கண்டு அவர்க்குள்ளிருந்த எல்லைவழக்குகளைத்தீர்த்து அவர்கள் வசிக்கும் இருபத்துநான்கு கோட்டங்களை வரையறுத்து விரும்பிய மேன்மை யெல்லாவற்றையும் மிகக்கொடுக்கப் பெற்றனர் இத்தகைய வேளாளர் வாழ்வது இத்தொண்டை மண்டலம். (ருச)

* புராண காவிய காமீகாதி ஆகமங்களில் விதித்தன செய்தலும் விலக்கிய வொழித்தலுமாம்.

ஓர் காலத்தில் பிரபஞ்ச உத்பத்தியையும் தருமங்களையும் பற்றி பிரம்மாவிடத்தில் கேட்டவாறு நாரதமஹாரிஷி வியாசபகவானுக்குச்சொல்ல அவர் சுகமஹாரிஷிக்குச் சொன்னுர் அவைகளை யுணர்ந்த

நைமிசாரண்ய வாசிகளானோர் சௌனகாதி மஹாரிஷிகளுக் கருளிய வாறு சூதபுராணிகர் செய்த காவிய புராணங்களில் கூறியவரலாறு கள்.

க-வது பிரம புத்திரராகிய சுவாயம்புமனு உலகமனைத்தும் ஆளுங்காலத்தில் கர்த்ரும பிரஜாபதியினுடைய பெண் சதரூபி என்கிற கன்னிகையை மணந்து, ப்ரயவ்ருதன் உத்தானபாதன், இவர்களையும் மூன்று பெண்களையும் பெற்றான். உத்தானபாதனுக்கு த்ரவசக்கிரவர்த்தியும் பிரயவ்ரதனுக்கு ஒன்பது பிள்ளைகளும் பிறந்தார்கள் சத்தநிவுகளையும் இந்தப்ரயவ்ரதன் பதினொரு பத்மமாண்டு இந்நாவலந்தீவை நவகண்டங்களாகப் பகர்ந்து கொடுத்தான் அதில் இந்தகண்டதகை பரதனுக்கு பட்டங்கட்டி பரதனாண்டதால் இதுபாரதகண்டமென்று பெயர்வழங்கி வருகிறது.

உ-வது. ரோசிஷமனு இவன் சப்தராசசிராஜன் குமாரன் இந்தராஜனுக்கு சுசேஷணன் இவ்விரண்டு பிள்ளைகளுக்கு ராஜ்யத்தைப்பட்டங்கட்டி ஆளுவித்து பின்னர் இந்தரோசிஷமனு இந்திரனானான்.

ந-வது ப்ரயவ்ரதன் பிள்ளை பூவுலகையாண்டு எக்கியங்களைச்செய்து தேவர்களுக்கு இதத்தையே பண்ணிநற் கருமங்களையே புரிந்து உத்தம மனுவெனப பெயர்பெற்று மேலான பதமடைந்தான்.

ச-வது. தாமசமனு வென்போன் புத்ர பௌத்ராதிகளோடு அநேககாலம் நீதியாக ராஜ்யம் பரிபாலித்து மூவாசையையு மொழித்து தபசிலிருக்கும்போது அங்கேவந்த அகஸ்திய மஹாமுனிவரைக்கண்டு எழுந்து வணங்காமையால் மதாந்தகாரப்பட்டா னென்று கோபித்து அவனை மதத்தையுடைய யானையாகுகவெனச் சாபமிட்டார் அப்போது ராஜன் துக்கித்து வணங்கி வேண்டி கொண்டமைக்கிரங்கி நீயானையாகினாலும் உன்னை முதலைபிடித்துக்கொள்ளும் அக்காலத்தில் நீஆதிமூலமே என்று முறையிடக்கடவை அத்தருணம் மஹாவிஷ்ணுவந்து உன்னை ரக்ஷிப்பரென்று அநுக்கிரஹித்தார் அந்தசாபம் பெற்று யானையாகி யுழலுகையில் ஓர்நாள் சமுத்திரத்தில்போய் விளையாடல்செய்ய முற்காரணத்தால் முதலை யானையின்காலைப் பிடித்து விழுங்கத்தொடங்கியது யானை தன்னால் கூடியவரையில்பார்த்து தன் பலமடங்கி அழுது பயந்து பூர்வ அநுக்கிரகம்பெற்ற பலத்தால் நல்லஞானம் பிறந்து விஷ்ணுவை தியானித்துக்கூக்குரலோசை கொண்டு ஓலமிட்டழுத போது விஷ்ணுவானவர் கிருபாநோக்கஞ்செய்து சக்க

நப் பிரயோகித்து முதலையைச்சம்மரித்து யானையை ரக்ஷித்தார் ஜுதிகஜேந்திர மோக்ஷ மென்பது இது காரணத்தால் பெருமாள் இவரும் ஆனைவாகனத்துக்குக் காலில்லாமலிருக்கிறது.

ரு-வது. ரைவதமனு உலகமனைத்தும் ரக்ஷித்து நீதிமானெனப் புகழ்பெற்று ராக்ஷசர்களை ஜயித்து தேவர்களை ரக்ஷித்து சற்கதியடைந்தான் இந்தராஜன் பெண் ரேவதி என்பவள் வெகுகாலம் தவமே புரிந்திருந்து பலராமருக்கு பாரியையானாள்.

சா-வது. சாக்ஷுஷமனு இந்தமனு மஹாநீதிமானானதலால் இவனுக்கு விஷ்ணு புத்திரராகப் பிறந்தார் இவர் மந்தராசலத்தைக் கொண்டுவந்து சமுத்திரத்தில் போட்டு அதுஜலத்தில் நிலைத்திராமையால் கூர்மாவதார மெடுத்து அந்த மந்தரத்தைத்தாங்கி க்ஷீராப்தியை கடையச் செய்தார் இதனாலேதான் கடலில் அமிர்த முதலியதுபிறந்தது. இந்த அமிர்தத்தை விஷ்ணு மோகினி ரூபமெடுத்து ராக்ஷதர்களை மயங்கித் தவிக்கும்படி வஞ்சித்து தேவர்க்களுக்கு அமிர்தங் கொடுத்தார்.

எ-வது. வைவைசுதமனு நீதிமானாயுலகையாண்டு பிதுர்தேவதைகளுக்கு சமானமாயிருந்து பத்து குமாரர்களைப்பெற்று இக்ஷுவாகுமுதலியோரில் புரந்தரனென்பவன் இந்திரனானான் உ-வது குமாரன் ஆதித்தனானான் ஏழுபிள்ளைகள் சப்தரிஷிகளானார்கள் இந்தரிஷிகளில் காச்யபருக்கு அத்தி வயிற்றில் விஷ்ணுவாமனரூபமாக வவதரித்து முன் இந்திரபட்டத்தை அபகரித்து ஆண்டிருந்த பலிசக்ரவர்த்தியை மூன்றடிமண்கேட்டு அவன்கர்வமடங்கும்படி அவனை பாதலத்தழுத்தி இந்திரனுக்குப்பட்டங்கொடுத்து பலிச்சக்கிரவர்த்தியையும் ரக்ஷித்தார்

அ-வது. சூர்யஸாவர்ணிகமனு இவருக்கு புத்திரர்கள் நிர்மோகன் விரஜன் இவ்விருவரும் அரசரானார்கள் தபோவிரஜன் அம்ரதப்பிரபு இவர்களிருவருந் தேவர்க்களானார்கள் காலவன் தீபத்தமந்தன் பரசுராமன் துரோணபுத்ர அசுவத்தாமன் கிருபாசாரி வியாசர் ருஷிச்ருங்கன் இவர்கள் சப்தருஷிகளானார்கள் இந்த மனுகாலத்தில் விரோசனன் பிள்ளை பலிச்சக்கிரவர்த்தி இந்திரனானான்சூரியன்பாரியை சாயாதேவி சௌஞ்சிகாதேவி இவர்களில் உ-வது பாரியாளுக்கு இயமன் சிரார்த்ததேவன் யமுனையெனும் பெண்ணும்பிறந்தனர் பிரதமபாரியாளுக்கு தபதி சூரியசாமனு சனிசுவரன் இம்மூவரும் பிறந்தனர்.

௯-வது. தக்ஷஸாவர்ணிமனு இவன் குமாரன் தி-
ரீப்தகேது இவர்கள் இராஜனுர்கள் பரமரீசி கார்கயர் இவர்கள்
தேவதைகளானுர்கள் அற்புதன் இந்திரனுன் த்ருதிமத் ப்ரட்ருதி
யிவர்கள் ருஷிகளானுர்கள்.

௧௦-வது. உபசுலோகன் பிள்ளை பிரம்மசாவர்ணிகமனு இவன்
மக்கள் பூரி சுஷேணன் இவர்களரசரானுர்கள் ஹவி மத்ப்ரபு முதிக
ளானுர்கள் ஐம்புஎன்கிறவன் இந்திரனுன் விபுதாள் தேவரானு
ர்கள்.

௧௧-வது. தர்ம்மசாவர்ணிகமனு இவன்புதல்வர் சத்யதர்மாதி
கள் பத்துபேர் அரசரானுர்கள் வ்யஹங்கமன் காயகமனன் நிர்வாண
ன் இம்மூவர் தேவரானுர்கள் வைத்ருதியென்போன் இந்திரனுன்
அருணாதிகள் ருஷிகளானுர்கள்.

௧௨-வது. பத்ரசாவர்ணிகமனு இவர்புத்ரர் தேவவசு தேவதே
வன் இவ்விருவரும் பூமிக்கரசர்கள் ருதுதாமன் இந்திரன் ஹரி முதலி
ய தேவர்கள் தபோமூர்த்தி ஆக்னேயத்ரவன் இவர்கள் ருஷிகளா
னுர்கள்.

௧௩-வது, தேவசாவர்ணிகமனு இவருக்கு உதித்த சித்ரசேனன்
விசித்திரன் இவர்களரசர் சுகர்ம்மா சுத்ராமா சௌஞ்ஜை இம்மூவரும்
தேவதைகள் திவர்ப்பதி இந்திரன் நிர்மோக தத்வதரிசர்திகள் ருஷிக
ளுமானுர்கள்.

௧௪-வது. இந்த்ரசாவர்ணிகமனு இவனுக்குப்புதல்வர் கம்பீரன்
சுவாது இவ்விருவரும் அரசரும் பவித்திரன் சாக்ஷுசு இவர்தேவர் சுசி
யென்பவன் இந்திரன் ஆக்கினி பாகு சுத்ரமாகதாதிகள் ரிஷிகளுமானு
ர்கள்.

திரிகாலங்களிலும் ஜகதீசனுலும் புகழப்பட்ட மனுசரிதங்க
ளையாவருங்கொண்டாடத்தக்கதே இப்பதினுலு மனுக்களுக்குள் ஒவ்
ஒருவருக்கும் ஆயிர மாயிரம் யுகமாகச்சென்றால் பிர்ம்மாவுக்கு ஒருப
கல் இம்மனுக்கள் அளவிறந்த அனேககாலங்களிருந்து பூவுலகை கன்னி
தியாகவாண்டு நல்லபதவியடைந்து ஒவ்வொரு மனுகாலத்திலும் வெவ்வே
று இந்திரபட்டமும் வெவ்வேறு சப்தரிஷிபட்டமும் ஏற்படுகிறதாக
வு மேற்படுகிறது இவர்கள் பதவியடைந்த தினங்கள் புண்யகாலங்களா
கல்பற்றி அத்தினங்களில் பஞ்சாங்கத்தைப்பார்த்து தற்பணாதிகளை
கிரமப்படி செய்யவேண்டும் இந்தசப்தருஷி மண்டலமானது அசுவனி

நக்ஷத்திரம் முதற்பாதத்திலிருந்து ரேவதி நாலாம்பாதம்வரையில் சஞ்சரிப்பதினாலே இதுமுடிந்தால் தேவவருடமாறுகும் இந்தமண்டலமும் சூரிய சந்திர நக்ஷத்திராதி கதியாகவும் நடக்கும் இன்னம் (எஉ) மறுக் கனென் பாருமுளர்

இதன்றியும் ஓரரசன் மூன்றுசங்கமென்னுங்காலம் உலகை யாண்டு அந்தியத்தில் தனதுகுருவசிஷ்டரை பிரார்த்தித்து தான்சுவர்க்கத்துக்கேகச்செய்யவேண்டுமென்று கேட்டதற்கிசையாமைகண்டு விசுவாமித்திரரை வணங்கி அவரால் சுவர்க்கஞ்சேருங்கால் அதுவசிஷ்டர் அறிந்து சீற்றங்கொண்டு அவனை சண்டாளனாகுகவென சபித்தார் அரசன் சுவர்க்கஞ்சேர்ந்தும் கொடிய சாபகிருஸ்தனானமைபற்றி தேவர்கள் அவனை பூமியில்தள்ளிவிடவும் அவன்தலை கீழாக அலறி புலம்பி பயந்து வருவதைவிசுவாமித்திரர்கண்டு கோபாவேசத்துடன் ஊங்காரஞ்செய்ய மத்தியில் தலைகீழாகவந்தபடியே நின்றுவிட்டான் நக்ஷத்திரவீதியில் அநுஷ நக்ஷத்திரமுதல் ஐந்துநக்ஷத்திரங்களை தூக்கிதெற்கில் அடைத்துவிட்டு திருச்சங்கு சுவர்க்கமென்று விசுவாமித்திரரால் ஏற்படுத்தப்பட்டு இந்ததிருச்சங்குராஜன் அரிச்சந்திரமஹாராஜாவின்பிதா இதுபோல தேவர்கள் கைலாயத்துக்குச்செல்வதற்கு தெற்கு வடக்காக ஒருபாட்டையும் நக்ஷத்திரங்கள் (உஎ) கிரகங்கள் (கூ) ருஷிகள் (எ) இவர்களில் வஸிஷ்டரிஷி பத்தினிஅருந்ததி இரவி சசிஉதயம் அஸ்தமனம் பரிவேடம்வானவில்கிரகணம் தூமகேது இந்த தாராரூபமான மற்றும் யாவரும் அறியக்கூடியதா யிருக்கிறது தாரா வென்னும் நக்ஷத்திரங்களாவது யுத்தரங்கத்தில் வீரந்தோடிருப்பவர்வீரசுவர்க்கஞ்சேர்ந்து அந்தப்பல னனுபவித்து தீர்ந்தபின் மறுபடி பூமியில்வந்து ஜலத்தில் ஓஷதியில்கலந்து கர்ப்பத்தில்சேர்ந்து ஜனிப்பர் இதுதான் நக்ஷத்திரங்களுதிர்வது.

சப்தரிஷிகளின் பத்தினிகளில் அருந்ததிமாத்திரம் தெரிகிறதென்றால் அக்கினிதேவன் சப்தரிஷிகளின் பத்தினிகளின்பேரில் மோஹங்கொண்டு நாளுக்குநாள் தேகங்கிருஷிச்சுப்போவதுகண்டு அவன்பத்தினிக்குத்தெரிந்து அவனைதேற்றும் பொருட்டு அருந்ததி தவிர மற்றையரைப்போல உருவங்கொண்டு அக்கினிதேவனைக்கூடினாள் அருந்ததி உருவமாகவந்தபோது சந்தேகித்து கேட்கையில் மஹாரிஷிகளின் பத்தினிகளை மனதில் அபசாரமாக நினைத்தாலும் சாபநேருமென்பது பற்றி உன்பிரமைநீங்கவானேஇப்படிசெய்தேனென்றுசொல்லி தேற்றினாள் இதுசங்கதி வஸிஷ்டர்தவிர மற்ற அறுவருமறிந்து அபவாதம்வந்தது

சகியாது தங்கள்பத்திநிகளறுவரையும் நீக்கிவிட்டார்கள் அவ்வாறுபே ரும் வடக்கேபோய் விட்டமையால் இங்கே அவைகள் தெரிகிறதி ல்லை ஆதலால் லோகாபவாதம் யாருக்கும்ஆகாது அகாத விஸ்தீரண கண்யமாயுள்ள சமுத்திரங்களையில்லாமலும் பூமிக்குமேலுயர்ந்து நின் றும் பள்ளத்திலுள்ள நீரைஆக்கிராணிப்பதும் ஆதாரமின்றி ஆகாசம் நிற்பதும் நீரின்மேலே பூமியிருப்பதும் பிரசண்டவாய்வுவ்யாபிப்பதும் ஒடுங்குவதும் மேகமெங்கும் ஏககாலத்தில் மூடி அது அடையா ளமேயில்லாம லடங்கிப்போவதும் இடி மின்னல் குமுறல் பூகம்பம் கல்மழை யிவையெல்லாம் ஒருபிரமாணத்துக்குள் ளடங்கியவையல்ல மாயாசுவரூபமாயுள்ளகங்கை முதலிய ஜீவநதிகளும் காவிரிப்பெரு க்கும் அங்கங்கே காலக்கிரமம் வான்பெயதலும் தேவவலுமையாலு ள்ளவைகளென்றறிக இதிலொன்றேனும் அல்லததின் சக்தியோடு விச் ரமிக்குமானால் உலகமழியாது நிற்குமா எல்லாம் ஆக்கவும் அழிக்கவும் அடக்கி ஆளவும் வல்லகர்த்தன் ஒருவனுக்கேசுவாதீனப்பட்டவையெ ன்றறிக ஆனால் அவனது ஆஞ்ஞைப்பிரமாணங்களையுணர்த்தும் சாஸ் திரங்களின்படி நடப்பதேயாம்.

## மாதமாத மனுஷ்ட்டிக்க வேணவிரதங்கள், கொண்டாடும் பண்டகை தினங்கள்.

சம்வற்சராதி பாட்யமை இதுயுகாதி பண்டகை என்பது சாந் த்ரமான வருஷப்பிறப்பாகும் இது பங்குனி மாதம் அமாவாசைகழி த்த மறுநாள் பாட்யமையாகும்.

பானு விதியை சித்திரைமாதம் ஆதிவாரமும் த்விதியையும் சேரும்தினம் சூரியனுக்கு பிரீதிதினமாதலால் அன்று நியமனத்து டன் பாயசம்செய்து சூரியபகவானுக்கு நிவேதிக்கவேண்டியது.

அக்ஷத்ரிதியை பார்வதிதேவியாருக்கு கோட்டைகட்டி அதினுள் பார்வதியாரைவைத்து சித்திரைமாதம் சுக்லபக்ஷம் த்ரிதியை முதல் வைகாசிமாதம் சுக்லபக்ஷம் திரிதியைவரைக்கும் மூன்று திரிதியையு மிப்படி பூசிப்பது.

ஆவணிமாதம் விநாயக சதுர்த்திதினத்தில் விநாயகரை பூசிக்க வேண்டும்.

கருட பஞ்சமி ஒருராஜன் பிள்ளைகள் எழுபேர் வேட்டையாடி களைத்து ஒருபுற்றினிடத்தில் படுத்தபோது அப்புற்றினிடமாயிருந்து பாம்புகடித்திறந்ததை தாய்தந்தையர்தேடி கண்டுபிடித்து துக்கிக்கை

யில் இறந்தவர்களின் தங்கை கருடபஞ்சமி விரதத்தை அநுசரித்து புற்றை பூஜித்து புற்றுமண் எடுத்து சலத்தில்சேர்த்து புரோக்ஷித்த மாத்திரத்தில் அவர்கள் ஏழுபேரும் உயிர்த்தெழுந்தார்கள் இந்த விரத பலத்தையறிந்து யாவரும் அநுஷ்டித்து வருகின்றார்கள்.

சம்பத்ஷஷ்டி புரட்டாசிமாதம் கிருஷ்ணபக்ஷம் ஷஷ்டி தினத்தில் சுமங்கலி பிரார்த்தனை செய்யவேண்டும், இதனால் அவர்களுக்கு மேன்மேலும் சம்பத்துண்டாகும்.

ரதசத்தமி சூரியன்ரதம் திரும்புவதால் யாவரும் தற்பணமுதலியதும்செய்வர் அவரவர்கள் வீடுகடோறும் அன்னபலாதிகளுடன் பாயாசமும்செய்து சூரியபகவானுக்கு நிவேதிப்பர்.

கிருஷ்ணஜயந்தி கிருஷ்ணன் ஆவணிமாதம் இராத்திரி உரோகணி நக்ஷத்திரத்தில் ஜனித்ததால் அன்றுபகல் உபவாசமிருந்து இரவில் பூஜை முதலியசெய்து குழந்தைகளுக்குரிய சீடைமுதலிய பலகாரபண்டங்களை நிவேதித்து பின்னர் புசிப்பார்கள். ஸ்ரீராமநவமி ஸ்ரீராமமூர்த்தி சித்திரைமீ பகலில் உதித்ததால் அன்று பூசை முதலிய புரிந்து திவ்யாந்நபான பலஹாராதிகளுடன் புசித்துவருகின்றனர், இவ்விரண்டிலும் சாந்திரசௌரமானபடி மாதமாத்திரம் வித்தியாசப்பட்டு வருவதும் உண்டு.

விஜயதசமி ஆடிமாதம் சுக்லபக்ஷம் ஏகாதசிமுதல் ஐப்பசிசுக்லபக்ஷம் த்வாதசி வரைக்கும் நாலுமாதமும் யோகிகளுக்குவிரதம் முதல்மாதம் சாகங்களாகாது இரண்டாமாதம் தயிராகாது மூன்றாமாதம் பால் ஆகாது நான்காமாதம் பருப்புகறிகள் உப்புபுளி முதலிய ஒன்றுமே ஆகாது ஐப்பசிமாதம் சுக்லபக்ஷம் துவாதசி தினம் க்ஷீராப்தி பூஜைசெய்து எல்லாபலஹாரங்களுடனும் சாப்பிடலாம்.

சனிப்பிரதோஷம் பிரதோஷ விரதமிருந்து இரவில்சிவதரிசனம் செய்தபின் யாருக்காவது அன்னமிட்டுண்பித்து பின்னர்தாம் புசிக்கவேணும்.

நரகசதுர்த்தசி நரகாசுரனைவதம்செய்து அவனால்வேண்டப்படும் வரத்தின்படி அருணோதயத்தில் தீபங்களை வைத்து எண்ணெயிட்டு ஸ்நாநம்செய்வர் அப்படி செய்தவர்களுக்கு நல்லபுண்யபலன்கிடைக்கும் இதுத்வீபாவளி பண்டிகையெனவும் பெயர்பிரசித்தம். காமன் பௌர்ணிஅன்று மன்மதனை சிவன்எரித்ததினமாகையால் அன்றைய தினம் காமன்பண்டிகைகொண்டாடுவார்கள்.

த்வீபாவளி அமாவாசைதினமே கேதாரகௌரிவிரதம் செய்து நோன்புகயிறு கையில் கட்டிக்கொள்வார்கள்.

## புராணகாவியங்களாவன.

க. திருமால் மச்சியாவதாரங்கொண்டு சத்தியவிருதராஜனால் வளர்க்கப்பட்டு வேதங்களை அபகரித்து சமுத்திரத்தில் ஒளித்திருந்த ஹயக்ரீவாசூரனைவதைத்து அவ்வேதங்களைவெளிப்படுத்தி சத்திய விருதராஜனுக்கு ஞானமுபதேசித்து அவனைவைவஸ்வுத மனுவாகப் பிறப்பித்து உலகாளச்செய்வித்தனர்.

உ. விஷ்ணு கூர்மாவதாரம் (ஆமை) செய்து மந்திரகிரியைமத் தாக்கி வாசுகியைத்தாம்பாக்கி தேவர்கள் ஓர்பக்கமும் ராக்ஷஸர்க ளோர்பக்கமும் பிடித்திழுத்து பாற்கடலைக் கடையும்போது அப் பர்வதம் கடலில் அழுந்தாது தம்முதுகிற்றாங்கி, சமுத்திரத்தை கடை ந்து நவநிதிகளையும் இலக்குமியையும் சந்திரனையும் அமிர்தத்தையும் உண்டாக்கினர்.

ந. கச்யபிரமாவுக்கு அதிதிவயிற்றில் இரட்டைப் பிள்ளைகள் பிறந்தனர் முன்னோன் ஹிரண்யகச்யபு; பின்னவன் ஹிரண்யாக்ஷன் என்பவருள் ஹிரண்யாக்ஷன் வேதங்களைக்கவர்ந்து பாதலத்துச்சென் றொளிக்க விஷ்ணுவராஹவதாரமெடுத்து அவ்விரண்யாக்ஷனைக்கொ ன்று வேதத்தைதந்தனர்.

ச. ஹிரண்யகச்யபு பரத்துவம் தானேயென்று கர்வித்து வாழ்கையில் அவன்குமாரன் பிரகலாதனன் விஷ்ணுவேபரத்துவ மென்றுவாதிக்க அவன்பொருட்டு தம்பத்திலிருந்து விஷ்ணு நரசிங் கஅவதாரஞ்செய்து அவ்ஹிரண்ய கச்யபுவைகொன்று பிரகலாத னனை இரக்ஷித்தனர்.

ரு. விஷ்ணு வாமனாவதாரமெடுத்து மாவலியிடத்து மூன்றடி மண் பெற்று பூமி ஆகாசம் இரண்டையும் இரண்டடியாக அளந்து மூன்றாவதடியை தத்தம்செய்த மாவலிதலையில் வைத்து அவனைப்பா தலத்திலழுத்தி மாபலிசக்கிரவர்த்தியென்னும் பெயரும் சிரஞ்சீவிப ட்டமும் அளித்து திரிவிக்கிரமமூர்த்தியென்றும் புகழ்பெற்றனர்.

சா. விஷ்ணு ஜமதக்கினியின்பத்தினி ரேணுகைவயிற்றில் பர சுராமாவதாரமாக ஜனித்துதன் பிதாவைக்கொன்ற கார்த்தியவீரியன் முதலியவரசரை இருபத்தொரு தலைமுறையளவும் கொன்றுதாம் அர சாண்டு தனதுயாகத்தில் காச்யபருக்கு பூமிமுற்றும் தானம்செ

ய்து தான்தானங்கொடுத்த பூமியில்வசிக்கப்படாதென்று மேற்கடலில் கிழக்குமேற்கு ஆறுகாதம், தெற்கு வடக்கு முப்பதுகாதம் விசாலமான இடம்உண்டுபண்ணி பரசுராமக்ஷேத்திரமெனப் பெயரிட்டு பிராம்மணுள் அந்தக்ஷேத்திரத்தில் பிரவேசிக்கக் கூடாதென்று சாபங் கொடுத்தனர்.

எ. விஷ்ணு இராமாவதாரமெடுத்து இராவணுதி இராக்ஷஸர்களை சங்கரித்து தேவர்முதலானவர்களின் இடுக்கண்தீர்த்தனர்.

அ. மாயோன் பலராமாவதாரஞ்செய்து அதர்க்கணுளாயிருந்த கம்சன் சகோதரர்களை ஜெயம்புரிந்தனர்.

கூ. திருமால் யதுகுலவரசனுக்கு தேவகி கருப்பத்தில் கிருஷ்ணுவதாரஞ்செய்து கோபலீலையில் வளர்ந்து, கம்சன், சகடாசூரன், சிசுபாலன் முதலானவர்களை சங்கரித்து யசோதைபிராட்டிக்கு விஸ்வரூப தரிசனங்கொடுத்து குபேரனது இரண்டுபிள்ளைகள் மருதமரமாயிருந்தசாபத்தை ஒழித்து இராமாவதாரத்தில் இச்சித்த ரிஷிகள் பெற்றவரத்தால் அவதரித்த கோபிகாஸ்திரீகள் ஒவ்வொருவருக்குப் ஒவ்வொருவராக இருந்து இன்பமூட்டி கிரீடாசுகங்காட்டி உத்தரத்தில் பூர்வரிஷிகளாகும்படி அருளிச்செய்தனர் பார்த்தசாரதியாயிருந்து பாரதம்முடித்து பாண்டவசஹாயமும் செய்தனர் இச்சரித்திரங்களை ஆரியப்புலவரால் செய்தருளிய ஸ்ரீ மஹாபாகவதத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

கo. கெர்வித்த தாருகாவனவாசரிஷிகளை விஷ்ணு மோஹினி அவதாரங்கொண்டு அவர்களை கெர்வபங்கஞ் செய்தனர்

விஷ்ணு பௌத்தாவதாரம் எடுத்து அருகனென்னுமரசனை உண்டுபண்ணி அவனுக்கு இருபத்துநாலுபெயரை தீர்த்தகர்களாக ஏற்படுத்தி அவர்களால் கொல்லாவிரதமென்னும் சாத்திரமும் செய்வித்தனர்.

### சோடசமஹாராஜாக்கள்.

க. சம்வர்த்தனென்கிற ராஜன் தேவதைகள், குருமுதலானவர்களோடும், உபதிஷ்டாவென்கிற பாரியாளோடும் ஹிமாசல பர்வதச்சாரலில் இந்திரன் முனிவர்களோடு இருந்து தவம்புரிந்து பேறுபெற்றனன்.

உ. சுகோத்திரனென்கிற அரசன் சன்மார்க்கமாக நீதிசெலுத்தியதால் அவன் இராச்சியத்துக்கு இந்திரன் ஸதாகனகவருஷம் வரு

ஷிப்பித்து வந்தமையால் அவ்வுலகமுற்றும் பொன்மயமாகவிளங்க அவ்வரசன் அஸ்வமேதயாகமியற்றி நற்கதியுற்றனன்.

ரு. நிருகமகாராஜன் நீதியாய் உலகாண்டு கஜாந்தைச்வரியத்துடன் வாழ்ந்து க்ருதுக்களையேசெய்து நற்பதவியைப் பெற்றனன்.

சு. சிபிச்சக்கிரவர்த்தி ஸப்ததீவுகளிலும் தன்தேனைச்செலுத்தி அரசாண்டு கெங்காதீரத்தில் அநேகயாகங்களியற்றி நித்தியபதம்புக்கினன்.

ரு. தசரதமகாராஜன் நல்லபுண்ணியச்வரூபனாக அறுபதினாயிரம் வருடம் உலகைஆண்டு விஷ்ணுவேதனக்குப் புத்திரராகப்பெற்று முக்தியடைந்தனர்.

சு. பகீரதமகாராஜன் தனதுபிதுர்க்கள் இருபத்தொருதலைமுறையினரும் நற்கதிசித்திக்கும்பொருட்டு தவஞ்செய்து கங்கையைக்கொணர்ந்து அவர்களெல்லோரையும் கதியடையச்செய்வித்தனன்.

எ. திலீபமகாராஜன் தனக்கொருவர் நிகரின்றி திக்குவிஜயம் புரிந்து இந்திரனைப்போல் பெருஞ்செல்வனாக வாழ்ந்து அஸ்வமேதம் புரிந்து நித்திய முக்தியிற்சென்றனன்.

அ. மாந்தாதாவென்னும் மகாராஜன் தான் ஜெனித்தது முதல் சகலபோகங்களையும் அனுபவித்து நீதியோடுலகாண்டு அன்னம் மலைபோலும், நெய் ஆறுபோலும் தினம் தானஞ்செய்து ராஜசூயம் அஸ்வமேதமுதலிய யாகங்களைச்செய்து அழியாப்புகழைநாட்டி பரலோகத்தும் புகழுடலைக்காட்டிடச் சென்றனன்,

கூ. யயாதிமகாராஜன் அநேகராக்ஷஸரைக்கொன்று ஜனங்களைக்காத்து நீதியுடன்வாழ்ந்து மேலாம்பதவிபெற்றனன், இவ்வரசன் சுக்கிரன்பெண் தெய்வயானையை மணந்து ச்வர்க்கபோகங்களினும் சிறப்புற்று வாழ்ந்தனன்,

க0. அம்பரீஷமகாராஜன் அன்னதானமே பெரிதெனச்செய்து பலயாகங்களைப்புரிந்து நீதியாய் அரசுநடத்தி வாழ்ந்தனன்.

கக, சசிபிந்துவென்னு மகாராஜன் லக்ஷம்ஸ்திரீகளை மணம்புரிந்து ஒவ்வொருவருக்கும் ஐந்தைந்து புத்திரர்களாக ஐந்துலக்ஷம் பிள்ளைகளைப் பெற்று பத்துகோடி படாக்களையுடைய இராஜனாகவாழ்ந்து ஸத்கர்மங்களைப் புரிந்து பெரும்பேறு பெற்றனன்.

கஉ. கயன் என்னு மகாராஜன் அதிகதவத்தால் அக்னியை ஆராதித்து பிரமசரியனாகியும் எவ்வுயிர்க்கும் ஹிம்சையில்லாமல் தா

ணம் செய்தும், கோதாவரிதீரத்தில் முப்பத்தாறு யோசனையளவாக யாகசாலைசெய்து யாகம் புரிந்தும் புண்ணியமே ஒருருவாய் வந்தாற் போல ஆண்டு அரும்பதம் அடைந்தனன்.

கங. அந்தியுதேவமகாராஜன் சத்திரயாகம்செய்து தானமுத லியவைகளைக் கொடுத்து யாவரையும் புனிதராக்கி மகிழ்வித்து மே லாம் பதவிசென்றனன்.

கச. துஷ்டியேந்த மகாராஜனுக்கு சகுந்தலைவயிற்றில் பிறந்த பரதமகாராஜன் காளிந்தி, ஸரஸ்வதி, பாகீரதி முதலிய நதிகளில் யாகாதிகளைச்செய்து பேறுபெற்றனன்.

கரு. பிருதுசக்கிரவர்த்திபூமியெல்லாம் சமப்படுத்தி காமதேனு வால் ஒஷதி, ரத்தினங்கள் முதலியவைகளைப்பெற்று ஜனங்களைப் போஷித்து அநேகயாகாதி கிருதுக்களை நடத்தி நற்கதியுற்றனன்.

கசு. சூரியவம்சயுவனாச்வன் புத்திரனாகிய மாந்தாதாவென்னு மரசனுக்கு சசிபிந்துராஜன் புத்திரியாகிய பிந்துமதியினால் புருகுச் சன், அம்பரீஷன், முசுகுந்தன் ஆகிய இம் மூன்று புத்திரர்களும் ஐம்பது பெண்களும் ஜனித்தனர். அம்மூவரில் அம்பரீஷனை யுவனா ச்வன் புத்திரனாகக் கொண்டனன் புருகுச்சனை நாகலோகத்தார் அழைத்துக்கொண்டு போய் நருமதையென்னும் நாககன்னிகையை விவாகம் செய்வித்தனர், பின்னர் பூவுலகில்வந்து அரசுசெய்தனன். இப்பதினாறு மகாராஜாக்களும் நீதியாய் ஆண்டு உலகில் என்றுமழி யாத புகழை நிலைநாட்டி சோடச மகாராஜாக்களெனப்பெயரைநாட்டி நற்கதியை நண்ணினார்கள்.

மஹாவித்வானும் அரசனுமாகிய அதிவீரராம பாண்டியன் கூர் மபுராணம், பிரமோத்திர காண்டம், நைடதம் காசிகாண்ட முத லிய அநேக காவியங்களைச் செய்தனர்.

அரிச்சந்திரன் அயோத்தியை ஆண்டு பொய்புகல்தற்கு அஞ்சி பெண்டுபிள்ளையுடன் அடிமையாகி சத்தியம் தவறாதிருந்ததால் மீண் டும் உலகை ஆண்டனன்.

சிபியரசன் அபயமென்றடைந்த புறவுக்காக தன்னுடலை வேட னுக்கு அரிந்துகொடுத்து அப்புறவை ரக்ஷித்தனன்.

ஸ்ரீராமர் மாதுருவாக்கிய பிரகாரம் ஆரணியத்துக்குச் சென்றனர்.

தருமராஜன் பிதுருவாக்கியம் தவறாது கானகத்துக்கேகினர்.

நளச்சக்கிரவர்த்தி சனி உபத்திரவத்தால் சூதில் நாடு நகரிழந்து பத்தினியைப்பிரிந்து பிறவரசனுக்குத் தொண்டுபுரிந்து மீட்டும் பழய படி எல்லாச்செல்வங்களையும் பெற்று நாடாண்டனன்.

பாருகனென்கிற ராஜன் ஒருவனிருந்தான் அவனை பகைவர் காட்டில்துரத்தி விட்டார்கள் அவன் ஆரணியத்திலிருக்கையில் இவனுக்கு சகரன்பிறந்து பிறவரசர்களைசெயித்து அரசாண்டுவந்தான் இந்தசகரன் யாகஞ்செய்யவிட்ட அசுவமேதயாககுதிரையை யாகத்தைநிறைவேறுவண்ணம் இந்திரன் பாதாளலோகத்தில் தபம் செய்திருக்கும் கபிலரிஷிபின்னாலே கொண்டுபோய் கட்டிவைத்தான் சகரன் பிள்ளை அறுபதினாயிரம்பேரும் சப்ததீவிலும்தேடி குதிரையைக் காணுமையால் பூமியைதோண்டி பாதாளத்தில் வடபார்சத்தில் கபிலரிஷியிடமிருக்கக்கண்டு அவர் அதைதிருடியதாக வெண்ணி ரிஷியைத் துன்பப்படுத்துகையில் அவர் கண்விழித்து பார்த்தபோது அந்த அறுபதினாயிரம் பிள்ளைகளும் எரிந்து நீறாகிவிட்டார்கள் இவர்கள் வரவில்லையென்று சகரராசன் தன்பேரன் நமசுமந்தன் என்பவனை அனுப்ப அவன் கபிலரிஷி ஆசிரமத்தில் யாககுதிரை யிருக்கக்கண்டு வணங்கிபிரார்த்திக்க மகாரிஷிக்குதயைபிறந்து உம்பிதாக்கள் அறுபதினாயிரம் பேரும் தமதுகோபாக்கினியா லெரிந்ததைச்சொல்லி குதிரையைக்கொடுத்து யாகபூர்த்திசெய்து பின்பு இவர்களையும் எழுப்பிகொள்ளும்படி அநுக்கிரகித்தார் அந்தயாகத்தை பூர்த்திசெய்து தன்பேரன் நமசுமந்தனுக்கு பட்டங்கட்டிவைத்து சகரன் தபசுக்குச்சென்றான்.

பிரமபுத்திரராகிய சுவாயம்புமனு புத்திரகாமேஷ்டியாகம் செய்து யாகாக்கினியில் பிறந்த இளையென்கிறபெண் ஈசுவரகடாக்ஷத்தால் சுத்யும்னனென்கிற பிள்ளையாகி அரசாண்டிருக்கையில் அவன் ஆயிரம்பெண்களை விவாகித்து கைலாயத்திற்கு சமீபத்திலிருக்கும் ருத்திரதீர்த்தத்தில் மூழ்கினபோது பழயபெண்ணுருவாகி புதனைக்கூடி புரூரவசக்கிரவர்த்தியைப்பெற்றான் இவன்ஊர்வசியைவிவாகித்து பதினொருபிள்ளையைப்பெற்று அதில்மூத்தகுமாரனாகிய நகுஷனுக்குப் பட்டங்கட்டிவிட்டு பரகதியடைந்தான் சந்திரன்பிள்ளை புதன் புதன் பிள்ளை புரூரவன் முதலாக சந்திரவம்சத்தரசரானை வழங்குகின்றனை இதனை பாரதம் ஆதிபர்வத்திற்காண்க. பெண் உருவமைந்த சுத்யும்னன் விசனப்பட்டுக்கொண்டிருக்கையில் ருத்திரகன்னிகைகள் ஆசிர்வாதம்பெற்று பார்வதியார் அனுக்கிரகத்தால் வசிஷ்டர்யாகஞ்செய்து யாகபலனை தாரைவார்க்க இவ்விளையென்கிறபெண்ரூபம்போய் மறு

படி புருஷரூபமுண்டாய் ஆயிரம்பத்திநிமார்களுடனுங்கூடி பழயபடி அரசாண்டிருந்தான்.

தியோதாதன் தேவர்களையெல்லாம் அப்புறப்படுத்த காசிதலத்தை யாண்டு நீதிநடாத்தி தேவர்கள் வேண்டுகோளின்படி காசிநகரைவிட்டு நற்பதம்பெற்றனன்.

கர்னன் தன்காயத்துடன்பிறந்த கவசகுண்டலங்களைக்கொடுத்து நல்லகீர்த்தியுடன் கதியைக்கண்ணுற்றனன்.

விக்கிரமாதித்தன் ஔதாரியத்தால் பெரும் புகழைப்பெற்றனன்.

போஜராஜன் வித்துவான்களுக்கு நாடோறும்கொடுத்து கீர்த்திமானானன்.

சாரங்கதரன் கைகாலறுப்புண்டும் சத்தியம் தவறாமலிருந்தும் மீண்டனன்.

பீஷ்மர் பிதாவின்எண்ணத்தை நிறைவேற்றி தான் பிரமசரிய விரதம் பூண்டனர்.

துருவன் தவத்திற் சிறந்து சிம்சுமால்யாசக்கிரத்துக்கு அதிகாரியாகி உலகியல் நடத்த எல்லாமண்டலத்திற்கும் மேலாக துருவமண்டலமென்னும் லோகத்தைப்பெற்றனன்.

சோழன் உலகமெங்கும் சிவப்பிரதிஷ்டைசெய்து பிரமஹத்திதோஷத்தை நிவர்த்தித்தனன்.

உருக்குமாங்கதன் விருதசீலனாக இருந்து நற்கதியைநண்ணினன்

இந்திரதுய்மன் பலயாகஞ்செய்து பாரினில்தன்பேர் பரவச்செய்து இந்திரபதத்தைப்பார்த்தனன்.

மனு உலகோபகாரமாக பலநீதிநூல்களைப் பகர்ந்து பரவச்செய்தனர் இவ்வண்ணம் காசினியில் பல காவியங்களில் அநேகாநேக அரசர்களும் பக்தஜனங்களும் விசேடப் பேறுபெற்ற புண்ணியசரிதங்களாகிய கோயில் புராணமென்னும் சிதம்பரபுராணம், திருவிளையாடற்புராணம், காவேரிபுராணம், காஞ்சிபுராணம், பெரியபுராணம், ஸ்காந்தமுதலிய பலபுராணங்களும்; பாரத பாகவத ராமாயணமுதலிய இதிஹாஸபுராணங்களும்; இன்னும் பலவகைபுராணங்களும் விளங்கியிருக்கின்றன

## தேவ தானவசமுக உத்பத்தி கிரமம்.

சகல ஜகத்உத்பத்தி நிமித்தஹேது பூதனுகிய பிரமதேவனுக்கு மானச புத்திரராகிய மரீசி அங்கிரசன் அத்திரி புலஸ்தியர் புலஹர் க்ருது என இவ்வாறுபுத்திரர்களில் முதல்புத்திரனுகிய மரீசிக்கு காசிபர் பிறந்தனர் இவரால் சராசர பூதராசிகள் உற்பத்தியாயின எப்படியெனில் பிரமன் வலது பெருவிரலில் தக்ஷபிரம்மனும் இடதுவிரலில் தரணியென்னும் ஸ்ரீயும்பிறந்து இவ்விருவருக்கும் அநேகபுத்திரர் பிறந்தார்கள் இவர்கள் நாரதர்உபதேசத்தால் முக்தி அடைந்தனர் பிறகு (௫)புத்திரிகள் உதிக்க அவர்களில்(௧0)புத்திரிகளை தருமனென்னும் மனுவுக்கும் அஸ்வனி முதலான (உஎ)குமாரத்திகளை சந்திரனுக்கும் அதிதி முதலான (௧௩) பெண்களை காசிபருக்கும் கொடுத்தனர் காசிபர் மனைவியர்களில் அதிதி யென்பவளுக்கு தாத்ருமுதலான துவாதசாதித்யர் உண்டாகினுர் திதி யென்பவளுக்கு ஹிரண்யகசிபன் முதலான அசுரர்கள்பிறந்தனர் தனுஎன்பவளுக்கு விப்ரஜித்தி, சம்பரன் என்னும்(௧0)நிசாசரர் உதித்தனர் இவர்களின் புத்திரபௌத்திரவர்க்கங்கள் அநேகமாய் பிரவர்த்தித்தன காலஎன்பவளுக்கு விநாசக்ரோதாதிகளென ஐவர்பிறந்தனர் ஆயுஷ் என்பவளுக்கு விஜயன், விபுலன் வீரன், வ்ருது எனநான்குபிள்ளைகள் உதித்தார்கள் சிம்ஹிகை என்பவளுக்கு ராகுவும் முனியென்பவளுக்கு பீமசேனன், உக்கிரசேனன் முதலான (௧௬) காந்தருவர் ஜனித்தனர் சுரபியென்பவளுக்கு அமுர்தமும் கோகணமும், கிருதாசி, மேனகை முதலான அப்சரஸ்ரீகளும் உதித்தனர் வினதையென்பவளுக்கு அருணன் கருடன் இவ்விருவர்பிறந்தனர் அருணனுக்கு சேனிகையென்னும் மனைவியினுல் சம்பாதியும் தசரதன் தோழனுகிய ஜடாயுவும் ஜனித்தனர் குரோதவசை யென்பவளுக்கு கணன்என்பவனும் அருகையென்பவளுக்கு சித்தாதிகளும் குருனை யென்பவளுக்கு சுசந்திரன், சந்திரஹர்த்தாதிகளும் கத்ருவையென்பவளுக்கு சேஷன், வாசுகிமுதலான அராப்படைகளும் உதித்தன:

உ - வது. புத்திரனுகிய அங்கிரசனுக்கு பவ்வியர், பிரஹஸ்பதி சம்வர்த்தன், குஹுச்சிநாயை,யோகசித்தியென்னும் பெண்களும்ஜனித்தனர் இவர்களில் பிரஹஸ்பதி தேவர்களுக்காசாரியராகினர்.

௩ - வது. மானசபுத்திரனுகிய அத்திரிக்கு வேதாப்பியாசமும் தருமயுதசரித்திரர்களும் மிகுந்த தபச்சக்தியும் பெற்றஅநேக ரிஷிகளும் உதித்தனர்.

ச - வது. புத்திரனாகிய புலஸ்தியருக்கு அநேகஇராக்ஷசர்களும் (ரு) வது புலஹருக்கு கின்னரர் கிம்புருஷர் முதலானவரும் கிருதுவென்னும் (சு) வது மானசபுத்திரனென்பவருக்கு சத்தியவிருதபராயணராகிய பதங்கசஹசரர்கள் உதித்தனர்.

பைதாக்ஷஹன் நதேவலன்என்னும் முனிக்கு பிரஜாபதி பிறந்தனர் இவரதுமனைவியர் தூம்பிரர் முதலான(எ) பேரில் தூம்பிராக்கு தர்மனும் பிரமவித்யைக்கு துருவனும் மனஸ்விக்கு சோமனும் ரஹைசக்கு நகுஷனும் சுவசைக்கு அநிலனும் சாண்டிலிக்கு அக்கினியும் பிரஜாசைக்கு பிரத்தூஷன் பிரபாசன் முதலான அஷ்டவசுக்களும் ஜனித்தனர்.

அஷ்டவசுக்களில் வருஷணன் என்னும் வசுவுக்கு த்ரவிணனும் துருவன்என்னும்வசுவுக்கு காலனும் சோமனும் மனோஹரஎன்பவளுக்கு புரோஜனும், சுவர்சிசன், திரிசிரன், பிராணன், கருணனும், பிரதையென்னும்பெண்ணும்பிறந்தனர் இப்பிரதையென்பவளுக்கு (க0) கந்தருவபதிகள் உதித்தனர் நகுஷன் என்னும் வசுவுக்கு ஜோதியும் நநிலனென்னும் வசுவுக்கு சைவஎன்னும் மனைவியினால் புரோஜனும் விக்கியானகதியும் ஜனித்தனர் அக்கினியென்னும்வசுவுக்கு குமாரனும், பிரத்தூஷன் என்னும்வசுவுக்கு ரு ?யானதேவபலனும் பிரபாவசன்என்னும்வசுவுக்கும் பிரஹஸ்பதி தங்கையான யோகசித்திக்கும் விசுவகர்மனும்பிறந்தனன்.

ஸ்ணுவுக்கு மானசபுத்திரராகிய மிர்கவியாதமுதலான ஏகாதசருத்திரர்களும்பிரமதேவன்வலது பாதத்தின் அங்குஷ்டத்தில் தர்மன் என்னும்மனுவும்பிறந்தனர் இவனுக்கு சமன், காமன், ஹர்ஷன்என்னுமூன்றுபேருக்கும் சப்ரீதி, ரதி, நந்த எனமூன்று பாரியரானார்கள் பிரமதேவன் ஹிருதயத்தில்ப்ரகுஜனித்தனர் அவருக்கு கவியும் அவருக்கு சுக்கிரனும் பிறந்து இராக்ஷசர்களுக்கு ஆசாரியராகினர் இவருக்குஜண்டாமார்க்கன் முதலான (ச) பிள்ளைகள் பிறந்தனர்.

ப்ரகு புத்திரராகிய சவனுக்கு மனுபுத்திரியினால் ஔரியன் பிறந்தனன் இவருக்கு ருசி முதலான (க00) பிள்ளைகள் ஜனித்தனர் ருசிக்குஜமதக்கினியென்னும் முனிவருதித்தனர் இவருக்கு பரசுராம ருதித்தனர்:

பிரமதாத விதாத என இருவர் மனுசகாயர்களாய் ஜனிக்க இவரோடு சிரேஷ்டையும் லக்ஷ்மியும் பிறந்தனர் லக்ஷ்மிக்கு மானசபுத்தி

ரர்கள் அநேகர் உதித்தனர் வருணனுக்கு ஜேஷ்டைகை, அதர்மன், ரதிந்தகை யென்னும் பெண்கள் பிறந்தனர் அவ்வதர்மனுக்கும் நிர்விருதிக்கும் பய மகாபய, மிருத்யு எனமூவர் உதித்தனர் தாம்பிரைக்கு க்ரௌஞ்சி, பாசி சேனி, திருதாரஷ்டிரி, சுகி யென (ரு) கன்னியர்தன்ஜனித்தனர் க்ரௌஞ்சிக்கும் கருடனுக்கும் க்ரௌஞ்சபக்ஷிகள் பிறந்தன பாசி யென்பவளுக்கு கழுகுகள் பிறந்தன சேனி யென்பவளுக்கு டேகையும்

திருதராஷ்டிரி யென்பவளுக்கு ஹம்சம்,சக்கிரவாகம்,கொக்குமுதலான பக்ஷிகளும் சுகியென்பவளுக்கு கிளிமுதலானதும் பிறந்தன.கமலஜனால் மிருகி, மிருகமந்தை, அரிபத்ரமந்தை, மாதங்கி, சார்தூலி,சுவேத,சுரபி,சுரச,அநலையென(க0)கன்னிகள் பிறந்தனர்மிருகியென்பவளுக்கு மிருகமும் மிருகமந்தையென்பவளுக்கு ருஷ, சமாமுதலான மிருகமும் ஹரியென்பவளுக்கு வானரவர்க்கமும் பத்திரமந்தையென்பவளுக்கு ஐராவணமும் மாதங்கியென்பவளுக்கு யானைக்கூட்டமும் சார்த்தூலி யென்பவளுக்கு சிங்கம், புலியும் சுவேதையென்பவளுக்கு திக்கஜங்களும் சுரபியென்பவளுக்கு ரோஹிணி கந்தருவையென் இருவர் பிறந்தனர் ரோஹிணிக்கு பசுகணங்களும் கந்தருவிக்கு குதிரையும் சுரசைக்கு சர்ப்பகூட்டமும் அநலைக்கு மலை, விருக்ஷம், செடி, கொடி முதலானவைகளும் உதித்தன'

## நித்தியவிதி.

பிரதிதினமும் சூரியஉதயத்திற்கு முந்தி ஐந்து நாழிகைக்குள்ளும் அருணோதயத்தும் அதாவது வைகறையில் நித்திரைதெளிந்து விநாயகர்முதலிய தெய்வங்களை கங்காநதிமுதலிய நவநதிகளுள் சப்த நதிகளை சப்தரிஷிகளை அருந்ததி முதலியரை காசி முதலிய நகரை அஷ்ட கஜங்களை யோகிகளை அஷ்ட நாகங்களை நான்கு வேதங்களை பிரணவத்தை எல்லாவற்றிற்கும் மேலான தாய்தந்தையர் மலரடிகளையும் தியானித்தல் வேண்டும் ஊர்புறத்து நானூறு விற்கடைபோய் நிருதிதிக்கில் உத்தரியந்தனை தலையிற்சுற்றி நிலத்தில் எக்கிய ஓமங்களுக்காகாத துரும்பைப்போட்டு மூன்றுதடவை கையைத்தட்டி பகல் வடக்கு இரவில்தெற்கு நோக்கி ஒருவருடனும் பேசாமலும் ஒருவரையும் பாராமலும் ஒருவருக்கும் தெரியாமலும் இருமலங்கழித்து பாத்திரங்கொண்டு புழு பூச்சியில்லாதனவும் நதிஜலம்படாதனவும் ஜலம் தூக்கி எலிவளையில்லாத மண்ணெடுத்து குதத்திலும் கையிலும் மண்ணிட்டு சவுசம் செய்துக்கொள்ள வேண்டும் பாத்திரமில்லாவிடில் ஜலத்துக்கு ஒருமுழம் அப்புறமிருந்து சவுசம் முடிக்கவேண்டும் கிழக்

கு அல்லது வடக்குமுகமாகவிருந்து வாய் கொப்புளித்து விட்டு முறடு முள் பால் இல்லாதகொம்பால் அல்லது பாக்கு சுட்டகரியால் பழுத்துதிர்ந்த மாவிலையால் பல்விளக்கி நாக்கைவழித்துவிட்டு இப்படி தந்தசுத்தி செய்துகொண்டு ஜலத்துக்கு அப்புறம் வாய்ஜலத்தை யுமிழவேண்டும் ஒருபோதும் ஜலத்தில் வாய்ஜலத்தை யுமிழப்படாது உடனே தோளில்வஸ்திரமில்லாமல்ஆகமப்படி ஆசமனம்செய்யவேண்டும் ஆற்றங்கரை மலையருகு புண்ணியபூமி பிரம்மவிருக்ஷத்தினடி தருப்பையினடி இப்படி சுத்தஸ்தானத்தில் எட்டங்குல வளவின்கீழ் கவசமர்திரத்தால் கிரிகித்து மிருத்திகை ஸ்நானமுதலிய வைகளைக்குறித்து நிசியில்நீராடற்க இரவில்வருணஸ்நானமாகாயக்கியம் சங்கராந்தி அதாவது மாசப்பிறப்புகள் கிரகணம் மகப்பேறு இத்தினங்களில் இரவிலும் நீராடலாம். நெற்றியில் விபூதியணிந்து செபம் செய்யவேண்டும் சூரியனுக்கு அர்க்கியம் கொடுக்கவேண்டும் தன்கோத்திர மல்லாதவும் பெண்பாலாகவே பெறுகிறவள் வயிற்றிலுதியாதவும் பிணிபழிஇல்லாத வழியாகவும் நதி பறவை நக்ஷத்திரப்பெயர்பெற்றவ ளல்லாதவும் நன்மொழியும் தனக்கிளையவளாயும் கோபமில்லாளாயும் சந்திரன் போல் குளிர்ந்த முகம்படைத்த கற்புடையளாய் தனக்கொத்தகுடியில் இப்படி யிலக்கண மமைந்த பெண்ணை மணந்துக்கொள்வது இல்லறத்தியற்கை அம்மாதர் பூத்து நீராடுநாளிலும் பகலிலும் ஷஷ்டி அஷ்டமி சதுர்த்தசி அமாவாசை பௌரணி இந்நாளிலும் பிதுர்க்கடன் கழித்த நாளிலும் ஐந்தாம் பருவத்திலும் பிறர்மனைவியரையும் புணரப்படாது மற்றநாளில் புணரலாம் கருப்பமமைந்தபோதும்இந்திரன்கொடுத்தவரத்தால் புணரலாம் நீராடிய ஐந்தாநாள் முதல் பன்னிரண்டுநாளுக்குள் இரட்டைநாளில் கூடில் பிள்ளை ஒற்றைநாளாகில் பெண்பிறக்கும் வேட்டகத்தில் பொன்கவரல் விருந்துண்ணலுமாகா தருப்பணஞ்செய்து பிதுர்மகமாகும் பால் சோறு கிழங்கு ஜலம் பழம் இதுகளால் சிரார்த்தம் செய்யலாம் இதிலும் அதிதிபூசைசெய்வது எல்லா தருமத்திலும் உயர்ந்தது தேவர் பிதுரர் துறந்தோர் இவர்குட்கு இட்டு சேடத்தைப் புசிப்பது அமிர்தமாகும்ஷஷ்டி அஷ்டமி ஏகாதசி சதுர்த்தசிபௌரணி அமாவாசை இதில் எண்ணெயிடப்படாது இதிலும் ஆடி, மாசி, புரட்டாசி, மார்கழி மாதத்திலும் ஆதிவாரம் சனி செவ்வாய்க்கிழமையிலும் மாதப்பிறப்பு புண்ணியகாலம் விரததினத்திலும் மயிர்வினை முடித்திடலாகா செய்தால்தோஷம்வரும் காலை மாலை மத்தியானம் கிரகணகாலம் இதில்சூரியனைப் பார்க்கப்படாது தன்னிழலை ஜலத்தில் பார்க்கப்

படாது நிர்வாணமாக ஜலத்தில் குளிக்கப்படாது கன்றைத்தாண்டிப்
போதல் பொய்சொல்லல் மனதிலும் நினைக்கப்படாது கோயில் அந்த
ணர் துறந்தோர் வேந்தர் கவிஞர் நீர்க்கும்பம் தயிர் நெய் அடிசில் உயர்
ந்தோர் அரசமரம் எதிர்ப்படின் வலமாகப்போகவேண்டும் மனைவியைத்
துறந்து மற்றவளில் போகல் மைந்தனைவெறுத்தல் மூத்தவளைச் சேரு
தல் மகத்தினல்லதை பொற்கலத்தில் புசித்தல் வாயாலூதுதல் உயிர்
க்கொலை செய்தவர்முகத்தில் விழிப்பதும் தீதாம் ஆதலால்விலக்கிய
ஒழித்தும் விதித்தனபுரிந்தும் கருமநிலைகெட்டலையாது தருமநிலையில்
புநிதராக விருப்பதே யில்லறத்தழகாம் அகோர சிவாசாரியரால் சொ
ல்லிய காமீகாதி சகலாகம சங்கிரகத்திலுள்ள பதினேழு பத்ததிகளின்
படி சிவதீட்சைபெற்று விதிப்படி பார்த்திபலிங்கம் உடையவர் லிங்க
ம்வைத்து சிவபூஜைசெய்து தேவாரம் பெரியபுராணம் அருட்பாக்க
ளையோதி சந்தனம் சாத்தி தூபதீபமிட்டு புகழ்ந்து பாடி கும்பிட்டு
கூத்தாடி தொழவேண்டும் ஆக்கையும் பஞ்சபூதங்களும் அழிவது தெ
ரிந்துக்கொண்டு ஆதுலர் முதலியோர்க் கன்னம்படைத்து தன்மக்கள்
முதலியோருடன் தனது இல்லத்தில் கிழக்குத்திசையாயினும் வடபா
லாயினும் பார்த்திருந்து மூன்றுபிடிசாதம் பெலியிட்டு சுத்திக்காக அன்
னத்தில் நெய்சேர்த்து உண்டு கைகால் சுத்திசெய்துக்கொண்டு ஆச
மனம்செய்து முடித்து சாயரக்ஷையிலும் பஞ்சாக்ஷரத்தை ஜபித்து
முடிக்கவேண்டும் குடவிளக்குவைத்து சயனதலத்தில் தனதூரில் தென்
திசையிலும் வேற்றூரில் மேற்கு திசையிலும் தலைவைத்து துயில்வது
உத்தமம் இப்படிசெய்பவர்களுக்கு சனனம் மரணம் இடர் வறுமை
வியாதி துக்கம் சோகம் மோகம் பாவம் அரிட்டம் பகை பயம் இடை
யூறு முதலிய துன்பங்கள் ஒன்றேனுமணுகாது இகபரசுகாதிக்கியம்
பெறுவர். மாயாமலகர்ம்மங்கள் செம்பிற்காளிதம் போலவும் தண்
டுலத்தைப்பற்றிய தவிடு உமி முளைபோலவுமிருக்கும் இவற்றுள் தண்டு
லம் ஆன்மா, தவிடு ஆணவமலம், உமிமாயாமலம், முளைகன்ம மல
மாகும்.

## பதிபுண்ணியம்.

முக்கிய பிரமாணங்களாகிய சிவாகமபுராணங்களில் சொல்லப்
பட்டதும் சைவசமயாசாரியர்கள் மூவர் திருவாய்மலர்ந்தருளிய தமிழ்
வேதமாகிய தேவாரத் திருப்பதிகங்களையுடைய சிவஸ்தலங்கள்
அநேகமாயுள்ளன நம்முடைய சைவசமயக்கிரமத்தை அறிந்து அநுஷ்
டித்தல் (சைவர் என்னுஞ்சொற்கு சிவனை வழிபடுவோர் என்பது

பொருள் ) சைவர்கள் எழுவகைப்படுவர் அநாதிசைவராகிய சதாசிவ மூர்த்தியுடைய ஐந்து திருமுகங்களினும் தீக்ஷிக்கப்பட்ட பஞ்சரிஷி கோத்திரத்து சிவபிராம்மணர் ஆதிசைவர் மகாசைவர் வைதிகபிராம் மணர் க்ஷத்திரியர் வைசியர் அநுசைவர் அவாந்தரசைவர் சூத்திரர் பிறவரசைவர் அறுவகை யநுலோமருள் சிவதீக்ஷை பெற்றவர் ஒழி ந்தசாதியாரும் சிவனை வழிபடுவோரும் அந்நியசைவர்கள், ஆதலால் எல்லா சாதியாரும் சிவபெருமானை வழிபடுவதற் குரியவர்கள்.

சிவபெருமான்புறத்தே சிவலிங்கமுதலிய திருமேனியும் திரு வேடமும் அகத்தேஉயிரும் இடமாகக்கொண்டு நின்று ஆன்மாக்கள் வழிபாட்டைக் கொண்டருளுவர். லிங்கம் என்னும் தாது சித்திரி த்தல் என்னும் பொருள் படுதலால் படைத்தல் காத்தல் முதலியவை களால் உலகத்தை சித்திரிப்பதாகிய பிரபாவமே இலிங்கம் எனப் படும்.

இலிங்கம் ஆன்மார்த்தம் பரார்த்தமென்னும் இருவகைத்தாம் ஆசாரியரிடத்து எழுந்தருளப்பெற்று ஆயசுபரியந்தம் பூசிப்பது ஆன் மார்த்தலிங்கமெனவும் இட்டலிங்கமெனவும் பெயர் பிறர்பொருட்டு சர்வசங்காரகாலமளவும் பூசிப்பது பரார்த்தலிங்கம் அதுவே திருக் கோயிலுள் ளிருக்கும் லிங்கம் அது சுயம்பு காணம் தைவீகம் ஆரிடம் மாநுடம் என ஐவகைப்படும்.

சைவசமயத்தார் சிவபெருமான் திருவடியை சேர்தற்குரியமார்க் கம் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்குவகை.

சரியை புறத்தொழிலால் உருவத்திருமேனியை நோக்கிச்செய் யும் வழிபாடு சிவதலங்களில் திருவலகிடுதல் மெழுகிடுதல் மாலைதொ டுப்பது இதனால் சாலோகபதமடைந்து சிவலோகத்திருப்பர்.

கிரியை புறத்தொழில் அகத்தொழில் அருவுருவத் திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடு சிவனைபூசித்து (சாமீபபதமடைந்து) சிவ னுக் கருகிருப்பர் இத்துடன் மானதம் மண்டலம் பலகை படம் சுவரில் சித்திரம் விக்கிரகம் படிகலிங்கம் பாணலிங்கம் க்ஷணிகலிங்கம் இவை களை பூசித்தால் நதி தலம் யாகம் தானம் இவைகளைச்செய்த பலன் கிடைக்கும்.

யோகம் அகத்தொழிலினாலே அருவத்திருமேனியைநோக்கிச்செ ய்யும் வழிபாடு பஞ்சேந்திரிய மடக்கி ஒருவழிப்படுத்தி நிஷ்டைகூடியி ருந்து சாரூப்பியபதம் பெற்று சிவரூபம் பெறுவர்.

ஞானம் புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டுமில்லாமல் அறிவுத்தொழின் மாத்திரத்தினாலே அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்தியவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவனிடத்தேசெய்யும் வழிபாடுஇந்நான்கும் ஒழுகுவோர்களே மெய்யடியார்கள் அடியார் திருமேனி அசைவுடையது பற்றி சங்கமம் எனப்படும் இந்நான்கு மார்க்கத்தாலும் மலநீங்கிய ஞானிகளும் பூர்வமலவாசனை தாக்காமை சிவானந்தம் வளர்தற்பொருட்டு சிவலிங்கமுதலிய திருமேனியை மெய்யடியார் திருவேடத்தை வழிபடல்வேண்டும் சிவபெருமான் எங்கும் வியாபகமாய் நிற்பினும் சிவலிங்கம் மெய்யடியார் திருவேடம் இவ்விரண்டிடத்துந் தயிரில் நெய்போல் விளங்கிநிற்பர் மற்றையிடங்களில் பாலில் நெய்போல் வெளிப்படாது நிற்பர் ஆதலினால் லிங்கமும் ஜங்கமுமாகிய இவ்விரண்டிடத்தும் விதிப்படி சிரத்தையோடு வழிபடல் வேண்டும் இது சிவபுண்ணியங்களாம் யாகமுதலிய பசுபுண்ணியங்கள் சுவர்க்கபோகங்களை கொடுக்கும் இவைகளை கல்வி கேள்விகளால் அறியக்கூடியது.

வேதாகம புராணங்களால் அறியக்கூடியவைகள் வேதம் ருக்கு யசுர், சாமம், அதர்வணம், ஆக (ச) உபவேதம், ஆயுள்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம், காந்தருவவேதம் ஆறுசாத்திரங்களும் உண்டு.

காமிகாதி ஆகமம் இருபத்தெட்டு.

இதில் சிவனது சத்தியோசாத முகத்தில்பிறந்ததாவது.

| | |
|---|---|
| க. காமிகம் பாரார்த்த சங்கியை கிரந்தம் | ௩. சிந்தியம் - ஒருலக்ஷம் |
| உ. யோகஜம் - ஒருலக்ஷம் | ச. காரணம் - ஒருகோடி |
| | ரு. அஜிதம் - பதினாயிரம் |

இந்த ஐந்தும் தோற்றுவித்தலாகிய சத்தியோசாத பச்சிமாபிமுகத்தில்உண்டாயிற்று.

| | |
|---|---|
| சு. தீப்தம் - நான்குலக்ஷம் | க. அஞ்சுமான் - ஐந்துலக்ஷம் |
| எ. சூக்ஷமம் - பத்மம் | ௧௦ சுப்ரபேதம் - மூன்றுகோடி. |
| அ. சகஸ்ரம் - சங்கம் | |

இந்த ஐந்தும் விளக்கல் என்னும் வாமதேவ முகமென்கிற வடமுகத்தில் உண்டாயிற்று.

கக. விஜயம் - திரிகோடி
கஉ. நிசுவாசம்-மூன்றரைகோடி
கங. சுவாயம்புவம்-மூன்றரைகோடி
கச. அனலம் - ஐம்பதினாயிரம்
கரு. வீரம்-இருபத்தையாயிரம்.

இந்தஐந்தும் அகோரம் அழித்தல் என்னும் தக்ஷிணமுகமென்கிற தெற்கு முகத்தில்உண்டாயிற்று.

கசு. இரௌரவம்-எட்டுஅற்புதம்
கஎ. மகுடம்-ஒருலக்ஷம்
கஅ. விமலம்-மூன்றுலக்ஷம்
கசு. சந்திரஞானம்-மூன்றுகோடி.
உ0. பிம்பம்-ஒருலக்ஷம்.

இந்த ஐந்தும் காத்தல் என்னும் தத்புருஷமென்கிற கிழக்கு முகத்திலுண்டாயிற்று.

உக. புரோற்கீதம்-மூன்றுலக்ஷம்
உஉ. லளிதம் - எண்ணாயிரம்
உங. சித்தம் - அரைகோடி
உச. சந்தானம் - ஆறாயிரம்
உரு. பரமேசுவரம் - பன்னிரண்டுலக்ஷம்.
உசு. கிரணம் - ஐந்துகோடி
உஎ. பேதம் - இரண்டுலக்ஷம்
உஅ. வாதுளம் - ஒருலக்ஷம்.

இந்தஎட்டும் அனைத்தும் ஆளுதலாகிய ஈசானமுகமென்னும் ஊர்த்துவ முகத்தில் உண்டாயிற்று.

சிவரூபத்தை தியானம்செய்யவேண்டும்போது கை கண் முழங்கால் மூக்கு ஸ்தனம் இந்த ஐந்தும் பஞ்சதீர்க்கமென்று பெயர் கழுத்து கணுக்கால் பிரஷ்டபாகம் இடுப்பு இந்தநான்கும் சதுர்ஹிஸ்வமென்று பெயர்.

(க) கைவிரல்களின் ரேகைகள் (உ) மயிர் (ங) மின்னிச்சமயிர் (ச) மேற்பல் (ரு) கீழ்ப்பல் இவ்வைந்தும் பஞ்சசூக்ஷமமென்று பெயர்.

(க) அக்குள் (உ) வயிறு (ங) மார்பு (ச) கிராணம் (ரு) தோள் (சு) நெற்றி இவ்வாறும் ஷட்ருந்நதம் என்று பெயர்.

(க) கை (உ) கால் (ங) கண் (ச) நகம் (ரு) தாலு (சு) வாய் (எ) உதடு இவ்வேழும் ஸப்தரக்தமென்று பெயர்.

மூன்றுமடிப்பா யிருக்கப்பட்டத்ரிவலிகள் த்ரிகம்பீரமென்று பெயர்.

இந்த முப்பத்திரண்டு ஸாமுத்திரிகா லக்ஷணங்களும் பரமேசுவரருக்கு உண்டென்று நீலகண்ட பாஷ்யத்தில் சொல்லப்படுகின்றது.

சிவதத்துவம் சக்திதத்துவம் சாதாக்கியதத்துவம் ஈசுவரதத்துவம் சுத்தவித்தியாதத்துவம் இவ்வைந்தும் சுத்தமென்று சொல்லப்படுகிறது மாயாதத்துவம் காலதத்துவம் கலாதத்துவம் வித்தியாதத்துவம் நீதிதத்துவம் ராகதத்துவம் புருஷதத்துவம் இவ்வேழும் சுத்தா சுத்தமென்று சொல்லப்பட்டது. பிரகிருதிதத்துவம் குணதத்துவம் புத்திதத்துவம் அகங்காரதத்துவம் மனஸ்தத்துவம் சுரோத்திரதத்துவம் தொக்கு சக்ஷு ஜிஹ்வா ஆக்கிராணம் அல்லதுநாஸாதத்துவம் வாக்கு பாதம் பாணி பாயு உபஸ்தம் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்த பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாசம் இவைகள் அசுத்தம் ஆத்மதத்துவம் அசுத்தம் வித்தியாதத்துவம் சுத்தாசுத்தம் கேவலம் சிவதத்துவம் சுத்தம் சிவதத்துவதுக்குமேல சக்தி வியாபினி சமனை உன்மனை உன்மனையாந்தம் பரசிவம் அச்சிவனுடைய சகச்ராம்சம் பராசக்தி பராசக்தியினுடைய சகச்ராம்சம் ஆதிசக்தி ஆதிசக்தியினுடைய சகச்ராம்சம் இச்சாசக்தி இச்சாசக்தியினுடைய சகச்ராம்சம் ஞானசக்தி ஞானசக்தியினுடைய சகச்ராம்ச கிரியாசக்தி.

பராசக்தியினுடைய தசாம்சம் சிவசாதாக்கியம் ஆதிசக்தியினுடைய தசாம்சம் அமூர்த்திசாதாக்கியம் இச்சாசக்தியினுடைய தசாம்சம் மூர்த்திசாதாக்கியம் ஞானசக்தியினுடைய தசாம்சம் கர்த்ருசாதாக்கியம் கிரியாசக்தியினுடைய தசாம்சம கர்மசாதாக்கியம் இதில் கர்மசாதாக்கியம் தவிர மற்ற நாலும் நாதமயலிங்கம் நிவர்த்தி பிரதிஷ்டா வித்தியா சாந்தி இந்நான்கும் விந்துமயபீடம் இந்தநாதமய லிங்கத்துக்கும் விந்துமயபீடத்துக்கும் கர்மசாதாக்கியமானது சமயோகசம்பந்தம் சாந்திதீதேநாதமயலிங்கத்தில் சேர்ந்தது இது சதாசிவம்.

சதாசிவத்தின்கீழ் ஈசுவரதத்துவத்தில் அனந்தர் சூக்ஷமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தி ஸ்ரீகண்டர்கள் இவர்கள் அஷ்டவித்தியேசுவரர்களென்றும் விஞ்ஞானகளாளென்றும் பெயர் இவர்கள்பரிபக்குவமலாள் என்றும்பெயர்.

அரி பக்குமலாளாயிருக்கிற விஞ்ஞானகலாள் சுததவித்தியாதத்துவத்தில் அநேகர் வாசமாயிருக்கின்றார்கள்.

அனந்தரானவர் ஆதாரசக்தியோடிணைந்து அசுத்ததத்துவத்தில் அதிகாரியாயிருந்து சிருஷ்டி ஸ்திதி சம்மாரமுதலிய திரிமூர்த்திகளுக்குமேலான அதிகாரியாயிருக்கின்றார் மற்றையர்க்கிந்தஅதிகாரமில்லை இதைசித்தாந்தசாராவளியில் அறிக.

சப்தகோடி மஹாமந்திரத்தில் மூன்றரைகோடிக்கு அதிகாரி அனந்தர்

மற்றமூன்றரைகோடிக்கு குரோதேசாதிகள் நூற்றுப்பதினெட்டு ருத்திரர் மாயாதத்துவத்தி லிருந்துகொண்டு பிரயாகளாளமொன்று அதிகாரம் நடத்துகின்றார்கள் இவர்கள் மலகற்மத்தோடே கூடியவர்கள்.

இவர்கள் மலகற்ம மாயையாகிய திரிமலத்தோடே கூடிக்கொண்டிருக்கிறசகளாளென்றும் பெயர் இவர்களின் விபரம் பிரம்மவிஷ்ணுவாதிபீடபரியந்தம் சகளாளென்றும் பெயர்.

புருஷ தத்துவத்திலிருந்துகொண்டு விஷ்ணுரக்ஷககர்த்தாவாயிருக்கின்றார்.

சதுர்முகசதியாகிய குணதத்துவத்தி லிருந்துகொண்டு பிரம்மா சிருஷ்டிகர்த்தாவா யிருக்கின்றார்

ஸ்ரீகண்ட ருத்திரர் என்பவர் கலாதத்துவத்தி லிருந்துகொண்டு சம்மாரகிருத்திய நடத்துகின்றார்.

அனந்தரென்கிற மகேசுவரரானவர் ஈசுவரதத்துவத்தி லிருந்துகொண்டு திரோபாவ கர்த்தத்துவம் நடத்திக்கொண்டிருக்கின்றார்.

சாதாக்கிய தத்துவத்தில் சதாசிவம் அநுக்கிரககிருத்தியம் நடத்துகின்றார்.

புராணங்கள் பதினெட்டு இவைகளில் சிவபுராணமாவது சைவம் காந்தம் இலிங்கம் கூர்மம் வாமநம் வராகம் பௌடிகியம் மச்சியம் மார்க்கண்டேயம் பிரம்மாண்டம் இப்பத்துயாம்.

விஷ்ணுபுராணங்கள் நாரதியம் பாகவதம் காருடம் வைணவம் இந்நான்குமாம்.

பிரம்மபுராணம் பிரமம் பதுமம் என்னுமிரண்டாம்.

சூரியபுராணம் பிரமகைவர்த்தம் என்பது.

அக்கினிபுராணம் ஆக்நேயம் என்பது.

உபபுராணம் உசனம் கபிலம் காளி சனற்குமாரம் சாம்பவம் சிவதன்மம் சௌரவம் தூர்வாசம் நந்தி நாரசிங்கம் நாரதீயம் பராசரம் பார்க்கவம் ஆங்கீரம் மாரீசம் மானவம் வாசிட்டம் லிங்கம் வாருணம் இப்பதினெட்டுமாம்

சாத்திரமாவன வேதாந்தம் வைசேஷிகம் பாட்டம் பிரபாகரம் பூர்வமீமாம்சை உத்தரமீமாம்சை இவ்வாறுமாம், இவைகளிற் சிறந்தவை ஆகமங்களே சைவசமயத்துக்குரியனவாம்.

இவைகளில் பதி பசு பாசம் இம்மூன்றின் இலக்கணத்தையும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும்நான்கு, சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் நான்கு இவைகளையும் இன்னும் அநேகத்தையும் சொல்லும் இது ஞானத்தினுல் அடையும்பலன்.

பதியாவது நிஷ்களப்பொருளாம், பசுவென்பது ஜநித்து பலவித போகங்களையும் புண்ணிய பாவங்களையும் அனுபவித்து பிறப்பதும இறபபதுமாம்.

பாசமென்பது ஏகத்துவம் நித்தியத்துவததையும் அறிவது தததுவங்களாவது ஆத்மதத்துவம் (உச) வித்தியாதத்துவம் (எ) சிவதத்துவம் (ரு) ஆ நகூ

ஆத்மதத்துவமாவது பூதம் (ரு) புலன் (ரு) பொறி (ரு) கருமேந்திரியம் (ரு) அந்தக்கரணம் (ச) ஆ உச.

வித்தியா தத்துவமாவது காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை ஆ எ.

சிவதத்துவமாவது சுத்தவித்தை ஈச்சுவரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஆ ரு

இந்ததத்துவங்களை அறிந்து சிவதீக்ஷைசெய்யத்தக்க ஆசாரியருக்குப் பெயர் தேசிகர் ஆசாரியராம் இவருள் பிரேரிப்பான் பிரேரகாசாரியன் போதிப்பான் போதகாசாரியன் முத்திதன் முத்திதாசாரியன் எனமூவகையினர் கிரியாகாண்டத்தைமாத்திரம அறிந்து ஞானகாண்டத்தைஅறியாத குரவனைவிட்டுவிடவேண்டும் ஆகமம் இருபத்தெட்டும் உணர்ந்தவனே ஆசாரியன் ஒரு ஆகமத்திலாவது கிரியாகாண்டம ஞானகாண்டத்தை ஆகமத்தில் லக்ஷகிரந்தமாவது அறிந்த

வர் குருசிரேஷ்டராவர் அறியாதவன் ஆசாரியனுகான் (ரு000) அறிந்தவர்குருவாகும்அதிலுங்குறைந்தவர் குருவாகார் பரமசிவனையும் குருவையும் தரிசிக்கப்போகும்போது ஏதாவதுகொண்டுபோய் காணிக்கைவைத்து தரிசிக்கவேண்டும் சும்மாபோய் தரிசிக்கப்படாது ஆசாரியனை ஏவப்படாது ஒருவரை யொருவர் வந்தனம்செய்வது தங்களுக்கன்றென்றும் அதுஎல்லா ஆத்மாவிலும் கலந்திருக்கும் கடவுளுக்கென்றும் நினைக்காதவர் நரகடைவர் திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞானபோதம் சிவஞானசித்தியார் இருபா இருபஃது உண்மைவிளக்கம் சிவப்பிரகாசம் திருவருட்பயன் வினுவெண்பா போற்றிபஃறொடை கொடிக்கவி நெஞ்சுவிடுதூது உண்மைவிளக்கம் சங்கற்பநிராகரணம் ஆக பதினுன்கு. வேதங்கள் தேவாரங்கள் தமிழ்சித்தாந்தங்களும் பசுகரணநீங்கி சிவகரணமுற்ற உண்மைநாயன் மார்களால் அருளினமையால் பதிவாக்கெனத்துணிந்து கொள்ளாதவர்கள் நரகதுன்பமெய்துவர் நித்தியாங்கம் தான் என்பதையியற்றி அதாவது நித்தியம் நித்தியாங்கம் நைமித்திகம் நைமித்திகாங்கம் காமியம் காமியாங்கம் என்னுங் கற்பபேதங்களனைத்தும் தானும்செய்து சாதகர் புத்திரகர் சமயிகள் எனும் மூவகைமாணுக்கர்களால் செய்விப்பர் ஆசாரியன் நியமந்தப்பினுல் மாணுக்கர்கள் வினையை விட்டுவிடுவர் வேதங்களையும் உபநிடதங்களையும் ஓதி ஞானநிலைப்பெருதார் பின்பு ஆகமாந்தமென்னும் சித்தாந்தத்தை ஓதி ஞானம்பெற்றனர் ஆதலால் ஆசாரியர் முகமாக சமயதீக்ஷைபெற்றவர் சுத்தஜலத்தில் மிருத்திகையிட்டு ஸ்நானஞ்செய்யவேண்டும் உஷ்ணஜலத்தில் பொன்னையிட்டு ஸ்நானம்செய்யலாம் பின்உலர்ந்தவஸ்திரத்தால் துவட்டல்வேண்டும் ஈரவஸ்திரத்தால் துவட்டல்வழு கிணற்றுஜலம் பூஜைக்கும் ஆசமனத்துக்குமாகா தர்ப்பையாலும் பவித்திரமிடலாம் பவித்திரமிட்டபடி ஆசமனஞ்செய்யப்படாது பிராணுயாமமென்பது மூன்றுஇரேசகம் அது அகத்துள்ள அசுத்தவாயுவை புறத்தேகழித்தல் பூரகமாவது புறத்துள்ள அசுத்தவாயுவினுலே சரீரத்தை நிறைவித்தல் கும்பகமாவது கழித்தலையும் உட்கொள்ளலையும் ஒழித்து உள்ளேவாயுவைத்தடுத்து நிறுத்தல் ஆக மூன்றுநீராம் முறைதப்பி மிருத்திகையெடுத்தல் சிவபெருமானுக்குமாகாது இப்படி புனலில்மூழ்கி தர்பணம் செபம்செய்து சிவன் ஆசாரியார் திருவடிகளைநினைந்து ஸ்தூலலிங்கமாகிய கோபுரத்தைப்பணிந்து பத்திரலிங்கமாகிய பலிபீடத்தையும் இடபதேவையும் வணங்கிக்கொண்டு பசுவின்சாணத்தை வடித்தெடுத்தநீரில் குழைத்து ஆலயத்தை

மெழுகி நந்தவனத்தில் மலர்கொய்து தாமம்தொடுத்து கொடுப்பது
திருக்கோயிலுள்ளிருக்கும்பூ சமீபத்திலிருக்கும்பூ ஆன்மார்த்தபூஜை
க்குதவாது சூரியோதயத்துக்குமுன் எடுத்தபூ பூஜைக்காம் பின்எடு
த்தபூ சிவபெருமான் தேவர் பிதுரர்களுக்குமாகாது விநாயகருக்கு
துளசி சிவனுக்கு தாழம்பூ உமாதேவிக்கு அறுகு நெல்லி வைரவர்க்கு
நந்தியாவர்த்தனம் சூரியனுக்கு வில்வம் விஷ்ணுவுக்கு அக்ஷதை பிரா
ம்மணருக்கு தும்பையுமாகாது திங்கள் சதுர்த்தி அஷ்டமி நவமி
ஏகாதசி சதுர்த்தசி அமாவாசை பௌர்ணவமி மாதப்பிறப்பு இதுக
ளில் வில்வம் எடுக்கலாகாது மற்றைக்காலங்களில் வில்வம் எடுத்து
வைத்துக்கொள்க வெண்துளசியுமப்படியே.

காலை உச்சி அந்தி என்னும் திரிசந்தியா காலங்களிலும் புண்
ணியகாலமானால் எப்போதும் சிவதரிசனத்துக்குப் போகலாம் போகு
ம்போது கண்டவுடனே கோபுரத்தைவணங்கி தரிசித்து ஆலயத்துக்
குட்சென்று உள்ளேயிருக்கிற புஷ்கரணியில் விதிப்படி ஸ்நாநஞ்செய்
து விபூதியணியவேண்டும் விபூதி சைவத்துக்குரியது அது சிவன்திரு
மேனி அக்கினியில்பூர்த்தநும் சர்வசங்காரகாலத்தில் உண்டாகும் பஸ்
பத்தை சிவன் நெற்றியில் தரித்துக்கொண்டதுமாயுள்ளது பசுவினு
லுண்டானது கற்பம் காட்டிலுள்ள சாணம் அநுகற்பம் சாம்பலை கோ
சலத்தைவிட்டு பிசைந்துசுட்டு உண்டாக்கும் பூவிதி உபகற்பவிதியாம்
தேவர்கள் அமைந்துவஸிக்கும்படிக்கும் தேவபசு காமதேனுவின் குல
மாதலாலும் அதின்சாணம் சிரேஷ்டம் பெருவிரல் நடுவிரல் ஆழிவி
ரல் இம்மூன்றுவிரலினுல் இந்தநீறுகொண்டு ஆணவம் கன்மம் மா
யையென்னும் மூன்றுமலங்களையும் நீக்குமென்பது தோற்ற அனுலோ
மம் பிரதிலோமமாக விபூதியைசிரம் உச்சி நெற்றி காது கழுத்து
மார்பு புயம் உந்தி முழங்கைகள் மணிக்கட்டிரண்டு முழங்காலிரண்டு
முதுகினும விபூதியைத்தரிப்பர் விபூதிக்கு பூதி இரக்ஷை பசிதம் பசு
மம் க்ஷாரம் என்பது விபூதிபூமியில்சிந்தில் பாவம் சிந்தாமல் இந்தஇ
டங்களில் மூன்றுகீற்றாகத்தரிப்பது சமயம் விசேஷம் நிர்வாணம் என
மூன்றுவகைப்படும் சமயதீக்ஷையால் சைவத்துக்குரியனுகிறுன் அதி
லும் விசேஷமானதால் விசேஷதீக்ஷையாம் மோக்ஷத்தைத்தருவது
நிர்வாணதீக்ஷையாம் விபூதிவேர்வைமுதலியதால் போய்விடுமாதலால்
ருத்திராக்ஷம் எப்போதும்தரித்திருக்கவேண்டும் ருத்திராக்ஷமில்லாமல்
சிவபூசைசெய்யக்கூடாது ருத்திராக்ஷம் சிரசு மார்பு புயம் கரம் இவை
களில் அவ்வவ்வங்கமந்திரத்தால் தரிக்கவேண்டும்
சல மலபாதை நித்திரை புணர்ச்சி நோய் ஆசூசம் இந்தகா

லங்களில் தரிக்கப்படாது சிரசு காது உபவீதம் இவைகளில் எப்போ
தும்தரிக்கலாம் பால் தயிர் நெய் கோமயம் கோசலம் இதுகள்சேர்த்தது
பஞ்சகவியமாம் இதனுலே எந்தகருமத்துக்கும் முந்திஆத்ம
சுத்தி செய்துக்கொளல்வேண்டும் (கற்றுக்கொள்வன வாயுள நாவுள
இட்டுக்கொள்வன பூவுள நீறுள கற்றைச்செஞ்சடையானுளனுமுளோ
மெற்றுக்கோ நமனுல் முனிவுண்பதே) என்னுந்தேவாரத்தால் உணர்க
இப்படி விபூதியையும் ருத்திராக்கங்களையும் அணிந்துகொண்டு துஜ
ஸ்தம்பத்தினிடத்திலும் பெலிபீடத்தினிடத்திலும் கிழக்குசந்நிதியானுல்
அக்கினிமூலைக்கெதிராக சமீபத்தில் சிரசுவைத்து மார்புபூமியிலேபடு
ம்படி இரண்டுகைகளையும் முன்வலக்கையையும் பின்புஇடக்கையை
யும் வடக்காகநேரோநீட்டி பின்பு தோள்களில் மண்படும்படி இரண்டு
கைகளையும் தெற்கேநீட்டி முன்புவலக்கை பின்பு இடக்கையையும்
இரண்டுகாதுகளையும் முன்வலக்காது பின்இடக்காதையும் பூமியில்
பொருந்தச்செய்து அஷ்டாங்கவந்தனம் செய்யவேண்டுவது இவ்வண்
ணமே தெற்கு மேற்கு வடக்கு சந்நிதியிலும் முறையேபணிதல் வேண்
டும் மாசசங்கராந்தி சூரியகிரணம் பகல்பதினைந்து நாழிகைக்குமேல்
தரிசிக்கப்போகநேரும் அக்காலத்தில் மேற்கே காலைநீட்டக்கூடாமை
யினுலே நின்றபடி இரண்டுகைகளையும் உச்சியின்மேல் வைத்துக்கொ
ண்டு தரிசிக்கவேண்டும் பதினைந்து நாழிகைக்குமேல் அஸ்தமனத்துக்கு
ள்ளாக அஷ்டாங்கத்துடன் பணியப்படாது மற்றகாலங்களில் பணி
யலாம் ஏகாங்கம் சிவனைவணங்குவது துவிதாங்கம் சிரசின்மேல் வலக்
கரத்தைவைப்பது திரிவிதாங்கம் இரண்டுகைகளையும் சிரசின்மேல்
குவித்துவைக்குதல் பஞ்சாங்கம் சிரம் கைகள் (௨) முழந்தாள் (௨)
பூமியில்படவணங்குதல் அஷ்டாங்கம் சிரம்இரண்டு கைகள் இரண்டு
முழந்தாள்கள் இரண்டு காதுகள் நெற்றிஇவைகள் பூமியில்பட வண
ங்குவதாம் காமியம் விரும்புபவர் வலமாகவும் மோக்ஷம்விரும்புபவர்
இடமாகவும் இரண்டும் விரும்புபவர் வலமிடமாகவும் மெதுவாகபஞ்
சாக்ஷரத்தை நினைந்துகொண்டு மூன்று ஏழுக்குக்குறையாமல் ஆவ
ரணங்களில் பிரதக்ஷணம்செய்யவேண்டும் முதலில் விநாயகரை தரி
சித்து உடனே நந்திதேவரனுக்கிரகம்பெற்று விநாயகர் மூலலிங்கம்
சபாபதி சோமாஸ்கந்தர் மூலஸ்தானம் அம்மை சண்டேசர் பயிரவர் இக்
கிரமமாக தரிசிக்கவேண்டும் உமையவளோடும் ஸ்கந்தரோடும்கூடி
யிருப்பவர் சோமாஸ்கந்தர் பரிவாரதேவர் சபாபதி சோமாஸ்கந்த மூர்
த்தந்தவிர சந்திரசேகரர் முதலிய இருபத்துமூன்று மூர்த்தமாவது

லிங்கோற்பவம் தக்ஷிணாமூர்த்தம் பிரமதேவன் விஷ்ணு துர்க்கி சாஸ்தா சுப்பிரமண்ணியர் வீரபத்திரர் நவக்கிரகங்கள் வாமாதி அஷ்டசித்திகள் வாமேசுவரர்களாம் ஸ்தூபிகிமூலாவது துவசஸ்தம்பமிமூலாவது இருந்தால் அதை மிதிக்கவாவது தாண்டவாவது கூடாது வேறு ஆவரணத்தில் பிரதக்ஷணம் செய்யவேண்டும் உச்சவகாலத்தில் சுவாமியின் வந்தால் இந்ததோஷமில்லை முதலில் நந்திதேவரை தரிசித்து இடமாகப்போய் சண்டேசநாயனாரை தரிசித்து சென்றவழியே திரும்பிவந்து நந்திதேவரை தரிசித்து வலமாகச்சென்று சண்டேசநாயனாரைதரிசித்து பின்புவந்து நந்திதேவரைதரிசித்து பின்பு சிவலிங்கதரிசனம்செய்து பணியவேண்டும் இதற்கு சோமசூத்திரபிரதக்ஷணமென்று பெயர் இவ்வாறு ஒருபிரதக்ஷணம்செய்தால் அநேகபலன் உண்டு இதுபிரதோஷகாலத்தில் செய்தால் விசேஷபலன் கணபதிக்கு (க) சூரியனுக்கு (உ) சிவனுக்கு (௩) விஷ்ணு பார்வதி (௪) சுப்பிரமணியருக்கு (௫) சரசுவதி லக்ஷ்மி (௬) அசுவத்தத்துக்கு (௭) இந்தப்படி பிரதக்ஷணம் செய்யவும். சூரியஅஸ்தமான மாவதன்முன்னே மூன்றேமுக்கால் அஸ்தமனமானபின் மூன்றேமுக்கால் நாழிகையும் விபூதி ருத்திராக்ஷம் தரித்துக்கொள்ளவேண்டும் சதுர்த்தசிதிதியில் சநிப்பிரதோஷ விரதம்விசேஷம் இந்தவிரதமிருப்பவர்கள் பிரதோஷகாலத்தில் சிவதரிசனம் செய்தபின்பு சிவனடியார்களுக்கு அமுது படைத்து பின்புபுசிப்பது விதி.

பூஜைசெய்யும்போதும் கர்மங்களைச்செய்யும்போதும் யக்ஞோபவீதம் தரிக்கலாமென்பது நாசமற்றபிரமமெதுவோ அதுவேசூத்திரம் (நூல்) என்றுதரிக்கவேண்டும் சத்தியத்தைக்காட்டும் பரமபதமே சூத்திரமென்னப்படும் அந்தசூத்திரத்தினையறிந்தவனே வேதமுடிபுணர்ந்தவன் தத்துவத்தினைநோக்கும் யோகி தரித்தல்வேண்டும் பிரமபாவனையாகிய இந்தசூத்திரத்தினை அறிவுடையோன்தரிப்பன் அப்படி பரிசுத்தமுடையவன் எவனோ அவனே சூத்திரமுணர்ந்தவனும் உபவீதமுடையவனுமாம் அவனுக்குஞானமே குடுமி (சிட்டை) ஞானமே பூணூல் கருமஅங்கமாகிய வெளிப்பூணூல் தரிக்கத்தக்கது கருமஞ்செய்துக்கொண்டிருக்கும்வரையில் உபவீதத்தினைதரிக்கலாம் கருமத்தோடு இதுவும் விடப்படும் ஹோமபாத்திரம் முஞ்சி புல் அரைஞாண்முதலிய உபகரணங்களை அததுமுடிந்தவுடன் விட்டுவிடுவதுபோல் வேளாளர்கருமமுடிந்தவுடன் உபவீதத்தை புரோகிதர்பால்வைத்து வைக்கலாம் வேதமோதல் பிரமவேள்வி தருப்பணம் பிதுர்வேள்வி ஹோமம் தேவவேள்வி பலிகொடுத்தல் பூதவேள்வியாம் அதி

திகளை பூசிப்பதேமாறுடவேள்வியாம் இவனுக்கு ஆன்மாயாவனோ அவனே எப்போதும் யஞ்ஞோபவீதமாம் இந்தஉபவீதத்தின் மகிமை யையறிந்து தரிப்பது கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ இது களினால் அர்ச்சிப்பது நலம் வெள்ளைமலரால் சுவாமிதிருவடியில் அர்ச் சிப்பவர் மோக்ஷம் அடைவர்.

செவப்புமலரால் அர்ச்சித்தால் போகபாக்கியம்பெறுவர் மஞ்சள் பூவாலர்ச்சிப்பவர் மைந்தர் மனை வாழ்க்கை மாடு நிலம் பலம் தலம் குலம் தருமகலியாணம்செய்து தன்னியராவர்.

கறுப்புப்பூவால் அர்ச்சித்தால் பாபரகிதராகி வியாபாரத்தில் பொ ருளீட்டி மேலுலகடைவர் பற்பலமலராலர்ச்சித்தால் பற்பலபெரு மையடைவர் சந்தனந்தரிப்பித்தவர்கள் இகத்தில் போகபாக்கியங்களை யும் பரத்தில் மோக்ஷசாம்ராச்சியமும் பெறுவர்.

சாம்பிராணிதூபம் கர்ப்பூராலாத்தி செய்தவர்கள் நல்லகதியடை வர் பசுநெய் பருத்திப்பஞ்சு தாமரைநூல் இதுகளால் தீபம்வைத் தவர்கள் நல்லபரிசுத்தமான அந்நத்தைபதார்த்தத்துடன் நிவேதித்தவர் கள் நல்லபீதாம்பரத்தைச் சாத்தி நிவேதித்து நெய், பால், தயிர், பழம், பலவகைபலஹாரங்களிட்டு சோடசோப சாரங்களைச்செய்து அர்ச்சித்தவர்கள் நல்லகதியடைவர் தேவாராதனையில்லாத நிவேத் தியத்தைப் புசிக்கப்படாது உருந்தி தவமசெய்வதிலும் நல்லவிஷய த்தில் சம்பாதித்து பொருளைதருமம்செய்து நல்லகதியடையலாம் நிவேதனத்தை கடவுள்புசியார் அண்டரண்டங்களைத் தன்வயிற்றிலி ருக்க நிவேதனத்தால் திருப்தியாகா அருளுடன் பார்ப்பதே திருப் தியாம் சிவபிரான் இருபத்தொருமுகூர்த்தத்தில் அஷ்டமாசித்திக ளாவது (அணிமா)மிகவும் சிறியவுயிர்தோறும் பரமகாஷ்டையாய்ச் சென்றிருத்தல்.

(மகிமா) மிகவுமுயர்ந்த மகமேருவைப்போலாக வேண்டுமெனி லாதல்.

(இலகிமா) மேருபாரத்தையொத்த யோகியையெடுத்தால் இலே சாயிருத்தல்.

(கரிமா) அணுப்போலிருக்கும்யோகியை யெடுத்தால் மேருபார மாயிருத்தல்.

(பிராப்தி) எவ்வுலகத்தினுஞ் தடையறச் சஞ்சரித்தல்.

(பிராகாம்யம்) பரகாயப்பிரவேசம் பண்ணுதல் அந்தரசஞ்சாரஞ் செய்தல் இச்சித்தபோகமனுபவித்தல் மண்ணில் விண்ணிலுள்ள பொ ருள்களையும் முக்காலங்களையும் தனது தேககாந்தியாலறிதல்.

(ஈசத்துவம்) சர்வேசுவரனைப்போல தன்னிச்சைவழியில் முத்தொழிலுஞ்செய்து சூரியன்முதலியகோட்கள் தன்னேவல்கேட்கவினங்குதல்

(வசித்துவம்) தேவர்முதலிய வுயிர்களையும் எல்லாவுலகங்களையும் தன்வசமாகக்கொள்ளுதல்.

காமிகாகமத்தின் கிரியாகாண்டத்தில் சிவப்பிரதிஷ்டையைப்பற்றிசொல்லியிருக்கின்றது வீராகமம் விமலாகமம் இவ்விரண்டும்வீரசைவத்தைக் குறித்துச்சொல்லி யிருக்கின்றது இஃதுள்பட இருபத்தெட்டு ஆகமங்களிலும் ஒவ்வொன்றிலும் சரியை கிரியை யோகம் ஞானம் இந்நான்கையும் பிரதிஷ்டாவிதிகள் பலவாறுகவும் பூஜாவிதிகள் யாகாதிகளையும் சொல்லுகின்றது நித்தியம் நைமித்திகம் காமியம் என்னும் மூன்றுபூஜையுண்டு இதில் நித்தியம்தவிர மற்றிரண்டு மாகாது.

சடசீதியென்னும் மனுகற்பபேதங்களையுணர்ந்து விரதாதிகளைப்புரிதல்வேண்டும்.

இவற்றுள் பூர்வக்கிரியை அபரக்கிரியைகளில் தேவவேள்வியும் நித்தியகற்மங்களிலும் பூஜாகாலத்தும் பிரமவேள்வியும் சந்தியாவந்தனங்களிலும் சிரார்த்தகாலங்களிலும் பிதுர்வேள்வியும் போஜனத்துக்கு முன் காகபலி முதலிய பூதவேள்வியையும் சதாகாலம்மானுடவேள்வியையும் வேளாளர்செய்துவருகிறார்கள்.

இல்லறத்தானுக்கு ஒவ்வொருபகலினும் ஐவகைச்சூனமுள்ளது அவைகொலையாம்.

க. கண்டிணி முறித்தல் அது உலக்கை உரல் அரிகருவிமுதலிய கருவியாலாவது.

உ. பேஷிணி அரைத்தல் அது அம்மிமுதலியவற்றாலாவது.

ங. சுல்லி அடுப்பு அதுஅடுக்களையிடம்.

ச. சலகும்பம் நீர்க்குடம் அதுநீர்சோதிக்கும் ஆடை முதலியன.

ரு. உபஸ்கரம் முறம் அல்லதுசல்லடை முதலியபாடபேதத்தால் அபஸ்கரம் என்றது விளக்கும் அலகு மெழுகும் ஆடை முதலியன இவைகள் உயிர்க்கொலைக்கு இடமாகவிருக்கின்றன ஆதலால் இவ்வைந்தின் ஒழிவாற்சுத்தனுகும்பொருட்டு ஐவகைப்பெரும்வேள்வி கூறப்பட்டுள்ளன.

## வேளாளர்உபவீதந்தரிப்பது

*அந்தணர்கரும அங்கமாகிய வெளிப்பூணூல் தரிக்கத்தக்கது.*

ஞானமே குடுமி உபவீதம் வேள்வி எனகௌஷதகீ பிராம்மணமென்னும் சுருதியின் வினு விடைகளால் விளங்கப்பட்டுள்ளது ஆதலால் பூணநூல் கருமாங்கம் கருமம் உபகாரம் கருமஞ்செய்து க்கொண்டிருக்கும்வரையில் இவ்வுபவீதத்தினை தரிக்கவேண்டும் கருமத்தோடு இதுவும்விடப்பட்டு வேதியர்பால் வைக்கப்படுமென்று பொதுவிதி ஆதலால் வேளாளர்எந்நேரமும் பூணூல் தரிப்பதில்லை. வைதிககருமங்களில் தம்பதிகளுமிருந்து சிரார்த்தம் ஆசௌச கருமங்கள் அசுவபிரதக்ஷணமுதலிய விரதாதிசத்கருமங்கள் செய்யுங்காலத்தெல்லாம் ஸ்திரீபுமான்கள் டஞ்சகச்சம்வைத்து வேஷ்டியுடுத்திக் கொண்டும் ஸ்திரீகள் மடிச்சாருடையுடுத்திக்கொண்டு மிருந்து கருமாதிகளைச்செய்து முடிக்கவேண்டும் இப்படிச்செய்யவேண்டுவதியாதெனில்! ஸ்திரீபுருஷ சாயை பூமியில்படப்படாது அல்லது தெரியப்படாது சிரார்த்தவிருத்தமாக நடப்பார்களாளுல் பூமிதேவியால சாபங்கிடைக்கும் இப்படி எப்போதும் அனுஷ்டிக்கத்தக்கதே கருமங்களிலாவது அநுஷ்டிக்காவிடில் பிதுர்தேவதைகளால் சாபம்பெற்று நியரகடைவர்.

## வேளாளர்வேதம்ஓதல்.

உபநிஷத்து ஆகமம் வேதம் புராணம் இந்நான்கும் ஈசுவரவாக்கியமென்றே குறிப்பித்திருக்கின்றன கடவுள் ஒரேவிதமானநூல் கூறாது ஆன்மாக்கள் பக்குவநோக்கி புராணம் பாசஞானம் வேதம் பசுஞானம் ஆகமம் பதிஞானம் உபநிஷத்து அனுபவஞானம் என்னும் நால்வகையுணர்ச்சியை விளக்கும்பொருட்டு கடவுள் கட்டளையிட்டனர் இது வேதாந்த சூடாமணியாற் காணலாம் இதனைஉணர்வதற்கு வேதாகமங்களே கருவியாம்.

பாசநூலாகிய புராணங்களில் கூறிவைகள் ஆணவங்காமியம் மாயைஎன்னுமும்மலங்களைப்போலவும் அவற்றிற் கியைந்ததத்துவமும்தத்துவத்தால்தேகத்தில் அமைந்தவாதபித்த சிலேத்துமம் போல ஒன்றோடொன்று பொருத்தமில்லாதகதைகளும் பலபட பரத்துவ நிலைமைகூறுதல் சாக்ஷியாம் திருமந்திரத்தாலுணர்க.

வேதம் ஆன்மலக்ஷணத்தையும் சொல்லையும் வேள்விமுதலிய கருமமும் கடவுட்டன்மைபலபடவுமே விளக்குகின்றது இதனை சிவஞானசித்தியாரிலுங் காண்க

ஆகமம்பதிநூலென்பது சித்தாந்தம் பாஷியம் பஞ்சாக்ஷரவுரை சித்தியார் திருவிளையாடலாலும் உணர்க.

உபநிடதம் அனுபவநூலென்பது சூத்திரமையும் பசுநூலைவாசிக்காதவர்கள் பதிநூலைவாசிக்கலாமென்பது வழு ஆகவே வேளாளர் ஆகமம் வாசிப்பதுபோலவே வேதமும்வாசிக்கலாம் எப்படியெனில் திருக்கை வழக்கத்துள் (ஆதுலர்க்குச்செம்பொன் அளிக்குங்கை.) வேதபுராணங்கள் விரிக்குங்கை) என்றிருக்கிறது சிவஞானபோதஞ்செய்த மெய்கண்டசிவாசாரியார் வேளாளர் அவர்தமது நூலில் (அக்கரங்களின்றும் அகரவுயிரின்றே லிக்காமத்தென்னு மிருக்கு) என்று பிரமாணித்திருப்பதினாலும் திருவாவடுதுறை ஆதீனஞ் சிவஞானசுவாமிகள் ஸ்ரீ வேதாந்தபாஷியத்தை வாசித்ததாகவும் இன்னுஞ்சுத்தசைவர்கள் வேதமாதாவாகிய பிரமகாயத்திரி சிவகாயத்திரியை ஜெபித்துவருகின்ற வழக்கமிருக்குதுள்ளது.

வேளாளர் வேதமோதுதல் எப்போதும்உள்ளது வேதம் வடமொழிமறை தைத்திரீயம் தல்வாகாரம் டௌடியம் சாமம் என்றும் தென்மொழிமறை தேவாரம் திருவாசகமுதலிய திருமுறைகளும் திருவாய் மொழியுமெனவும் ருக்கு யஜுசு சாமம் அதர்வணமென வடமொழி மறையை வியாசர் நான்குகூறுகவகுத்தாரென்றும்.

கடவுள்வாக்கியமும் அவனருட்பட்டோர் திருமொழியும் அச்சத்தம் கடவுள் திருவடிவமென்ற படிஆளுடைய வரசுகள் ஆரியன்கண்டாய் தமிழன்கண்டாயெனவும் ஆகவே ஆசிரியமுகூர்த்தங்களாக சிவனேஅருண்மேனிதாங்கிவந்து தமதுதிருமொழியினை வெளிப்படுத்தியவாறென்றுணர்க.வைணவர் உபயவேதாந்தமெனவடமொழிமறையினும் திருவாய்மொழியினை திருமந்திரமாக பாராயணமுதலியனகொண்டொழுகுதல் காண்க.

வேளாளர் விசுவேதேவரை சிரார்த்தாதி கருமங்களில் தொழுதுவருகின்றார்கள்.

ஆகவே இவ்வேளாளர் தேவாரதிருவாசகமுதலிய திருமுறைத்தமிழ்மறைகளை சுபாசுபகருமங்களிலும் நித்தியானுட்டான ஒழுக்கங்களிலும் முறைப்படியோதி பாராட்டுமாறு தெற்றென்றுணரப்படுமாதலால் வருணாச்சிரம தருமங்களை நன்றாயுணர்ந்து அறப்பொருளின்பங்களைத் தேடியனுபவித்து அதன்மேல் அவற்றிற்கு மேலான சிறந்தபொருளைப்பெற முயல்வது முறைமையென்பது

வேதத்தில் கருமகாண்டம் இந்திரன் ஆகாயம் அக்கினி ஆதித்தன் சந்திரன் அப்பு வாயு அசரீரிகள் பரமாணுக்கள் பிருதிவி உருத்திரர் வசுக்கள் அசுவனிதேவர் முதலியதேவர்களையும் அவர்களைநோக்கிச்செய்யப்படும் பலயாகங்கள் சோமபானம் அருக்கியம் முதலாகிய அநேகசமயாசார சடங்குகளையும் தோத்திரங்களையும் மந்திரங்களையும் இவைகளால் உண்டாகும்பலன்களையும் விளக்குகின்றன.

உபாசனகாண்டம் மேலேசொல்லிய தேவர்களை விசுவசித்துச் செய்யும் உபாசனத்தை விளக்குகின்றது.

ஞானகாண்டமோவெனில் சர்வபரிபூரண சச்சிதானந்தமாகி அகிலபுவன சராசரபிரபஞ்சத்திற்கு மூலமாயும் காரணமாயும் இருக்கிற பெரியபொருள் துவாதசாந்தமுடிவிலிருக்கும் உன்மனாதீதபரசிவம் ஒன்றேயென்னும் உண்மைஞானத்தை விளக்குகின்றது.

த்வாதசாந்தலக்ஷணமாவது.

| | |
|---|---|
| க. க்ஷோபககலை | எ. நிரோதிகலை |
| உ. மேதாகலை | அ. நாதகலை |
| ஙூ. அர்க்கீசகலை | கூ. நாதாந்தகலை |
| ச பிந்துகலை | க0. சக்திகலை |
| ரு அர்த்தசந்திரகலை | கக. வியாபினிகலை |
| சா. விஷகலை | கஉ. வியோமரூபாகலை |

இந்தப்பன்னிரண்டும் த்வாதசாந்தமென்னப்படும் இதில்கீழ்ஆதாரம் ஆறு மேலாதாரம் ஆறு ஆக கஉ.

இதற்குமேல் அனாத அனாதை அனாச்ரத சமனா உன்மனாஸ்தானம் இதற்கெல்லா மேலேயிருப்பது உன்மனாதீதபரசிவமாம்.

இம்மூன்று காண்டமாகப் பிரிக்கப்பட்டவைகளுள் தேவபத்தியுண்டாகிறவரையில் யாகாதிகளைச் செய்க ஞானம் உண்டாமளவும் பக்தியெனும் உபாசனமார்க்கத்தில் நிற்கவேண்டும் இவைகளால் ஞானம் உண்டானபின்பு இவ்விரண்டும் நீங்கிவிடும் மேலானபரம் ஆவியாகிய ஒரேதெய்வம் அதனால் பிரபஞ்சமாதலால் ஆகமங்களிலும் வேதாந்தங்களிலும் ஒரேகடவுளென்று ஆராதிக்கும்படி சொல்லப்பட்டிருக்கின்றன.

ஆதலால் எல்லாம் வல்லவிறைவன் படைப்பினுள் அகப்பட்ட அநேகமான தேகபோகத்தோடுங்கூடிய ஆன்மகோடிகளுக்குள்மனிதர் அறிவு தொழில் அனுபவிப்பு பகுத்துக்கொள்வ, 'ல் அடங்கவும் அட

க்கவும் மிருகமுதலியன பயன்காகூியளவையதுபோல் உயர்ந்தமக்கட் பிறப்பினுள்ளும் அடக்குவாரும் அடங்குவாரும் லௌகீக வைதீக கருமங்களுக்கு அனுகூலமும் க்ஷேமமும் பிரயோசனமுமாக விருக்கின்றது அரசு குடி கற்றோர் கல்லார் உபாத்தியாயன் மாணாக்கன் உடையவன் எளியவன் ஏவுவோன் இயற்றுவோன் ஆண்பால் பெண்பால் எனவும் புண்யம் பாவம் போலத் தொழிலுள்ளும் மேல் கீழ் என இடத்துள்ளும் முன் பின் எனக்காலத்துள்ளும் பிறவற்றுள்ளும் பலவற்றுள்ளன அவற்றையுணர்ந்து விசாரித்தலே நன்று.

கடவுளாலாக்கப்பட்ட அறிவு, அறியாமை, இளமை, முதுமை, தலைவன், ஏவலன், துன்பம், இன்பம், பேறு, இழவு, புகழ், இகழ் முதலிய உண்மையால் உலகியற்றொழில் துன்ப வின்பமுமாகச்சிறுகச் சிறுக அஞ்ஞானத்தைப்போக்கும் அப்பாசவறி வொழிந்தக்கணத்திலேஅருளியற்றொழிலாகிய அருளாகும் ஆன்மவறிவு வெளிப்படும் அருளியற்றொழில் முதிர்ந்து கடவுளையறியும் மெய்ஞ்ஞானத்தையடைந்து நித்தியசுகத்திலிருக்கும்பேறுஉண்டாம்.

இந்நீதிநெறிகடவாத வேளாளரை தமிழ்புராணங்களில் சூத்திரரென்றும் ஆதிசைவரை பூசாரிஎன்றும் வழங்குவிக்க இத்தேசத்தில் ஆகமவிரோதிகளாகிய மாயாவாதிகள் சிறுகுலினர்களாகிய குறும்ப அரசர்களுக்கு குலச்சிறப்புமுதலிய விசேடமாகக் கற்பித்து சுவாதீனப்படுத்திக்கொண்டு முயன்றதற்கஞ்சி மறைக்கவும் பிற்காலத்துள்ளாருண்மையுணராது மயங்கிவிட அவத்தைக்குள்ளாய் அப்புராணங்களுட் கூறினர் பலநூலிலும் கொடுந்துணிவினால் திருத்துவித்து மிருக்கிறார்கள்.

வேளாளர் பலரும் வேதாகமங்களைவாசியாத குறையால் ஞானசித்தியில்லாமற்போவதுமன்றி தீயஒழுக்கங்கள் விளைவதுமாம்வருணச்சிரதருமர் தவறாதநடப்பது நன்மை அது பரம்பரைப்பற்றி வருவதாகும் ஐயந்திரிபு அறியாமை இம்முக்குற்றமொழித்து நெறிமரபுதவரா தநடப்பதேபயன்படுவதேயாம் இதன்பால் தேயஒருமைக்கு அறிவு ஒழுக்கம் பயன் தயை கொடை உபகாரம் கண்ணோட்டம் முதலியவேயாம் இதற்குப்பகை அறியாமை உலோபம் அழுக்காறு வன்சொல் வன்செய்கை குரோதமுதலியபலவாம்.

இஃதொழித்து சிசுஒழுக்கம் பாலியம் கௌமாரம் விருத்தத்வம் ஒவ்வாதாதலால் அறிவால் தொழிலையுணர்த்தி இம்மை மறுமைக் சேதுவாய் அறம் பொருள் இன்பம் புகழும்பெற்றுள்ளவாம் எத்தி

றநன்மை தீமைக்குங் காரணம் அறியாமை திரிபுணர்ச்சி அறிவுடையோர் விரிததுரைத்த நூற்பலவுளவாதலாற் சிதறிய வொழுக்கஞ்சீர் பெறச்செய்ய வேண்டுமெனல் அதன்றன்வருணாச்சிர தருமங்களை யுணர்ந்து பயன்பெறமுயல்வது முறைமையாம்.

இவ்வொழுக்கங்களனைத்தும் இயற்கையாயுடைய கங்காகுலத்தினராகிய வேளாளருக்குள் எல்லைவழக்கு நேரிட கலியுகவருஷம் (அஉடுல்) வியவருடத்தில் கரிகாலசோழன் விசாரித்தறிந்ததில் வேளாளர் ஆணைவழிநிற்றல் அழிந்தோரை நிறுத்தல் கைக்கடனாற்றல் கசிவகத்துண்மை ஒக்கல்போற்றல் ஓவாமுயற்சி மன்னிறைதருதல் ஒற்றுமைகோடல் முதலிய பத்துத்தொழிலையுந்தவராது அனுட்டிப்பவர்களென்றும் இவர்க்குவைதிக விருத்திவேதமோதல், ஈதல் என்றும்; இலௌகீகவிருத்தி பசுக்காத்தல், பயிர்செய்தல், வியாபாரஞ்செய்தல், வட்டியீட்டல் முதலியவற்றுள்ளும் ஈதலாகியசெயல் பெரும்பாலும் இவர்களிடத்தேயுள்ளதென்றும்; சமயம் விசேடம் நிர்வாணம் அபிடேகம் என்னும் தீட்சைகளும், சௌசாசமனம் உடையுபவீதமுதலியவைகளும் இவர்க்குரியனவென்றுபராசரஸ்மிருதி மாதவ்ய உரையிற்சொல்லியிருக்கிறபடி யிவர்களனுட்டித்து வருகிறார்களென்றும்; அறவியல் விளக்கமென்னும் நூல் இவ்வேளாளரையேகுறித்ததென்றும்; ஈசன்கொடுத்த இருநாழிநெல்லைப் பார்வதியிவர்களிடத்தே கொடுத்து முப்பத்திரண்டறம் வளர்த்தாளெனப் புராணஞ்சொல்லுகிறதென்றும்; கோத்திர சூத்திர வரலாறும் பூர்வகிரந்தங்களால் வேளாளர் பூமிபாலரென்றும் தெரிந்துகொண்டு, இவர்கள்பலவரசர் நாடுகளிலிருந்தாலும் வடக்குக்காளத்திமலை, கிழக்கு கீழ்சமுத்திரம், மேற்கில்பவளமலை, தெற்குபெண்ணையாறு இவற்றின் இடையிடையில் இருபதுகாதம் வட்டமாயுள்ள இந்தத்தொண்டைமண்டலம்வேளாளர்க்குரிய கோட்டமிருபத்துநான்கு, நாடெழுபத்தொன்பதுநத்தம் ஆயிரத்துத்தொளாயிரம் கோத்திரம் பன்னீராயிரம்என்று தொண்டைமண்டலத்தில் தன்கணக்கில் ஏற்பட்டபடி ஊருருக்கும்எல்லைக்கல்நட்டு அவர் அவர்க்குகாணியாக்ஷி நிலைபெற்றிருக்கஸ்தாபித்து கச்சிப்பதியில் கம்பராலயத்தில் சிலாசாசனமும் செய்வித்துஅநேக விருதுகளுங்கொடுத்து மரியாதைசெய்தான் அதுமுதல்கோட்டம் (உச) நாடு (எகூ) நத்தம் (ககூ00) கோத்திரம் (கஉ000) என்றுவழங்கிவருகின்றது.

## இருபத்துநான்கு கோட்டம்,
### எழுபத்தொன்பது நாடு முதலியன.

| தொண்டைமண்டலத்தின் பிரதான பட்டணம். | பிரதானபட்டணத்திற்கு கோட்டமிருக்கிற திக்கு தூரம் பெயர். | | | ஒவ்வொருகோட்டத்திற்சேர்ந்த நாட்டின் திக்கு தூரம் பெயர். | | | | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|---|
| | திக்கு. | தூரம் மயில். | கோட்டத்தின் பெயர். | திக்கு. | தூரம். | நாட்டின் பெயர். | நாடு மொத்தம் | |
| காஞ்சீபுரம். | மேற்கு. | ௨. | (௧) எய்யில். | கிழக்கு.<br>வடகிழக்கு<br>தென்கிழக்கு | ௨<br>௩<br>௧0 | தண்டகம்,கோனேரிகுப்பம்,மாகறல் | ஆக ௩ | காஞ்சிபுரத்திற்கு மேற்கு ஈயப்பிள்ளையார் கோவிலுக்கடுத்த வடக்கில் கோட்டையிருக்கிறது. |
| | வடமேற்கு. | ௧0 | (௨) தாமல். | மேற்கு.<br>வடக்கு. | சுவ<br>௩ஜ | கரிவேடு கொட்டிவலம். | ஆக ௨ | தாமலுக்கு தென்கிழக்கில் ஒருமயில் தூரத்தில்கோட்டை. |
| | மேற்கு. | ௩0 | (௩) சிறுகாரை. | மேற்கு. | ௨0 | ஆய்க்கதம். | ௧ | இக்நாட்டுக்கு பொய்கை என்றும் பெயர். |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| காஞ்சீபுரம் | வடமேற்கு | ௩0 | (௪) கடிகை இதற்கு கடிகாசலமென்றும்சோளங்கி புரமென்றும் பெயர். | தெற்கு | ௩௯ | பெருங் காஞ்சி. | | வட |
| | | | | கிழக்கு | கஉ௭ | நாகவேடுஅல்லது மேற்களத்தூர் | ஆ௲ ௩ | மலையருகில் கோட்டை அழிந்திருக்கிறது. |
| | | | | கிழக்கு | க0 | பாராஞ்சி | | |
| | வடமேற்கு | ௫0 | (௫) குன்ற வர்த்தனம் | தெற்கு | க0 | மாகாளம் அல்லது மாங்கால் | ஆ௲ ௩ | நாராயண புரந்தக்குகிழக்கு ஒருமயில்தூரத்தில் கோட்டையும் நாராயணபுரம் சிவதலத்தில் சிலாசாசனமுமிருக்கிறது |
| | | | | தென் கிழ | க0 | நின்றை. | | |
| | | | | கிழக்கு | கஉ௭ | மங்கலம். | | |
| | வடக்கு | உ௫ | (௬) மணலூர | தெற்கு | உ௯ | பாசாலை | | |
| | | | | தெற்கு | கஉ௭ | நெல்லத் | | |
| | | | | தெற்கு | கஉ௭ | தூர். கல் | | |
| | | | | தெற்கு | கஉ௭ | ணூர். புரி | ஆ௲ ௫ | |
| | | | | தெற்கு | க0 | சை,பெருமுச்சி. | | |

# இருபத்துநான்கு கோட்டம்.

## எழுபத்தோன்பது நாடுமுதலியன.

| தொண்டைமண்டலத்தின பிரதான பட்டணம். | பிரதானபட்டணத்திற்கு கோட்டமிருக்கிற திக்கு தூரம் பெயர் | | | ஒவ்வொருகோட்டத்திற் சேர்ந்த நாட்டின் திக்கு தூரம்பெயர் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | திக்கு. | தூரம் மயில். | கோட்டத்தின பெயர் | திக்கு. | தூரம் | நாட்டின் பெயர். | நாடு மொத்தம் |
| காஞ்சிபுரம் | வடக்கு | ௯0 | (௭) வேங்கடம் அல்லது திருப்பதி | வடக்கு | ௯௰ | குடகரை | ௮ |
| | | | | மேற்கு | ௨0 | தொண்டைமான் கோட்டை | |
| | | | | மேற்கு | ௯௰ | பேர் குப்பி | |
| | | | | | | கண்ணப்பர்பிறந்தவிடம் | |

## இருபத்துநான்கு கோட்டம்,
### எழுபத்தொன்பதுநாடு முதலியன

| தொண்டைமண்டலத்தின பிரதான பட்டணம். | பிரதானபட்டணத்திற்கு கோட்டமிருக்கிற திக்கு தூரம் பெயர். | | | ஒவ்வொருகோட்டத்திற்சேர்ந்த நாட்டின திக்கு தூரம் பெயர். | | | | ஷரா |
|---|---|---|---|---|---|---|---|---|
| | திக்கு. | தூரம் மயில் | கோட்டத்தின் பெயர். | திக்கு. | தூரம். | நாட்டின் பெயர். | நாடு மொத்தம் | |
| காஞ்சீபுரம் | கிழக்கு | உரு | (கக) புலியூர் | தென்மே | க0 | குன்னத்தூர் | | |
| | | | | மேற்கு | க0 | மாஙகாடு | ௫ | |
| | | | | மேற்கு | கூஞ | பேறூர் | | |
| | | | | வடக்கு | க0 | அமரூர் | | |
| | | | | தென்கிழ | கூவ | கோட்டூர். | | |
| | கிழக்கு | ரு0 | (கஉ) புழல் | வடக்கு | கூவ | நாயர் அம்பத்தூர் | ௫ | கோட்டையிருக்கிறது |
| | | | | தெற்கு | கூவ | ஆவடி | | |
| | | | | தென்மேற் | க0 | ஆத்தூர் | | |
| | | | | வடமே | கூவ | எழும்பூர் | | |
| | | | | தென்கிழ | க0 | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| காஞ்சீபுரம் | வடகிழ | ௬0 | (௧௬) பையூர | தென்கிழ<br>வடகிழ<br>வட கிழ<br>தெற்கு | ௧0<br>௬வ<br>௨0<br>௧0 | பொன்னேரி<br>செகண்டிபம்அலலது சேனூர்<br>வெண்ணூடு என்பதுவெண்கலி<br>கணணியப்பேறூர்என பதுகன்னி | ஆஉ ௪ | பையூர்கோட்டம் கும்மிடிபூண்டி என்னும் கிராமத்தில்கோட்டைஇருக்கிறது. |
| | கிழக்கு | ௬வ | (௧௭) ஊத்துக்காடு | கிழக்கு<br>தெற்கு<br>தென்மே<br>வட மே | ௬வ<br>௭உ<br>௧0<br>௫ | பாலையூர<br>தம்மனூர்<br>குண்ணம்<br>நீவளூர், | ஆஉ ௪ | ஊத்துக்காடு கிராமத்துக்கு வடக்குகோட்டைஇருக்கிறது |

## இருபத்துநான்கு கோட்டம், எழுபத்தோன்பதுநாடு முதலியன.

| தொண்டைமண்டலத்தின பிரதான பட்டணம் | பிரதானபட்டணத்திறகுகோட்டமிருக்கிற திக்கு தூரம பெயர். திக்கு. | தூரம் மயில். | கோட்டத்தின் பெயர். | ஒவ்வொருகோட்டத்திற்சேர்ந்த நாட்டின் திக்கு தூரம் பெயர். திக்கு. | தூரம். | நாட்டின் பெயர். | நாடு மொத்தம். | ஷரா |
|---|---|---|---|---|---|---|---|---|
| காஞ்சீபுரம். | கிழக்கு | ௪௰ | (௧௫) ஆமூர் | வடக்கு<br>கிழக்கு | கூவ<br>எஉ | படோ<br>குமிளி | ஆ௨ | ஆமூரில்கோட்டை அடையாள மிருக்கிறது. |
| | வடகிழ | ௨௰ | (௧௬) செங்காட்டூர் | தென் கிழ<br>வடக்கு | கூவ<br>௦ | பென்னலூர், அதிகத்தூர் | ஆ௨ | ஸ்ரீ ராமர்பாளயத்துசமீபம் கோட்டை மேடிருக்கிறது. |
| | தென்கிழ | ௫௦ | (௧௭) களத்தூர் | வட மே<br>வடகிழ<br>தென் மே<br>தெற்கு | கூவ<br>கூவ<br>ருஜ<br>ருஜ | குறும்பறை<br>வலலம்<br>திம்மூர்<br>பாத்தூர் | ஆ௪ | |

காஞ்சிபுரம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தென் கிழ | ரு0 | (கஅ) ஈசூர் அல்லது ஈதூர | மே | கஉ½ | அற முறங்கா | க | அறம்உறங்காநாடு என்கிற அரங்கமங்கலத்தில் மூன்று கோவில் சாசனமிருக்கின்றன. |
| தென் கிழ | ௬ | (க௯) காலூர் | தெற்கு<br>தென்மேற்<br>வட மே<br>தெற்கு<br>தென் மே | ௬வ<br>௬வ<br>௬வ<br>ரு<br>கஉ½ | திருப் புலிவனம், எரிகிழ், விப்பேடு,பாலூர், காழியூர் | ஆ ௬ | |
| தென்கிழக் | உ௬ | உ0 இளக்காடு | தெற்கு<br>தென்மேற்<br>வடமேற் | க0<br>க0<br>எ½ | பொன்னூர், தென்னைத்தூர், மறக்குணம். | ஆ ௩ | |
| தென்கிழ | ௭0 | (உக) வேலூர் | தெற்கு<br>வடகிழக்கு<br>மேற்கு | உ0<br>கஉ½<br>உ0 | ஒழு கறை நென்மெலி மாத்தூர | ஆ ௩ | கோட்டைமேடுஇருக்கின்றது. |
| தெற்கு | உ௩ | (உஉ) வெண்குன்றம் | வடக்கு<br>வடமேறகு<br>வடகிழக்கு<br>தெற்கு<br>தெற்கு | க0<br>௬வ<br>௬<br>௬<br>க0 | பெருநகர் அரசூர் மருதாடு நல்லூர் தெள்ளாறு | ஆ ௬ | பக்கத்தில் கோட்டையிருக்கிறது |

## இருபத்துநான்குகோட்டம்,
### எழுபத்தோன்பதுநாடு முதலியன.

| தொண்டைமண்டலத்தின் பிரதான பட்டணம். | பிரதான பட்டணத்திற்குகோட்டமிருக்குந் திக்கு தூரம் பெயர். | | | ஒவ்வொருகோட்டத்திற்சேர்ந்த நாட்டின் திக்குதூரம் பெயர். | | | மொத்தநாடு. | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|---|
| | திக்கு. | தூரம் மயில். | கோட்டத்தின் பெயர். | திக்கு | தூரம். | நாட்டின் பெயர். | | |
| காஞ்சீபுரம். | தென் மேற் | ௧௫ | (௨௩) பல்குன்றம் | மேற்கு<br>மேற்கு<br>தென்மே<br>தெற்கு<br>மேற்கு | ௩வ<br>௧0<br>௨0<br>௯வ<br>௨0 | பாராகூர்<br>தச்சூர்.<br>மெய்யூ<br>பெருங்கா<br>மிரி, சிங்கயபொ<br>ருதவளம் | ஆ ௫ | பைங்கிணறுஎன்கிற கிராமத்தில் பலமேடுகளை கோட்டையாகப் பாவிககப்படுகின்றது. |
| | தென் மே | ௩0 | (௨௪) பரோ் | தென்மே<br>வடக்கு | ௨௫<br>௧0 | ஆறகாடு<br>செங்குன்றம் | ஆ ௨ | ஆறுகாட்டுக்கடுத்த குடிமல்லூர் ஆற்றங்கரையில் திருவுநதீசுவரர் இருப்பிடம் கோட்டையாகிறது. |
| | | | ஆ ௨௪ | | | ஆ ௭௯ | | |



தொண்டை மண்டலத்திலுள்ள
கோட்டங்களின்
பிளான்
மேற்கு
சிறுகாரை
சோளங்கிபுரம்
படுர்
தாமல்
குன்றவர்த்தனம்
எயில்
திருத்தணிகை
தெற்கு
பல்குன்றம்
பிரதானபட்டினம்
காஞ்சிபுரம்.
மணவூர்
திருப்பாதி
வடக்கு
வெண்குன்றம்
ஈக்காடு
மையூர்
காலூர்
செம்பூர்
விளங்காடு
ஊத்துக்காடு
புலியூர்
உ-வேலூர்
புழல்
ஆமூர்
களத்தூர்
செங்காட்டூர்
ஈ-தூர்
கிழக்கு



# மேழிக்குடையோன் வேளாளன்.

ஏர்மங்கலம். உரோகணி, மூலம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி, புனர்பூசம், பூசம், அஸ்தம், இவைகளும். திதிகளில். பிர, துதி, திரி, சவு, பஞ், சஷ், சப், அஷ், தச, ஏகா, துவா, திரி, சது, இவைகளும். இராசிகளில், மகரம், கடகம், ரிஷபம், மீனம், மிதுனம், இவைகளும். வாரங்களில். திங்கள், புதன், வியாழம், வெள்ளி, இவைகளும். பொன்னேர்கட்டி. விழுவதற்கு நன்று. இரட்டித்த திதிகளும் ஆகாது.

கலப்பைசக்கரம். மேலே கண்டிருக்கிற கலப்பையின் நுனியில் ஒன்று எனவேகாட்டிய யிலக்கத்தில் சூரியன் நின்ற நாளைவைத்து வலமே எண்ணிவர ஏர்க்கால், மேழி, ஒன்றுமுதல் பதினொன்றுவரைக்கும் மேற்சொல்லிய நக்ஷ, திதி, இராசி, வாரம், வருமானால் அக்காலத்தில் உழுதால் எருதையும், உழுகின்றவனையும், மரணத்தையும் அடையச்செய்யும் ஏர்க்கால் அடியில் மேற்சொல்லியிருக்கிற நக்ஷத்திரத்திலே உழுதால் மிகுந்த நன்மையுண்டாம்.

## தொண்டைமண்டலசதகம்.

### மாடுகொள்ள வேண்டியிருந்தால்
### பிரயாணஞ் செய்யநாள் முதலியன.

ஆரலையாதி யேழ்நாள்நந்தைசேய் கிழக்காந்தெற்கு
சீரியமகத்தோ டேழ்நாள் பத்திரை சனியேதிங்கள்
சாருமேற் கநுஷமாறுஞ் சயைபுதன் குருவடக்கு
பூரணைவிட்டமேழ்நாள் புகர்கதிர்நன்றுபோக்கே. (௧)

போக்கினில்பரணியார லாதிரைபூரமுன்றுந்
திக்குமாயிலியங்கேட்டை சித்திரைவிசாகஞ்சோதி
ஆக்கியமகமிருத்தை யாதியட்டமியுவாக்கள்
நீக்கிமெருக்கன்சேய்மால் நிலையோரைநினைக்கலாகா. (௨)

நினைவுறவிட்டிவில்லு விதிபாதநெடியவட்டம்
துணியுறுகிரணஞ்சூலந் தூயசங்கிராந்திதூமம்
வனிதைகேளிடித்தல் மின்னல்மழைபெய்தலிடறல்தும்ம
லினையனசெய்யப்போகி லெய்திடும்பஞ்சமெல்லாம். (௩)

எல்லையில்யாத்திரைக்கங் கேகுவானிராசிக்காறுஞ்
சொல்லியவிரண்டுமூன்று பதினொன்றுசுகத்தைநல்கும்
மல்லல்செய்பகையைக் கோறலாங்கவனிராசிக்கெட்டிற்
செல்லிடிற்பகையைக்கொன்று திரந்துதன்பதியைச்சேரும் (௪)

பதியுடைநற்கோளெங்கு நன்றைந்திற்பலரும்பொல்லா
மதியிரண்டெட்டுநாலோடொன்பதீ ராறுமாய்க்கும்
திதிவெள்ளிநிய னேழினென்றறிதீக்கோள்பத்துங்
கதியுடைமூன்றுமாறும் பதினொன்றுமினியர்காணே. (௫)

காண்டகுகுதிரைவிட்டங் கலம்பனையத்தஞ்சோதி
தோன்றுமான்றலையோடொன்றுந் துலையெழக்கடலிற்போங்கால
நீண்டியநிசியுமெய்து மெழிற்புகாபுந்தியாரம்
[illegible]ணடசிரபுரட்டையாடி மாசிநாள்ம[illegible] (௬)

# தொண்டைமண்டலசதகம்.

சூரிய உதயத்திற்கு [illegible] செய்யின் நன்மை இது சர்வதோஷ நிவாரணமும் [illegible] கொண்டு இஷ்டதேவதையை வணங்கி கும்பிட்டுத் துதித்து நல்ல நக்ஷத்திரம் நல்ல லக்னத்தில் யோகினி எதிரிலும் பக்கத்திலுமில்லாமல் மாசத்யாஜ்யம் (கரிநாள்) வாரத்யாஜ்யம் (ராகுகாலம்) நக்ஷத்ரத்யாஜ்யம் லக்நத்யாஜ்யமுந்தள்ளி நல்ல பஞ்சகத்தில் நல்லவோரையில் புறப்படவேண்டும்.

மார்க்கத்தில் அசுவத்தம் ஆலயம் தடாகம் பெரியோர் எதிர்ப்படில் பிரதக்ஷணஞ் செய்து நமஸ்கரித்துச் செல்லவேண்டும் முக்யம் வலியன் கருடன் காடை யிடமாகில்நலம்.

அசுவத்தமானது விருக்ஷராஜா இதில் ஆண் பெண்ணிரண்டுண்டு இவ்விரண்டையும் வைத்து வளர்த்து பிரதிட்டை செய்வது. இதில் பிர்ம்மராக்ஷஸ் சேராமல் இதனருகில் வேப்பமரமும் வைத்து இதற்கு சோமவாரமும் அமாவாசையும் கூடிவரும்நாளில் பிரதக்ஷணஞ் செய்துவந்து பின்பு உத்யாபநஞ்செய்வது ப்ரத்யக்ஷம் இப்படி ப்ரதக்ஷணம் செய்வதால் பிரம்மராக்ஷஸ் அல்லது பைசாசம் பிடித்திருந்தாலும் நீங்கும் புத்ரசந்தானமுமுண்டாம்.

பாரத்வாஜம் என்பது வலியன் இது விடியற்காலம் ஐந்துநாழிகை முதல் ம்ரத்யுஞ்சயாவென்று த்வனிக்கிறது இந்த த்வனியைக் கேட்பது நலம் இந்த ம்ரத்யுஞ்சய மந்திரத்தை பரமசிவன் இதற்கு போதித்தாரென்பது திருவாசகத்தில் (கருங்குருவிக்கன் றருளினை போற்றி) என்றிருப்பதாலும் ஆலாஸ்ய மஹாத்ம்யத்தினுங்காணலாம் இது இடமாகப்பெற்றால் பெண் கேட்கப்போனாலு, மாடுகொள்ளப் போனாலும் அதற்கு ஆயசுண்டு என்பதாம்.

கருடன் இடமாவது நல்லதே கருடன் விஷ்ணுவாகனமும் பக்ஷிராஜனுமாம் இதை எழுவாரத்திலுந் தரிசிப்பது நலம் சனிவாரம் மாலையில் தரிசிக்கவேணும் தரிசிக்கில் அக்கருடன் ஆதிவாரம் காலையில் தானேதேடி தரிசனங் கொடுக்கும் ஆதிவாரத்தில் தரிசித்தால் ஒரு வாரத்துக்கு ம்ரத்யுவில்லை நல்லசுபபலமே பெறுவர் காஞ்சிபுரம் வைகாசிமாத கருடசேவைதினம வரதராஜசுவாமி சந்திரவட்டக்குடைக்குமேல் கருடன் வட்டமிட்டு வரும்மகிமையை எல்லாரும

காணக்கிடைக்கிறது கருடன் 'உட்கார்ந்திருக்கும்போது தரிசிக்கப் பட்டாது மறைவிலிருந்து த்வனிப்பதைக் கேட்டாலும் தரிசனபலனு ண்டு தரிசிக்கும்போது கருடபகவானை தனதிருகைகளையுங் கூப்பித் தொழப்படாது இரண்டு அத்தங்களையும்மாறி கன்னத்தில் பொத்திக் கொள்ள வேண்டும் கைகூப்பித்தொழுதால் அன்று முழுதுங் கரு டாழ்வான் உணவுகொள்ளார் ஆதலால் அப்படி செய்யில்மகாபாபம்.

காடை இடமாவதால் கோரிப்போகிறகாரியம் வெற்றியுண்டு வியாழம் வெள்ளி தினத்தில் சுபபாவமாகக் காணக்கிடைத்தாலும் ஒரு வாரத்துக்கு சுபபலமேயாவது நிச்சயம்.

இப்படிச் சகுனசாஸ்திரங்களைப் பார்த்தறிந்துபோய்குறித்த எரு தை முதல்பாக்கும்போது அது வலக்காலைத்தூக்கித் தன் தலையைச் சொரிந்துகொள்ளக்கண்டால் அது சத்தியஞ்செய்து கொடுத்ததா கும் அகத்யம் அதை வாங்கவேணும் பசுவாளுல் நீரிடல் எருதானுல் சாணமிடக்காணல நலம். நெற்றியில் சுழிமேல்சுழி யிருந்தாலது கொ டை மேற்கொடை அது ஆகாது வாங்கில் இடி மேல்இடிவரும் இர ண்டு காதின்கீழும் இரண்டுசுழி ஜவாபாகவிருந்தால் கொள்க ஒரு கா தின்கீழ் மாத்திரம் சுழியிருந்தாலது பூரான்கவ்வமென்பார் அது ஆகாது முன் முழங்காலிரண்டின்கீழ் இரண்டு சுழியிருந்தாலது வில ங்குச்சுழி அதை கொள்பவன் காலுக்குவிலங்குவிழும் நடுமுதுகுத் தண்டில்நீளமாக ஒருகோடும் அந்தக்கோட்டின் இரண்டுபக்கத்திலும் இரண்டு சுழியுமிருந்தாலது தாமணிச்சுழி இது மாடுகளை அதிகமாகச் சேர்க்கும் இந்தக்கோட்டின் வலப்புறத்தில் மாத்திரம் ஒரு சுழியிரு ந்தாலது பாடைச்சுழி இது கொண்டவனை உடனே பாடையேறச் செய்யும் இடதுபக்க மொருசுழியிருந்தாலது விரிச்சுழி நல்லது வா லில் சுழியிருந்தால்நாகம் அது ஆகாது மாப்பல்மாடு பலஈனம். குதிரை ப்பல்மாடு உரம். பில்லைமாடும் மயிரழுத்தமாடும் நல்லது ஏறுவால் வெட்டுக்குளம்புமாடு மாகாது இடிக்கிறது உதைக்காலி மிரளுகி படுக்

காங்குளியுமாகாது கடைக்கண் புள்ளிமாடு கவடு. வெள்ளைமாடுதோல் இளப்பம் கறுப்புமாடு கால்வாசிபலம். செவிலி நிறம்நல்லது பில்லை நிறம் சிலாக்கியம் வயிற்றில்மறை ஒருபுள்ளியாவது இருப்பது நல்லது உடம்பெல்லாம் புள்ளிகளாயிருந்தாலாகாது கலங்கானதுபக்கங்களிலிருக்குமாடு மழையில் நனைந்தால் உடம்பெல்லாம் பொங்கிரணமாகும் மயிருதிரும் மறுபடி ரணமாறி மயிர் முளைக்கும் இது துற்பலமாடு ஆகாது வாய்கறுப்பு கண்ணிரண்டுங்கறுப்பு குய்யங்கறுப்பு முலைகறுப்பு வால்கறுப்பு மற்றவுறுப்புகள் துவளா இவ்வண்ணமுள்ள காராம்பசுவை வீட்டில் கட்டினால் குடி நசித்துப்போம் இது காட்டிலிருக்கலாம் இதின்பால் சுவாமிக்கே யுரியது மநிதர் புஜிக்கப்படாது இதின்வயிற்றில் வேறுவிதமான நிறமுள்ள கன்றுகள் பிறக்கிலதை வீட்டில் சேர்த்துக் கொள்ளலாம் நடுப்பல் தாழ்ந்திருந்தால் பாதிவயது. மாடுபல்லைப்பார்த்து வயது நிதாணிப்பது. நோய்வந்தால் வாகடத்தைப்பார்த்து சிக்ச்சை செய்வதாகும். நோயின் குணமில்லாமல் இருக்கப்பார்க்கவேணும் எருதுமாடு கொம்பு கணுவிடுவதைப பார்த்து வயது நிதாணிப்பது. இதற்கு சுழிபார்ப்பதில்லை சூலம் சக்கரம் போட்டுவிட்டிருக்கும் எருதை வாங்கி கையாளப்படாது நல்லெருமைநாவு நற்பசுசேவு தலையீற்று ஈனல்நல்லது. வெள்ளிக்கிழமை எருமைகன்று போட்டால் நல்லது வியாழக்கிழமை பசுகன்றுபோட்டால் மாடு சேராது. இவை முதலியதும் பார்த்து பொறுமையுடன் யோசித்துக் கொள்க.

## மாடுகோள்ளக்கோடுக்க.

மாதராய்பரணிகேட்டை சித்திரைசதயம்வண்கை
சோதியுத்திரங்களாயி லாதிரைபுந்திசங்க
ஞேதுவாவிருத்தையெட்டிற் கோளெழுந்தொழித்தநாளில்
ஈதறிசுராவிற்கன்னி கோலொடுமீனைகணன்றும்.

## தொண்டைமண்டலசதகம்.

[இதன்பொருள்]

பரணி, கேட்டை, சித்திரை, சதயம், அத்தம், சோதி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ஆயிலியம், திருவாதிரை, புதன் வெள்ளி, உவாவு, இருத்தை இவைகளை யொழித்துநின்ற நாட்களில் சிங்கம் மகரம் தனசு கன்னி முகூர்த்தமாகா அஷ்டம சுத்தி யுண்டாக மாடு கொள்ளவுங் கொடுக்கவும்நன்று.

### இதுவுமது.

உத்திரமுன்றிறேடு மோணமாதிரையிறேடுஞ்
சித்திரைமகத்திறேடுஞ் சிறந்ததோர்விட்டத்தோடும்
கொத்துடனகன்றுகாலி குறைவறக்கொள்வீராகில்
அத்திரஞ்செல்லச்செல்ல ஆண்டினில்மாண்டுபோமே.

இப்படிக்கெல்லாம் ஆராய்ச்சி செய்துகொள்ளுகின்ற மாட்டை ஒருகெடுவுவைத்து எருவு துரும்புடன்வாங்கிக்கொண்டு முன்சொல்லியபடி சகுனம்பார்த்து ஒட்டிக்கொண்டுபோய், வீட்டுக்குமுன்மனையாட்டி கற்பூராலாத்தி முதலிய சுழற்றி உள்ளேகொண்டுசென்று வேளாண்குடிப் பிறப்பினர் நாடோறும் தனதுடலுயிரும்போல் போஷித்துவரவேண்டும் கபிலபூஜைசெய்வதால் கோலோகம்சேர்க்கும் தானம்செய்வதால் வைதரணியைத்தாண்டுவிக்கும் இந்தக்கோவின் வயிற்றிலுண்டாகும் கோரோசனமும் பரமசிவன் அபிடேகமுதலிய வற்றிற்கும் சிலாக்கியமாகின்றது பெரியபுராணம் சண்டேசநாயனர் சரித்திரத்துங்காணலாம் உலகத்திலனேகஜந்துக்களிருப்பினும் மாட்டுப் பொங்கல் பிரதானமாகக்கொண்டாடுவதும் இஷ்டாந்தமே.

### கிருஷியாரம்பஞ்செய்ய.

பார்கிழங்குத்திரங்கள் படியிருபூசமத்தஞ்
சீரியவாகுமொன்பானிரட்டித்த பக்கந்தீதாங்
சூரியமகரகண்டு குண்டைமீன் மிதுனநன்றாங்
காரியுங்கதிருந்தீதாஞ் செய்யுழக்கருதுவோர்க்கே.

[இதன்பொருள்.]

ரோகிணி, மூலம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, இரேவதி, புனர்பூசம், பூசம், அத்தம், இவைநன்று. நவமியும் இரட்டித்தபக்கங்களுமாகாது மகரம், கடகம், ரிஷபம், மிதுனம், மீனம், இவைநன்று. சனி, ஞாயிறு, ஆகாது. பூர்வபக்ஷத்திலே யோகாக்ரசித்தனாய் தானஞ்செய்து புஷ்பங்களினாலும், நீராலும், பூமியை அர்ச்சித்து கிருஷியாரம்பஞ்செய்யவேணும்.

## கத்திரியாவது.

యామ్యపరార్ధేసహక్రిత్తికాయాం భానుస్థితేరోహిణిచాద్యపాదే
మృద్గారుపాషాణగ్రహాదికర్మణాం వినాశమాయాతిమయాదిశత్రే
గ్రహప్రవేశంగ్రభిత్తికూపం కృషిక్రియాదేవగ్రహాదికర్మాణి
త్రణాద్రుమశ్చేదనమువిఘాతనం వివర్జితంభాస్కరవహ్నిభేయం

பரணி மூன்றாம்பாதம் நான்காம்பாதம் கிருத்திகைநான்காம்பாதம் ரோகிணி முதல்பாதம் ஆகவேழுபாதத்திலும் சூரியனிருக்குமளவும் கத்திரியென்று சொல்லப்படும். இதில் மணவோலை, கல்வேலை, வீட்டுச்சுவர், கிணறுவெட்ட, பயிர்வேலை, கோவில்வேலை, முதலானதும், கூரைவிழல்போட, செத்தைஅறுக்க, குளம், இந்த அக்கினிநக்ஷத்திரத்தில் சூரியனிருக்கும் கத்திரிநாளில் செய்யப்படாது. செய்தால் அந்தகர்த்தா நாசமடைவான் சித்திரைமாதக்கடையிலும் வைகாசிமுதலிலுமாம் இதைகத்திரி முன்னேழு பின்னேழு எனவழங்குவர்.

## ஏர்உழ.

கருதுமுத்திரங்கள்மூன்றுங் கரும்பனைபுனர்தம்புசம்
பொருவில்சித்திரையேசெங்கை பொன்றிங்கள்செவ்வாய்புந்தி
யெருவிடநல்லவாகு யிருத்தையெட்டொவுத்திநாம்
திருவனையுழுவான்சொன்ன காலமேயெருவுஞ்செயயே.

[இதன்பொருள்.]

உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, அநுஷம், புனர்பூசம், பூசம், சித்திரை, திருவாதிரை, வியாழம், திங்கள், செவ்வாய், புதன், இவை நன்று இருத்தை, அஷ்டமி, உவாகொடியது உழவிற்குச்சொன்ன முகூர்த்தங்களிலே ஏரு விடுவதுநன்று.

**விரைகட்ட.**

செவ்வாய், புதவாரம், அமாவாசை இதுகள் குறுக்காகாது இதை ந்நள்ளியாவது முன்றாலாவது விதை நீரில்நனைத்து முளைக்கவைத்து முளைநீர் காலை மாலையிலுந்தெளித்து வரவேணும்.

**விதைவிதைக்க.**

జ్యేష్ఠయామఘమూలభే శుభగ్రహాలగ్నే పిసుదృష్టమి
సంపూజ్యాఖిల దేవతాః కృషిభవం సంప్రస్వశ్యాస స్వంగ్రహైః
ఓం విశ్వేమహిళేన మోభపతీత్యేతేన సంమంత్రితాం
బీజావాపనమాద్య మేవఫలదం సయాంకుత్సతారాసవా

கேட்டை, மூலம், இந்த நக்ஷத்திரத்தில் சுபக்கிரகசம்பந்தலக்கினத்தில் எட்டாமிடம் சுத்தியாயிருக்கிற லக்கினத்தில் அல்லது இதற்காக சொல்லியிருக்கும் சுபநக்ஷத்ர வாரலக்னம்சங்களில் விளைக்கும் புலத்தின் ஈசானியமூலையில் கணபதியைஸ்தாபித்து பூசித்து இஷ்டதேவதைகளைப் பிரார்த்தித்து மங்களவாத்தியத்துடனும் இஷ்டபந்துமித்ராளுடனும் சென்றுவிளைக்கப்பட்ட பூமியையும் விளையையும் தொட்டுக்கொண்டு (ஓம் விச்வே மஹிதே நமோ பகவதி) என்று இந்தமந்திரத்தை (௰) தரம் செபித்து நன்றாய் அபிமந்திரித்து எஜமானரால் முதல் விளையில முந்தி விதைத்தானம்செய்து பின்பு விதைக்கக்கடவது.

## கதிரறுக்க.

வித்தகமகமுரோணி விசாகமாதிரையோடோணம்
அத்தமென்பரணிசால வழகியவிருத்தையாகா
ஒத்தபொன் திங்கள்புந்தி யுதயவாரங்கள்நன்றும்
கொத்துமேறரிதேள்நண்டு குடங்கதிர றுக்கநன்றே.

இப்படி சாத்திரங்களறிந்துசெய்யின்கரும்புநட்டால் அதின்கணுக்களில் முத்துக்கள்சொரியும் சம்பாவிளைத்தால் பயிர்செழித்து நெற்பழமும்பழுக்கும் பொற்கதிராகவும் விளையும் ஆதலால் இதிற்கண்டதீதுறுநாளையகற்றி நன்னாட்கள் நற்காரியங்களுக்கெல்லா மாகுமென்றறிந்து எல்லாப்பயிரும்செய்க. எல்லாவற்றையுமேயறிந்து செய்யக்காலம்நேருமாவென்றால் கூடியவரையில் அவ்வவர்களுக்கு அனுபவத்திற்கு வந்தமட்டில் நன்னாள்அறிந்து செயல்வேண்டும் நாள்செய்வது நல்லார் செய்யார்என்பது பழமொழி. இவ்வாறறிந்துசெய்யும் வேளாளர் (கங்கைகுலமென்பதற்கு திஷ்டாந்தம்) பரப்பிரமத்திருந்து உற்பவமாகுங்கால் சத்தியுஞ்சிவமும் ஒருங்காய்ச்சமைந்து, சத்தி நீரும், சிவம் அக்கினியுமாயிருந்து இச்செகத்தின் கண் எல்லாசீவராசிகளும் எக்காலத்தும் இவ்வண்ணமாகவே பிறக்கின்றன இந்தச் சிவம் இச்சாமாத்திரத்தால் அந்தச்சத்திமயநீராகிய கங்காதேவியாருக்கு வேளாண்மரபினர் உற்பவமாகினர் இந்தக்காரணத்தால் வேளாளர் கங்காகுலமென்பதாம்.

சிவன்சிரசில் பிரதானமாக கங்காதேவியார் விளங்குதற்குக் காரணம் யாதெனில், உலகத்தாரைக் காக்கும் வேளாளரை, ஜனிப்பிக்கும்பொருட்டு சத்தியும் சிவமும் வேறுபட்டு பின்னுசத்தியாகி சிரசின்மேல் கங்கைவடிவமாக வேளாளரைப்பெற்றனர் சத்திசிவம் யாண்டும்பிரியாதிருத்தலென்க பார்ப்பதியாரோ அப்படிக்கல்ல பார்வதியார் பலகால் தேகத்தைவிட்டுத் தவஞ்செய்து பலமுறை பரமசிவனைவிவாகித்தும் உலகில் தக்கன் மலையரசன், மரீசிமுதலாயினோரிடத்துதித்தாளென்பதால கங்கைபெரியாயுடையளென்க.

காஞ்சிபுரம் ஏகாம்பரேசர் கோவில் முதல் காமாக்ஷியம்மன் கோவிலுட்படச் சேர்ந்தது தண்டகாரடுஎன்பது ஆறுகாடுகிராமத்துக்குச் சமீபத்தில் இருக்கிற சிறுகாவைக் கோட்டத்துக்கு விரிஞ்சிபுரம் சமீபத்திலிருக்கிற பொய்கைநாடு (க) இதற்கு நத்தங்கள் ஆறுகாடு முதல் பாலாற்றங்கரை இருபுறமும் மேற்கே கணவாயின் கீழே பாலாறு விளையோக அம்பலூர் கொடக்காஞ்சிமட்டுக்கும் இருக்கிறது அப்பால் மேற்படி காஞ்சிமுதல் விருத்தாசலம் நதிக்கரையில் புலியூர் கோட்டம் நாடு (ரு) கடிகை கோட்டம்நாடு (ஈ) சந்திரகிரிகோட்டம் நாடு (ச) கொடதலே ஆற்றங்கரை திருப்பதி கோட்டம் நாடு (க) காளத்தியருகில் தொண்டைமாருடு (க) இதின் பக்கங்களிலே நாடு (டு) சேர்க்குன்றம்நாடு (உ) வேலூர் கோட்டம்நாடு(க) இப்படி பூர்வபட்டயங்களி லிருக்கிறது இவைகள் ஒன்றுக்கொன்று பேதப்படுகிறதுஅதாவது கரிகாலசோழவரசனுக்கு முன்னர் இந்த வேளாளர் தன்னரசாய் ஆண்டுகொண்டிருந்த கோட்டைகளை குறும்பர் பிடித்துகொள்ளாமுன்னம் நாடு நத்தம் கோத்திரத்தார் அனேகமாயிருந்தார்கள் இவர்கள் குறும்பர்கொடுமையால் வர்த்தகம் உத்தியோகமுதலிய விஷயங்களாக பரதேசங்களுக்குச்சென்று அங்கங்கே நிலைத்தகுடியாயிருந்து விட்டார்கள் பின்னர் அவர்களில் அனேகரைக்கொணர்ந்து மறுபடி இம்மண்டலம் ஸ்தாபித்து கணக்கிட்டதில் கோட்டம் (உச) நாடு (எகூ) நத்தம் (கூ00) கோத்திரம் (கஉ000) ஏற்பட்டு அதுமுதல் இப்படித் தொண்டைமண்டலத்தில் வழங்கிவருகின்றன எல்லாமண்டலங்களிலும் விசாரித்து தெரிந்து கணக்கிட்டதல்ல இவர்களுக்கு கோட்டைகள் சிலவிடங்களில் இருந்ததென்பது முன்னம் வேளாளர்குடி அரசாயிருந்தகாலத்துள்ளது பின்னர்வந்து மேலிட்ட குறும்பர் சிறுகுடினர் களுக்கெல்லாம் மேம்பாடுண்டாக்கிவிட்டார்கள் குடியரசு என்பதற்கு திஷ்டாந்தம் ஓர்வேளாளன் பாண்டிய ராசன் ஒருவனைக்கொணர்ந்து இம்மண்டலத்துக்கு முடிசூட்டி அரசனுக்கினன் என்பது வருவனவற்றுற் காண்க. இவர்கள் பூபாலரொன்கையாலே ஹிமசேதுபரியந்தமும் வியாபித்திருப்பதுங்கடமையே முற்காலத் தரசராகவிருந்த வேளாள ர்பலஇடங்களில் இப்போதும் சமஸ்தானாதி பதிகளாக விருக்கின்றதோடுதமல் கோட்டத்தார் காளாஸ்தியில் அரசராக இருக்கின்றனர் முன்னிருந்த ஊர்பெயர்கள் பின்னர் சிலமாறி வழங்கிவருகின்றன.

பின்புவிஜயநகரத்தில் அரசாண்ட கிருஷ்ணராயரிடத்தில் காஞ்சீபுரத்திற்குமேற்கு அம்பியென்னும்ஊர் அறம்வளர்த்தான் முதலியார் மந்திரியாயிருந்தார் அவர்காலத்தில் அவர்விசாரணையில் கோட்டை (உச) நாடு (எகூ) நத்தம் (கக00) கோத்திரம் (கஉ000) என்னப்பட்டு வேளாளர் தொண்டைமண்டலத்தி லிருந்ததாக கணக்கு ஏற்பட்டிருக்கிறது இந்தவிவரப்படி இவரால ஒருபட்டயமும் செய்யப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு காஞ்சீபுரத்திலிருக்கும் பெருநாட்டு மடத்துக்கு ஸ்திரமாகவரும்படி இருக்கவேணுமென்று இருபத்துநான்கு கோட்டத்து வேளாளர்களைச் சேர்த்து அவர்கள் அனுமதிபெற்று செப்புக்கலப்பையொன்றுசெய்வித்து அதில் பூமிபாலகன் ஆனை ஏறினும் புஷ்பபல்லக்குஏறினும் பணம் (க0) குதிரை ஏறினும் பணம் (ரு) எழுத்தாணிக்குப்பணம் (உ) கலியாணத்துக்கு பிள்ளைவீட்டார் பணம் (உ) பெண்வீட்டார்பணம் (உ)வருஷத்திற்குத்தலைக்கட்டு க - க்குப் பணம் (க) பேறுருக்குப் பணம் (ரு) சிற்றூருக்குப்பணம் (ரு)இந்தப்படி வருடந்தோறும் பெருநாட்டுமடத்துக்கு வேளாளாகள் கொடுப்பதென்று அதில்வரைந்துமடத்தில் வைத்தார்கள் அதை அந்த மடத்தில்வைத்திருக்கும்வேளாளசைவபண்டாரமதாங்கி வேளாளர்புகழை விளங்கும்படி தண்டல் செய்பவருக்கு மேழிப்பண்டாரம்என்று பெயர் முன்பட்டயப்படி கோட்டங்களும் நாடுகளும் சரியாயிருக்க நத்தங்களும் கோத்திரங்களையுடைய வேளாண்குடிகளுங் குறைந்ததற்குக் காரணம்.

பாடல்.

சீர்கொண்ட தொண்டைமண்டலமிருபதுடனுலுசெப்பிடுங்கோட்டங்களிற்—சேருமெழுபத்தொன்பதாகுநாடலைவயினூர் தெசநூறு கவநூறதாம்—பார்கொண்டகோத்திரம் பன்னிராயிரமுன்பகர்ந்த பட்டயமுள்ளதிப்—பட்டயந்தனிலில்லை யுள்ளபடிமுன்னோர் புகர்ந்திடும் மூர்கடம்பில்—வேர்கொண்ட காடுசிலவாயவோ திரைவீசு வேலைசிலதைக் கொண்டதோ—வேறரசர்நாட்டினிற் சேர்ந்திட்டவோவலதுமேடாய் வளர்ந்திட்டவோ—கார்கொண்ட நீர்கொண்டு பள்ளவழியாயவோ கழறுமிவ்வூர்களெல்லாங்—கச்சியிற்கல்வெட்டு செப்பேட்டிலுளவென்று கற்றவர்கள் கூறினர்களே.

பின்னர் அரசாண்ட ராயகுரு சோளங்கிபுரம் தொண்டாசாரியார் காஞ்சீபுரம் தாதாசாரியார் அவர்கள் காலங்களில் நத்தங்களை அக்கிராரமென்று பார்ப்பாருக்கு ஆதீனமாகச்செய்து விட்டார்

கள் வேளாளர் நத்தத்தைவிடாமல் போராடினவர்களுக்கு சிலநத்த
ங்களில் ஒவ் ஒரு பாகத்தைவிட்டு மற்றவைகளை அக்கிராரம்செய்து
க்கொண்டார்கள்சிலநத்தங்களின்காணியாளர் வேளாளருக்கு காணிமா
னியமென்று முற்காலத்தரசரால் விடப்பட்டிருக்க புதிதாவந்த பார்
ப்பார் அதற்குப்பிரதியாக தங்களுக்கு எஜமான் மானியமென்று சாய்
காலின் பேரில் ஏற்பாடுசெய்துக் கொண்டார்கள் பூர்வமிருந்தகா
ணியாளருக்குரிய உரிமைப்பெயராயிருக்கவேண்டியபெயரை இடையி
ல்வந்தவர்கள் வைத்துக்கொண்டது மெதத அநியாயம் வெகுகாலங்
களுக்குபின்பு ஆற்காடு நபாபுநாளிலும் திவானுவாயிருந்தராயஜ் எ
ன்னும் பிராம்மணனும் நாட்டேரி பிரமதேசமென்னும் அக்கிராரம்
செய்தனர் திஷ்டாந்தம் நத்தத்தைவிடாமல் வாதித்த வேளாளரின்
படியாள்களுக்கும் குடிமக்களுக்கும் கிராமத்தில் ஓரோர்பாகம்
கொடுத்திருக்கிறார்கள் மன்வெட் மடவிளாகம் என்பது பிரத்தியக்ஷ
காக்ஷியளவைவிருக்கின்றது.

விவாகஞ்செய்தல்.

நெடுகவிரித்துப் பிணமூடினேன்மக னீயெனில்வா
கடுகவெனக்குமுன் மூந்தவென்றேயோர் கவிதைசொல்லி
முடுகவழைப்ப மனையாள்பிணத்தினை மூடிச்சென்ற
வடுகனளித்த மகன்வாயிலான்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வாயற்பதி வடுகநாதமுதலியார் குமாரனது மனைவிமரணம
டைந்திருக்குஞ்சமயத்தில் ஒருவித்துவான் சென்று உனதுதகப்பந்த
னதுசகோதரன்பிணத்தை மூடிவைத்துவிட்டு வந்தவித்துவானுக்கு
அன்போடு அன்னமிட்டவன் அவன்மகன்நீயானால் இப்போதிறந்தவுன்
மனைவிபிணத்தை மூடிவைத்துவிட்டு என்னுடைய கலியாணத்தை
நடத்திவைப்பதற்கு எனக்குமுன்னேநடவென்னும் பொருளமைத்
து ஓர்பாடலைப்பாடி விரைந்தழைக்க அப்படியே அந்தப்பிணத்
தை விட்டு விட்டு வித்துவானுக்குமுன்னேநடந்து சென்று கலியா
ணத்தை நடத்திவைத்துப் பிதாவைப்போல கீர்த்திபெற்றான் இப்
பெருமையாளனுக்கிடமாகியது இத்தொண்டைமண்டலம். (௫௫)

மே - ள் வெண்பா.

மூந்தவினை யோன்மாள முத்தமிழோர்க் கன்னமிட்ட
வந்த வடுகன் மகனால் வந்தென்

நிலக்கலியா ணத்துக்கே தாம்பிணத்தை மூடி
யிலக்கணமாச் செய்குனவரீ யே.

### விவாகவிலக்கணமாவது.

நற்குடியில் நன்னடக்கையுள்ளபெண்ணை விவாகிப்பது. விவாகம் எட்டுவிதம் அதாவது பிரமம் பிராஜாபத்தியம் ஆரிடம் தெய்வம் காந்தர்வம் அசுரம் இராக்கதம் பைசாசம் இவ்வெட்டுமாம் இதில் குணக்கடல் குமரி குடகம் வேங்கடம் இந்நான்களவைக்குள்ளாக நடத்தும் பிரசாபத்தியமணமாவது புள்ளைக்குப் பெண்வேண்டியவர்கள் தங்கள் அந்தஸ்துக்குத் தக்கவண்ணம் பெண்ணிருக்குமிடந்தேடி குலம் கோத்திரம் குடிஇருப்பு குணச்சிறப்பு கொள்வன கொடுப்பன தெரிந்து தந்தைதாய் பந்துமித்திரர் பரிந்துநன்னாட்கொண்டு முன்னதாகத்தெரிவித்து சிலமங்கிலியப்பெண்களுடன் பெண்வீட்டுக்குப் போய் பேசி பெண்கொடுப்பதற்கிசைந்தால் புள்ளைக்கும் பெண்ணிற்கும் கழுத்துப் பொருத்தம் கணப்பொருத்தம் முதலிய பார்க்க வேண்டும்.

### பொருத்தங்களாவன.

அஃதாவது:—தினம் கணம் மாகேந்திரம் ஸ்திரீதீர்க்கம் யோனி ராசி ராசியாதிபதி வச்யம் ரச்சு வேதை நாடி விருக்ஷம் பக்ஷி ஸ்திரீபுமான் வர்க்கம் மனம் ஆக பதினாறு இதனைகாலாமிர்தம் காலவிதானம் காலபிரகாசிகையிற் சொல்லியபடி பொருத்தம்பார்த்து மாபுள்ளைக்குரியவர் இஷ்டபந்துக்களுடன் வடக்குநோக்கிஇவ்வளவு தூரம் போய்த்திரும்புகிறதென்று ஒரு அத்துவேற்படுத்தி அதற்குள் இன்னசகுனமாகவேண்டுமென்று உத்தேசித்து சகுனம்சரிப்பட்டால் திரும்புங்காலையில் கிராமதேவதைக்கு பூஜைவைத்துத் தொழுது வீட்டுக்குப்போக வேண்டியது இதுவழக்கமில்லாவிடிலோ தெய்வசந்நிதானத்தில் பூவைத்துப்பார்ப்பது அதுவும் இல்லாவிடில் பிள்ளை பெண் ஜாதகத்தை நாமநக்ஷத்திரத்தைப் பார்க்கவேண்டியது பின்பு நக்ஷத்திரம் திதி லக்கினம் பொருந்திய சுபதினத்தில் மஞ்சள் குங்குமம் தாம்பூலம் பழம் சந்தனம் புஷ்பம் தேங்காய் முதலியவைகளுடன் குலாசாரமுறைமைப்படி பரியசேலை ஆபரணமுங்கொண்டு போய் சபையில் வரிசைவைப்பது அவைகளை கலியாணப்பெண் மடியில் கட்டி வாழ்த்தி பெண்வீட்டார் கொடுக்கின்ற தாம்பூலமுதலியவைகளைப்பெற்றுவருவது இந்தவரிசையெல்லாம்சபையார்பார்த்து மதித்து விவாஹ பத்திரிகையெழுதவேண்டியது அதற்குமஞ்சள்காப்பணிவித்

து குங்குமார்ச்சனை புரிவித்து அதைதவிநாயகருக்கு முன்வைத்து தாபதீபங்காட்டி வாழ்த்திபெடுத்து இன்னகோத்திரம் இன்னார்புள் ளைக்கு இன்னகோத்திரம் இன்னார்பெண்ணை கலியாணம்பண்ணிக் கொடுக்க சம்மதித்தோமென்று பெண்வீட்டாரை சொல்லச்செய்துபுள் ளைவீட்டாரும் அப்படியேசொல்லி ஒப்புக்கொண்டவுடன் புரியமிவ்வு ளவென்று புரோகிதரால் சபையோரறியக் கூறிவைக்கவேண்டியது மறுவிழ்முதல் சாக்ஷிபுரோகிதரென்று சொல்லியிருப்பதினாலே அவர் வாக்கால் இப்படிமூன்றுதடவை சொல்லவேணும் உடனே புஷ்பம் சந்தனம் தாம்பூலம் புடைவையை ஆபரணத்தை பெண்ணிடத்திற்கு அனுப்பி பூஜையச்செய்து சபாதாம்பூலம்நடத்தி போசனமருந்தி தா ம்பூலம் பெற்றுத்தங்கள் வீட்டுக்குப்போவது இருதிறவருங்குறித்த முகூர்த்தநாளுக்கிணங்க முந்திபிள்ளைவீட்டிலும் பெண்வீட்டிலும் ப ந்தல்கால் நாட்டவேண்டியது பிள்ளைவீட்டில் விருதசமாவர்த்தனம் செய்துக்கொண்டு எல்லாவேடிக்கையும் செய்யலாம் பிள்ளையை அம்மான்கோலத்துடன் கொண்டுபோய் பெண்வீட்டில் திருமங்கி லியந்தரிக்கவேண்டுமென்று சத்தியசாதனமகாரிஷி சத்திபீஜனஸ்தா பணத்தில் சத்தியேமேலாக ஸ்தாபித்திருக்கின்றார்.

விவாகத்துக்கு பந்தற்கால் நாட்டியதுமுதல் பந்துமித்திரர்களு க்கு தாம்பூலம்வைத்து பந்தரலங்கரிப்பது பிள்ளை பெண்ணுக்கு நல ங்குவைப்பது கலியாணப்பந்தலில் களிமண் செம்மண் இருமண்ணு ங்கலந்து மூன்றுஅங்குலஉயரம் இருபதுமூலையுள்ள மேடையிட்டு அம்மேடையின்புறத்தில் செங்காவிக்கோலந்தீட்டி உட்புறத்தில் ஒன் பதுவீடாக மாக்கோல மிட்டு நடுவே ஓமாக்னிக்கிடம்வைத்து அத ற்கு மேற்புறத்தில் கலியாணப் பிள்ளையும் பெண்ணும் இருப்பதற்கு மணப்பீடமுதலியதலங்கரிக்கவேண்டும் மாபிள்ளைக்கு † வபனம்செய் வித்து நலங்கிட்டு ஸ்நானம்பண்ணுவித்து அலங்கரித்து சர்வாடம் பாத்துடன் மணவாளகோலங்கொண்டு சந்தனம் மாலை தாம்பூலத்து டன் பெண்வீட்டார் எதிர்கொண்டழைக்கப்போய் பெண்வீட்டிற் புகவேண்டியது கலியாணகட்டிளமை கன்னிகைக்கு கரசரணுதிகனி துன்ன நகம்வாங்கி சிக்காய்ச்சடங்காதி நலங்குகளிட்டு ஸ்நானம்செ ய்வித்து அலங்கரித்திருக்கவேண்டியது மங்கிலியப்பெண்களால் பொ ங்கலிட்டு வைத்திருப்பதை கிராமதேவதை பிதுர்தேவதை முதலியோ

---

† வபனம் - மயிர்கழித்தல்.

ருக்கு பிரீதியார்த்தமாக பின்னை பெண்ணுல்படைப்பித்து நீர்மாற்றித் துதித்து வணங்கி , விடுதியிலிருக்கவேண்டியது இவர்கள் தந்தைகளி ருவரும் ஸ்நாநம்செய்து வைதீகமாயிருந்து கலியாணமண்டபத்தில் முப்பத்து முக்கோடி தேவர்கள் முதலியவர்களை வேதமந்திரங்களால் ஸ்தாபிக்கவேண்டியது தந்தையில்லாதார் அம்மான் அக்காள் தங்கை ப்புருஷன் இவர்களில் விரதசீலராயிருந்து புரோகிதனைக்கொண்டு நாற்கால்நாட்டிய மண்டபத்தில் நடுவே இருபத்திஞன்கு அங்குலம் இடம்வைத்து நான்கு புறமும் தொண்ணூற்றாறு அங்குலம் சரிப் படுத்தி சமைத்தமணவறைப்பந்தலுக்கு கீழ்த்திசையில ஸ்தாபிக்கவே ண்டும் இப்படி பக்கத்துக்கு இருபத்திஞன்கு அங்குலம் சமைத்தால் தொண்ணூற்றாறு அங்குலசதுரமாகும் இது தத்துவ சதுக்கமென் பது இநதஸ்தானத்தில் விவாகம் நடத்துவது மூலஸ்தம்ப விதியா கும் இந்தமண்டபதஇல் கிழக்கில் தேவேந்திரனை சகலவாத்யகோ ஷத்துடன் வேதமந்திர முன்னிலையில் ஆவாகனஞ்செய்து ஆயி ரங்கண்ணனுக்கு பிரீதியாாத்தமாய் அதிதேவதாரூபமாக அநேகமுக முள்ள கிளைவிளக்கேற்றுவித்து தூபதீப நைவேத்தியங் கொடுத்து பூசித்து சங்கல்பம்பண்ணிக்கொள்ள வேண்டியது.

தென்கிழக்கில் அக்கினிதேவனுக்குப் பிரீதியாகவும் அதிதேவ தையாகவும் குடவிளக்கேறறிப் பூசித்து சங்கல்பம்செய்து சரணம் புரிக.

தென்கிழக்கில் யமதருமராஜனை ஆவாகனம்பண்ணி அவனுக்கு ப்பிரீதியாக அதிதேவதைரூபமாக தர்ம கர்ம பாவ புண்ய பகுப்புக் குரிய புரோகிதனை அமைத்து தூபதீபநைவேத்தியங்களுடன் தொ ழுது சங்கல்பம் செய்துக்கொண்டு வணங்கிதுதிக்கவும் இதுவியாசபு ரோக்தம்.

தென்மேற்குத்திக்கில் நிருதிதேவனை ஆவாகனம்பண்ணி அதி தேவதாரூபமாக பூசித்து தோழிப்பெண்களை நிறுத்தி பெண்ணிற்கு உபசாரதோழியாக்கி வைக்கவேண்டியது.

மேற்குத்திசையில் உலகவிருத்திக்குரிய வருணனை ஸ்தாபித்து அதிதேவதையாக இல்லறதருமத்திற்கிசைந்த கலியாணப்புள்ளேயை கொலுக்கொண்டிருக்கச்செய்ய வேண்டியது,

வடமேற்குத்திக்கில் வாயுதேவனை ஆவாகனம்செய்து அவரு க்குப் பிரீதியாகவும் அதிதேவதாரூபமாகவும் மாப்புள்ளை தோழனை

வைத்து † சிவிறிகொண்டு கலியாணப்புள்ளைக்கு உபசாரங்களைச் செய்யச்சொல்லவேண்டியது.

வடதிசையில் குபேரனை ஆவாகனமிட்டு அதிதேவதைரூபமாக மணத்திற் குரித்தாகப்பணப்பை வைத்துக்கொண்டிருக்கிற பாக்கியவானை பதியவைத்து பொற்பூரிகொடுக்கும்படி செய்க,

வடகிழக்கின் மூலையில் சாமவேத சடையையுடைய ஈசானமூர்த்தியை ஸ்தாபித்து அதிதேவதையாக அம்மி குழவியையைவைத்து அபிஷேகம்செய்து அலங்கரித்துப் பூசிக்கவேணும்.

இவ்வாறு வேதமந்திரங்களால் அஷ்டதிக்குப் பாலனர்களை ஆவாகனம்செய்து தூபதீபம் பூஜாநிவேதனங்களுடன் அதிதேவதைகளை ஸ்தாபித்து சங்கல்பம்செய்துக்கொண்டு ஈசானமூர்த்தியாகிய அம்மிக்குப் பக்கத்தில் நவக்கிரகப்பிரீதியாக பச்சையரிசி டரப்பி நவதான்யமுளை பாலிகைவைத்து ஒன்பதுவீடு கீறி நவக்கிரகங்களை ஸ்தாபித்து தருப்பையாலாவது பட்டுநூலாலாவது மஞ்சள்துணியினாலாவது பந்தித்து தூபதீப நைவேத்தியம் வைத்து சிந்தித்து சங்கல்பம் செய்யவேண்டும் மண்கரகம் ஏழுக்குநூல் சுற்றி மாவிலை தருப்பை தேன்காய்வைத்து அதில் சப்தரிஷிகளை ஆவாகனம்செய்து நவக்கிரகஸ்தாபனத்துக்கும் அக்கினிஸ்தாபனத்துக்கும் மத்தியில் வைத்து தூபநைவேத்தியங்கொடுத்து செபித்துசங்கல்பம் செய்க.

மங்கிலியஸ்திரீகள் மூழ்கி மஞ்சள்குங்குமமணிந்து சுசியாக சப்தநதிகளிலிருந்து தீர்த்தங்கொணர்ந்து அதுகள் கிட்டாதாயின் அதற்கு பதிலாக தேவராலயம் பிரம்மாலயம் விஷ்ணுவாலயம் பசுவாலயம் நந்தனவனம் மேற்கேஓடுகின்ற நதம் கிழக்கேஓடுகின்ற நதி இவ்வேழுஇடங்களில் இருந்து எடுத்துக்கொண்டுவரலாம் ஏழுஸ்திரிகளில்லாவிட்டால் முதல்மூன்று இரண்டாவது நால்வரும் போய்க்கொண்டுவரலாம் இப்படியாகக் கொண்டுவந்த தீர்த்தத்தை ஒருபெரியசாலிற்கு விபூதி மஞ்சள் குங்குமம் அணிந்து அந்தச்சாலை இந்திரனாகிய கிளைவிளக்கு முன்னே மணலைப் பரப்பி தீர்த்த மந்திரங்களைச்சொல்லி அந்தசாலில் விட்டு தூபதீப நைவேத்தியங்கொடுத்து வேறொருகரகத்திற்கு விபூதிசந்தனம் அக்ஷதையிட்டு அந்த சாலிற்கு மேன்மூடியால் மூடிவைத்து சங்கல்பம் பண்ணி வணங்கவேண்டியது.

---

† சிவிறி - விசிறி.

அரசாணிக்குக்கால் த்ரிமூர்த்திசுவரூபம் அதாவது அரசபிரம்மா அதற்குப்பால் தேன் முதலியவற்றால் நீராட்டி அரி சந்தனாதி அக்ஷதை புஷ்பம் வெண்பட்டு அல்லது வெள்ளைவஸ்திரம் தாமரைமணி மாலையிட்டு சந்தனம்கோபியிட்டு வந்தனைபுரிக.

விஷ்ணுரூபமான ஆலுக்கு சுத்தோதகம் கஸ்தூரி பன்னீர் வெட்டிவேர் வாசங்களால் மஞ்சனமாட்டி நாமமிட்டு நீலவஸ்திரம் மஞ்சள் வஸ்திரம்தரித்து துளசி துளசிமணிமாலைசாத்தித் தொழவேண்டும்.

கண்ணால் முருக்குஉருத்திர வடிவமாதலால் அரி சந்தனாதி அபிஷேகம்செய்வித்து நீறு சந்தனம் தரித்து செகப்புவஸ்திரம் காவிவஸ்திரம் தரித்து உருத்திராக்கமணி வில்வம் புஷ்பமாலைதரித்து வந்தனைபுரிவது.

இவ்விதமாக பூசித்த அரசாணிக்குக்காலை ஆயிரங்கிளை விளக்குக்கும் தேவேந்திரனுக்கும் சப்ததீர்த்தத்துக்கும் மத்தியில் பன்னிரண்டங்குலம் பள்ளந்தோண்டி நீர் பால் தேன் நவரத்தினங்கள் பொன் வெள்ளி தாம்பிரம் நவதான்யம் இவைகளைப்போட்டு முதிர்ந்த மங்கில்ய ஸ்திரீகள் மூவர்களைநிறுத்தி அவர்களை சரஸ்வதி லக்ஷுமி பார்வதி இவர்களாக பாவனை பண்ணி சந்தனம் அக்ஷதை புஷ்பம் கொடுத்து அம்மூவரால் அரசாணிக்குக்காலை யெடுப்பித்து பள்ளத்தில் விடுத்து பூவாரம் பொன்னாரம் முத்தாரம் பூட்டி தூபதீபங்காட்டி அந்தக்குழியை நெல்லினால் மூடி நீர் பால் தேன் விட்டுப்பணிந்து சங்கல்பம்செய்யவேண்டியது.

அரசு ஆல் முருக்கு மூன்றும் குணம் தழைப்பு ஆதாரம் கடுமை காந்தி இவைகளால் மும்மூர்த்திகளென்று முனிவர்களும் வைவச்சுதமது விக்ஞானத்திலும் அரசாணிக்குக்கால் நாட்டவேணுமென்று கல்யாணவிதிமுதலிலும் பிரபஞ்சவாழ்க்கைக்குரிய சிருஷ்டி ஸ்திதி சம்மாரம் என்பதற்குரிய முத்தேவரும் சுவாயம்பு மனுவிலும் சொல்லியிருப்பதாலும் கலியாணத்திற்கு இவர்கள் தகுந்த சாக்ஷிகளாகின்றனர்.

அரசாணிக்குக்கால் நாட்டியமாதர்களுக்கு சந்தனம் தாம்பூலாதிகளைக் கொடுத்து இளைப்பாற்றுவித்து அவர்களை மேளவாத்திய கோஷ்டத்துடன் அழைத்துப்போய் தேவாலயம் பிரமாலயங்களில் அல்லது கடைந்தெடுத்து மூட்டிவைத்திருக்கும் † நெரிப்பூவை பூசித்து

---

† நெரிப்பூ - நெருப்பு.

புகையாமலெடுத்து வாத்திய கோஷசஹிதமாகக் கொண்டுவந்து ஓம குண்டத்தில் இட்டு அக்கினிபகவான் மந்திரங்களைச் சொல்லி ஓமாக் கினியை விருத்திசெய்து அத்தீயையும் சபைநிறைந்த பிராம்மணர் முதலிய வெகுசனங்களையும் பணியவேண்டியது இது விவாகலக்கி னத்திற்கு முந்தி ஐந்து எழுநாழிகைக்கு ஆரம்பித்து பொறுமை யாக குறைவில்லாமல் செய்யவேண்டிய விதிகளாம் (செய்வன திருந்தச்செய்) என்பது வேதநீதி (கையிற்பொருள்கள் கரந்தவராயினுஞ் செய்யுங்கருமந் திரியாதியற்றுக) வென்பது சூத்திரம்.

விவாகலக்கினத்தை முன்னிட்டுகொண்டு மாப்பிள்ளைக்கு மாலையிட்டு தோழன் சுண்டுவிரல்கொண்டழைத்துவந்து மணவறையை பிரதக்ஷணமாக வந்து ஆவாகனம் செய்திருக்கும் அதிதேவதைகளை தரிசிப்பித்து மணவறை அலங்கரித்த ஆசனமணையில பாம்பின் மண்டலம்போல் போட்டிருக்கும் சர்பபவணையில் உட்காரச்செய்து புரோகிதர்புள்ளையால் விநாயகபூசை தேவதார்ச்சனை புரியவைத்து அக்ஷதை புஷ்பமாலையணிந்து உபநயனம் உபதேசம் அநுஷ்டான விதி அங்கன்யாச கரன்யாசஞ்செய்வித்து ஓமத்தீமூட்டி உபசரிக்கச் செய்து வைக்கவேண்டியது.

இக்கருமங்களை செய்துவைக்கக்கண்ட மாபுள்ளை பிரமசாரி விரதத்திருந்து வாசித்தவனுகையால் இவைகள் விந்தையும் விநோதமுமாகத்தோன்றி தோழனைநோக்கி சமூஹவிசாரம்சள்ளையென்று ஓடிப் போனுன் இதுதான்பரதேசம் போவதென்பது அப்படிபரதேசம் சென்றபுள்ளையை தாய்தந்தையராதிகள் துடர்ந்துதடுத்து சுருதிபிரமாணத்தைச்சொல்லி (உலகத்தாருள்ளென்பதில்லென்பான்வையத் தலகையாய்வைக்கப்படும்) இல்லறமல்லது நல்லறமல்லவென்றும் நீதிகளைச் சொல்லி வாத்தியகோஷ்டத்துடன் பெண்வீட்டாரும் இதஞ்சொல்லி அழைத்துவந்து இதோபதேசமேற்றி மணவறை மணையிலிருத்தி மருமகன்காலை ஒருதட்டில்வைத்து மஞ்சனநீராட்டி வெள்ளிமெட்டை காலிவிரலில் பூட்டிவிடுவது இதுதான்கால்விலங்கு காற்கட்டென்பது.

இப்படி அவர்கள்தன் காலைப்பிடித்து தோஷந்தீர அம்மான் அத்தை பாதத்தை தாம்பாளத்தில் வைத்து நீர் பால் தேன் அபிஷேகம்செய்து பட்டால்துவட்டி சந்தனம் புஷ்பம் சாத்தி தூபதீபத்துடன் வணங்கியமருமகனை வாழ்த்தி தங்கள்பாதத்தில் அர்ச்சித்த புஷ்பாக்ஷதைகளை சிரசின்பேரில் வைக்கமுடிதாழ்த்திப்பெற்று அவர்களுக்கு தாம்பூலங்கொடுத்து சரணம்புரிக.

உடனே புரோகிதர் கணுவில்லாத இரண்டுமஞ்சளுக்கு ஒன்பதிழைக்குமஞ்சள்பூசி நவக்கிரகமந்திரம் சொல்லி ஒன்பதுமுடிபோட்டு தூபதீபங்கொடுத்து பிள்ளைவலக்கையில் கணுக்கப்புறங்கட்டி இப்போது நீர்துடங்குங்காரியம் நிறைவேறுமளவும் விரதசில பயபக்தியாக நடத்துவதற்காக கங்கணங் கட்டிக்கொண்டீரென்று தெரிவிக்கவேணும் கன்னியரிழைத்த நூல் இல்லாவிடில் வேதியர் மந்திரத்தாலியற்றிய நூல் ஆகும் அதுவுமில்லாவிடில் கடைநூலை சசக்கி உணர்த்தி மஞ்சள்இட்டு வைத்துக்கொள்க மற்றொன்றை மாப்பிள்ளை கையில்கொடுத்து கலியாணப்பெண் இடக்கரத்தில்கட்டி வைக்கவேண்டியது பிரபிதாமஹ பிதாமஹ பிதுர் இவர்களைஉத்தேசித்து நாந்திமுகமாக பிராம்மணாள் நாவலரை வரித்து பூசிக்கவேண்டியது.

இவ்விருவரையும் மணப்பந்தரை பிரதக்ஷணம்செய்வித்து ஓமாக்கினியைபூசித்து மணவறையிலுட்காரச்செய்து புரோகிதரெழுந்து தாம்பாளத்தில் வேஷ்டி கூறைப்புடைவை மணமாலை பாக்குவெற்றிலையும்வைத்து தேவதாபூசைசெய்து வேதியர்முதலியர் யாவரும்தொட்டு மங்களாசாசனம் சொல்லி வாழ்த்த புஷ்பாக்ஷதையுடன் மாப்பிள்ளைகையில் அந்தவேஷ்டி கூறைப்புடைவையையும் பின் பெண்ணுந்தரித்துக்கொள்ளும்படி பிள்ளைத்தோழனும் தோழிப்பெண்ணும் மாலையிடுவித்து மணவறைப்பந்தலுக்கு பிரதக்ஷணம்செய்வித்து மணவறையிலிருக்கச்செய்க பிள்ளைஆசிரியருக்கு வஸ்திரதானங்கொடுத்துப்பூசிக்கவும்.

விவாகலக்கினத்தில் புரோகிதர் தாம்பாளத்தில் ரத்தினங்களாவது முத்துக்களாவது பச்சையரிசியாவது பரப்பி அதின்மீதில் பாக்குவெற்றிலை குங்குமம் அக்ஷதை மஞ்சள் தேன்காய்வைத்து கன்னியர்நூற்றநூலாவது சசக்கிப் புலர்த்தியநூலாவது ஆன்மதத்துவம்போல் இருபத்தினன்குஇழை சேர்த்து முறுக்கில்லாமல் † தானியிலேற்றி அந்தத் தாலியை ஒருதேன்காய்க்கு மஞ்சள் குங்குமம் அக்ஷதையணிந்து அதின்மேல்சாத்தி புஷ்பாதிகளினால் பூஜித்தேற்றி தூப தீபத்துடன் வணங்கி நீர்மாற்றி பஞ்சாங்கக்கார் கரத்திலேற்றி ஸ்ரீவிஷ்ணுமந்திரஞ்செபித்து துதித்த விப்பிரரும் பந்துமித்திரரும் இருகரங்களினாற்றொட்டு இஷ்டதெய்வங்களைக்கும்பிட்டு வாழத்துத

† தானி - தாலி.

ல் சொல்லுவது வேதியர் மறைமொழி மந்திரங்கள் சொல்லவும் வாத்தியமுழக்கமேலுறவும் தானியைபுரோகிதர் கொண்டுவந்து மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் நேராக முக்காலியின் பேரில்வைத்து ஸ்தாபனமந்திரம்சொல்லி அர்ச்சிக்கவேண்டியது.

கல்யாணப்புள்ளை தாய்தந்தையரும் கல்யாணப்பெண்தாய்தந்தையரும் மணவறைப்பந்தலில் வந்திருந்து இன்ன கோத்திரம் சூத்திரம் இன்னார்குமாரனுக்கு இன்னகோத்திரம் இன்னசூத்திரமுள்ள இன்னார் குமாரத்தியை தாராதத்தம்பண்ணிக் கொடுத்தோமென்று மும்முறைபுகன்று மாப்புள்ளைக்குஇட்டு நீர்வார்த்துக்கொடுத்து சந்தனம் தாம்பூலம்பெற்று கலியாணவாசலில் வந்திருக்கின்ற தேவதைகளை குருவை கவிஞரை வெகுஜனங்களை விருப்பத்துடன் வந்தனைசெய்து மகிழ்ச்சிபெறவேண்டியது இப்போது சகலதேவதைகளும் பந்துமித்திரர்கள் யாவரும் சேர்ந்திருக்கிற தருணத்தில் அப்படி தாராதத்தம் செய்து கொடுத்த தாரையைநான் ஏற்றுக்கொண்டேனென்று மாப்புள்ளைசொல்லவும் அதைவற்புறுத்துவதாக பற்பலவிதத்தாலும் பாராட்டுதல்வேண்டும்.

மாப்புள்ளை கலியாணப் பெண்ணுக்குநேரில் முக்கால் நாற்கால் அறுகாலிட்ட பீடத்தின்பேரிலிருந்து ஐயரால் தானியைகரத்தில்வாங்கி தன்தங்கை தமக்கையர் மகாலக்ஷ்மி வைத்தவிளக்கை கலியாணப்பெண் பின்புறத்தில் நின்றுபிடிக்கவும் வேதியர்வேதகோஷ்டமும்தாய்தந்தையர் மகிழ பந்துக்கள்யாவருங் கண் களிகூர்ந்து பத்திராக்ஷதை இறைக்கவும் வாழ்த்தொலிவீறவும் ஓம் என்னும் பிரணவநாதம் ஒலிக்கும்படி வாத்தியங்களை முழக்கிவைத்தும் கலியாணப்புள்ளை கலியாணப்பெண்காதில் வேறுவசனங் கேளாதிருக்கும்படி செய்வித்து மாப்புள்ளை கரத்திலிருக்குந் திருமங்கிலியத்தை கலியாணப்பெண்ணின் களத்திற்சேர்க்கும்போது நாத்தியர் மூத்தமாமியர் அந்தமங்கிலியத்தைத் தாங்கித்தங்கள் சாதியாசாரப்படிக்கு பெண்ணின் மார்பில் எவ்வளவு நிலையில்நிற்கவேண்டியதோ அவ்வளவில் நிற்கவைத்து பிடிக்க சகலவைபவ சம்ப்ரமங்களுடன் மணவாளப்புள்ளை மணக்கன்னிகையை மணந்து திருப்பூட்டி பெண்ணின் பிடரியில் நான்முடி போடுகின்ற சுபலக்கினத்தில் புரோகிதர் பிரமமந்திரம் சொல்லி முதல்முடியொன்றும் விஷ்ணுமந்திரஞ்சொல்லி இரண்டாமுடியும் உருத்திரமந்திரஞ்சொல்லி மூன்றுமுடியும் இப்படி மும்மூர்த்திமந்திரம்சொல்லி மூன்றுமுடியும்போட்டு அந்தத்தானிநான்முடியைதன்

இடதுகரத்தாற்பற்றிக்கொண்டு இலைறயுகலை-த்துதித்து வலக்கரத்தில் விபூதிஅக்ஷதைவாங்கி அம்முடியின்பேரில்வைத்து பஞ்சாக்ஷரத்தை ப்பண்ணி தன்னிடநெற்றியில் விபூதி தரித்துக்கொண்டு பெண்ணின் நெற்றியிலும்தரித்து பெண்ணின்வலது செவியில் விப்பிரர்சொல் லிய மந்திரத்தை சொல்லவும் உடனேதோழிப்பெண் கலியாணப் பெண்ணை மாப்புள்ளைக்கு பிரதக்ஷண நமஸ்காரம்புரிவித்து இடப் பாகத்தில் இருக்கச்செய்க இவர்களுக்குரியவர்கள் பொற்பட்டங்கட் டுக வரிசை வண்மைவழங்குக வேதியாகளால் நவக்கிரக ஓமம்செ ய்வித்து சந்தன தாம்பூல தக்ஷிணையும் கொடுக்கவைத்து விசேஷ சேஷையிட்டு வெகுபேர்களால் வாழ்த்தி புள்ளையும் பெண்ணும் அவர் களைப்போற்றவும் அக்கினிபூஜையாற்றி அரசாணிசுக்காலை பிரத க்ஷணம்செய்து ஒவ் ஒரு சுற்றுக்கும் மந்திரத்தைசொல்லி ஆறடிபோய் எழாவது பெண்காலையெடுத்து அம்மிமேல்வைப்பது இதுஅம்மி மிதித்தலென்பது இப்படி அம்மிமிதித்துவந்து மைத்துனன் பொ ரிவாரி (உ) தடவை கொடுக்க அதை ஒரேதடவை கலியாணப்பெண் கரத்திலேற்றுமகிழ்நன்கரத்தில்விடுக்க அதை அந்தணர்சொல்லிய மந்திரத்தின்படி அக்கினியிற்சொரிய இவ்வாறு மூன்றுதரமும் அம் மிமிதித்து பொரிசொரிந்து வலம் சூழ்ந்து வந்து ஓமாக்கினிக்கு பூரணாகுதிகொடுத்துப் போற்றி பொரிவாரியிட்ட மைத்துனன் கர த்திற்கு பொன்மோதிரமிட்டு மணவறையில் இருக்கச்செய்க மாப் புள்ளையும்பெண்ணும் மாலைமாற்றி பூச்செண்டுஎறிந்து சந்தனம்பூசி சரசம்பேசி கந்தந்திமிர்ந்துகாயிலை ஈந்து சற்றுவிளையாடிக்கொண் டிருந்து மாணிக்கத்தாள் ஆலஞ்சுழற்றியபின்பு இருவருங்கைகோ ர்த்து மாப்புள்ளை தோழன்முன்னும் மணவாளன் பின்னும் பெண்ணு ந் தோழியும் கைவிளக்கு பூரணகும்பம் கண்ணாடி அங்குசம் வெண் சாமரம் இணைக்கயல் விருதுக்கொடி முரசு இவ்வெட்டும் அஷ்ட மங்கலமாம் இத்துடன் அரசாணிக்குக்காலை பிரதக்ஷணம்புரியவே ண்டும் இப்படி பூமியதிராமல் நடந்து மூன்றசுற்று வரும்போது ஈசா னமூர்த்தியாக வேதமந்திரங்களால் ஆவாகனம்பண்ணி பூசித்திருக் கும் சிவசத்தி சுவரூபமென்றேற்படுத்தி யிருப்பதை அம்மியிதி அரு ந்ததிதுதி அநுபவவிதி யென்றறிந்துகொண்டு அரசாணிக்குக்காலை வலஞ்செய்யும்பொழுது முதல் சுற்றில் ஈசானமூர்த்தியாக விருக்கும் அம்மியினிடத்தில்நின்று தேன்காயுடைத்து நைவேதித்து தூபதீப நைவேத்திய அர்ச்சனைசெய்து கலியாணப்பெண்ணிற்கு அம்மிகுழவி

யை சுட்டிக்காட்டி கலியாணசரித்திரமகுத்துவம்நீதிசரித்திரமகத்து வங்களையுரைத்து அதாவது ஒகோகலியாணப்பெண்ணே இந்தஅம்பி யோ ஆதிசிவம் குழலியோ ஆதிசத்தி இந்தசிவமும் சத்தியும் அர்த்த நாரியாக ஒன்றாக அமைந்த வாறின்னது இதுபோல நீயும் நானும் உடலும் உயிரும்போல ஒன்றுபொருந்தி மருவி வாழ்க்கைப்பெறவே ண்டியதென்று போதித்து இதோஎனக்கு இடப்பாகமாயிணையென் று குறிக்கும்வண்ணம் கலியாணப்பெண்ணின் வலக்காற் பெருவிரலை மாப்பிள்ளை இடதுகாற்பெருவிரலாலும் ஆள்காட்டி விரலினாலும் பற்றி இந்தாசானமூர்த்தியோடு இறைவிபொருந்தி யிறைபோலிருக் கவேண்டும்.

இரண்டாவதுசுற்றில் அருந்ததிதுதிவசிட்டரும் அருந்தியுங்கூடி யில்லறதருமம்நடத்துவது போல நீயுநானும் இல்லறதருமத்திலிரு ந்து வாழ்கவேண்டுமென்று அவர்கள் சரிதையை யெடுத்துரைத்து தூபதீபனை வேத்தியங்களுடன் தொழுது வணங்கவேண்டியது.

மூன்றாவதுசுற்றில் மணவறையில் நின்று தெற்கில் எமதரும னை ஆவாகனஞ்செய்திருக்கும் புரோகிதனை பூசித்துவணங்கவும் அவ ரால் கற்புடை மகளிரிலக்கண முதலிய இல்லறதருமம் (அறம் பொருளின்பம்வீ டடைதனூற்பயன்) என்றறிந்து வாழ்த்தி கிழ க்குமுகமாயிருக்கும் அறைவீட்டிற்குட்புக முந்திவலக்கால்வைத்து நுழைந்து பட்டுப்பாயில் மாப்புள்ளையும்பெண்ணுமிருந்து வாழ்த்து தல்டாடி மாலைகள்மாற்றி பால்பழமுண்டு தாபபூலங்கொண்டு சபை யாரைவணங்கி உண்டல்முதலிய சவுக்கியங்களைப் பாராட்டவேண்டி யது தம்பதிகள் அறைவீட்டிற்குள் இப்படியிருக்கும் சமயத்தில் பூசுர ர்கட்கு பூரி சபாதாம்பூலம் புஷ்பம் சந்தனம் பன்னீர் முதலிய வுப சாரம் சொர்ன்னவிறயம் அன்னவிறயமும் நடத்தவேண்டியது கச் சேரிமுதலிய ஆடல் பாடல்கள் வேடிக்கைகளும் செய்யலாம்.

அந்த முகூர்த்தலக்கினந்துடங்கி மூன்றுவேளை ஓமம்பண்ணி தேவதா பூஜைசெய்து சாத்திரப்பிரமாணம் புரோகிதரால் கங்கண விசர்ச்சனம்செய்க கலியாணப்பிள்ளை தந்தையர் முதலியோரும் புரோ ஹிதருமிருந்து முன்னேஆரோகணம் பண்ணிய வண்ணம் தூபதீபனை வேத்தியங்கொடுத்து நமஸ்கரித்து அவரோகணமந்திரங்களால் அந்தந் ததேவதைகளை எதாஸ்தானத்திற் செழுந்தருளவைத்து சாந்திஹோம முடித்து அரசாணிக்குக்காலை யசைத்துவிடவேண்டியது.

திரிமூர்த்திசுவரூபமாகிய அரசாணிக்குக்காலை யெடுத்து நந்தன வனம் கோயிற்றோட்டம் பெரியகொல்லை வீட்டின்புறக்கடை இப்படிப்பட்ட ஸ்தானங்களில் சுத்திசெய்து தனித்தனி நாட்டி சாலில் அமைந்த சப்தகங்காசலத்தையும் சப்தரிஷிகளின்கலசசலத்தையும் வார்த்து நாளுக்குநாள் பார்த்து பாதுகாத்து வரவேண்டியது அதுகள் தளிர்கள் துளிர்கள் தழைகள் இலைகள் பஷ்பங்கள் பிஞ்சுகள் காய்கள் கனிகள் முதலிய செழித்திருக்கக்கண்டு மனைமாக்ஷிக்குரியபெண்ணும் புள்ளையும் புத்திரபாக்கியப்பேறுபெற்று வாழ்வதை நிதானிக்கலாம்.

முளைப்பாலிகையை வாத்தியகோஷங்களுடன் ஸ்திரீபுமான்கள் பந்துக்கள்சூழக் கொண்டுபோய் ஜலத்தில்விட்டு முளைப்பாலிகை பூஜைசெய்து தூபதீபங்கொடுத்து வணங்கிவரவேண்டியது ஓமாக்கினியை குண்டத்தில் தானேவளர்த்துவைத்து கங்கணவிசர்ச்சன காலத்தில் தூபதீப பூஜாநைவேத்தியங்கொடுத்து அவரோகணமந்திரத்தால் அகற்றுக அகண்டவாயுள்ள சட்டியிலெடுத்து பயிர்ப்புலமல்லாத பள்ளத்தில் அமத்தவேண்டியது.

சோபனசுகத்தை இஷ்டபந்துக்கள்கூடி விருந்தருந்தி வண்மை வரிசையளித்து நக்ஷத்திராதி தாராபலம் சந்திரபலம் பொருந்திய முகூர்த்ததினத்தில் கன்னிகை புஷ்பவதியென்னும் ரஜஸ்வலையான காலம்.

உத்திராடமாதியாக ஆறுமாறுமுத்தமம்
பித்தனார்பிறந்தநாள் பின்னையேழுமத்திமம்
அத்தமோடுசித்திரை யமர்ந்தவாழ்வு குன்றிடும்
மற்றவாறுநாளிலே மங்கைநூலிழப்பளே.

இவ்வாறுசொல்லிய தினம் மாதம் பக்ஷம் திதி வாரம் நக்ஷத்திரம் யோகம் கரணம் பகலிரவு லக்நம் கிரகபார்வை லக்கினசுத்தி முதலியவைகளில் தோஷமுண்டாயிருக்கின் அவைகளின்தோஷபரிகாரார்த்தம் நவக்கிரகசாந்திஹோமம் பகலில்செய்வித்து இரவில்பலதானங்களைக்கொடுத்து புரோகிதரால் புண்யாஹவசனம் செய்வித்து கர்ப்பாதானமந்திரத்தை ஸ்திரிபுமான்களுக்கு ஓதுவித்து லீலாவிநோதமாகிய தீபங்களாலும் புஷ்பங்களாலும் பிரதிமைகளாலும் அலங்கரித்த அறைவீட்டினுள் சயனஸ்தலத்தில் பலவகை அத்தர் பன்னீர் கதம்பப்பொடி சாம்பிராணிவத்திகள் சந்தன புஷ்பதாம்பூலாதி பலஹாரவகைகளை பெண்தாய்வீட்டார் வரிசைகளைவைத்து மங்களவாத்

தியங்கள் முழங்க மங்களப்பாட்டுகளைப்பாடி தம்பதிகளை ஆசீர்வதித்து மங்களாலத்திசுழற்றி அந்தப்புரத்தில் சேர்ப்பர்.

இப்படி மற்மமாக இல்மறைவோ காய்மறைவோஎன்னும் பழமொழிப்படி சோபனருக்குமம் செய்க இதற்கு கிரிடைப்பூட்டக மென்றும் நிஷேகம் ருதுசாந்தியென்றும் பெயர்.

ஸ்திரீபுமான்கள் காமாதுரசம்பந்தமாகிய லீலாசுகத்தோடுங்கூடிய கிரீடாசுகமநுபவித்து பூர்வ புண்யாநுகுண்யமாக அத்துவாதத்துவ மாகிய அன்னத்தில் ரசந்தோன்றி, ரசத்தில் உதிரந்தோன்றி, உதிரத்தில் மாமிசந்தோன்றி மாமிசத்தில் மேதைதோன்றி, மேதையில் அஸ்திதோன்றி, அஸ்தியில் மச்சைதோன்றி மச்சையில் சுக்கிலந்தோன்றி, சுக்கிலத்தில், சுரோணிதந்தோன்றியது.

இப்படிதோன்றிய சுக்கில சுரோணிதங்கள் அணுப்பிரமாண முள்ள ஒருருவுபோலப்பாய்ந்து குதித்துக் கண்டிப்பும் பேரிகையும் போலே கண்டித்து நடுவெளியில் ஒருசுழிமுனையுண்டாய் அம்முனையின்நடுவே ஒருதுவாரமுண்டாய் அத்துவாரத்தினடுவே இரண்டெழுத்துகளாலே அபிமந்திரித்துப் பிண்டமாகி எழுமளவில் ஜீவோற்பத்தி சுக்கிலம்பெருகில் ஆணும்சுரோணிதம்பெருகில், பெண்ணும், இந்தசுக்கில சுரோணிதம் ரோசித்துப்பெருகில் இரட்டைப்பிண்டமாம் அப்பிண்டமானது நீர்வழியேபெருகில் ஊமையாம், மலக்கிடையேயாகில் மந்தனும், இப்படி கர்ப்போற்பத்தி கொள்ளுங்காலத்தில், இரத்தகலையென்றும் இரசக்கலையென்றும் இரண்டுகலைகளுண்டு அவற்றுள் பிராணேந்திரியம்பாயில் இடட்பாகங்கொண்டு கிருமியென்னும்புழுச்சென்று விழுங்கால் கன்றூடுதாய்ச்சென்று தொடர்ந்தாற்போல் பிராணவாயுவை ஆத்துமாமுன்னிட்டுக்கொண்டு செல்லுமளவில் இதமகிதமென்னும் இரண்டக்ஷரமும் பின்றொடர்ந்துசென்று அச்சுக்குள் அச்சாக அவ்வென்னும் மூவாக்ஷரத்தில் அமைத்து புகவிட்டு கிழிச்சிலைவாசல்போலே ஓடி அக்கிஷாவென்னும் மந்திரக்கயிற்றினாலே சுருட்டிக்கட்டி சிவாஞ்ஞாசக்கிரத்தினாலே முத்திரையிட்டு தான் ஒருத்தியாய்நின்று இந்தக்கருவை வளர்க்கும்படியாய் கெர்ப்பபூரணத்தை உதானவாயுவின் மூலமாய்வளர்க்கும் அதெப்படியெனில் கெர்ப்பாகுதி யென்னும் பவக்கடலில் என்னென்னவாயுவளர்க்கும் அஃதெப்படியெனில் எண்ணெயும் தண்ணீரும்போல் நிற்கிற சுக்கிலசுரோணிதத்தைப் பாலும் நெய்யும்போற் பாய்ந்தவுடனே கர்ப்

பிணிக்கு கருப்பையைச்சுருக்கினாற்போல் வாசலை உடைத்துக் கருவை வெளியாக்கி ஓராந்திங்களில் உதிரந்திரளும் இரண்டாந்திங்களில் கொழுந்துவிட்டு அச்சமரும் மூன்றாந்திங்களில் மாங்கிசந்திரண்டு மூட்டுருவாகும் நான்கில்ஓர்பிண்டமாய் நரம்பு நாடிகளமையும் ஐந்தில் பஞ்சவர்ன்னமாய் இந்திரியகருப்பத்தால் அழியினுமழியும் செழிக்கினுஞ் செழிக்கும் அப்படிக்கழியாமலிருக்க பும்ஸவந முகூர்த்தம் அல்லது பூச்சூடலுமாம் பிதாதீக்ஷைவளர்ப்பது சிசுவிற்கு ஆயுள்வளரும் ஆறுமாதத்தில் அறிவுபகுந்து ஆமையின் வடிவமுற்று கால்கைசள்வகுக்கப்பட்டு நவத்துவாரங்களு முண்டாகும் ஏழில் கருப்பத்திலிருந்து எழுந்து முழக்கமுற்று கருப்பத்தைச்சூழ்ந்து புரளும் ஏனெனில் (எ௨.000) நாடிநரம்புகளும் ஆறுதாரமும் ஐந்தெழுத்தும் ஐம்பத்தோரக்ஷரமும் பஞ்சபூததேவதைகளும் தூலசூக்குமத்துடனே கொழுந்துவிடப்பேதையாம் இதுவரையில் சிசுவிற்குக்கபாலந் திறந்திருக்கும் அப்போது சீமந்தம்செய்து மூக்குப்பிழிவதால் அந்தரசம் சிசுவின் கபாலத்தின் வழியாகவுள்ளிறங்கும் அதனாற் சிசுவிற்கு தாய்தந்தையாலுண்டாகும் கர்ப்பசூடு நீங்கும் சகலதோஷமும் பரிகாரமாம் இந்தமுகூர்த்தத்தில் பலர் வாழ்த்திமகிழ்வதால் சிசுவிற்கு ஆயுள்வளரும் புண்யமும் கெண்ணியமும்பெறும் எட்டாமாதத்தில் நீட்டிமுடக்கித்தாயுண்ட அன்னசாரத்தை தொப்புளின்வழியாக உண்டு பிள்ளையினுடல்வளர்ந்து தாயுடன்தோன்றி உயிருண்டாம் ஒன்பதில் தலை காலளவும் உரோமதுவாரமுண்டாம் உரோமக்குருத்து அறிவுடன் உரங்கொள்ளுகையில் விதனைபொறுக்கமாட்டாமல் ஈசுவரனை நோக்கித்தவஞ்செய்து தொழுதகையுடனிருந்து ஊனத்தையொழித்தருளவேண்டுமென்று வணங்கிநிற்கும் பத்தாவதில் நிறைந்தபிண்டமாய் மலைமேல்நின்று தலைகீழாய் விழுந்தவர்களைப்போல் அபானவாயுவின் பலத்தினாலே வெறுமையில்விழுந்தும் முன்னுள்ள நினைவுகளை மறவாதிருந்தும் இப்படிபரப்பிரம சிருஷ்டியினாலே கருப்பந்தரித்து வாழப்பெறும் அப்படிப்பட்ட பிராணவாயுவலப்புறம் ஓடில் ஆண்பிள்ளையாம் இடப்புறம் ஓடில் பெண்பிள்ளையாம் வாயுவிரண்டும் ஏகோபித்தோடில் அலியாம் (பேடி) அல்லது குறியற்றது அந்த வேளையிலே நடந்தவாயு பேதியாமல் ஐந்துநாழிகையளவும் நடந்தியங்குமாகில் அந்தப்பிள்ளைக்கு வயது (க00) அந்தஅளவுகுறையில் அதில் பிள்ளைக்குவயது குறையும் வாயுநிரம்பியோடில் அவயவங்களுண்டாகும் அவ்வாயு சிதறியோடில் அவயவங்கள் குறையும் மூதன்

மையில் கர்ப்பாசனத்தில் பேதிக்கும்பொழுதில் மூன்றுகுணத்தில் ஒன்றுவது மாதாபிதாக்களுக்குண்டானால் மக்களுக்குண்டாகும் அந்நவேளையில் வாயுநின்றியங்குமாகில் நிலத்தின் நிறமேபிள்ளைகளுக்கு நிறமாகும் மாதாபிதாக்களுடைய மனமும் குணமும் வாயுவும் ஒன்றுமாகில்அந்தப்பிள்ளைக்கு மிக்கஅறிவுண்டாம் மாதாபிதாக்களுக்கு அந்தமூன்று விதமுஞ்சிதறில் பிள்ளைமரித்துப்போம் கர்ப்பாசனத்தைவிட்டு கருப்பம்கவிழிலும் புசிக்கிலும் அக்கினிமிகுக்கிலும் வாயுகலங்கிலும் மலமாய் ஸ்திரீபுருஷர் இருவருக்கும் மூலாக்கினி அதிகரித்தால் அந்தகர்ப்பஞ்சுவறிப்போகும் இப்படி செனமானுபவத்திற்கீடாயெடுக்கப்பட்ட தேகத்தில் முன்சொன்னவழியே அருந்தின அன்னுகாரமானது முப்பதுநாழிகையில் எங்குற்றதெனில் ஜலரத்தமாகிய மூன்றுகூறுகும் இதில் இரவுபகல் அறுபதுநாழிகையில் மலஜலமென்று இருகூறுகழிந்துபோம் மற்றைர் கூறுகிய இரத்தமானது தேகத்தில் தங்கும் அந்தரத்தம் ஏழிலொருபங்கு இந்திரியமாம் மற்றபங்குகளோமெவில் தோல், உரோமம், சதை, கர்ப்பம், மேதை, அஸ்தி, குறுப்பி பூளை, சுக்கிலம், நியப்புகுடல் நரம்புமுதலிய விடங்களுக்கு முறையே ஏழரை நாழிகை விதம் பரவிநிற்கும் இனிஇச்சரீரத்தில் இருவினைக்கனங்கூட்டி மூலந்தண்டாகிய நெடுங்கயிற்றை முகட்டுவளையாகச்சேர்த்து வழுவெலும்பாகிய வரிசையிட்டு நரம்பாகிய யாக்கையால் கட்டி உதிரமாகிய ஜலத்தால் மண்கூட்டிச் சுவரோற்றி, உரோமமாகிய சத்தையால் மேய்த்து எடுக்கப்பட்ட வீட்டுக்கு நவத்துவாரமென்னும் வாசலிட்டு அச்சமாகிய கதவுகளிட்டு பல்லாகிய தாப்பாள்பூட்டி நாவாகிய ஓங்காரம் பாய்ச்சிபண்டமாகிய பஞ்சேந்திரியங்களுமுடைத்தாய் நிற்கும் இந்தசரீரத்தில் பதினறு கதவுகள்பூட்டிய வீணுதண்டும் மொழியென்னும் மூச்சாணெலும்பும் மூச்சாண்சதையும் அஞ்சுருவும் ஆறுதெருவும் ஏழுகடலும் எட்டுத்தூணும் நாலுஜாண் பருமனும் எட்டுஜாண் நீளமும் (௩௨) முழுக்குடலும் இருக்கும் இதுமூலாதாரத்தைத் தொட்டு ஆக்கினையளவும் பெருநரம்புகள் (௧௧000) சிறுநரம்பு(௧௮000) கை காலில் பெருநரம்பு (௭000) சிறுநரம்பு (௧௨000) நாபிதானத்தில் பெருநரம்பு (௧000) சிறுநரம்பு (௨000) நவத்துவாரவாசல் (௯) க்கு பெருநரம்பு (௧௫00) சிறுநரம்பு (௩௫00) முடியில் பெருநரம்பு ([illegible]000.)

சிறுநரம்பு(௯000) எலும்பிலும் குடலிலும் சிறுநரம்பு (௭000)ஆக நரம்புகள் நாம (௭௨000)இனி நால்களிலும் கைகளிலும் சந்துபொரு

தல் (சுஅ) கழுத்திற்குக் கீழ்சந்து (ருசு) கழுத்திற்குமேற்சந்து (அரு) ஆக சந்துபொருதல் (ஙுஙுஎ) இனிகாசியில்ஜலம்பலம் (சுக) எலும்பில் ஜலம் பலம் (எ) மாமிசத்தில் ஜலம்பலம் (உக) ஆகஜலம்பலம் (சுக) கால்களிலும் கைகளிலும் எலும்புகள் (கசு0)மூலாதாரத்தைத்தொட்டு ஆக்ஞையளவு மொழியெலும்பு(ஙு0) கழுத்துக்குமேல் பொடியெலும்புகள் (ஙு00) இருபக்கத்திலும் எலும்பு (உ0) ஆகஎலும்பு (ருக0) இனி சரீரத்தில் (ஙுஹ) கோடி உரோமத்துவாரங்களும் நாளொன்றுக்கு (உகசு00) சுவாசமும் (கூசு) தத்துவமும் (ஙுசு0) பலமும் மாமிசமும் உழக்குபித்தமும் ஆழாக்குசேத்துமமும் கூடி சரீரத்திலே நாளொன்றுக்கும் நடக்கும் பிராணவாயு (கஉ) விரல்பிரமாணம் புறப்பட்டுநாலு விரல்பிரமாணம் கழிந்துபோய் எட்டுஅங்குலம் உடம்பூடுருகி சப்த தாதுக்களை வளர்க்கும் இனி ஜலராசிகளின்வாழ்நாட்களின் விவரமெப்படியெனில் வயதளவு (க00) க்கு (க0) வயதளவும்இளமை (உ0) வயதினளவும் வாலிபம் (உரு) (ஙு0) (சு0) இதுவரையில் யௌவனம் (சுரு) (ரு0) இடைகளில் கௌமாரதிசையடைந்து ஒளி மழுங்கலுற்று பிரிதிவு அப்புவை நெருக்கும் (சு0) ல் அப்புதேயுவை நெருக்கும் (எ0) ல் தேயு வாயுவை நெருக்குதலினாலே . தாதுமாயாவுணர்வு பண்டுபோல் செலுத்தும் (அ0) வயதில்வாயு ஆகாசத்தைநெருக்கும் (கூசு) வயதில் ஆகாசம் ஆத்துமாவை நெருக்கும் அதனால் மல சலம் இடைவிடாமல் ஒத்துநிற்கும் (க00) வது வயதில் ஆத்மா வந்தவழியே நோக்கும் இவ்வண்ணம்கெர்ப்பத்தில்உற்பத்தியாகும் கருப்பத்திலுண்டாகிற சிசுவை பைசாசாதிகளால் உபத்திரவிக்காமல் இரட்சிக்கும்பொருட்டு பும்சவனம் சீமந்தம் விஷ்ணுபலி முதலாகிய கற்மங்களால் இரக்ஷிக்கவேண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

விவாகித்தபத்தினி திராவியாதி பலஹீனம் கர்ப்பம் அவுஷதமுண்ணும் பத்யவேகம் விரதமுதலிய சத்யம் தாயார்வீட்டிற்குப்போயிருக்கும் சமயபேதம் சுபாசுபம் இப்படிப்பட்ட அசந்தற்பகாலங்களில் நாயகனானவன் தேவர்கள் அரசர்களுக்கு உபசாரப்பணி ஆடல்பாடலுக்கு அழகாக ஏற்படுத்தியிருக்கும் தாசிகளிடத்தில் காமபாதையை கழித்துக்கொள்ளலாம் இப்படிக்கல்லாமல் மறுமாதரைப் புணர்பவர் தீயநரகடைவர் என மறைகள் கூறுகின்றது.

கலியாணமுற்றத்தில் தளவரிசைசெய் திருக்குமாதலால் பிரிதிவி சம்மந்த மேடை யிருக்கவேண்டிய க்ரமத்திற்காக இருமண் மேடையிடவும் இதுபாவகரிஷியின் நிச்சியம்.

பந்தல்போட்டிருப்பதால் சூரியதலக்கத்துக்கு பதில் காவிக்கோலமிடவேண்டும். தானியலக்ஷ்மி தலத்திற்கணியென்பது மாக்கோலமிடுவது.

கூடத்திற்பாதி அறைவீடென்பது சில்பசாஸ்திரம் கூறும்.

தானியென்பது தாலி திருமங்கிலியம் தானியென்பது நானே நீ (தான்) நீயென்பதுவாம்.

சிவமும் சத்தியுமாகிய அம்மியைமிதித்தால் தோஷம் மிதிக்கப்படாதுஎன்று சொல்வார ஸ்திரீபுமான்களை பார்வதி பரமேஸ்வரர்களாக வரபூசைகாலத்தில் பாவிக்கப்படுகிற படியால் அம்மியும் இவர்களும் ஏகீபவிட்பதில் தோஷமில்லை திருவாய்மொழியிலும் சிவபுராணங்களிலும் விரிவாய்ச் சொல்லும்

ஆவாகனம் செய்திருக்கும்பாலிகையை கங்கணவிசர்ச்சனகாலம் வரையில் அசைக்கப்படாது பாலிகையைகைய்லெடுத்து சுற்றிவருவதுபாவம். சால்கரகம் குலாலன் நல்லவேளையில் வாத்தியகோஷத்துடன் கொண்டுவந்து வைத்து படியரிசி தாம்பூலம் பெற்றுப்போவது.

தானி கலியாணத்திற்கு ஏழு ஒன்பது பதினொன்று நாளுக்குமுன் பொன்னெடுதுக்கொடுத்து பூஜை ஆசாரமுள்ள தட்டானால் செய்வித்து அந்தகலியாணத்திற்கு மூன்றுநாள் முன்னுதாக கொண்டுவரச்செய்து மங்கிலியப்பெண்களால் வாங்கி வீட்டுதேவதைகளுக் கற்பூதமாகப் படைக்கவேணடியது தானிசெய்து வந்தவனுக்கு படியரிசி தாம்பூலம் வெகுமானம் கொடுக்க வேண்டியது. இதின் விரிவை மச்சியபுராணத்தின் விவாகவிதியிற் காணலாம்.

இந்தவிவாக விதி வேதம் மநுவிகளுனம் வீராகமம புராணம் ரிஷிபுரோக்தம் இவைகளை சேர்த்துகதி நிறைத்த விவாகவிதிவிளக்கமாதலால் புத்திமான்கள் நிதானித்து யூகித்து நடத்துவார்களாகில் கலியாணப் புள்ளை பெண்ணும் தீர்க்காயுள் தீர்க்கமங்கல்யம் தீர்க்கபாக்கியம் நிரந்தரம்பெற்று வாழ்வார்கள்.

இப்படி புராணோக்தமாக பெரும்பாலும்வழங்குகின்றன

ஆகமப்படி அன்னபிராசனம் சௌளம் உபநயநம் அந்தந்தப் பருவத்தில் முன்னுதாகநடத்திவிட்டிருந்தால் விவாககாலத்தில் விகநேசுவர பூஜை விரதம் பரிதேசம கன்னியூசல் முதலியசடங்கியற்றி சிவகும்பம்வைத்து பூஜித்து மாங்கலிய சூத்திரந்தரித்து ஹோமம்செய்வது முறையாம்.

## கும்பம்வைப்பதாவது.

கடம் :—சரீரம் இதற்குமேல் எள்ளிடை எள்ளிடைசுற்றுவிட்டு இரட்டைநூலால் சுற்றுவதுநாடி உள்ளேவிடும் ஜலம் உதிரம் அதில் சேர்க்கும் ரத்னம் அஸ்தி கலசமத்தியில் சேர்க்கிற பஞ்சமிர்த்தங்கள் மாம்சம் அதாவது ஆனையடிமண் கோசரங்கமண் சமுத்ரமண் புற்று மண் நதிக்கரை யோரமண் ஆக ஐந்து கலசத்தின்மேல் வைக்குந் தேங்காய் சிரசு கூர்ச்சம் சிகை வஸ்திரம் மந்த்ரம் சர்மம் மாவிலை ரோமம் தக்ஷிணை உயிர் ஆசனம் சப்ததான்யம் அதாவது எள் கடுகு பயறு உளுந்து அவரை கொள்ளு நெல்லு இவ்வேழுங் கலசங்களுக் கேயாகும் நவக்கிரக ஹோமங்களுக்கு கோதுமை செந்நெல் துவரை பச்சைப்பயறு கடலை மொச்சை எள்ளு உளுந்து கொள்ளு இது ஹோமங்களுக் கெல்லாமாகும் சுவர்னம் ரஜிதம் தாம்ரம் ம்ரத் இதில் எதையாவது வைத்து எந்ததேவதையை ஆவாகனம் செய்தாலும் இப்படியே தியானித்துச் செய்க

கலசமத்தியிலிருக்கும் ஜலத்தில் தாமரைகமலஞ்செய்த பொற்றகடு போடவேணும் இது கலசஜலமத்தியில் தாமரைகமலமும் அதில்வஸி ப்பவர்கள் தேவர்கள் ஆதலால் கலசத்தில் எந்ததேவதைகளை ஆவா கனம்செய்தாலும் இப்படியேசெய்யவேணும் இப்படியாக விதிமு றையுணர்ந்து செயத்தகும் காரியகாரணமறிந்து வித்துவான் விவா கத்தைச்செய்து முடித்து அவனுலும் யாவராலும் புகழவும் தன்குல தருமத்தை விளங்கச்செய்தான் என்பது

### அபரக்கிரியைச்செயல்

விருநிசையும் நசையும்வல்லோரிந்த மேன்மைசற்றும
தேருதயோதிது செப்புவரால்வளைத் திண்புயத்தே
பேறுனபாணன் பிணஞ்சுமந்தேவரும் பெற்றிகொண்டே
மாறுதகீர்த்தி படைத்ததன்றேதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வேளாளர் புண்ணியச்செய்கையான் மிக்ககீர்த்திபெற்றவர் என்றும் அவ்வகைப்புகழ் மேன்மேற்பெருகவிரும்பி வலியச்செயல் களைச் செய்வோர் என்றும் தெளிந்துகொள்ளமாட்டாதார்க்கு அவர் தெளிந்துகொள்ளுதற்கு நிதர்சனமாக யாழ்ப்பாணன் (மங்கலப் பாடகன்) ஒருவன் அநாதரவாய்வர்திறந்தமையை வேளாண்மகனு

ருவன்கண்டு (துறவிகட்கும் வறிஞர்கட்கும் அநாதரவாய்வந்திறந்தோர்
கட்கும் இல்வாழ்க்கையோரன்றோ துணையாவரொன்றும் இறந்தவன்
வித்துவானாதலின் இப்பிணத்தை இழிஞர்கைக்கொடுத்தல் தகாதென்
றுங்கருதி) புண்ணியம் வருதற்குவழியான அவ்வித்துவானுடலைத்தன
து மலையையொத்த தோள்களாற்சுமந்து (நன்காட்டிற்கொண்டு
போயிட்டுத் தகனமுதலிய முடிவுச்செயல்களைச்செய்து முடித்தனன்)
அப்பெற லரும்புண்ணியச்செய்கையின் பெருமையால் மாறுதலில்
லாதகீர்த்தியையுடைய ரித்தொண்டைமண்டலவேளாளா என்னும்
கதையைச்சொல்லிப் பெரியோர்தெளிவிப்பர் (௫௬)

## அபரக்கிரியையாவது.

இதைச்செய்விக்கும் ஆசாரியர் ஏருஜாலிகனாகவும் மந்திரமாகி
றதே மஹாஜாலமாகவும் அகாராதி ஐம்பதுதோரககரங்கள் அதின்
சுற்றுமணிகளாகவும் தற்மாதற்மமிரண்டும் இரண்டுகயிறுகளாகவும்
நூற்றெட்டு அண்டங்கள் ஜாலாக்கிரங்களாகவும் இருநூற்றிருபத்து
நான்கு புவனங்கள் ஜாலகசிரந்திகளாகவும் சிஷ்யர்களின் ஜீவாத்
மாக்களே மச்சியங்களாகவும் ஆசாரியா குருபதிஷ்டமாராக்கமாக
சிஷ்யதேகத்தில் பிரவேசித்து சிஷ்யனைதன்னியத்தை தன்னிட
இருதயகமலத்தில் ஆக்கிராணித்து சிவசந்நிதியில் தரிசிப்பித்து பா
பவிமோசனஞ்செய்வித்து மறுபடி சிஷ்யனுடைய தேகத்தில்யோ
சித்து பூரணாகுதி கிரமமார்க்கப்படி சிஷயனைதன்னியத்தை கிரகி
த்து அக்கினியிலிருக்கும் பரமசிவன்திருவடியில் சம்யோஜிக்கப்
படுவதாம் இப்படிப்பட்ட பரமசிவம் சாவந்தர்யாமியாப் சகலஜீவ
ராசிகளிலும் அதாவது பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமுள்ளது
இப்பூமண்டலம் இதற்கிரட்டித்தது லவணசமுத்திரம் இச்சமுத்திர
த்துக்கிரட்டிப்பு இந்தசமுத்திரத்தைச் சுற்றியிருக்கும் பூமி இந்த
பூமிக்கிரட்டித்தது இட்சுசமுத்திரம் இதற்கிரட்டித்த பூமிகளையும்
சமுத்திரங்களையும் சுற்றியிருக்கும் பிறவறக்கடல் இருள்பூமியையும்
சுற்றியிருக்கும் சக்கிரவாள கிரிக்கப்புறம் அண்டச்சுவர் இதின்மே
லுங் கீழுமாகிய (௧௪) உலகங்கொண்டது ஓரண்டம் இப்படிப்ப
ட்ட (௧௦௮) அண்டம்சேர்ந்தது ஒருபுவனம் இந்தப்புவனம் (௨௨௪)
கூடியது ஒரு அகிலம் இந்தஅகில அண்டம் சேர்ந்தது பிரம்
மாண்டம் இன்னம் இப்படிப்பட்ட அண்டங்களோ தேவவலுமையா
லுள்ளது அநேகாநேகம். சங்கியையேயில்லை வருணாச்சிரமசந்திரி
கையில் கிரஹஸ்தனாயிருப்பவன் பௌதிகன் எனப்படுவான் அவன்

குருவாகமாட்டான் சூத்திரனானாலும் துறந்தவன் குருவாக உபதே சிக்கலாமென்றிருக்கிறது காலோத்தரமென்னும் ஆகமத்தில் துறவி யானவன் நைஷ்டிகன் துறவிலக்கண மாவது ஜநனாதி மரணபரி யந்தம் சிரசில் ஜடையிருக்கலாம் அல்லது முண்டனஞ்செய்துக் கொண்டிருக்கலாம் சுசி, காவி, அல்லது சுத்தவெள்ளை வஸ்திரம் உடுப்பது திரிபுண்டரம், ருத்திராக்கம், விபூதி, த்ரிகாலஸ்நாநம் அல் லது ஒருகாலமாவது தவறாது ஸ்நாநம், காம, க்ரோத, லோப, மோஹ, மத, மத்ஸர இவைகளைக்கடந்து சத்யவாதியாய் தனிப் படுக்கை, பொறுமை, திடவிருதம், குரு, சிஷ்ய, குருவாக்கியபரி பாலனம் பிக்ஷார்த்தியாய் ஏகபுக்தம் குருக்ரகவாசம் சிவபூஜை சிவ த்தியானம் காயக்லேசம் தபசு நிராசை ஜபம் சீலம் கோப மில்லாமை இப்படி ஆசையை யொழித்தும் தாம்பூலம் மை மஞ் சள் லவணம் பாதுகை மகுடம் கந்தம் புஷ்பம் இதுகள் கூடா தென்று அகற்றி இப்படி முற்றத்துறந்த பிரமசாரியராக ஸ்ரீநகரம் காஞ்சீபுரம் திருவம்பலமுடைய ஞானப்பிரகாச தேசிக குருசுவா மிகளாக எழுந்தருளாநின்ற ஆண்டவரை தமக்கு குலகுருவாகவுடை யர் வேளாளராதலால் சுவாமிகளாலும் சுவாமிகளது அநுஜ்ஞை யாலும் அவர்களது பட்டத்துக்குரிய வேளாளர் மரபோரில் இரு க்கும் மாணாக்கர்களாலுந் தீக்ஷாவிதிகளும் பெறப்படுகிறார்கள் அபர கருமங்களும் செய்யப்படுகிறார்கள்.

**ஜீவபிராயச்சித்தம்**—இப்படியாயுள்ள வேளாளர்களுக்குள் யாதாமொருவருக்கு சரமதிசை நேர்ந்தகாலத்து சமயாசாரவைகல் ய தோஷபரிகாரார்த்தம் பிராயச்சித்தம் அதாவது காயசுத்தி இதை தாமேசெய்துக்கொள்ளவேண்டும் தனக்கு சக்தியற்றிருக்குந் தருண மாயிருந்தால் ஆசாரியனைக்கொண்டு புத்திரனால் செய்யத்தக்கது.

**உட்கிராந்தி**—உட்கிராந்தியென்பது பிராயச்சித்தம் செய்தவு டனே கோதானம் செய்யவேணுமென்பது.

**கர்ன்னமந்திரம்**—ஆத்மவியோக சமீபகாலத்தில் புத்திரன் வலதுதுடைமீது வலக்காதை மேலிருக்கும்படி வைத்துக்கொண்டு கர்ன்னமந்திரத்தை புத்திரனால் ஜபிக்கத்தக்கது இறக்குங்காலத்து ள்ள நக்ஷத்ராதி தோஷபலன் அதாவது தநிஷ்டாபஞ்சமி இதுக ளில் வீட்டுக்குள் இறக்கப்படாதென்பது.

**தநிஷ்டாதி நக்ஷத்திரங்கள்**—அவிட்டம் சதையம் பூரட்டாதி

உத்திரட்டாதி ரேவதி ரோகணி புனர்பூசம் விசாகம் கிருத்திகை உத்திரம் உத்திராடம் மிருகசீரிஷம் சித்திரை மகம் இப்பதின்மூன்றுக்குந் தோஷமுண்டு இதுகள் தனிஷ்டா பஞ்சமியென்பது.

மற்ற பதின்மூன்று நக்ஷத்திரங்களில் வீட்டுக்குள் இறந்தால் தோஷமில்லை.

திதி—பிரதமை ஷஷ்டி ஏகாதசி திரயோதசி சதுர்த்தசி இந்த ஐந்துதிதிகளில் வீட்டுக்குள் இறக்கப்படாது தோஷமுண்டு மற்ற திதிகளில் வீட்டுக்குள் இறக்கலாம் தோஷமில்லை.

வாரம்—ஞாயிறு செவ்வாய் வெள்ளி சனி இந்நான்குக்குந் தோஷமுண்டு.

கரணம்—பத்ரவாகரணமொன்றுக்குமே தோஷம் மற்றவைகளுக்கு* தோஷமில்லை நக்ஷத்திரம் மாத்திரம் ஆகாதிருந்தால் மிருதமடைந்தவீட்டுவரைக்குந் தோஷம் இது க்ரகதிரிபாதை என்பது நக்ஷத்திரமும் திதியும் சேர்ந்தால் த்விபுஷ்கரமென்றும் பார்ச்வத்ரிபாதை என்பது இதனால்பக்கத்து வீட்டுக்கும் தோஷம் நக்ஷத்திரம் திதி வாரம் இம்மூன்றுங்கூடில் த்ரிபுஷ்கர மென்றும் வாடைத்ரிபாதை யென்றும் பெயர் அந்தவாடைக்கேதோஷம்.

தோஷகாலநிலுப்தம்—பூரட்டாதிக்கு வருடம் (க) அவிட்டத்துக்கு மாதம் (சு) சதயத்துக்கு மாதம் (ச) ரேவதிக்குநாள் (சரு) கிருத்திகை, புனர்பூசம், உத்திரம், விசாகம், உத்திரட்டாதி, உத்திராடம், இவ்வாறுக்கும், ஒவ்வொன்றுக்கும் மாதம் (ந) மிருகசீரிடம் சித்திரை இவ்விரண்டுக்கும் ஒவ்வொன்றுக்குமாதம் (உ) உரோகணி மகம் இவ்விரண்டுக்கும் ஒவ்வொன்றுக்குமாதம் (க) ம்ரதமடையுங்காலத்துக்கு முந்தி ஜாக்கிரதையாய் வீட்டுவாசற்படிக்கு வெளித்திண்ணையில்வையாமல் வீட்டுக்குள்ளேயே ம்ரதமடைந்தால் அந்தவாஸக்கிரகத்தை மேல்கண்ட காலக்கிரமப்படிக்கு அந்தவீட்டில் குடியில்லாமல் அப்புறப்பட்டு அந்தவீட்டைமூடிவிட வேண்டும் அந்தவீட்டில் அந்தகாலம்வரையில் பைசாசம் வாசம்பண்ணும் குறித்தகாலங் கடந்தபின்னர் வீட்டைத்திறந்து சுத்திசெய்து நவக்ரகஹோமம் செய்து சாஸ்திரப்படி தானங்களைச் செய்யக்கடவர்.

பாடல்.

நன்றுரைமுக்கால்காலாம் நாட்கள்பத்திரையாம்பக்கம்
வென்றிகொள்பொன்சேய் வெள்ளிவாரத்திலவிதல்சுட்டல்

என்றிவையுளவேலர்நா ளிறந்தவர் மரபுதன்னில்
பொன்றுவர்மூவொன்று புகன்றனர்புலவர் பொன்னே.

ம்ரதமடைந்தபின்னர்.

சூர்ணோற்சவம்—பிரேதத்தின் தேகசுத்தியர்த்தம் ஆசாரியர் அல்லது உபாத்தியாயர் தைலம் விபூதி தாம்பூலம் கௌபீனம்வை த்துக்கொண்டு சிவகும்பம்வைத்து பூசித்து பிரிதிவியாகிய உலூகலம் என்னும் தாருபூதமாகிய உரலில் மேருபாவகமாகிய முசலம் அதாவது தாருபூதமாகிய உலக்கையால் பக்த தோத்திரங்களாலும் எண் பததொருபதமந்திரங்களையும் பாடி சூர்ன்னம்இடிககவேணும் இந்த அரித்திராசூர்ன்னப் பொடியை அதாவது மஞ்சள்பொடியை தைலத்தில் மிசிரமிதது பிரேதத்தின் சிரசில்தரித்து சிவகும்பஜலத்தினால் அபிஷேகம்செய்யவேண்டியது இதுசரீரசுத்தியர்த்தம் செய்வது.

சிவபிரசாதம்—சிவாலயங்களிலிருந்து விபூதிமாலையும், சத்திரசாமரங்களுடன் வாத்தியகோஷத்துடன் தருவித்து அணிவிப்பர் இதுபிரேதசாந்திக்காக.

சாவியாலங்காரம்—சபத்தை அலங்கரிப்பது இந்தச்சபத்தை சித்திரவிமானத்தில் ஆரோகணிப்பித்து வாத்தியகோஷங்களுடன் மயானத்திற் கொண்டுபோய் மண்டபத்தின் தக்ஷிணதுவாரத்தால் பிரவேசிக்கச்செய்விட்பது

தேகாந்தியேஷ்டி—ஆத்மா ருத்திராதிபதம் பெறுவதன்னிமித்தம்செய்வது தேகாந்தியெஷ்டியாகும் அந்தியெஷ்டிமண்டபம் நான்குபக்கமும் துவாரம்வைததிருக்கவேணும் இதின்மத்தியில் சதுரமாக ஏகமேகலை என்னுங்குண்டம்போட்டு இந்தகுண்டத்துக்கு ஆக்நேயத்தில் சிதாஸ்தாநம் நைருதியில்பஞ்சகவியம் வாயுவியத்தில் சிவகும்பம் ஈசானத்தில் வர்த்தனியும் வைக்கவேண்டும் தசாயுதமாகிய சூலம் கதை துவசம் பாசம் கட்கம் தண்டம் சக்தி வச்சிரம் சக்கரம் பத்மம் இவைகளை ஈசானாதியாக பத்துகலசத்திலும் அபசவ்யமாய் ஆவாகனம்செய்து பூசித்து குண்டத்தில் சிவாக்கினி பிரதிஷ்டைசெய்து நாமகரணமும்செய்து சிவனை அக்கினியில் ஆவாகனம் செய்து சிவகும்பம் யாகாக்கினி வர்த்தனிக்கும் ஆசாரியருக்குமாகநாடிசந்தானம் செய்துக்கொண்டு சபத்துக்கும் மகாமாயாசத்தி ச்வரூபமாகிய மகாஜ்வாலப்பிரயோக மார்க்கமாக நாடி சந்தானம்

முதலானதும் செய்வித்து ஆத்மாவை ருத்ராதிபதங்களில் சம்யோசனம் செய்வது பின்பு பிரேதத்தைத் தகனம்செய்க ஓமாக்கினிவளர்ப்பது எந்த தேவதைக்கு அவிர்ப்பாகம் கொடுப்பதும் அக்கினிமூலமாகவே அதில் அக்கினிதேவனுக்கும் ஒருபாகம்உண்டு. தகனதினமே தகனக்கினியில் செய்க சமாதிசெய்பவர் மூவாசைகளையும் மும்மலங்களையும் விண்ட முமுக்ஷுக்களுக்கு வேதாந்ததத்துவம் செய்யத்தக்கது மோக்ஷதீபம்வைப்பது.

ஆகமவிதிப்படி பிரதிவ்யாதி ஆத்மதத்துவம் இருபத்திநான்கு வித்தியாதத்துவம் ஏழு ஆகாசம் சிவதத்துவம் ஐந்து இந்தமுப்பத்தாறுதத்துவங்களால் ஆகுதி செய்து க்ஷீரத்தால் நனைத்து அஸ்தியைச்சேர்த்து புருஷாக்ருதிசெய்து பிரதிவ்யாதி பஞ்சதத்துவங்களால் பூஜித்து மயானவாசி பூதங்களுக்கு விக்ராஹார பலி பொரி, அப்பம், சுண்டல் முதலியவற்றால் திருப்திசெய்வித்து அஸ்தியை புண்ய நதியில்சேர்ப்பது (கூ௬) தத்துவமென்பது இந்த (௩௬) தத்துவத்திற்குள் அடங்கியது.

இந்த கர்மசரீரத்தைவிட்டு ஆத்மா பிரியுங்காலத்தில் யமபடாள் சமீபத்தில் யாதனுதேகத்தை தரப்பட்டபோது இந்தசரீரத்திருந்தபடி யாதனுசரீரத்துக்கு ஜலூகவத்தாக (ஜலூகம்-அட்டை) ஒட்டிதாண்டிக்கொண்டு கர்மசரீரத்தைவிடும் அப்போது தசவாய்வாகியபிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாகன் கூர்ம்மன் கிருகமன் தேவதத்தன் தனஞ்சயன் இப்பத்துப்பெயருள் தனஞ்செயன்நிற்க பிராணவாயுவுடன் மற்ற எட்டும் பிராணவாயுவோடு கலந்து யாதனுதேகத்தில் பிரவேசிக்கிறது. இந்தயாதனுதேகத்தோடே யமபடாளுடன் யமனுலகுக்குப்போகும்போது தனக்குண்டாயிருக்கும் மூகத்துவ பதிரத்துவ முதலிய துன்பங்களாலும் பிரேதத்துவத்தாலும் மார்க்கத்தில் ஆத்மாவருத்தத்தோடு யமலோகத்தில் சேர்ந்திருக்கும் தனஞ்செயனென்கிறவாயுமாத்திரம் தேகத்தைவிட்டு நீங்காமல் புதைக்கிறத்தில் மூன்றுநாளும் சும்மாகிடந்தால் ஐந்துநாளும் தகனஞ்செய்வதில் பிரம்மகபாலந் திறக்கிறவரையில் தேகத்தை அநுசரித்துப் பிரியாதிருக்கும் பின்பு மிருதஸ்தானத்தில் வந்து சேர்ந்திருக்கும் பிரேதோச்சாரண காலங்களிலெல்லாம் அங்கங்கே சம்வர்ஸரபரியந்தமிருந்து முந்நூற்று அறுபத்தைந்தாவதுநாள் பிராணவாயுவில் போய்கலக்கிறது இதுதேவமானத்துக்கு ஒருநாளாகும் மறுநாள் யமதருமராஜனால் விசாரிக்க

ப்படுகிறது. அப்போது இந்த ஆத்மாபூமியில் கர்மசரீரத்துடனி ருக்கும்போது நித்தியமாய் நித்திராகாலங்களில் சாயாபுருஷனால் எழுதிவைக்கப்பட்டிருக்கிற புண்ணிய பாப சரித்திரங்களை சித்திர குப்தனால் வாசிக்கப்படுவதை தர்ம்மாதிகாரிகள் யமன் தர்ம்மராஜன் மிருத்தியு அந்தகன் காயகன் வைவசுதன் காலன் சர்வபூதக்ஷயன் அவுதும்பரன் தத்திரன் நீலன் பரமேஷ்டி வ்ரகோதரன் சித்திரகு ப்தன் இப்பதினால்வரும் யோசனை சொல்ல யமதருமராஜன் அவரவர்கள் பாபபுண்ணியத்துக்குத் தக்கபடி திரியக்காதிஜந்துக்களில் ஜநிக்கும்படி விதிக்கின்றான்பின்னர் அந்த ஆத்மாதாராரூபமாக ஒரு நாள் அங்கிருக்கிறது பூமியில்வந்து ஔஷதமூலமாக ஆகாரத்தில்கலந்து மூன்றுமாதம் புருஷகர்ப்பத்திலிருந்து ஸ்திரீபுருஷ சம்பர்க்கத்தால் ரேதோ ரூபமாக ஸ்திரீயின்கருப்பத்தில் இருநூற்று எழுபத்தைந்து நாளிருந்து பூமியில ஜநிப்பதாகும்.

தேவமானத்துக் கோருதினமாகிய ஒரு வருஷபரியந்தமும் யமலோகத்திருக்கிற பரியந்தமும் பூமியிலிருக்கும் தன்புத்திர பவுத்திரன் பிரபவுத்திரன் தாயாதிகள் தவுத்திரன் முதலியோரால் செய்யப்படுந்தற்மதான சிரார்த்தாதிபலன்களால் பிதுர்தேவதைகளுக்கு திருப்திசெய்விப்பதால் அந்த புண்ணியபலன்கள் அந்த ஆத்மாவுக்கு சேர்ந்து பாபரகிதராய் சுவர்க்காதிபோகங்களை அடைவார்கள் இப்படி செய்யாமல் புத்திராதிகள் பாபத்தையே செய்வார்களாகில் அந்தவருஷபரியந்தம் புத்திரர்களால் சேருகிறபாபத்தைச் சேர்த்து அதற்குத் தக்கநரகதண்டனையை யமதர்மராஜனால் விதிக்கப்படுகிறது இப்படிசெய்யாத புத்திரர்களுக்குப் பிதுர்தேவதை சாபநேரும் புத்திராதிகள் நியகரகடைவர் என்பது சித்தமே ஆதலால் வேத சாஸ்திரங்களாகிய கர்ம்மகாண்டத்தின்படி செய்யவேண்டிய கிரமங்களாவது.

முன்சொன்ன ஆசாரியர் செய்விப்பவர் கூடஇருந்து ஆகமங்களைவாசிப்பவர் சாதகர் இவ்விருவர்களோடு கூடவிருந்து மந்த்ரலோபம் க்ரியாலோபமில்லாமல் சாககிருதையாகப் பார்த்திருந்து வியாபகப்படுத்தி யாகதிரவியங்களை கொணர்வித்து சாஸ்திரோக்தமாக நடப்பிப்பவர் உபதிஷ்டாவாகும் இம்மூவரும்இருந்தே கருமங்களை சைவாகமப்படி புத்திரகரால் செய்விக்கவேண்டும்.

## கரும ஆரம்பம்.

**விக்நேசுவர பூஜை** :—யாதகருமம் விக்நேஸ்வராதபடி முதலில் விக்கேசுவர பூஜை செய்யவேணும்.

**புண்யாஹவசனம்** :—ஸ்தலசுத்தி திரவியசுத்திக்காக வருண கலசம்வைத்து தேவதைகளை ஆவாகனம் செய்து பூசிப்பது.

**பூதசுத்தி** :—அங்கந்யாசம் கரந்யாசம் செய்துக்கொள்வது.

**அந்தர்யாகம்** :—ஆசாரியர் ஆத்ம சுத்திசெய்துக் கொள்வது.

**ஆசாரிய வலங்காரம்** :—ஆசாரியர் சாதகர் உபதிஷ்டா இவர்களுக்கு வஸ்திராதி அலங்காரம்செய்வித்து சற்மகர்த்தாவும் கோடியுடுத்திக்கொள்வது.

**பஞ்சகவ்யம்** :—திரவியசுத்தி அதாவது ஹோமபாண்டம் யக்ஞ யதிரவியங்களை சுத்திசெய்வதற்காக. உட்கொள்வதற்கல்ல.

**விக்கிராமம்** :—பொரி எள் பஸ்பம் தருப்பை புஷ்பம் அக்ஷதை இவைகளை மண்டப சுத்தியர்த்தம் முதலில் இறைப்பது.

**அந்தியேஷ்டி**,—தேகாந்தியெஷ்டியும் சஞ்சயன கிரமமும் முன்னமே சொல்லப்பட்டிருப்பதினாலே இவ்விடத்தில் விவரிக்கஆவசியமில்லை.

**புத்தளி யந்தியேஷ்டி** :—துர்மரணம் தூரதேசத்தில் வியோகம் நேர்ந்து தேகாந்தியெஷ்டி செய்யப் பெறாதவர்களுக்கு தேகாந்தியெஷ்டி ஒப்பந்தம் நதிக்கரையில் மண்டபம் சமைத்து கலசங்களாதி கிரமங்களை முறையே நடத்தி முப்பத்தாறு தர்ப்பையால் ஆக்ருதியுண்டுபண்ணி சிவிபூதம் ஆவாகனம்செய்து சாவியாலங்காரம் செய்தவுடன் தத்துவந்யாசம் செய்து மகாஜாலப்பிரயோக மார்க்கமாக ஆத்மாவை ஸம்யோசித்து சிதாஸ்தானத்தில் சிவாக்கினியால் சம்ஸ்காரம் செய்யவேண்டியது.

**புத்தளியந்தியேஷ்டி சஞ்சயனம்** —தேகாந்தியெஷ்டிசஞ்சயனக் கிரமப்படி மந்திரத்தால் பூர்த்திசெய்க இப்படி மூலாகமங்களில் விதித்திருக்கின்றது, ருத்திரபலி துர்மரணம் பெருவியாதியா லிறப்பதற்கு பிராயச்சித்தமாக செய்வதாகும் இதுவும் புத்தளியந்தியெஷ்டி.

**நக்கிநசிரார்த்தம்** :—யாதனாதேகத்துட் புகுந்து யமலோகத்துக்குப்போகுமார்க்கத்தில் குருடு, செவிடு, ஊமை, பிரேதத்துவம்,

நிர்வாணம் இவைகளால் வருந்துமாதலால் இந்தத் துன்பங்கள் விமோசனார்த்தம் தீபம், வெண்கலப்பாத்திரம், மணி, வஸ்திரம், தானம் செய்யவேண்டும் புத்திரகரால் செய்யும் சிராத்தத்தின் பலத்தால் இவ்வித துன்பங்கள் நீங்கும்.

பாஷாண ஸ்தாபநம்:—வீட்டு வாயிற்படிக்கு வெளித்திண்ணையில் எட்டங்குல ஆழமும் எட்டங்குல அகலமும் விருத்தாகார குண்டம் ஏற்படுத்தி மூன்று நிலைகளை ஸ்தாபித்து ஆத்மதத்துவாதிபதி பிரம்மா வித்தியாதத்துவாதிபதி விஷ்ணு சிவதத்துவாதிபதி ருத்திரன் இம்மூவர்களையும் ஆவாகனஞ்செய்து முப்பத்தாறுதத்துவங்களால் பூசித்து தக்ஷிண உத்தர மத்தியகாதங்களில் தாபித்து குண்டத்தின் பச்சிமதிக்கில் நவதான்ய ஸ்தண்டிலம் போடுவித்து ஏககும்பம்வைத்து சதாசிவபூஜைசெய்வது இது பிரதமதினத்திலேயே செய்ய சஞ்சயனம் மறுதினத்தில் செய்து பின்பு சிலாஸ்தாபனம் செய்யவேணுமென்பது விதியல்ல பிரதமதினத்திலும் ௩ - ௫ - ௭ ௯ - இந்ததினங்களிலும் சஞ்சயனம்செய்யலாம் காலமிருத்யு யமாகாரம் பிரம்ம விஷ்ணு ருத்ராத்மகமா யிருக்கிற இந்தசிலைகளில்தனஞ்சயனென்னும் வாயுசேர்ந்திருக்கும் ஒன்பதுநாளும் ஏகோத்திர விருத்தி தினசிராத்ததர்ப்பணம் கிரமப்படிக்கு (௭௫) சிராத்தமும் செய்து பத்தாவதுநாள் சிலோத்வாசனமாய் விட்டபின்பு மறுபடி மிருதஸ்தானத்தில் தனஞ்செயன்சேரும்.

தீலோதகம்—யாதனுதேகத்தோடு போகும்போது உண்டாகும் சிரமபரிகாரார்த்தமாகச் செய்வதாகும் முதல்நாள் மூன்று இரண்டாவதுநாள் நான்கு மூன்றுவதுநாள் ஐந்து இந்தப்படிக்கு பத்துநாளைக்குஒவ்வொன்று ஜாஸ்தியாக (௭௫) சிராத்தஞ்செய்க இது ஏகோத்ரவிருத்தி சிராத்தமாம்.

வாசோதகம்—நாள்ஒன்றுக்குமூன்றுதர்ப்பணமாக பத்துநாளைக்கு முப்பதுசெய்து பின்பு நாள்ஒன்றுக்கு ஒவ்வொன்றுச்செய்யலாம் இதனுல் தாகபரிகாரார்த்தமாம்.

பிண்டம்—க்ஷுத்பாதை சமனார்த்தம் நெய் பால் தயிர் சாகம் பெல்லம் பயறு இதுகள் சேர்த்தஅன்னத்தை இரண்டுஉண்டைசெய்து பிரேதத்துக்கொன்றும் மற்றென்றை அந்தஆத்மாவைக்கொண்டு போகிறபூதங்களுக்கும் பலியாகஇடுவது.

**நவச்ராத்தம்**—க - ௩ - ரு - எ - க - ௧௦ இத்தினங்களில்-ஏகோதிஷ்ட வத்தாக சிரார்த்தம் செய்து கடோதகத்தை கோத்ர நாம உச்சாரணைத்தால் சிவிபூதஸ்தாபனம் செய்திருக்கிற சிலைகளின்பேரில் விட்டுவிடுகிறது அந்தவிடத்திலேயே ஸ்நாகம் புக்தம் தாகம் அருந்தவேணும். இது யாதனுதேகத்திலிருக்கும் ஆத்மாவிற்கு பாஷாணத்தில் வஸிக்கும் தனஞ்செயவாயுவின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது.

**ஏகோத்ரவிருத்தி**:—இது சிலாஸ்தாபனத்துக்கு சேர்ந்ததாகிய எழுபத்தைந்து சிரார்த்தமாம்.

**பிரபூதபலி**:—சிவிபூதஸ்வரூபமாக பூஜிக்கப்பட்ட சிலையை அலங்கரித்த பந்தரில் அலங்கரித்து விக்கிராஹாரம் என்கிற பொரி அவல் முதலிய அன்னமும் படைப்பது.

**சிலோத்வாசனம்**:—சிவிபூதமாக அலங்கரித்து பலிபூசையானபின்பு அந்தசிலைகளில் ஸ்தாபித்த பஞ்சபூதங்களை பிரதிவ்யாதிகளில் மந்த்ரவத்தாக ஸம்யோசிக்கப்பட்டு பின்பு அந்தசிலைகளை வாத்திய கோஷங்களுடன் நதியில் அல்லது தடாகத்தில் சேர்த்து விடுவதாம்.

**விரஷோர்ச்சர்ஜநம்**:—பசுவும் சேவுமாக இரண்டிரண்டு சேர்த்து சூலமிட்டு நாலுபக்கத்திலும் விடவேண்டும் சூலமிட்ட தோஷ பரிகாரார்த்தம் ஜலக்குடம் நெய் வஸ்திரம் பொன் இதுகளை தானம்செய்து விரஷோர்ச்சர்ஜன ச்ரார்த்தம் செய்யவேணும்.

**ஏகோதிஷ்டம்**:—மூர்த்தி அக்கினியில் ஆகுதிசெய்து முடித்து பின்பு மனிதனைவைத்துச் செய்வது ஆவர்த்தநமென்று பெயர் இது செய்ததினத்தில் மற்றொரு சிரார்த்தமும் செய்யப்படாது ஏகோதிஷ்டம் செய்தானவுடன் அன்றையதினமே சிவலிங்கம் சாளிக்கிராமம் விபூதி ருத்திராக்ஷம் பாதுகை உஷ்ணிஷம் சத்திரம் பூஷணம் சையா வஸ்திரம் கோ பூமி பாத்திரம் இதுகள்முதலிய இருபத்தினொன்று தானங்களைச் செய்யவேண்டும்.

(ஏகோதிஷ்டமான மறுநாள் செய்யுங்கிரியையாவது.)

**ஷோடசம்**:—மாதம் ஒன்றாக பன்னிரண்டு மாதத்துக்கும் பன்னிரண்டு ச்ரார்த்தம் (உஎ) நாளைக்குமேல் மூன்று தினத்திற்குள் ஆத்யூனமாசிகமும் நாற்பது நாளைக்குமேல் ஐந்துநாளைக்குள் த்ரைபக்ஷிகஊனமாசிகமும் நூற்றிருபது நாளைக்குமேல் பத்துநாளைக்குள்

ஊனஷாண்மாசிகமும் (௩௫) நாளைக்குமேல் பதினைந்துதினத்திற்குள் ஊனாப்திகமாசிகமும் ஆக இந்தபதினாறும் அந்தந்த காலங்களில் செய்யவேண்டியது இந்தகாலங்களுக்குப் பின்பு அதாவது முந்நூற்றறுபது நாளைக்குமேல் சபிண்டிகரணம் செய்யவேணும் மறுதினத்தில் திதிவந்தால் ஆப்திகசிரார்த்தம் செய்யலாம் மரதிதி-உ-௩ அல்லது அதிகப்பட்டாலும் திதிவரும் தினத்தில் ஆப்திகம்செய்யவும் சபிண்டிகரணம் செய்யும்தினத்திற்குள் திதிவந்துவிடுமானால் அதற்குமுந்தின தினத்தில் சபிண்டிகரணத்தைச் செய்து முடித்து ஆப்திகச்ரார்த்தம் செய்யவேண்டியது மாதம்பிறந்த பதினொருதேதிக்குள் ளிறந்தால் (௩௬௫) நாளைக்குமேல் (உ௫) நாள்உயர்ந்து மரதிதிவரும் (உக) தேதிக்குமெல் (௩0) தேதிக்குள்ளிறந்தால் (௩௬௫)க்கு (க௫) நாள் குறைந்து மரததிதிவரும் (கக) தேதிக்குமேல் (உ௫) தேதிக்குள் இறக்கிறவர்களுக்கு மாத்திரம் திதி கில்ப்தமாகவரும்.

சபிண்டிகரணம் அல்லது சப்தகம்—கால, காம, ஸஞ்சிக விசுவேதேவர்களை யுத்தேசித்து பிதாமஹம் பிரபிதாமஹம் விருத்தபிரபிதாமஹம் பிரேதம் மஹாவிஷ்ணு ஆக ஏழு சிரார்த்தமாம்.

பிண்டபிரதானம் :—பிதுர்க்களாகிய இவர்களுடன் ஆத்மாவை சேர்ப்பிப்பதாகும் பிண்டம் மா அரிசி பழம் இதுகளாலும் வைத்துச்செய்யலாம்.

பிண்டசய்யோஜநம்:—பிண்டஸம்யோசனம் செய்யவேணும் பின்பு புலர்பிண்டபிரதானம் வைத்து பிதுரு பிதாமஹம் பிரபிதாமஹம் ஸ்தாபித்து அதுமுதல் பிரத்தியாப்திகங்கள் தோறும் பரோகணி தரிசம் சங்கராந்தி கிரகணம் அயனங்கள் விஷு-மன்வாதி அர்த்தோதய மஹோதய காலங்களில் கோத்ரநாமோச்சாரணத்தால் திலோதகங்களால் பித்ருதேவதைகளுக்கு த்ருப்திசெய்து வம்சாபிவிருத்தி யாகுவோனவும் சொல்லப்படுகிறது.

சுவர்க்கபாதேயம் :—விருத்தபிரபிதாமஹ பிண்டஸ்தாபனம் செய்திருக்கிறதை மறுபடி சுவர்க்கத்துக்கு அனுப்புவது அப்போது தானாதிகளைச் செய்யவேண்டும் இதில் கோதானம் வைதரணிநதியை தாண்டுவிப்பதற்காகச்செய்வது.

புனர்பிண்டம் :—மறுபடி புனர்பிண்டம் பிதுர் பிதாமஹம் பிரபிதாமஹம்வைத்து இம்மூன்றையும் ஸ்தாபிப்பதாம்.

சோதகும்பம்:—பிரதினமும் ஒவ்வொன்றாக முந்நூற்றறுபது நாளைக்கும் சோதகும்பம்வைத்து தானம்செய்வதாகும்.

அநுமாசியம்—அன்னசிரார்த்தத்துக்கும் ஆமசிரார்த்தத்துக்கும் பேதமில்லை இரண்டுவிதமும் செய்யலாம் அன்னசிரார்த்தத்துக்கா கிலும் ஆமசிரார்த்தபலன் இரட்டித்தது ஒவ்வொரு சிரார்த்தத்துக்கும் இரண்டு மனிதருக்காகும்படி சாமக்கிரி கொடுக்கவேணும் இதற்கு குறைந்து கொடுக்கப்படாது வருஷமுமிருந்து அந்தந்த காலத்தில் சிரார்த்தாதிகளை நடத்துவதற்கு தனக்கு காலநிச்சிய மில்லாமையால் கர்மகாலத்திலேயே எல்லா சிரார்த்தமும் பூர்த்திசெய்து முடித்து விட்டாலும் பின்னிட்டு தான் ஜீவதிசையுட னிருக்கும் காலமெல் லாம் வருஷபரியந்தம் அந்ததிதி வருங்காலமெல்லாம் அநுமாசியம் முதலியதும் செய்தேதீரவேணும் ஆனால் பின்புசெய்வதில் பிரேதச ப்தம் உச்சரிக்கப் படுவதில்லை மஹேசுவர பூஜையாவது ஜங்கம பூஜையென்றும் சொல்லப்படும் சிரார்த்தம் செய்யாமல் தவறப்ப டாது சம்யோசிதமாக அன்னம் ஆமம் பழத்தினாலும் செய்யலாம் இந்தக்கிரமப்படி செய்ய தேகமநித்தியமாகையால் மேல்கண்ட கா லங்களை உத்தேசித்து இந்த மாசியம் பதினாறையும் ஏகோதிஷ்டமறு தினத்தில் செய்யத்தக்கது.

ஆனந்தஹோமம் :—ஹோமம்பண்ணி அனட்வாஹபூஜை அதா வது தண்டுலம்பரப்பி அதில் எருமைக்கடாவைப் போல ரூபமெ ழுதி பூஜித்து சம்பாநெல்லை ஹோமாக்கினியில் ஆகுதியாக சொ ரிந்து அதில் சிதறும்பொரியை புத்திரர் முதலியஞாதிகள் புசிக் கவேண்டியது புஜித்தபின்பு வாய்திறந்தழப்படாது அந்த ஹோமாக் கினியி லிருந்து ரக்ஷையெடுத்து கண்ணுக்கு மைபோடவேண்டியது (மையிட்டபின்பு கண்ணிலிருந்துஜலம்வரும்படிக்கும் அழப்படாது) விரஷோர்ச்சர்ஜனத்துக்கு பின்பு ஏகோதிஷ்டதினத்தில் மூர்த்திசைவர் களுக்கு மாத்திரம் ஸம்ஹிதை சிரார்த்தம் பதினொன்று செய்ய வேணும். அதாவது சத்யோசாதம் வாமதேவம் அகோரம் தத்புரு ஷம் ஈசானம் இருதயம் சிரசு சிகை கவசம் நேத்ரம் அஸ்திரம் இந்தபதினொருமந்திரங்களால் சிவி பூதஸ்வரூபத்தை உத்தேசித்துச் செய்யவேண்டியது இதுமந்த்ர வைகல்ய தோஷபரிகாரார்த்தம் செய் யத்தக்கது.

கிரகயக்யம்—சுபத்துக்கு பூர்வதினத்தும் அசுபத்துக்குஉத்தராதி

னத்திலும் செய்யவேணும் அதாவது நவக்கிரகசாந்தியும் புண்யாஹவசனமும் கிரகசுத்தி தேஹசுத்திக்காக செய்யத்தக்கது.

## ஆப்திகச்ராத்தம்,

முதலில் சிரார்த்தம் கற்மகர்த்தா,தனக்கு தர்ப்பாசனமிட்டுக் கொள்க ஆசமனம்செய்க தர்ப்பை பௌத்திரமிட்டுக்கொள்க பிராணாயாமம்செய்க சங்கல்ப்பம்செய்துக்கொள்க அங்கந்யாசம் கரந்யாசம் செய்க இவ்விரண்டும் சகளீகரணமென்னப்படும்.

விக்நேசுவர பூஜை—வருணகலசம் வைத்து தேவதைகளை ஆவாகனம்செய்து பூசிப்பது.

புண்யாஹவசனம்—கிரகசுத்தி பாத்திரசுத்தி திரவியசுத்தி இதற்காகசெய்வதாகும்.

பஞ்சகவியம்—சரீரசுத்தியர்த்தம் முன்னாளே செய்துக்கொள்ளுவது சிரார்த்தத் தினத்தில் செய்துக்கொள்ளுவது அநுசிதமாகும் முன்னாள் ஏகபுக்தமாக விரதமிருப்பது அதிவாசமென்பது கிரமம்.

பிதுர்வரிணம்க்ஷணம்வைப்பது—புரூரவர் ஆர்த்ரவர் இந்த விசுவேதேவரொன்னும் பிதுர்தேவதைகளை உத்தேசித்து (க) அல்லது (௩) (௫) (௬) க்ஷணம்வைக்கலாம்.

பாத்யம்—க்ஷணம் நியமித்தவர்களின் பாதத்தை சுத்திசெய்வது

அர்க்கியஸ்தாபனம்:—அவர்களுக்கு கையில் ஜலத்தைகொடுப்பது அல்லது இடுவது.

ஹோமம்—பிதர்தேவதைகளுக்கு திருப்தியாக அக்கினியில் ஆகுதிசெய்வது.

பிதுர்பூஜை—க்ஷணத்திலிருப்பவர்களுக்கு அர்க்கியம் பாத்தியம் சந்தனம் புஷ்பம் அக்ஷதையும் கொடுத்து சகலபதார்த்தங்களையும் இலையில் தாம்பூலம் தக்ஷிணையோடு பரிமாறுவது.

தத்தம் செய்வது— ஆவாகனக் கிரமப்படிக்கு க்ஷணம்வைத்தவர்களுக்கு ஒவ்வொன்றாக தனித்தனியே தத்தம்செய்வது.

ஏகதத்தம்—எல்லா க்ஷணத்திலிருப்பவர்களுக்கும் ஒரேதத்தமாகச்செய்யவேண்டியது.

பிண்டம் பிதுர் பிதாமஹ பிரபிதாமஹாக்களுக்கு பிண்டம்வைப்பது.

**தற்பணம்**— பிது, பிதாமஹம், பிரபிதாமஹம். மாதுர், பிதா
மஹி, பிரபிதாமஹி. மாதாமஹம், கோத்திரம். மாதாமஹம், மா
துர்பிதாமஹம். மாதுர், பிரபிதாமஹம். மாதாமஹி, மாதுர்பிதா
மஹி. மாதுர். பிரபிதாமஹி சுவாமி, ஸகி, குரு, ஆசாரியாதி மாதா
பிதாக்களுக்கு அமாவாசை தினங்களில் தற்பணம் தவறாது செய்க
பரோகணி ஒன்பதுசிரார்த்த மறுநாள் செய்யுந்தற்பணம் கிரகணம்
சங்கராந்தி தக்ஷிணாயனம் உத்தராயனம் மஹாளயம் மன்வாதி புண்
யகாலங்களிலெல்லாம் ஜேஷ்டபிதா கநிஷ்டபிதா பத்நி பிராத்ரு
ஆத்மபகினி பிதுர்பகினி மாதுலன் மாதுலன்பத்நி ச்வசுரன் சாலகன்
இவர்களுக்கெல்லாம் தர்ப்பணம்செய்யவேண்டும்.

**மஹாளயம்**—துரு ருசி ஸம்ஜ்ஞிக விசுவேதேவரை உத்தேசித்து
மேல்கண்ட சிரார்த்தங்களைச்செய்யவேண்டும்.

ஈசானமந்த்ராதி பஞ்சபிரம்ம ஷடங்கம் பதினொரு மந்திரங்
களாலும் சிரார்த்தாதிகளுக்கெல்லாம் பூஜிக்கத்தக்கது நந்திமகாகாள
ஸம்ஜ்ஞிக விச்வேதேவர் கண்ட சண்டகணேச சுரூப பிதுர் பிதாமஹ
பிரபிதாமஹ அதிதி அப்பியாகத கணபதி சுப்பிரமண்ணியம் சம
யாதீக்ஷா விசேஷதீக்ஷாவந்தாளுக்கு இப்படிச் செய்யவேண்டியது
நிர்வாணதீக்ஷா யுக்தாளுக்கு ஈச சதாசிவ ஸம்ஜ்ஞிக பிதர் பிதாமஹ
பிரபிதாமஹமென்று சொல்லிச்செய்யவேண்டும் சிவபூஜை செய்ய
ப்பட்டவர்களுக்கும் இப்படிசெய்விக்கலாம் சத்யர் அனந்தர் ஸம்
ஜ்ஞிகவிசுவேதேவரை உத்தேசித்து சுபகற்மங்களில் நாந்திசிரார்த்தம்
செய்யவேண்டியது.

**பிரத்யாப்திகங்கள்**—மேல்கண்டபடி யாவத்து சிரார்த்தங்க
ளும் செய்வதுடன் தீர்த்தம் ஸ்தலயாத்திரம் புண்யநதிகள் தேவாலயம்
போகும்போதும் அங்கங்கே சங்கல்பம்செய்துக்கொண்டு விசேஷ
தர்ப்பணமும் செய்யத்தக்கதேயாம்.

**விசேஷமாகச்செய்வது**—அபுத்ராளுக்கும் துர்மரணமானவ
ர்களுக்கும் பிரீதியாக தான்உடுத்தியிருக்கும் முந்தானையில் எள்ளை
யிட்டு ஜலத்தைவிட்டு மந்திரவத்தாகப்பிழிந்து சிரார்த்த முடிந்தவுடன்
நிமந்திரணத்திலிருந்தவர்களை பிரதக்ஷண நமஸ்காரம்செய்து ஆசீர்
வாதம் பெறவேணும், வைணவர்கள் அவசானகாலத்தில் கர்னமந்திரம்
ஜபிப்பர்.

**ஸ்ரீசூர்ணபரிபாலனம்**—மந்திரவத்தாக ஸ்ரீசூர்ன்னம் சேர்ப்
பது.

சுவாமிபிரசாதம்—விஷ்ணு ஆலயத்திலிருந்து மாலை சந்திரச மரங்கள் வாத்தியகோஷங்களுடன் தந்து பிரேதத்திற்கு அணிவிப்பர்.

புண்யாஹவசனம்—தீர்த்தசுத்தி கிரகசுத்தி திரவியசுத்தி.

கும்பஸ்தாபனம்—தீர்த்தசுத்திக்காக கலசம்வைப்பதாவது கலசமானது தேகம் அதற்கு இரண்டிழையால் வெள்ளிடைசுற்றுவிட்டு சுற்றும் நூலானது நரம்புகள் மேல்வைக்கும் மாவிலை ஊடை தேங்காய் குடுமிமுதலிய அங்கங்களாம்.

பாஷாணஸ்தாபனம்—கும்பஜலத்தை அபிஷேகம் செய்வது

நாராயணபலி—புராணோக்தமாகச் செய்வது.

நக்கிநசிரார்த்தம்—நவச்சிரார்த்தம் பாஷாணஸ்தாபனம் புண்யாஹவசனம்-

ஹோமம்—விரஷோர்ச்சர்ஜநம் ஷோடசம் யேகாகம் சப்தகம் சோதகும்பம் பிண்டபிரதானம் பிண்டசம்யோசனம் இந்தகாலத்தில் தானம் பின்பு சுவர்க்கபாதேயம் பிண்டவுத்வாசனம்.

சேவாகாலம்—பிராம்மணர்களைக்கொண்டு திருவாய்மொழிப்பிரபந்தங்களை யோதுவிப்பர்.

## ஆசௌசவிதிகள்.

சந்தியாதிகர்ம்மங்கள் தவிர மற்றகர்ம்மங்களில் வேதாத்யயநஞ் செய்யக்கூடாது ஆசௌச முண்டானவர்களுடைய திரவியத்திற்கு அசுத்தியுண்டாகும் ஆசௌசகாலங்களில் சந்த்யாவந்தனம் ஜபமந்த்ரங்களை வாய்விட்டுசொல்லாமல் ஈரவஸ்திரத்துடனிருந்து மனதிலேயே ஸ்மரிக்கவேண்டும் அர்க்கியங்கொடுக்குங்காலத்தில் மாத்திரம் சொல்லலாம் உத்கிராந்திகாலத்தில் தானம்செய்யலாம் இதரகாலத்தில் வாங்குவதுங் கொடுப்பதுங் கூடாது தண்டுலம் பெற்றுக்கொள்க அன்னம்பெறப்படாது ஆசௌசம் உண்டான கடைக்காரனிடத்தில் வஸ்துக்களை வாங்கவேண்டினால் பூமியில்வைக்கச்சொல்லி வாங்கிக்கொள்ளலாம் புத்ரட்பேறுண்டான காலம் புண்யகாலமாதலால் அப்போது ஆசௌசம் நிமித்தமில்லை தானஞ்செய்க ஆசௌசமுண்டானவன் அன்னத்தை புசிப்பவனுக்கு ப்ராயச்சித்தமுண்டு தாயாதிகளுக்கு அக்கரையில்லை புஜிக்கலாம் ஆசௌசகாலங்களில் தேவாலயங்களுக்கு போகக்கூடாது பர்த்தாவி

னுடைய மாதாமஹ மாதுல பகினி பாகினேய மாத்ரு பித்ரு ப்ரப்ரு
திம்ருதி ஹேதுக்களான ஆசௌசம் பத்நிக்குமுண்டு பத்நியினுடை
ய மாதாமஹாதி பிறந்தஹத்வவழிவந்த ஆசௌசம் பர்த்தாவுக்குஇ
ல்லை பர்த்தா புல்வாங்கிக்கொண்டும் மற்றசகவாஸ தோஷத்தாலு
ண்டாகும் தோஷம் பத்நிக்கில்லை அபுத்ரன் சந்யாசங்கொண்டவன்
தானே சயாதி புண்யக்ஷேத்ரங்களில் ஜீவச்ரார்த்தம்செய்துக்கொள்
ளக்கடவன் இவனுக்குண்டான ஆசௌசம்ஞாதிகளுக்கும் மற்றைய
ருக்குமில்லை ஆசௌசமில்லாதவன் ஆசௌசமுடையவனை தீண்டினு
ல் ஸ்நாநம்செய்யவேணும் மனப்பூர்வகமாக தீண்டினுல் பிராயச்சித்
தமுண்டு கிராமத்துக்குள்ளே சவமிருந்தால் அந்தக்கிராமத்தில் ஹோ
மம் திருவாராதனம முதலான கறமத்தை பண்ணக்கடவனல்லன்
வேறொருவீதியிலிருந்தால் பண்ணலாம் ருஷிகள் ஸ்திரீசவம் அனுத
சவம் பாலசவம் இதுகள் கிடந்தாலும் கற்மம்பண்ணலாம சவம்
அப்புறம்போனபின்பு சுபகற்மங்களைச்செய்க ஆராதனமத்தியத்தில்
மரணமுண்டானுல் தந்திரமாத்ரத்தால் ஸங்கிரகமாக நிறைவேற்றக்
கடவன் முக்யகர்த்தாவுக்கு ஸபிண்டீகரணபரியந்தம் மகமுண்டு பிரே
தத்வவிமோசனம் ஸபிண்டீகரணத்தினாலே யுண்டாகும் ஏகோதிஷ்
டாதி நவச்சிரார்த்தாதி அநுமாசியங்களிலும் புத்திரர்களுக்கெல்
லாம் நியமம்சித்தமே நான்காவது மாதத்தில கர்ப்பநாசமானுல் ஸ்
நானத்தோடேசரி ஐந்தாவது ஆறு மாதத்திலுண்டாகும் கெற்ப
நாசத்துக்கு பதனந்துடங்கி த்ரிராத்ரம் ஆசௌசமுண்டு ஏழாவது
மாதத்தில் கற்பத்தில் மரித்தாலும் சனித்து மரித்தாலும் ஞாதி
களுக்கு சூதகம் பூர்ணமே மூன்றுமாதத்துக்குள்ளே கற்பச்ராவமு
ண்டானுல் மாதாவுக்கு மூன்றுநாளே சூதகம் அப்பால் ஆறுமாத
பரியந்தம் அந்தந்தமாத சங்கியைக்குள்ளதினம நாலு ஐந்து ஆறு
நாளென்றபடி ஏழாவதுமாதந்துடங்கி விதிப்ரகாரம் சூதகமுண்டு
பிரசூதியில் பெண்ணுக்கு நாற்பது ஆணுக்குமுப்பது நாளும் சூத
கம் மற்ற ஞாதிகளுக்கு தசராத்ரசூதகமுண்டு மாதாமஹ மாது
லாதிகளுக்கு மூனறுநாள் ஆசௌசம் உபாத்தியாயருக்கொருநாள்
க்ஷீணாதி ஆசௌசாதிமூவர்களுக்கு ஸ்நாநமாத்ரத்தினுல் சுத்தி க்ஷவுர
முண்டானவிஷயங்களில் க்ஷவுரமும் ஸ்நானமும பண்ணவேணும்
சாவத்துக்குப்பின்பு சாவம்நேர்ந்தாலும் சூதகம் வந்தாலும் சூதகமத்
தியத்தில் வந்த சாவம் சூதகத்தோடுபோகாது பிரத்யேகசாவாசௌ
சம் அனுஷ்டித்தே தீரவேண்டும் சூதகத்தைக்காட்டிலும் சாவம்
ப்ரபலம் ஏழுதலைமுறைவரையில் ஸபிண்டர்கள் பதினலுதலைமு

றைவரையில் சோதகர் இருபத்துநாலுதலைமுறைவரையில் சகோத்ரம் இந்தசோதகர்ஜநித்தாலும் மரித்தாலும் மூன்றுநாளாசௌசம் ஸபிண்டர்களுக்கே திலதர்ப்பணம் சோதகருக்கு தர்ப்பணமில்லை ஸ்திரீகள் ரஜஸ்நானத்தில் காணப்பட்டால் அதுமுதல் மூன்றுநாள் பன்னிரண்டுநாள் வரையில் ஆனால் மூத்திரத்திற்குசமான சௌசம் - ௪அநாள் வரையில் ஸ்நாநம். இதரர் (௩) நாள் சுத்தி குருவிறந்தால் சிஷ்யன் ஒருநாள் சிஷ்யனிறந்தால் குருஒருநாளும் ஆசௌசம் உண்டு தத்பிரயோகிகளான குரு சிஷ்ய மரணத்திற்கு ஸ்நானமாத்திரம்.

புத்திரமணத்திற்கு மாதா பிதா ஸந்நிதானத்திலிருந்தால் த்ரிராத்ரம் அஸந்நிதானத்திலிருந்தால் பக்ஷிணி பக்ஷிணி என்பது இரண்டுபகலோடு கூடின ராத்திரிதான் இரண்டுராத்திரியோடு கூடிய பகல்தான் மாத்ரு பித்ரு மரணத்தில் புத்திரிகளுக்கு மிப்படியே-

பகினியினுடைய புத்ரன் பாகினேயன் இவனுக்குப்ரதியோகிகள் மாதுலர்களும் மாத்ருஷ்வஸாக்களும் தௌஹித்ரனுக்குப்ரதியோகி மாதாமஹனும் மாதாமஹியும் இவர்களுக்குத்ரிராத்ரம் ஆசௌசம்.

ச்வச்ரு ச்வசுராக்களுடைய மரணத்தில் ஜாமாதாவுக்கு த்ரிராத்ரம் ஜாமாத்ருமரணத்தில் ச்வச்ரு ச்வசுராக்களுக்கு ஆசௌச விதாயகவசனமில்லை.

சிறியதாயார் பெரியதாயார் மாமி பாட்டி இவர்கள் மரணத்தில் மருமானுக்கும் பெண்ணுக்கும் தங்கை தமக்கை பிள்ளைகளுக்கும் த்ரிராத்ரம்,

பெரியதாயார் சிறியதாயார் இவர்கள் பிள்ளை பெண்களுக்கும் ஆசௌசம் பக்ஷிணி இது தொண்ணூறுநாழிகை என்றபடி அத்தை பிள்ளை பெண்களுக்கும் பக்ஷிணி தங்கை தமக்கை இவர்களின் பிரதியோகிகளுக்கும் பக்ஷிணி இப்படியே பக்ஷிணி ஆசௌசங்களுக்கெல்லாம் வபநம் உண்டு.

தௌஹித்ரி பௌத்ரிகளுடையவும் அவர்களின் புர்த்ருமரணத்திலும் அத்தைபிள்ளை மைத்துனன் அவர்களின் பத்நீமரணத்திலும் ஸ்நானமாத்திரமே யுள்ளது க்ஷேத்ரியென்றும் பீஜியென்றும் சொல்லப்பட்ட பின்னபித்ரு பத்நிகளுக்கு பிதாக்களான பிதாமஹ மாதாமஹர்களுக்கும் தத்பத்நிகளும் இந்த பித்ருத்வயத்துக்கும் ப்ராதாக்களான பித்ருவ்யர்களுக்கும் ; மாத்ருத்வயத்துக்கு ப்ராதாக்களான மாதுலர்களும் தத்பத்நிகளும் இந்தமாத்ரு பித்ருத்வயத்துக்கும் ஸ்வ

ஸாக்களான சிறியதாயார் பெரியதாயார் அத்தை தம்பி தமையன் தங்கை தமக்கை இந்த பித்ருத்வய சந்தானமான ப்ராதா ப்ராத்ரிகள் தத்பிரதியோகி மரணத்தில் பரஸ்பரம் தினமாத்திரத்தினாலே சுத்தராவார்கள் பதினான்குதலைமுறைகளுமேல் சகோத்ரன்மரித்தால் ஒரு தினம்.

ராஷ்ட்ரக்ஷோபம் துர்ப்பிக்ஷம் வ்யாதிமுதலான ஆபத்துகளிலேயாதில்நின்றும் கரையேறவேண்டின கர்மமனுஷ்டிக்கும் போது ஸத்திய சுத்தியுண்டு துர்மரணம் பசு, புலி, பாம்பு, கள்ளர், அக்னி, நதி, தடாகம் ,கூபம், இப்படிப்பட்ட துர்மரணத்தில் உடனே கர்மத்தையும் ஆசௌசத்தையும் ஸமர்ப்பிக்கக் கடவன். இதுகளுக்கு மூன்று நாள் ஆசௌசம் கர்மமும் ஸத்யஹாநடப்பிக்க வேணும் பிரேதத்தையும் அஸ்தியையும் தரிசித்து ரோதனம் பண்ணினாலும் ஸ்பரிசித்தாலும் ஆசௌசமும் ஸ்நாநமும் உண்டு தினமாத்திரந்தான், (ஆசார்ய ருத்விகுபாத்யாயாதி ஸமாநோதக கற்பஸ்த்ராவ) மாத்ருபந்துக்கள் மாதாமஹ மாதுல விஷயத்திலும் வயசை நிமித்தீகரித்துக்கொண்டு அகமெல்லாம் நாலுவர்னத்தாருக்கும் துல்யமென்று விக்யானேசுவரராலே கோஷிக்கப்பட்டது அதாவது (வர்ணானுமானுபூர்வ்யேண தச ஷோடச விம்சதிஹி திரிம்சன்னிசாஹ க்ரமேணைகமித்யநேகர்ஷி ஸம்மதம்) அகநிவர்த்தி தினத்தில் ப்ராதக்காலம் ஆறு நாழிகை போகஸங்கவகாலம் வந்தவாறே ஸ்நாநம்பண்ணி ஜலத்தை ஸ்பரிசித்தால் சுத்தராவார்கள் இதில் வேளாளர்பார்த்து நடக்கவேண்டியதைமாத்திரம் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றது பலசாதியாரும் பார்த்து நடந்துக்கொள்ள தருமசாத்திரத்தில் அநேகமாயுள்ளன மேலும் இதில் சைவவைணவ ஆகமசித்தாந்தங்களைக்கொண்டு ஒவ்வொருசிரார்த்தாதிக் கிரமங்களையும் விசாரிக்கையில் மிகப்பெருகும் மந்திரோச்சரணையால் செய்யுங்கிரிகையாகையால் இதில்விரித்தாலும் இழுக்காம்சாஸ்திர மகிமை குன்றும் அவ்வவ்வமயங்களில் ஆசாரியர்முகமாக கர்மகர்த்தா அறியத்தக்கதாகும் இது ஒருவாறுசெய் கருமங்களைமாத்திரம் அறியும் மார்க்கம் இதனுள்சொல்லப்பட்டதென்றும் வைதீககாலங்களில் வபனம் த்விபுக்ரம் சிலசாகாதிக ளருந்தலும் ஸ்திரீசம்பற்கமுமாகா சில சுபகருமங்களுக்கும் ஆகாதனவென்றும் தருமசாஸ்திரங்களில் பலவாயுள்ளன ஆசௌசாவிதிகள் தருமநீதிகளும் ஆசாரவிதிகளும் மநுவிஞ்ஞானேசுவரமென்னுங் கிரந்தத்தாலும் பதினெண்புராணங்களி லொன்றாகிய காருடமென்னுங் கருடபுராணத்தாலும் உணர்க.

இதரமதஸ்தர்களாக நேர்ந்தால் அந்தந்தசமயாசாரப்படி அவ்வம் மதஸ்தர்களைக்கொண்டும் செய்விப்பர்.

**மே - ள்.**

உறவைப்பிரிந்துவந் தேயிறந்தானங் கொருபுலவன்
மறவைப்பதிநதி வம்சம்வந்தோனரங் கேசவள்ளல்
அறவைப்பிணஞ்சுடத் தான்செயெண்ணுன்கி னறத்தநென்றே
பிறர்கைக்கொடாம லெடுத்தானப்பாணன் பிணத்தினையே.

**சொற்றவாறுதழலில் வீழ்ந்தார்களென்பது.**

விழுவேமெனச்சென்று வீழ்ந்தாரிலோர்மைந்தன் வேறுபட
வுழுவேலியிற்சென் றொருநீலிமுன்கை யுடையவற்குக்
கொழுவேபடைக்கல மென்றசொல்லாமுனங் கூறியசொல்
வழுவேயெனப்பொன்று வல்லாளனுந்தொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு]

பழையனூரிலே நீலியாற்கொல்லப்பட்ட வணிகன் பழிக்காகபழி கொடுப்போமென்று சொல்லிய எழுபதுவேளாளர்களில் அறுபத்தொன்பதின்மர் தீயிலவிழுவோமென்று வீழ்ந்துவிட ஒருவனப்போதங் கில்லாமல் வயலிலுழுதுக்கொண்டிருக்க அவ்வயலில் நீலியென்னும் பேய் அவனதுமனைவிபோல உருக்கொண்டு சென்று அறுபத்தொன்பதின்மரும் தீயில்வீழ்ந்திறந்தனர் நீருயிர்வாழ விரும்புகின்றீரா ஏற்போர்க்கு இல்லையென்னுது கொடுக்க வெப்போதும் முன்னே கைநீட்டிக்கொண்டிருக்கும் வேளாளனுக்குக் கொழுவல்லவோகாரணக்கருவியாவது என்று சொல்லுமுன்னே அதுவழுவன்று என்று தன்தேகத்தை கையிலிருந்த கொழுவால் குத்திக்கொண்டுயிர்கொடுத்துச் சொல்லையும் புகழையும் நிலைநிறுத்தினன் அத்தகைய வலிய ஆண்மகன் வாழ்ந்ததும் தொண்டைமண்டலத்திலேயே. (ருஎ)

(முன்கையுடையோர்க்குக் கொழுவேபடைக்கலம் என்றமைகாண்க)

**திருவாலங்காட்டு நீலிகதை.**

நடேசர்காளியுடன் வாதுக்காடிய திருவாலங்காட்டில் பூரிசைக்கிழான் என்னும் ஓர்வேளாளனும் அவன்மனைவி திருப்பச்சைநாச்சியும் பிள்ளைப்பேறில்லாமல் தவஞ்செய்தமையால் நடேசர் கட்டளைப்படி அத்தலத்தில் திரிந்துகொண்டிருந்த ஆண் பெண்களாகிய நீலன் நீலிஎன்னும் இரண்டுபேய்களும் திருப்பச்சைநாச்சியா

ர்வயிற்றில் இரட்டைப்பிள்ளைகளாய்ப் பிறக்க அவ்வாண்பெண்குழந்தைகளை அவ்விருவரும் மிகுந்தசந்தோஷத்துடன் வளர்த்துவருகையில் அப்பேய்கள் பகற்காலமெல்லாங் குழந்தைகளாகவேயிருந்து இரவில் பெற்றோர்நித்திரைசெய்தபின்பு சாமத்தின்மேல் பழயபேயுருக்கொண்டு சுடுகாட்டிற்சென்று பிணங்களையும் மந்தைகளில் ஆடுமாடுகளையும் தின்றுவிட்டு முன்போலக்குழந்தைகளாய்த் தொட்டிலில் தூங்குவார்கள் இப்படியே நாடோறுஞ்செய்துவருகையில் மந்தைகளில் நாளுக்குநாள் ஆடுமாடுகள் குறைவதற்குக் காரணம்யாதென்று ஓரிரவில் விழிப்பாயிருக்கையில அப்பேய்களிரண்டும் வந்து ஆடுகளைப்பிடித்துத் தின்றுவிட்டு ஊருக்குள் புரிசைகிழான் வீட்டிட் புகுந்து பிள்ளைகளாகித் தொட்டிலில் கண்வளர்வதைப் பின்தொடர்ந்து சென்றஇடையர் நன்றாக அறிந்துகொண்டு விடிந்தபின் புரிசைக்கிழவனுடன் இரவில் நிகழ்ந்தசெய்தியைச் சொல்ல அக்கிழான் அன்றிரவில் தானுந் தன்மனைவியும் விழித்திருந்து அப்பிள்ளைகளிருவரும் பேய்களாகிச்சென்றதையும் பின்வந்து குழந்தைகளாகிக்கிடந்ததையும் பிரத்தியட்சமாகக்கண்டு பயந்து வெறுத்து அப்பிள்ளைகளை நடேசர்சந்நிதியில் கொண்டுபோய் விட்டுவந்தார்கள் பின்பு அப பேய்கள் சிறைவிடுபட்டாற்போலே யதேச்சையாக திரிந்துகொண்டிருக்கையில்.

நீலியென்னும் பெண்பேய் நீலனைப்பார்த்து நாமிருவரும் ஓரிடத்திலிருக்கப்படாது நீ யிங்கேயே இரு என்றுசொல்லித் தமையனிடத்தி லுத்தரவுபெற்றுக்கொண்டு திருச்செங்காட்டிலே போயிருந்தது நீலன்என்னும் ஆண்பேய் பேய்களுக்கெல்லாம் அரசாய்த் திருவாலங்காட்டில் ஒருவேலமரத்திலிருந்து ஒருநாள் நீலன்தன் பரிவாரப்பேய்கள்சூழ வேட்டைக்குப்போயிருக்குந் தறுவாயில் பழையனூர் வேளாளர்கள் கலப்பைமரத்துக்கு அந்தகருவேலமரம் பருத்துயர்ந்து செழித்திருந்ததை வெட்டிக்கொண்டுபோயினர்.

வேட்டைமேற்போயிருந்த நீலன்வந்து காவல்பேய்களால்தெரிந்து மிகுகோபாவேசத்தோடிருக்கும் சமயத்தில் அந்தமார்க்கமாக ஆனந்தத்தாண்டவமூர்த்திக்கு நிவேதனங்கொண்டுபோன குருக்களைப்புடைத்து நிவேதனத்தைப் பறித்துக்கொண்டது குருக்கள் நடேசர்சந்நிதியில்வந்து முறையிட இரத்தினசபேசர் குண்டோதரனையேவி நீலன்என்னும் பேயைக்கொல்லுவித்தார் இச்செய்தியை திருச்செங்காட்டில் நீலி கேட்டு கோபித்து ஆரவாரித்தெழுந்து ஓடித்

திருவாலங்காட்டைச் சேர்ந்து மடிந்துகிடக்குந் தமையனுடலைக்க
ண்டு அழுது புலம்பி ஒருவனை தேடி என்தமையன் மடிவதற்குக் கா
ரணமாயிருந்த பழையனூர் வேளாளத்தலைவர் எழுபதுபேரையும் மடி
த்து எனது தமையன் பழிதீர்த்துக்கொள்வேன் என்று தனக்குள்ளே
உறுதிகொண்டு அதற்குச்சமயம்பார்த்து வழியில்காத்திருந்தது.

அக்காலத்தில் காஞ்சீபுரத்தில் நாகந்தைசெட்டிக்குப்பிறந்த ஒரு
ஆண்குழந்தைக்குச் சோதிடர்கள் இச்சாதகன் கொன்ற பெண்பே
ய் இவனைக்கொன்று பழிதீர்க்குமென்று சொல்ல அதுகேட்டநாகந்
தைசெட்டி மனம் வருந்தி அப்பழி இப்பிள்ளையைச் சாராதிருக்கு
முபகாரஞ் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள அவர்கள் ஒருசுரி
கைசெய்வித்து அதில் பைசாசமர்த்தன மந்திரத்தை ஆவாகனஞ்
செய்து கொடுத்து இக்கத்தி இவன்கையிலிருக்குமளவும் இவனுக்கு
த்தீங்கில்லை இவன் திருவாலங்காட்டுவழி போகாமற் காக்கவேண்
டும என்று சொல்லிப்போயினர்.

அக்குழந்தைக்குத் தரிசனன் என்று நாமகரணஞ்செய்து வள
ர்த்துக் கௌமாரபருவமடைந்தபின்பு கச்சிப்பதிக் கொற்றந்தைச்செ
ட்டி மகளை விவாகஞ்செய்வித்து ஓராண்குழந்தை பிறந்தபின் அச்
சுரிகையின் விருத்தாந்தத்தைச்சொல்லி யெப்போதும் இச்சுரிகை
சாஸ்திரம்போலக் கையிலேயே இருக்கவேண்டுமென்று சொல்லி
க்கையிற்கொடுத்து திருவாலங்காட்டுவழியில் எப்போதும்போகாதே
மகனே யென்றுசொல்லிவிட்டு மரணமடைந்தான்.

தரிசனசெட்டி வியாபாரத்தில் தந்தையினும் பிரபல்யமுடை
யவனாகி பழையனூர்த்திசையிலும் போகயத்தனித்தான் தாய் மனைவி
முதலிய உறவிச்சுற்றத்தாரும் திருவாலங்காட்டுவழி போகாதே பே
யால் கொலைநேரும் என்றுபலவாறு சொல்லியும் (கேடுவரும் பின்
னேமதிகெட்டுவரும் முன்னே) என்ற முதுமொழிப்படியே அவரது
சொல்லில் நம்பிக்கையின்றி வர்த்தகவாஞ்சையால் திருவாலங்காட்டு
க்கு செல்லப்புறப்பட்டான் அவனது மனைவி குழந்தையையெடுத்து
க்கொண்டு தொடர்ந்து பேரம்பாக்கத்தில் தங்கி இரவில் நித்திரை
யில் மனைவிக்குத்தெரியாமலெழுந்து திருவாலங்காட்டுத் திசையை
நோக்கித் தனியேசென்றான் மனைவிநித்திரைதெளிந்து தரிசனசெட்
டியைக் காணாமல் கணவனை நினைந்து பிரலாபித்து அழுவதுதெரிந்து
பேரம்பாக்கத்துச் செட்டிகள் தேடியுங்காணாமையால் துணைசேர்த்
தனுப்ப அவள் காஞ்சீபுரத்தில் தன்வீடுபோய்ச்சேர்ந்தாள்.

[illegible]ாலஙகாட்டுவழியே செல்லுகையில் வழிபார்
[illegible]னும்பேய் பழயபழிவாங்கச் சமயம் வாய்த்ததெ
[illegible]ரு தாசியைப்போல் உருக்கொண்டு தரிசனசெட்
[illegible]யாரே போய் என்னையணையவேண்டுமென்று இரந்துவேண்டி
னாள் செட்டி பரஸ்திரீகமனம் கூடாவொழுக்கம் என்னிடத்தெப்போ
துமில்லை என்றுமறுத்துவிட்டுப் பிறகுசென்று பின் நாககன்னிபோ
ல எதிர்ப்பட்டுத் தன்னைவந்து வேண்டக்கண்டசெட்டி பழிகொடுக்க
இதுமுதல் தோற்றம்என்று நினைத்து மறுமாதரைநான் கண்ணாலு
ம்பார்ப்பதில்லைஎன்று நீதிவசனஞ்சொல்லி மறுத்துவிட்டுச்சென்றான்

நீலி பின்னும்பேய்களைக்கொண்டு ஒருபட்டணமுண்டாக்கி அ
தில் பலபலவிநோதவுசிதமான சரக்குகளுள்ள கடைகளேற்படுத்தித்
தான் யசமானியாகப் பலபேர் உபசரிக்கும்படி காம்பீரமாக எதிர்
கொண்டுவந்து செட்டியாரை சரக்குகளை வாங்கும்படிக்கு வாருமெ
ன்றழைத்தாள் செட்டி பிரமிதது இது பேயின்ஜாலமேஎன்று மன
திடத்தோடு கடிந்துபேசிவிட்டப்புறஞ்சென்றான்.

பின்பு நீலி அந்தசெட்டியினது மனைவி பிள்ளையையேந்தி அழு
த்து வேசாரியோடி வருவதுபோல நில்லும் நில்லும்என்று கூவிக்
கொண்டு ஓடிவருவதுகேட்டுத் திரும்பிப்பார்த்து இதுவும் பேய்ச்
சாலமென்று எண்ணி சுரிகையைக் கையிலெடுக்கக்கண்ட பேய்
மாயமாய்ப் போய்விடச் செட்டிதிகிலடைந்து மனம்பதைக்க நாவு
லர்ந்து விடாய்த்து அதிவேகமாகச்செல்லும் வழியில் பார்க்கப்பா
ர்க்க அதிவியப்பைத்தரும் தண்ணீர்ப்பந்தல்வைத்து அதில் நீலி ஒரு
பார்ப்பனப பெண்ணைப்போல நடைநொடிபா
வனைகாட்டி செட்டியாரே விடாய்த்து களைத்துப்போனீரோ தாகந்தீர
நீர்மோரருந்தி களைப்பாறிகளைப்புத்தீர்ந்தெழுந்து போகலாம் வாரும்
என்று அழைத்தாள் அதனைச்செட்டி நம்பி பந்தலிலுட்கார வெத்
தனித்துக் கீழேவைப்பதற்காகச் சுரிகையைகையிலெடுத்தான் உட
னே பந்தலும் நீலியும் மறைந்துபோகச் செட்டி திகில்கொண்டு
பயந்து பெரியோர்சொல்லில் நம்பிக்கைவைக்காமையால்வந்த கேட
ல்லவோ இது என்று துக்கித்து பழயனூரையடுத்துச் சென்றான்.

நீலி அதிககோபாவேசங்கொண்டு தனதுகோரமான பிசாசரூ
பத்தைக்காட்டி நெருக்கி யுருக்கி அதிர்த்து அச்சுறுத்தித் துரத்தி
எதிர்நின்று ஆர்ப்பரித்துக் கொக்கரித்துப் பலவாறு வருத்தப்படுத்
தச் செட்டி மனங்கலங்கி நிலைகுலைந்து அம்மையப்பரைச் சிந்தி

த்துத்தேறிச் சுரிகையைக்கையிற் பிடித்துக் [illegible] மையலு[illegible] பேயை நெருங்கவொட்டாமல் ஒருவகையாகத் தன்னைத்த[illegible] வதற்கு [illegible]காண்டு டந்தான் நீலி செட்டியே உன்னைக்கொல்லுவது எனக்[illegible] பரியகா ரியமல்ல உன்னைபழயனூரில்கொண்டுபோய் இன்றிரவில்[illegible]ன்னை க்கொன்றுஎன்பழிதீர்ப்பது மன்றி பழயனூர் வேளாளர்கள் எழு பதுபேரையுங்கொன்று எனது தமையன்பழியுந்தீர்ப்பேன் அதனாலே தானிங்கேகொல்லாமல் விடுகிறேன் இதோபார் உன்பின் உன்மனை வியைப்போலே தொடர்கிறேன் என்றுசொல்லி மறைந்தாள் தரிச னசெட்டி விதியைநினைத்து விசனப்பட்டுக்கொண்டு திருவாலங்கா ட்டுக்கும் பழயனூருக்கும் நடுவே அம்மையப்பர் சந்நிதியில் சபை கூடி யிருந்த பழயனூர்வேளாளர் எழுபதுபேரையுங்கண்டு அவரை ச்சார்ந்து வழியிலநடந்த விருத்தாந்தங்களையெல்லாம் மனம் பதை பதைக்க உடல்நடுநடுங்கச் சொல்லக்கேட்டு வேளாளர்கள் அவனை அஞ்சவேண்டாம் என்று தேற்றியுட்காரவைத்தார்கள்.

அச்சமயத்தில் நீலி தரிசனசெட்டி மனைவியைப்போலுருக் கொண்டு கள்ளிக்கொம்பை யவன்பிள்ளைபோலுருவாக்கித் தோள் மேற்போட்டுக்கொண்டு களைத்து மெலிந்து ஓடித் தேடி வந்தவளை ப்போலக் கண்டோர்பரிதபிக்கத்தக்க துக்கமுகத்தோடு சபையாருக் கெதிரேநின்று அழுது பரிதபித்துச் சபையார்கேட்கும்படி செ ட்டியாரே யென்னையழைத்துவந்து நடுவழியில் தூங்கவைத்து இக் குழந்தையையும் அநாதரவாய் விட்டுவந்தீரோ நானுமக்குஎன்னகொ டுமைசெய்தேன் என்னையிப்படி வஞ்சிக்கக்காரணமென்ன உமது இஷ் டப்படி வேசையைக்கூடி வாழலாமே நானிருந்த இடத்திலேயே யிருந்தாலுமக்கென்னகுறை நேரிடும் இப்படி யென்னைக்காட்டிற்கொ ண்டுவந்து அநியாயமாய் வதைக்கலாமா பெண்பாவம்பொல்லாதெ ன்று நீரறியீரா என்று முற்பிறப்பில் நிகழ்ந்ததைக் குறிப்பாகச்சொ ல்லி கதறியழுது புலம்பிப் பழயசோகத்தால் மெய்யாகவே மூர்ச்சி த்துத் தெளிந்து சபையாரைப்பார்த்தழுது சபையாரே இந்தநியாய த்தை நீங்களேகேளுங்கள் என்று பூர்வவிருத்தாந்தங்களைச்சொல் லி கல்லும் உருகும்படி கரைந்தழுது[illegible]சொன்னாள்.

செட்டி சபையாரே நீங்கள் காண்கிறவுருவம் பேயும் கள்ளி க்கொம்புமே இது பேய்ச்சாலம் என்சொல்லைநம்புங்கள் இந்தப்பிசாசு செய்கிற மாயமாலத்தைநம்புவீர்களானால் நான்மாத்திரமல்ல நீங்க ளெல்லோரும் மடிந்துபோகும்படி நேரிடும்என்று மிகுதுயரத்தோடு

ஞ்சொன்ஞன் அப்போது நீவி சபையாரே இவர்சொல்வதெல்லாஞ் சூதே யுசெய்வது ஜாலமென்று கவனித்துப்பாருங்கள் என்று.

பிள்ளையைக் கீழேவிட்டாள் அப்பிள்ளை மிகுந்தஆவலோடு தவழ்ந்துபோய்ச் செட்டிமடியிலேறிக்கொண்டு கொஞ்சி குலாவுவதுபோற்கண்டார்கள் அப்போதுசெட்டி பதைத்துத் துடித்து ஐயோ பேய் பேய் என்று அச்சத்தால் நாவெழாமல் குழறிக்கொண்டப்புறத்திலோடினுன் அதனைச்சபையார்கண்டு தமக்கும்மடிவுகாலம் சமீபித்தமையால் கெடுமதிதோன்ருது என்னும்பழமொழிக்கிசைய இப்பெண்செய்கை உண்மையென்றும் செட்டியின் செய்கைவஞ்சமென்றும் நம்பிச் செட்டிக்கு பலநீதிநியாயக்கதைகளைச்சொல்லி கேட்டீரோ தரிசனசெட்டியாரே உலகத்தில் பிள்ளைபெறுவதற்கு எவ்வளவுதவஞ்செய்கிருர்கள் தருமமல்லவென்று வற்புறுத்தி அந்தமனைவியையும் பிள்ளையையும் செட்டிகையிற்பிடித்துச் சபையார் கொடுத்தார்கள் சபையார் தரிசனனிடமிருந்த சுரிகையை வாங்கிக்கொண்டு அம்மையப்பர் சந்நிதியில் ஓர் அறையில் அவ்விருவரையும் குழந்தையுடன் அடைத்துப் பூட்டிடஎத்தனிக்கையில் செட்டி நானின்று இப்பேயால் மடிந்துபோவது திண்ணமே அப்புறம் நீங்களென்ன செய்வீர்களென்று கேட்டான் அதற்கு வேளாளர் எழுபதுபேரும் உர்முடைய ஒருயிர்போனுல் நாங்கள் (எ0) பேரும்உயிர்கொடுப்போமென்றும் அப்படிசெய்யத் தவறிப்போவோமாளுல் மாயையிலகப்பட்டவர்கள் அவித்தை ருக்ஷ ப்ரக்ருதி அஹங்க்ருதிமமகாரம்ருணம் சஞ்சிதார்த்தம் ப்ராப்தி இந்தகதியாக உத்பத்தியாவர்.

சிந்தையுடையவர்கள் மஞேவ்யாதி யடைவர். தாரோஷணம் புத்ரோஷணம் தனேஷணம் இத்துடன் அநேகஜன்மமடைவர். கீர்த்தயையுடையவர் துர்த்தானம் தைத்யஜன்ம முறுவர், ஈர்ப்புத்தியுடையவர் துர்த்தோஷம் உடையவர்களாய் பிசாசலோகமடைவர். பரதாரகமனஞ்செய்பவர் க்ரமிகீடம்சேர்வர். சுவர்ன்னஸ்தேயம்செய்பவர் அசத்யமுடையவர்களாய் அதோலோகமடைவர். மூர்க்கமுடையவர் துக்கமடைவர். பிரம்மத்திசெய்தவர் குருதல்பகம் யோஹம் சுராபானம் ஆத்மகாதகம் அந்தரிக்ஷமடைவர். காமமுண்டானவர் குரோதம் லோபம் மதம் மாச்சரியம் மனுஷ்யஜன்மமடைவர். அதர்மம் செய்பவர் சிவஞதசையுள்ளவும் ரோகமடைவர். ஆசையுள்ளவர் கிருபணனாயிருந்து அபகீர்த்தியடைவர். பிராம்மணகாதகமுடையவர் மகாதோஷம் பாபம் கோபத்தையடைவர். என்றறிந்தயாங்கள் பரி

தனவர்ஜிதம் செய்து பரஸ்திரீவர்ஜித முடையராய்த்தோண்லோகம்பெறுவரொன்றும் சுகுணராயிருந்து சுவர்லோகமும் சாந்தி, சத்யவாக்யமுடையராய் ஜனோலோகம்சேர்வர் தானம்செய்பவர் தர்மசிந்தையராகி சுரலோகபதம் பெறுவர் வைராக்யமுடையோர் க்யானம், விக்யானம், வைகுண்டம்சேர்வர் குருபோதனையால் நியமதவிரதம் தாசோஹம் கைலாசம் சேர்வர் சுகர்மம் செய்பவர் க்ருது ரம்பாசம் போகம்பெறுவர்.

சித்தசுத்தியுடையோர் ஆசாரமுடையராகி தபோலோகம் சேர்வர் தயையுடையர் சத்யம் தபசினால் சத்யலோகம்பெறுவர் கோத்ர ப்ரவர்த்தகர்கள் கோசம்ரக்ஷை கோசிச்ருஷை கோத்ர க்ஷரு இதனால் கோலோகம்சேர்வர் பக்திசெய்பவர் சாலோக்யம் சாமீப்யம் சாரூப்யம் பெறுவர் என்றுணர்வோம் அன்றியும் தைர்யம் மனோசுத்தி பூலோகத்திருப்பர் சங்கல்பமுடையர் புவர்லோகத்திலும் சுகமுடையர் கீர்த்தி நீதி சித்தம் தானம் நதி புத்தி சுபுத்தி கங்காநதி மனசு ஆதானம் ப்ரத்வி யமுனா தான்யம் பக்தி சரசுவதி வாயு உபதானம் ஆயு அந்தகஹ துச்சிந்தை பித்து ஆனந்தம் சத்வம் தமஹு ரஜஹ இத்தியாதிநன்மை தீமைகளையும் அறிவோம் வந்தவிருந்தினரைவைத்து உண்பவர் பந்தியில் வஞ்சனைசெய்பவர் தந்தைதாய்க் குணவிடாதவர் அவர்களைவணங்காது சிந்தைசெய்பவர் சிவபூஜைசெய்யாமல் சாப்பிட்டவர் நல்வினையால் செல்வமுற்றவனைக்கண்டு பொறாமைகொள்பவர் அவனைக்கண்டு சந்தோஷியாதவர் கன்றுக்குப்பால் விடாமல் கறந்துகொள்பவர் செய்நன்றிமறந்தவர் நடுநிலைதவறினவர் உயிர்பதைக்கக் கொன்றுபார்ப்பவர் அடைக்கலமென்றவரை காக்காதவர் கொடுக்கிறேனென்று ஆசைகாட்டிமோசஞ் செய்தவர் கொடுப்பவரை கொடுக்கவொட்டாமல் தடுப்பவர் பாவவினையென்றறிந்தும் செய்பவர் நட்பினரைவஞ்சிப்பவர் குருவுரைகடப்பவர் பெரியோரைக் கண்டு எழுந்திராதவர் கள்ளத்தனமாய்கரப்பவர் இரவினில்வந்தவர்க்கு இடங்கொடாது அகற்றினவர் எதிரில்புகழ்ந்து பின்னால்இகழ்பவர் தன்சுற்றத்தார்வருந்த தான் வாழ்பவர் அடைக்கலப்பொருளைகவர்ந்தவர் துன்புறுந்தொழிலைச்செய்பவர் உயர்ந்தகற்புடையஸ்திரீ கற்பழிக்கநினைப்பவர் வயலில் ஆற்றில் நந்தவனத்தில் ஆலயத்தில் ஜலமலங்கழிப்பவர் தனிவழிபோகல் கீழ்மையோரிடத்து ஏவல்செய்பவர் கூலிவேலைசெய்து ஜீவிப்பவர் பிறர்குற்றத்தை தேடி பிறரோடுஇகழ்பவர் கோபங்கொண்டு முறைவழுவாக கொடுஞ்சொல் சொல்பவர் மனைவிசொல்கேட்கும் அறிவிலாதவர் சினே

இதர் ஞன் அது கலகஞ்செய்பவர் சாஸ்திரத்தில் இல்லாததைச் சொல்வா நல்லவைகளை குற்றமென்றுஇகழ்பவர் மெலிந்தவனை ஏளனஞ்செய்பவர் பயமுறுத்துபவர் தவத்தைஇகழ்பவர் பாபவினைகளைச்செய்பவர் கற்றவரையிகழ்ந்தவர் கல்விகற்காதவர் சரணடைந்தவனை கைவிட்டவர் புத்திசொல்பவனை இகழ்பவர் சூதாடல் நன்னெறிசேராது மூர்க்கமுறல் நன்றிமறத்தல் தன்மனைவியர் துயருறவேசியைப்புணர்பவர் பிறர்பழியுரைத்தல் பொய்யுரைப்பவர் மைந்தனையகற்றிவிடல் மடிநழுவு பெண்களைநோக்கல் ஜபம் தபம்விடுத்தல் சாலை சத்திரம் அழித்தவர் அரசனாணைகடந்தவர் நாற்சந்தியில் இருக்கும் தருக்களை ஆவுருஞ்சியை தடாகத்தை கூபத்தை அழித்தவர் சிவனைவணங்காதவர் தத்தாபகாரஞ்செய்தவர் வேட்டகத்திலிருந்துண்டவர் ஆடையில்லாமல் புனலில் ஆடினவர் பிறரைப்பயப்படுத்தினவர் சாஸ்திரங்களைமறந்தவர் இரப்பவர்க்குப் பிச்சையிடாதவர் சகோதரர் கூறுஅபகரித்தவர். இது முதலானபாவத்தைச் செய்தவர்கள் அடையும்கொடியநரகத்தில் சேரக்கடவோமென்று அம்மையப்பர் சந்நிதியில் சத்தியஞ்செய்தார்கள் அன்றியும் அதுகேட்டசெட்டி தனக்குமாத்திரமல்லாமல் இந்த எழுபதுபேருக்கும் காலங்குறுகிவிட்டதேயென்று ஆச்சரியமுங் கவலையுங்கொண்டு சும்மாவிருந்தான் பொழுது போய்விட்டமையால் இன்றிரவு இங்கேயேஇருங்கள் நாளைக்கு ஊருக்குப்போகலாமென்று சொல்லி இவர்களைவிடடுக் கதவைபூட்டிக்கொண்டு சிலர் இவர்கள்செயலையறியும்பொருட்டு வெளியேபதிவிருந்து பார்த்தார்கள் இச்செயல்தெரிந்த நீலி செட்டியைப்பார்த்து என்பத்தாவேநீர் என்மேல்வைத்திருந்த பிரியத்தைமாற்றிவிட்டீர் அன்றியும் என்னைக்குழந்தையுடன் காட்டில் அலையவிட்டீர் உமதுபிரியம்போல வேசையைக்கூடி வாழத்தடையென்ன என்னைவருத்துவது தருமமா இந்தப்பிள்ளை முகத்தைப்பார்த்திரங்கியாவது எங்களைக்கொண்டுபோய்வீடு சேர்த்துவிடும் சுவாமியென்று அவனது பிணக்குத்தீர்ப்பவள்போலக்கெஞ்சிகெஞ்சிப் பேசினாள் இச்சொற்களைப்பதிவிருந்த வேளாளர் கேட்டு நம்பிக்கையும் சந்தோஷமுங்கொண்டு இனிச்செட்டிக்குசமாதானம் பிறக்குமென்று தீர்மானித்துக்கொண்டு போய்விட்டார்கள் செட்டி அடிநீலி நீ யென்னைக்காட்டிலும் சபையாரிடத்திலும் பல ஜாலங்களைஎல்லாங்காட்டினாய்காலைச்சுற்றிய பாம்புகடிக்காமல் விடாது இனி நீ காட்டில் பழிவாங்குவேனென்று சொல்லினையே அதென்ன சொல்லென்றுகேட்டான் நீலி சொல்லுகிறாள் முன்னாளில் கச்சிப்பதியில் ஞானதிபன் என்னும்வேதியர்புத்திரர் புவனம

தியென்பவர் நீர் மனைவியைப்பிரிந்து காசியாத்திரை யெய்தினீர். அங்கே சத்தியக்ஞானியென்பவர் குமாரி நவக்கியானி என்கிற என்னை விவாகஞ்செய்து சிலநாள் வாழ்ந்திருந்து என்வயிற்றில் ஐந்துமாதக்கருப்பமுண்டான உடனே கச்சிப்பதிக்குப்போக இச்சைகொண்டு சேதுஸ்நானம் பண்ணப்போகவேண்டுமென்று என்ஜேஷ்டசோதரன் சிவக்கியானியைதுணையாகவர மூவரும் காசியிலிருந்து பிரயாணஞ்செய்து திருவாலங்காட்டுக்குவந்து சேர்ந்தபோது உமக்குமுன்கொண்ட மனைவிமேற்காதலாகிகூடவந்த மறுமணாட்டியாகிய என்னை கொல்லச்சமயம் பார்த்திருந்து தமயன் வெளியேபோயிருந்த சமயம் யான் நித்திரைசெய்கையில் என்னைக் கொலைசெய்து சிசுவையும் வதைத்தீர் உடனே சிவக்கியானிவந்து தங்கைமடிந்த செய்திதெரிந்து தானேதன்னைக் கொலைசெய்துகொண்டு இறந்தான் நீர்தந்தை தாய் மனைவியரைச்சார்ந்து சுகித்திருந்து இறந்தீர் நீர்இந்தப்பிறப்பிலே செட்டியாய்ப்பிறந்தீர் நானும் என்தமையனும் அலகைகளாகித்திரிந்து புரிசைக்கிழானுக்குப் பிள்ளைகளாகி நீலனும் நீலியுமென்று ஆரணியத்தில் சஞ்சரித்திருக்கையில் என்தமையன் மடிந்து கயிலைசேர்ந்தான் நான் திருவாலங்காட்டில் காத்திருந்து இப்போது நான் உம்மைப்பழிவாங்கச் சமயம்நேரிட்டது என்றாள்.

செட்டி அதுகேட்டு நியாயந்தான் என்று துணிந்து கடன்காரருக்குக் கடனும் பழிக்காரருக்குப் பழியும் கொடுக்கவேண்டியது அவசியமும் நியாயமுமாம் வேளாளரைப் பழிவாங்கக் காரணமென்னவென்று கேட்டான் நீலன்வசித்த வேலமரத்தை வெட்டி அதுகாரணமாக அவனுக்கு மடிவுநேர்ந்தமையால் பழயனூர் வேளாளத்தலைவர் எழுபது பேரையுங் கொன்று என்தமையன் பழிவாங்குவேன் என்று சபதஞ்செய்துக் கொண்டேன் என்றுசொல்லி உமக்குகாலமும் முடிந்து நீரும்மாளவந்தீர் இதறியாத உலகமாந்தர் நீலிநீலியென்ன வசைச்சொல்லப் பேரெடுத்தேனென்றாள் இதுசெட்டி கேட்டுத்துணிந்தான் உடனேநீலி பேயுருவங்கொண்டு நெட்டுயிர்ப் பெறிந்து பல்லை நெறநெற வென்று கடித்து கையைமுறுக்கி யொருகுத்தில் தள்ளி செட்டிவயிற்றைக்கிழித்துக் குடலைப்பிடுங்கி மாலைப் போட்டுக்கொண்டு முகட்டைப்பேர்த்துக்கொண்டு வெளிப்பட்டாள் விடிந்தவுடன் நீலிசெட்டியின் தாய்போலக் கிழவுருவங்கொண்டு விடிவதன்முன்பழயனூரில் வந்து ஐயோ தெய்வமே என்அருமைமகனைப் பழயனூரார் கொ

ன்றூர்க யோ வென்று கதறிஅழுதாள் அவ்வழுகுரல்
கேட்டு ார் வேளாளத்தலைவர்கள் வந்துகூடி விசாரிக்கக்
இழந்த னைவன்அருமைமகனோடு நடக்கமாட்டாமல் பிந்திவந்தேன்
முதலினைவந்த மகனைத்தொடர்ந்து வந்தபேயோடு சேர்த்து ஒரு
அறையில் அடைத்து வைத்தீர்களாம் அந்தப்பழிக்காரப்பேய் என்
மகனைக்கொன்றுவிட்டுப்போய்விட்டதே இனிநானென்ன செய்வேன்
என்றுசொல்லியழுதாள். வேளாளர் கோயில்வந்து செட்டிவயிறு
பீறுண்டு மடிந்துகிடப்பதையும் பெண்ணுருவமும் குழந்தையும்
காணாமையையும் முகடுபிளந்திருப்பதையுங் கண்டு செட்டிசொல்
மெய்யாச்சு இனிநமது சொல்பொய்யாது என்று எல்லோரும்
சங்கேதப்படி உயிர்கொடுக்கத்துணிந்து தம்தம் வீடுகளுக்குவந்து
மனைவிமக்களுக்கு உறுதிமொழிகள் சொல்லிவிட்டு பலவகைவாத்
திய முழக்கத்துடன் கிராமபிரதக்ஷணம்செய்து அம்மையப்பர் கோ
விலில்வந்து செட்டிபிணத்தை நீராட்டியலங்கரித்து ஆடம்பரத்
துடன் பூந்தேரில்வைத்துத் தாமேசுமந்துக் கொண்டுபோய் அம்மை
யப்பர் கோவிலுக்குச் சமீபத்தில் தீக்குண்டம்வளர்த்துச் செட்டியை
த்தீயிலிட்டுத் தாமும்குண்டத்தை வலஞ்செய்து ஒருவரையொருவ
ராகக் கைகோர்த்துக்கொண்டு ஒவ்வொருவராகக் கணக்கிட்டு அறு
பத்தொன்பதின்ம ரொன்று எண்ணிக்கொண்டு தாமரைமலர்ந்த தடா
கத்திலிறங்குவதுபோல எல்லோருந் தீக்குண்டத்திலிறங்கிக் கைலா
யங்காணியாகக் கொண்டார்கள் தீக்குண்டத்தில் விழுந்திறந்த அறு
பத்தொன்பதின்மரோடு எழுபதாவானாகிய மற்றொரு வேளாளன்
விடியசாமத்துக்கு முன்னேயே எழுந்து தூரத்திலிருந்த வயலைப்
பார்க்கச்சென்று மடியாதிருந்தமையால் அவனையுங்கொல்ல நினை
த்து நீலிஅவன் மகளைப்போலுருக்கொண்டு சோறுகொண்டு போ
வதுபோலப்போய் அவனுடன் ஊரில்நடந்த விருத்தாந்தங்களைச்
சொல்ல அவனும்உடனே கலப்பையில்இருந்த கொழுவைப் பிடு
ங்கிக் குத்திக்கொண்டான் பழயனூர்வேளாளர் அவனையுங்கொண்டு
போய் அக்கினிகுண்டத்திலிட்டு தகனஞ்செ
ய்துவிட்டு செட்டிக்குச் சம்பவித்த செய்தியையும் அவன்பொரு
ட்டுப் பழயனூர் வேளாளர்எழுபதுபேர் அக்கினிப்பிரவேசஞ் செ
ய்ததையும் சவிஸ்தாரமாக ஓலையிலெழுதி காஞ்சீபுரத்திலிருந்த தரி
சனசெட்டி மனைவிக்கு அனுப்பினார்கள் செட்டிமனைவி எனது
நாயகன் இறந்தபின் உயிர்வாழமாட்டேன் அவருடன் நானும்மடி
வேனென்று பழயனூருக்குவந்து தெய்வங்கள் பெரியோர்களை வண

ங்கி அக்கினிப்பிரவேசமானுள் நீலியின்சிலநாட
பதவியடைந்தாள். திருந்து

வரலாறு சேக்கிழார் புராணம்.

மாறுகொடு பழயனூர் நீலிசெய்த
வஞ்சனையால் வணிகனுயிரிழப்பத்தாங்கள்
கூறியசொற்பிழையாது துணிந்துசெந்தீக்
குழியிலெழுபது பேருமூழ்கிக்கங்கை
யாறணிசெஞ் சடைத்திருவாலங்காட்டப்ப
ரண்டமுறநிமிர்ந்தாடு மடியின்கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமையெம்மாற்
பிரித்தளவிட் டிவளவெனப் பேசலாமோ

## தேவாரந் திருப்பதிகங்களிலும் புகழ்வதென்பது.

இன்னும்புகழ்நிற்க வூர்பழிக்காம லெழுபதின்மர்
துன்னுந்தழல்புக் கொளித்ததெல்லாஞ்சுரு திப்பொருளா
யுன்னும்புரிசைத் திருவாலங்காட்டி னுடைபதிக
மன்னுந்தமிழில் வகுத்ததன்றோதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

இக்காலத்தும் எக்காலத்தும் புகழ்நிலை நிற்கவும் அக்காலத்தும் ஊரார்பழிக்காதிருக்கவும் நீலியாற் கொல்லப்பட்ட செட்டியின் பொருட்டு வேளாண்மாக்களுள் எழுபதுபேர் பிழம்புசெறிந்த அழற்குண்டத்து வீழ்ந்து முடிந்தசெய்தியனைத்துந் திருநெறித் தமிழ் வேதமென்று யாவரானுங் கருதப்படுகிற திருமுறைகள் உயர்ந்தமதில்சூழ்ந்த திருவாலங்காட்டில் வேதப்பொருளாகிய சிவபெருமானைத் திருஞானசம்பந்த சுவாமிகள்பாடியருளிய திருக்கடைக்காப்புப்பதிகத்திற் சொல்லப்பட்டமையால் அனைத்துச்சிறப்புடைய வேளாளர் மரபினர்வாழ்வது தொண்டைமண்டலத்தின் கண்ணே. ரு - கஉ இந்தபாடல்களின் உதாரணத்தாலுங் காண்க. (ருஅ)

## மூவேந்தரை வென்றேனென்பது.

போனத்தினுலோர் புறவினையேற்றவன் போலவுமோ
ரேனத்தினுலெதி ரேற்றவன்போலவு மேன்றுகொண்ட
மீனத்தினன்மற் றொருகோடிசெம்பொன் விலைகொடுத்த
மானத்தினுலும் வலியதன்றோதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

நமனை வந்தடைந்தமையால் புறாவிற்கபயங் கொடுத்துக்காத்த
சிபிச்சக்கரவர்த்தியைப் போலவும், ஓர்பன்றியின் பொருட்டாகச்
சிவனை நோக்கி யுத்தஞ்செய்த அருச்சுனனைப்போலவும் தன்னை
யடைந்திருந்த மானம் (பெருமை) சிதையாமைக்காக மீனக்கொ
டியையுடைய பாண்டியனைச் சிறைப்படுத்தி அவனால் அபராதமாகக்
கொடுக்கப்பட்ட கோடிசெம்பொன்னைப் பெற்றுக்கொண்டு சிறை
விடுத்த வலியனாகிய "ஏகம்பவாணன்" என்னும் வேளாண்குடிப்
பிரபுவிருந்தது மித்தொண்டைமண்டலத்திலே யல்லவோ (ரு௰)

(கதைவருமாறு)

குலோத்துங்க சோழன் காலத்தில் சேற்றூரிலே "வீறுசான்
மன்னர் விழையுங்குடியுள" என்றசான்றோர் சொல்லுக்குதாரண
மாகச் செல்வமுதலிய வற்றுடையனாய வாணபூபதி என்னும் வேளாண்
குடிப்பிரபு ஒருவனிருந்தான் அவனுக்குத் தவப்பயனாக ஏகாரான்
குழந்தைபிறந்த ஒருவருடத்தில் தன் மனைவிமுன்னிறந்துபோகத் தா
னுமிறக்க நேரிட்டகாலத்தில் தனமடைந்தோனோடொத்த நண்பனும் பண்
ணைக்காரனுமாகிய 'ஏகன்' வசத்தில் தன் குழந்தையையும்' சேம
நிதிமுதலிய செல்வப்பொருள்களையும் ஒப்புவித்து விட்டிறந்து
போயினன் பின்பு ஏகன் சாம்பன் அக்குழந்தைக்குத் தக்கவாக்களைக்கொ
ண்டு பால்முதலியகொடுப்பித்து இரவு பகல் இடைவிடாமல் காத்து
பண்ணையமுதலியவற்றையுஞ் சீராகப் பரிபாலித்தும், குழந்தைக்கைந்
துவயதானபோது இக்குழந்தைக்கு நல்லாசிரியரால் கல்வியயிற்றவே
ண்டுமென்றெண்ணிக் கம்பரிடத்துக்கொண்டுபோய் விட்டு, இவ்விள
ம்பிரபுவைக் கல்வியால் பெரும்பிரபுவாக்குதல் தங்கள்கடமையெ
ன்று சொல்லிகையடைகொடுத்து, வேண்டுந் திரவியமுங்கொடுத்
த்து மேற்பார்த்து காவல்செய்துவந்தான் அக்குழந்தை
பதினாறுவயதளவும் கம்பரிடத்துக் கலைகளைச் சம்பிரதாய
வழுவின்றியையந்திரிபறக்கற்றுக், கலாநிபுணத்துவம்
ரசபாவியத்துவம் வியவகாரசாதுரியம் முதலியகுணங்களிலெல்லாம்
நிறைந்து சமர்த்தனானான் ஏகன்வந்து மணிபொன் பூஷணவஸ்தி
ராதிகளை தட்சணையாகக்கம்பருக்குப் போதும் போதுமென்னுமட்
டுங்கொடுத்து, ஆசிர்வதிப்பித்துக்கொண்டு; பிரபுகுமாரனையழைத்
துப்போய்ச் சேமநிதியொழிய மற்றைத்திரவிய பொக்கிஷங்களை
யும் நிலபலாதிகளையும் ஒப்புவித்து அவற்றை நடத்தவேண்டிய

முறைகளையுமுணர்த்திவிட்டு, இனியென்சுமை யொழிந்தது எங்கள் பிரபுவே இனியெனக்கு விடைகொடுக்க வேண்டுமென்று விநயமாகக்கேட்டான் அதற்குப் பிரபுகுமாரன் பெரியோய் உம்மையன்றி யெனக்குத் தந்தையும் தாயும் சுற்றமும் யாவர், நீயென்னைக்கை நெகிழ விட்டுவிடுவது தருமமன்று, முன்போலவே எப்போது மென்னை பாதுகாத்துக்கொண்டிருக்கவேண்டுமென்று விநயமாகக் கேட்டுக் கொள்ள ஏகனுமவ்வாறே யிருந்து முன்போலத்தன் காரியங் களைப் பார்த்துக்கொண்டிருந்து நாட்செல்லுகையில், பிரபுகுமாரன் தாய்தந்தையற்ற குழந்தையாகிய தன்னை அவரினும் அநேகமடங்குஅதிகமாகக்கவலைகொண்டு வளர்த்து இந்நிலைமையிற்கொணர்ந்தமையால் ஏகன் பெயரின் கடையெழுத்தொழிய முதலிரண்டெழுத்தையும் முதலசையாகவும் கல்விகற்பித்து அறிவுண்டாக்கி யுலகத்தையுணர்த்தினமையால் கம்பர் பெயரில் முதலெழுந்து மீற்றெழுத்து மொழிய இடையிரண்டெழுத்துகளும் இரண்டாமசையாகவுந் தன்னைப் பெற்றமையால் தந்தைபெயரை மூன்றாமசையாகவும் காரணகாரிய முறைப்படிச்சேர்த்துத் தனக்கு (ஏகம்பவாணன்) 'ஏகம்பவாணன்' எனப்பேர் தரித்துக்கொண்டு, ஏகனைத் தந்தையாகவே பாவித்து அவன் சொற்படி சிறிதும் வழுவாமனடந்து வந்தான் இவ்வாறுநிகழுங்காலத்து ஏகன்தனது பிரபுவாகிய ஏகம்பவாணனுக்கு ஒத்தகுடியில் கல்வியறிவு கற்ற நல்லொழுக்கம், வனப்புமுதலிய நற்குணங்களாற் சிறந்தபெண்ணைத் தானே தெரிந்தெடுத்து மணம்புரிவித்தான் சதிபதிகள்இன்பக்கடலுளாழ்ந்துவாழ்ந்திருக்கும் நாள்களிலோர்நாள், ஏகன்ஏகம்பவாணப்பிரபுவைத்தனிமையாகஅழைத்துக்கொண்டுபோய் என்பிரபுவே இன்னுமொருசுமை யெனக்கிருக்கிறது அதைநானின்னமுஞ் சுமக்கமுடியாதுஎன்சொல்லையபிமானித்து அதையும் நீரே சுமந்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லிச் சேமநிதியிருக்குமிடத்திற்கொண்டுபோய், இவ்விடத்திலேதான் உமது முன்னோர்யாவருந் தேடிவைத்த திரவியமெல்லாம் சேமித்திருக்கின்றன. அத்திரவியத்துக்களவில்லை, வேறு ஒருவருக்குந்தெரியாது உமக்குத்தக்கபுத்தியும் சக்தியுமுண்டானபின் காட்டும்படி யெனக்குக்கட்டளையிட்டு உமதுதந்தை பூரணமடைந்தார உமக்கு அவசியம் நேரிட்டகாலத்திலிதை யெடுக்கலாமென்றுசொல்லி யொப்புவித்தான். ஒப்புக்கொண்ட ஏகம்பவாணன் ஒருநாள் சேமநிதியறையைத் திறந்துபார்க்கவெத்தனிக்கையில், அதனைக்காத்திருந்தபைசாசம் எதிர்பட்டு, இங்குள்ளதிரவியங்களுக்கு உடையவனீயே ஆயினும் நான்நெடுங்கால

ங்காத்திருந்ததற்குப் பயனில்லாம லுனக்கு விடமாட்டேன், பயன் என்னெனில் ஏகபுத்திரனும் சத்தியசம்பன்னனுமாகிய ஒருவனை பலியாகக்கொள்ளுவது. இத்தன்மையுள்ள வொருவனை யெனக்குப் பலிகொடுத்தால் இத்திரவியமெல்லாமுன் னுடைமையாவதன்றியும், நானு முனக்குவேண்டியபோது ஏவல்செய்துக்கொண்டிருப்பேன் என்றது அதுகேட்டு ஏகம்பவாணன் திடுக்கிட்டு, இதற்கு யாரைத் தேடிக்கொண்டுவந்து பலிகொடுப்பது இப்புதையலில்லாமல் நமக்கெ ன்னகுறையிருக்கிறதென்று நினைத்துப் பின் பொன்றுஞ்செய்யாம ற் சும்மாவிருந்துவிட்டான்.

சிலநாள்சென்றபின் ஏகன் சாம்பான்பிரபுவே சேமவறையைத் திறந்துபார்த்தீரா என்றுகேட்டான். அதற்கு ஏகம்பவாணன் ஆம், திறக்கவெத்தனித்தேன் அங்கோர்பேய்வந் திப்படிசொல்லிற்று என்று அப்பேய் சொல்லியவற்றைச் சொன்னான். அதுகேட்ட ஏகன் இத ற்குமலைவானேன். நான் ஒருதாய்க்கு ஒரேமகன், என்மனதறிந்தமட் டும் சத்தியவழியிலேயே நடந்திருக்கிறேனென்று நம்புகிறேன். என் னைப்பலிகொடுத்துவிட்டு அப்பொருளையும் பேயையும் ஆளுமென்றான் அச்சொல் செவிபுகுந்தமாத்திரத்தில் ஏகம்பவாணன் இடிஓசைகேட் ட நாகம்போலத் திடுக்கிட்டுப் பிரமித்து மயங்கித்தெளிந்து பெரு மூச்சுவிட்டு, ஐயனே உம்மைப்பலிகொடுத்து அப்பொருளை அடை வதிலும் என்னையே பலியாகக் கொடுப்பது நன்றல்லவோ? இச் செல்வத்திற் கெல்லாங் காரணத் தந்தை நீ ரன்றி வேறுயார் தந்தை யைக்கொன்று பெருஞ்செல்வனாகி வாழ்வதினாலுண்டாகும் இம்மைப் பயனிலும் தந்தையைவழிபட்டுத் தரித்திரனாயிருப்பதனா லுண்டா கும் பயன் தீயதாமோ? எனக்குச்சேமநிதிமாத்திரமல்ல எல்லாப் பொருளையுமிழந்து விட்டாலும் அச்செய்தியைகனவிலும் நினையேன் உம்மைப் பிராணனோடு கண்ணாரப்பார்த்துக்கொண்டிருப்பதே யெ னக்குப் பெருஞ்செல்வவாழ்வு ஆதலால் அப்பொருளெனக்கு வேண் டுவதில்லையென்றான்.

பின்னும் ஏகன் என்குலதெய்வமே கிழப்புலையன் சொல்லையுஞ் சற்றுச்சிந்தைசெய்யவேண்டும் யானோகிழவனாயினேன் இனிநானிரு ப்பதனாலும் ஒருபயனுமில்லை எனதுசாவும் வீணனசாவே இப்படி யாக என்மரணம் உமக்குப்பெறலரும் பயனைத் தருமானால் என்மன மும் பெருங்களிப்படைந்து, எனது பாவப்பிறப்புப்புண்ணியப்பயனை டையுமே; இப்பெரும்பயனை யெனக்குக்கொடுக்கப்படாதா என்றான்

ஏகம்பவாணன் நான்அச்செல்வத்தையும் உமதுமரணத்தையும் வேண்டிலேன் இனியதனை நினைப்பதில்லையென்று சொல்ல, இருவருந் தங்கள் காரியங்களிற் சென்றனர்.

மறுநாளிரவில் அர்த்தசாமத்தில் ஏகன் எழுந்து சேமமிருப்பிடஞ்சென்று, ஓ புதையல்காக்கும் பூதமே நீ கேட்டுக்கொண்டபடி இதோநான் உனக்குப்பலியாகிறேன் இனி நீ உனதுகாவலிலிருக்கின்ற திரவியங்களையெல்லாம் எனது ஆண்டவனுக்கு ஒப்புக்கொடுத்துவிட்டு நீயும் என்னைப்போல ஏவல்செய்துகொண்டிருக்கவேண்டுமென்று சொல்லிவிட்டுக் கையரிவாளால் கழுத்தை அறுத்துக்கொண்டிறந்தான் உடனே அப்பேய் ஏகம்பவாணனைவந்தெழுப்பி ஓபிரபுவே நான்பலியேற்றுக் கொண்டேன் உனது உடைமையை நீயேஒப்புக்கொள் எனக்கென்னடணிவிடை கொடுக்கிறாயோ வதனைச் செய்திருப்பேன் என்றது.

ஏகம்பவாணன் அதுகேட்டுத் திகிலோடெழுந்து விரைந்துபோய் அவ்விடத்தில் ஏகன் கழுத்தரிந்துகொண்டிறந்து கிடப்பதைத் தீவர்த்திவெளிச்சங்கொண்டு பார்த்தவளவில், அடியற்றமரம்போ லவன் மேல் வீழ்ந்து எனது ஜென்மாந்தர தபோபலனே யுருக்கொண்டு வந்த என்னப்பனே இவ்வுலகத்துள்ள அநேகாநேகருள் ஏகனே எனக்கனேகந்தந்தையும் உறுதிச்சுற்றமும் உற்றதுணையுமென்று பெருமகிழ்வு கொண்டிருந்தேனே; உனது பெரும்புகழை நிலைபெற நாட்டி, எனது பெரும்பழியை யுலகறியக்காட்டி, என்னெஞ்சில் வடவனலைமூட்டிச், சந்தாபத்தால்வாட்டித், துக்கசாகரச்சுழலிலென்னை யாட்டிவிட்டுப்போயினையே உன்னாலேகிடைத்த இவ்வுலகவாழ்வு நீபோனபின்பு எனக்கேன் இதோ நானும் உனக்குத்துணைசெய்யவந்தேன் வந்தேனென்று கதறிக்கலுழ்ந்து மூர்ச்சையடைந்தான்.

அவனைத்தொடர்ந்துசென்ற அவன்மனைவியு மழுது பரிதபித்துத் தேறித் தன்நாயகனையுபசரித்து மூர்ச்சை தெளிவித்துந்தேற்றவொருவாறு தேறித்தந்தைக்குச்செய்யுங் கடமையனைத்தையும் ஏகனுக்குச்செய்து முடிப்பித்து, நாளடைவிலேதேறி இல்லறம் நடத்தி எண்டிசாமுகங்களிலும் தனதாக்கினை செல்லவாழும் நாளில்.

பாண்டியன் தனதுதேசத்து எல்லைவரையறைப்பற்றிய வழக்கைத் தீர்த்துக்கொள்ளச் சேரசோழரிடத்துவந்து அழைத்துக்கொண்டுபோய் எல்லை வரையறுத்துக்கொண்டபின் மூவருங்கூடி சோழசமஸ்தானத்துக்குவந்து பலதலங்களைச்சுற்றித் தரிசித்துக்கொண்டு

வரும்போது, ஆற்றூரிலே யெண்டிசையினுங் கீர்த்திபரந்த ஏகம் பவாணப்பிரபு வீட்டிலவனைப்பார்க்கும்படி வந்து விசாரித்தார்கள் அவனது மனைவி முதல்வர் கழனிபார்க்கப் போயிருக்கின்றார் என்று ஏவலாளராலறிவிக்க அதுதெரிந்த மூன்றரசருள் சேரசோழர்நாம் வந்தபோதிருந்து நம்மையுபசரிக்கவில்லையே யென்று ஆயாசங்கொள்ளப், பாண்டியன் அகங்கரித்து "மூப்பர்நாற்றுமுடிபிடுங்கி நடப் போயினரோ" என்று ஏளனமாகச்சொல்ல, ஏவலாளராலது தெரிந்த ஏகம்பவாணன் மனைவி சினங்கொண்டு.

வெண்பா.

"சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
யானை மிதித்த வருஞ்சேற்றில் - மானபரன்
மாவேந்த னேகம்ப வாணன் பறித்துநட்டான்
மூவேந்தர் தங்கண் முடி."

என்னும் பாடலைச்சொல்லி யனுப்பக்கேட்டு மனம்புழுங்கி யரசர்மூவருஞ்சென்றனர்.

வாணன் வீட்டில் வந்தவுடனே மனைவிநிகழ்ந்த செய்தியைச் சொல்ல, மானத்தால் மனம்புழுங்கிக் கண்கள் சிவந்து அவரது செருக்கை யொழிப்பேனென்று கோபித்தெழுந்து. தனக்கடிமையாகிய பைசாசத்தை யழைத்துச் சேரசோழபாண்டியனை யுடனே பிடித்துக்கொண்டுவந்து சிறைச்சாலையிலடைக்கும்படி கட்டளையிட்டான். அப்பேய் உடனே சேரசோழனைப் பிடித்து சிறையிலடைத்துவிட்டுப், பாண்டியனிடத்தில் வேப்பமாலை யிருப்பதாலவனைக் கிட்டவென்னாலாகாது என்றது. சேரசோழர் வேண்டிக்கொண்டமையால் அவர்களைச் சிறைவிடுத்துக், கப்பரிடத்திருந்து நான்குதாசிப்பெண்களை வரவழைத்து, அவர்களுக்கு வேண்டுமான வஸ்திர பூஷணாதிகளைக் கொடுத்துப் பாண்டியன் சபையிற்போய் அவன்மேற்கவிபாடி யவனது கடிப்பகையென்னும் வேப்பமலர் மாலையைப் பரிசாகவாங்கி வரும்படியனுப்பினான்.

அப்பெண்கள் ஆடையாபரணாதி யலங்காரராய்ப் பாண்டியன் சபையிற்போய்க் கையில் வீணையேந்தியவனைச் சிறப்பித்துப்பாட அவனிவர்களுடைய கல்விநயத்திற்காக மிகநயந்து அளவிறந்த விலையுள்ள ஆபரணவஸ்திராதிகளைக் கொடுக்க, அவற்றையேற்காமல், எமக்கு இவையெல்லாம் எமது ஏகம்பவாணப்பிரபு தயையாலளவிறந்தவையுண்டு எம்மையாசிப்போர்க்கு இவற்றினும் பதின்மடங்கு

யாமேகொடுப்போம் யாமிவற்றைக் கருதிவந்தேமல்லம், உமதுவே ப்பமாலையே எம்மால்வேண்டப்படுவது என்று ஒவ்வொருபெண் ணொவ்வொருபாடலாக முன்னர்மூன்றுபேர்.

### வெண்பாக்கள்.

"மாப்பைந்தார்க் கல்லமுத்து வண்ணத்தார்க் கல்லவென்பெண்
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே பூப்பைந்தார்
சேர்ந்திருக்கும் நெல்வேலிச் சீவிலிமா ராதமிழை
யாய்ந்திருக்கும் வீரமாறு."

"தென்னவா மீனவா சீவிலிமா ராமதுரை
மன்னவா பாண்டி வரராமா - துன்னும்
சுரும்புக்குத் தாரளித்த தூய்யதமிழ் நாடா
கரும்புக்கு வேம்பிலையே கண்."

"வேம்பா இலுமினிய சொல்லிக்கு நீமிலைந்த
வேம்பா இலுமுதவ வேண்டாவோ - மீன்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாண் மான்."

என்னும் மூன்றுபாடலைப்பாடப் பாண்டியன்தன் வேப்பமாலை யைகொடுத்துவிடில் பாணன் பேய்வந்து பிடித்துக்கொள்ளுமேயெ ன்றஞ்சிக் கொடேனென்றுமறுத்தால், வரையாது கொடுக்கும்வள் ளற்றன்மையுள்ள நங்குலத்துக் கிழுக்காகுமே, வாணனு லேவப்ப ட்டுவந்த இக்கம்பர்வீட்டு வெள்ளாட்டியர் வேறுகொடையால் மகி ழுஞ்சாமானியரல்லவே, வெள்ளாட்டியர் யாசித்த கேவலப்பொரு ளைக் கொடாதவனும் வள்ளலோவென வுலகம்பழிக்குமேயென்று இவ்வாறு ஆலோசித்துக்கொண்டே யொன்றஞ்சொல்ல நாவெழா திருந்தான் அதுகண்டு மற்றொருத்தி.

"இலகு புகழாறை யேகம்ப வாண
னலகை வரும்வருமென் றஞ்சி - யுலகறிய
வானவர்கோன் சென்னிமிசை வண்கை வளையெறிந்த
மீனவர்கோன் கைவிடான் வேம்பு."

என்னும் பாடலைப்பாடினள் அதுகேட்டுப் பாண்டியன் வெட்கி, இனிநமக்கென்னதீங்கு நேரிடினும் நமது குடிக்கும் கொடைக்கும் பழிப்பில்லாதிருந்தாற் போதும் என்றுதுணிந்து, தனது வேப்பமா லையைக்கொடுத்தனுப்ப. அவர்கள் திரும்பிவந்து ஏகம்பவாணப்பிர புவிடத்தில் மாலையைக்கொடுத்துப் பரிசுபெற்றுப் போயினர்.

பைசாசம் உடனே பாண்டியனைப் பிடித்துக்கொண்டுவந்து சிறையிலடைத்துவிட்டு பிரபுவிடத்தில் செய்திதெரிவித்துப்போயிற்று அப்போது ஏகம்பவாணமுதலியார் சபையில்வந்து யாழேந்தி ஏகம்பவாணனது புகழைச்சிறப்பித்து மங்கலப்பாடல் பாடிய யாழ்ப்பாணனொருவனுக்குப் பாண்டிநாட்டைப் பரிசாகக்கொடுத்தான்.

பாண்டியன் மனைவி அதுதெரிந்து ஏகம்பவாணமுதலியாரிடத்து வந்து அவரதுசெல்வம் அதிகாரம் கொடைமுதலியவற்றின் சிறப்புத்தோன்ற.

"என்கவிகை யென்சிவிகை யென்றுவச மென்றுவசம்
என்கரியீ தென்பரியீ தென்பரால் - மன்கவன
மாவேந்த னேகம்ப வாணன் வரிசைபெற்ற
பாவேந்த ராவேந்தர் பார்த்து."

என்னும்பாடலைப்பாடித் தன்மங்கிலியத்தைப்பரிசாகக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டாள். பாண்டிப் பெருமாட்டிக்குத்தக்க ஆசனமுதலிய கொடுத்திருப்பித்து உபசரித்து அரசனைச் சிறைவிடுத்துக் கொணர்வித்து கொடையால் தனது செல்வத்துக்குமாத்திரமல்ல உயிர்க்கும் இடர்வருமென்று தெரிந்தும் கொடைக்கடன் மறவாத்தடக்கையோர் வள்ளலென்று மதித்து அரசியோடிருக்கச் செய்தலும், பாண்டியரசன்தன் பிழையை யினிமனத்துட் கொள்ளாமல் தன்னைநண்பனாக பாவிக்கும்படி மன்றாடினான் ஏகம்பவாணப்பிரபு உமதுவேண்டுகோளுக்கன்று, உலகமாதாகிய பாண்டியபிராட்டியாரது அன்பின்பொருட்டேயுமக்கு உயிர்ப்பரிசுகொடுத்தனன் என்றான். அதுகேட்டுப் பாண்டித்தேவியார் இப்பிரபுவினிடத்துள்ள செல்வம் அதிகாரம் கல்விகளினும் பிறப்பொழுக்கங்குன்றாமையும் விநயமும், தயாளமும், கொடையும், பிறர்க்குரிய வொழுக்கம் மேன்மைமுதலியவற்றைக் கெடாது பாதுகாத்தலுமாகிய வுத்தமோத்தம குணங்களே மிகச்சிறந்தன எனத்தன்னுள்ளே சிந்தித்து மிகமகிழ்ச்சி கூர்ந்து.

"வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்குஞ்
சுற்றும் பெருநிழலாத் தோன்றுமே - கற்றோர்
திறந்தாங்குந் தாங்குஞ் செகமுழுதுந் தாங்கும்
அறந்தாங்குந் தொண்டை யரசு."

என்னும்பாடலைப்பாட பாண்டியனுமவ்வாறேபயந்து.

"வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை
வாணன் புகழ்க்கெல்லை மண்ணெல்லை - வாணன்
படைக்கெல்லை திக்கெல்லை பைந்தமிழ்தேர் வாணன்
கொடைக்கெல்லை யேற்பவர்தங் கோள்."

என்னும் பாடலைப்பாடினன் பிரபு அவைகளைக்கேட்டு மனங் களித்து மதுரையரசாட்சியை யாழ்ப்புலவனுக்குப் பரிசாக நான் கொடுத்துவிட்டமையால், எனக்கு அவமானமுண்டாக வென்னை யவமதித்துப்பேசிய குற்றத்துக்கபராதமாகக் கோடிசெம்பொன்னை அப்பாணனுக்குக்கொடுதது விட்டு உமது அரசாட்சியைப் பெற்றுக் கொண்டு சுகமாக நீவிர் வாழலாமென்று சொல்லிவிட்டுச் சிலநா ளவர்களைத் தன்வீட்டில்வைத்துபசரித்து, மணி பொன் ஆடையாபர ணாதிகளும் சதுரங்கச்சேனைகளும் பரிசாகக்கொடுத்து விடைகொடு த்தனுப்பினான். அவற்றைப்பெற்று மகிழ்ந்து.

"வாணன் புகழெழுதா மார்புண்டோ மாகதர்கோன்
வாணன் புகழுரையா வாயுண்டோ - வாணன்
கொடிதாங்கி நில்லாத கொம்புண்டோ வுண்டோ
அடிதாங்கி நில்லா வரசு."

என்னும்பாடலைப்பாடி யுபசாரஞ்சொல்லி மகிழ்வித்து விடை பெற்றுக்கொண்டு பாண்டியரசன் தேவியுடன் தன்னகர்சேர்ந்து, பாணனுக்கு கோடிசெம்பொன்கொடுத் துபசரித்தனுப்பிவிட்டுத்தன் னரசாட்சிசெய்து வாழ்ந்திருந்தான்.

இப்பால் ஏகம்பவாணபூபதி கம்பனைதரிசிக்கவிரும்பித் திருவழு ந்தூரிற் சென்று அவர்வீடுசேர அர்த்தசாமம் அப்போது நித்திரை க்குரியகாலமாயிருந்தமையால் வேலைக்காரரொழும்படி கடைவாயிற் கதவை மெல்லெனத்தட்டினான் அச்சத்தங்கேட்டுக்கம்பர் யாவர் கத வைக்கதறுவித்தார் என்றனர், ஆஆ அபசாரஞ்செய்தோமேயென்று துணுக்குற்று ஏகம்பவாணப்பிரபு 'கம்படியான்' என்றான் அதுகே ட்டுக் கம்பருடனே சயனத்தலத்தைநீங்கி.

"பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணற் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை யறியேனோ - மூண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவா ணாவுனது
பேர்மாற் றுவதரிதோ பேசு."

என்னும் பாடலைச் சொல்லிக்கொண்டுவந்து கதவைத்திறந்து

தழுவிக்கொண் டுள்ளேகொடுசென்று இருப்பித்து உண்டி முத லியவற்றாலுபசரித்துச் சேமமுதலிய சுபவிசாரணைகள் செய்து அள வளாச் சிலபகலிருந்து பிரபு தன்னூருக்கேக விடைகேட்கத் தானு முடன்சென்று ஆற்றூர் சேர்ந்து ஏகம்பவாணன் வீட்டில் " ஆற்றுப் படை" என்னும் துறையில்.—

" தேருளைப்புரவி வாரணத்தொகுதி நிறைகள்கொண்டுவரு மன்னரின்- றேயமேதுனது நாமமேதுபுகல் செங்கையாழ்தடவு பா ணகேள் - வாருமொத்தகுடி நீருநாமுமக தேவருறைநகர் காவலன்- வாணபூபதி மகிழ்ந்தளித்தவெகு வரிசைபெற்றுவரு புலவன்யான்- நீருமிப்பரிசு பெற்றுமீளவர லாகுமேகுமவன் முன்றில்வாய்- நிந்தி லச்சிகர மாடமாளிகை நெருங்குகோபுர மருங்கெலாம் - ஆருநிற்கு மொரு வேம்புநிற்குமுயர் பனையுநிற்குமத னருகிலே அரசிருக்குமர சைச்சுமந்தசில வத்திநிற்கு மடையாளமே." என்னும்பாடலையும்.—

"சேற்றுக் கமலவயற் றென்னுறை வாணனையான்
சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன்
அளிக்குமா றெவ்வா றிவன்."

"உலக்குரிய பண்ட முவந்திரக்கச் சென்றாலு
கொலைக்குரிய வேழங் கொடுத்தான்—மலைக்குரிய
வாணர்கோ னுறை மகதேவ னுக்கிந்தப்
பாணன்மே லென்ன பகை."

"இலங்கு பெரும்புகழா னேகம்ப வாணன்
விலங்கு கொடுவருக வென்றான்—விலங்கியபோர்ச்
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விலங்கு." என்னும்:—

வெண்பாக்கள்முதலிய பல பாடல்களையும் பாடிச் சற்காலக்ஷே பஞ்செய்துகொண்டு சிலநாளிருந்து சதுரங்கசேனைசூழ காளைமுத லிய விரசின்னங்களும் பேரிகைமுதலிய வாத்தியங்களுந் தொனிக்கச் சங்கீதவிசை யினிக்க, நாடகமயிலார்சூழப் பாடகப்பெண்கள் தாழ வாணபூபதி யுடன்சென்று வழிகாட்டிவிட்டு வணங்கிவிடைவேண்ட ஆசீர்வதித்து வாழ்த்தி விடைகொடுத்துத் தானும் விடைபெற்றுக கொண்டு கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் தன்வீடுபோய்ச் சேர்ந்தா னும் தன்மனைபோய்ச்சேர்ந்துநெடுங்காலம் வாழ்ந்திருந்தான்

ஆரான்முடியுமிக் காரியந்தோடவி ழாத்திமலர்த்
தாராளனவேம்பின் ஞெடையானைப்பெண்ணையந் தாமனையும்
போராடிக்காவலில் வைத்தவப்பாட்டும் புனைந்ததன்றோ
வாராருமோட்டிளங் கொங்கைநல்லாய்தொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு]

இரவிக்கையணிந்த வுயர்ந்ததனங்களையுடைய நல்லாளே இதழ்விரிகி ன்ற ஆத்திமலர் மாலையையணிந்த சோழனையும் வேப்பமலர் மாலை புனைந்த பாண்டியனையும் பனைமாலைதரித்த சேரனையும் போர்செ ய்து வென்று ஆற்றார் ஏகம்பவாணபூபதி சிறையில்வைத்து இவ் வெற்றியாற் பாமாலைகளும் பெற்ருன் இக்காரியஞ் செய்யவேறு எவர்தரத்தார் இத்தகைய பிரபுவையுடையதல்லவோ வித்தொண்டை மண்டலம். (சுo)

நீளத்திரிந்தென்று வெண்பாவினாலன்று நின்றையர்கோன்
காளத்திவாணனைப் பாடியபாடல் கருதுமண்ட
கோளத்தினுஞ்சென்று பாதாளம்புக்குக் குலவுசக்ர
வாளத்தினுஞ்சென்ற தாலெளிதோதொண்டை மண்டல
மே.

[இதன்பொழிப்பு]

திரு நின்றையூர்க் காளத்திவாணமுதலியார் புலவோரை வறு மையென்னுங் கொடும்பகைவருத்தாமல் ஆதரஞ்செய்து புகழ்பெ ற்றவராதலின், அப்புகழ்தோன்ற வொருபுலவர் (என்னை நட்புகொ ண்டவறுமையே நீ என்னோடுகூடி நெடுங்காலந்திரிந்து வருந்தினா ய் காளத்திவாணனது திருநின்றையூரில் நாளை நான்சென்றால் அப் பால் நீ என்னோடிருக்க முடியாதல்லவா? அதன் பின்னர் நீ எவ் விடமோ நானெவ்விடமோ அறியோம் ஆகையாலின்றைக்கு மாத் திரமாவது என்னுடனிருந்துவிட்டுப்போ என்னும் பொருளடக்கி) நீளத்திரிந்துழன்றாய் - எனமுதலமையப்பாடிய வெண்பாப்பாடல் அ ண்டமுகட்டினுஞ்சென்று பாதாளத்திலும் புகுந்து அமையாமல் சக் கரவாள கிரியையுஞ் சூழ்ந்து கொண்டது அத்தகையபிரபுவை யுடைய வித்தொண்டை மண்டலம் எளிதாமோ. (சுக)

அச்செய்யுள்வருமாறு.

"நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழற்போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி

னின்றைக்கே சென்றக்கா வீயெங்கே நானெங்கே
யின்றைக்கே சற்றே யிரு.''

ஒருபுலவர் நாம் இதுகாறும் காளத்திமுதலியாரை அடுக்காமல் போய்விட்டோம் அவர் நமது தரித்திரத்தை அதஞ்செய்பவர் என்றறிந்தும் (மாணிக்கமுடைய நாகமானது தான்மறைந்திருக்க இருளைத்தேடுந்தன்மைபோலவுந் தற்போதத்தையுடைய ஒருவன் தனக்கு சுகத்தைத்தேடுந் தன்மைபோலவும்) வீணேதிரிந்துழன்று காலம்போயிற்று. பட்சிகளுக்கெல்லாம் உயரச்சென்றுபறக்கும்பக்ஷிராஜனாகிய கருடன்தனக்கு இரைவேண்டும்போழ்து பூமியில்வந்திறங்கி யுணவு பெறுவதுபோல நான்தம்மிடத்தில்வந்து எனக்குவேண்டிய வைகளைப்பெற்று சுகமடையாமல் அலைந்தேன் இனியெனக்கு ஒருக்காலும் துன்பமில்லாமல் தங்களால் சுகத்தையடையப்பெறுவேன் என்பது கருத்து (பாம்பு சிரசில் மாணிக்கம் இருக்கும்போது இருளைத்தேடினால் அதற்கு கிடைக்கமாட்டாவாம்) எப்படி எனில் சர்ப்பமானது பகற்காலமெல்லாம் புற்றுக்குள் மறைந்திருந்து இரவில் உணவுதேடும் பொருட்டு வெளிப்பட்டு தனக்கு வெளிச்சம்உண்டாகும்படி தன்படத்தின் மீதிருக்கும்துவாரவழியாக படத்துக்குள்ளிருக்கும் மாணிக்கத்தை வாயுபந்தனஞ்செய்து அத்துவாரத்தின்வழியாக மேலேற்றி அவ்வொளியினாலேயே இரைதேடியுண்டு பின்னர் பழயபடி யிருளைக்காணாது தேடியலைந்து பூர்வகியாபகம்வந்து முன்போல்சுவாசத்தின் வழியே அம்மாணிக்கத்தை உள்ளிறக்கிக்கொண்டு இருளாகியதன்னிருப்பிடத்தே அடங்கி இருக்கும். (தற்போதததையுள்ள ஒருவனுக்கு போதவறிவுள்ள வரையில் சுகம் சித்திக்கமாட்டாதென்பதாம்.

இந்தவுபமானங்களை ஒழுவிலொடுக்கம் சிவஞானசித்தியார் சுபக்ஷம் பரபக்ஷம் என்பவைகளிலும் காணலாம்.

தரித்திரமானது அணுகாவண்ணம் உலகிலுள்ளமாந்தர்கள் சாக்கிரதையாக கியாபகத்தில்வைத்து நீக்கத்தகுமவைகளை நீக்கவேண்டும் அவைகளாவது துடைப்பத்தினாற்பெருக்குகிறதும்பும் பெண்டுகள்பாத தூளியும் கழுதைதும்பும் ஆட்டின்தும்பும் சாயரக்ஷையில் மந்தைகள் முன்வருந்தும்பும் மேல்படப்படாது தாண்நீழல்கட்டில்நீழல் இரவில் அரசமரத்து நீழலிலும் பகலில் விளாமரத்துநீழலிலும் பனைமரத்து நிழலிலும் ஒருபோதும் போகப்படாது கையலம்பும் ஜலம் நகத்து

சலம் மயிர்நுனி சலம் கைகாலலம்பிய மீதிசலம் பூமியில்விழுந்த வெற்றிலையுமாகாது. உதயத்திலும் அஸ்தமனகாலத்திலும் நித்திரை செய்யப்படாது பிறர்முகந்த சந்தனம் புஷ்பமுமாகாது இதெல்லாம் உண்டானவர்களுக்கு லக்ஷ்மி விலகிப்போவாள் வறுமையுண்டாம் இவைகள் ஏழரையாண்டு சனி அட்டமச்சனியுந் துடருங்கால் புத்திகுறைந்து இதெல்லாம் நேரும் இத்துன்பங்களால் வருந்துங்காலத்தில நளன் தருமர் சீதை டகூரவன் கார்க்கோடகன் தமயந்தி ருதுபர்ன்னன் இவர்களை உதயத்தில் தியானித்தால் கலிநாசம் பாபநாசம் உத்தமவர்த்தனம் கீர்த்தி ஆயுர்வர்த்தனம் உண்டாகும் இவர்கள்தங்கள் பெயரை தியானித்தால் அவர்களை துன்பஞ்செய்யாமல் காக்கும்படி சனீசுவர பகவானிடத்தில் வரம்பெற்றிருப்பதால் குரூரம் சாந்தியாம் இப்படிப்பட்ட கொடியதரித்திரமும் திருநின்றையூர் காளத்திவாண முதலியாரை ஒருபோது நினைத்தமாத்திரத்தில் நீங்கிவிடும் என்பதாம் இதனால் அவ்வூரில் லக்ஷ்மிவாச மாயிருப்பதால் திருநின்றையூ ரொன்பதாம்.

## புலவோரைமகிழ்விப்பரொன்பது.

முழங்குமியத்துட ஞோர்பாவலன்வர முன்னியவன் [புங்
றழங்குஞ்சிவிகையைத் தாங்கிக்கொணர்ந்துபின் ருன்விரும்
கிழங்குடனேயா யிரவகையாங்கறிக் கீரனமும் [மே.
வழங்கும்பெருநகர்ப் பிச்சையப்பன்ருெண்டை மண்டல

[இதன்பொழிப்பு]

பலவாத்தியமுழக்கத்தோடு ஓர் வித்துவானுனவர் தன்னைநாடிவர தான் எதிர்கொண்டு விளங்குகின்ற அவரது பல்லக்கைத்தாங்கித் தனதில்லத்திற் கொணர்ந்து பாதோதகமுதலிய கொடுத்துபசரித்து அவ்வித்துவான் விரும்பியபடி கிழங்குவகைகளுடன் ஆயிரவகைக் கறிகளுடன் கீரைக்கறியுஞ் சேர்த்தன்னமிட்டு மகிழ்வித்த பிச்சையப்பனென்னும் வேளாண்குடிப் பெரியோன் வாழ்ந்த பெருநகரமென்னுந் திருத்தலமும் தொண்டைமண்டலத்துள்ளது. (சுஉ)

## கதைவருமாறு.

மகாவித்துவானொருவர் தென்னாட்டிலிருந்து தலயாத்திரைசெய்துக்கொண்டு காஞ்சிபுரம் தரிசிக்கப் போகும்வழியில் "மாதானை மூதூர், உழுதை, பிரமீச்சரம் பிரமபுரம்" எனப் பெயர்பெற்ற பெருநகரில் பிரமீசனை தரிசிக்கும்பொருட்டுத்தங்கி, அப்பதியில் கல்

விச்செல்வம், பொருட்செல்வம் புகழ்ச்செல்வ முதலியவற்றைத் தனக்கே உரியவையாகப்பெற்று வாழ்ந்திருந்த பெருநகர் வளவர்தை யார் கோத்திரத்துப் பிச்சையப்பமுதலியார் வீட்டைநாடிப் பலவாத் தியங்கள்முழங்கப் பல்லக்குவரிசை செய்துக்கொண்டுவர அதுதெரி ந்த பிச்சையப்பமுதலியார் அவ்வித்துவானை யெதிர்கொண்டு சிவிகை தாங்கித் தனதுவீட்டிற்கொணர்ந்து பாதோதகமுதலியகொடுத்து ஆச னமிட்டிருத்தி யுபசரித்து அமுதருந்தும்படி வேண்டினர். அதற்கவ் வித்துவான் ஆயிரவகைப் பதார்த்தத்துடன் அன்னமிட்டாலுண் போம் என்றார். ஆனாலவர்கருத்து அரைசகீரையுடன் சோறிட்டா லும் உண்பேன் என்பதுதான். அதுகேட்டு முதலியார் சற்றுயோ சித்து நிற்கையில் அவரதுபத்தினியார் இதற்கு யோசிப்பானேன் தடையின்றிச் செய்யலாமென்று குறிப்பித்தமைகண்டு; சித்தத்தி ன்படியேயாகுமென்று சொல்லி அமுதுக்கழைக்க; அவ்வித்துவான் உண்ணுதற்கமையமுதலியார் அவர்க்கு ஸ்நானமுதலியவை செய் வித்துபசரித்து: ஆசனமிட்டு அதன்மீதிருக்கச்செய்ய, அவரதுமனை வியார் தலைவாழையிலையை நீராற்சுத்திசெய்து முறைப்படிவிரித்து பலவேறுவகையாகச் சமையல்செய்த அறுசுவையமைந்த கிழங்குவ கைகளுள்ளிட்டவியஞ்சன பதார்த்தங்களை யெல்லாம் இருக்கை வசதி கைவசதிகளுக்கும். உணவுகிரமத்திற்கும் ஏற்றமுறையே படை த்து அரைக்கீரைக் கறியையும் வலப்புறத்தில் முன்னேபடைத்து சர்க் கரை முப்பழம் தேன் நெய் பால் பாயசம் தயிர்முதலியவற்றோடு அன் னம்படைத்தார் இவ்வாறு ஒருதலையாய்ச் - சதிபதிகளிருவரும் "வலி யன, மெலியன, நீர்த்தன்மையன," என்னும் மூன்றுதன்மைய னவாய், "உண்டல், தின்னல், பருகல்முதலிய நாற்றொழிலா லுட் கொள்ளப்படுவனவாய், "தென்புலத்தார், தெய்வம். விருந்து ஒக்கல் தான்" என்னு மைவகையாரையுந் திருத்தி செய்வனவாய் "இனிப்பு, கைப்பு, உவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு, துவர்ப்பு" என்னும் அறுசுவைநிறைந்து கண்டோராசை மீறி யெழுபதமாய் தன்கைக்கு எட்டினவாய், நவமாய்ச் சமைக்கப்பட்டுப் பத்துதினசயும் பரிமளி க்கும் அன்னமுதலியவற்றையும், அதற்றோடு தன்கருத்தையுணர்த் தும் அரைக்கீரைப்பாகத்தையும் படைத்திருப்பதை வித்துவான்பார் த்து அம்முதலியார் வாழ்க்கைத்துணையாகிய பத்தினியாரது கற்ற நற்குணம் நல்லொழுக்கங்களுடன், சமைத்தற்றிறத்தையும், படைக் குந்திறத்தையும், இவற்றோடு சொல்வோர்கருத்தறிந்து செய்யவல்ல

அறிவின் நுட்பத்தையும், மிகவும் நயந்து வியந்துகொண்டு, போச னஞ்செய்து தாம்பூலமுதலிய உபசாரங்களெல்லாம் பெற்றுக்கொ ண்டு பிச்சையப்பமுதலியார் பேரால் அவரது மனைவியார் பெருமை தோன்ற ஓர் சதகம் என்னும் பிரபந்தம்பாடித் தக்கபரிசும்பெற்று ச்சென்றனர் அப்புலவர்பாடிய சதகத்தில் (பிச்சையப்ப முதலியா ரது மனைக்கிழமைபூண்ட கற்புநாயகியைக் குறித்த பாடல் வருமாறு.

உடையவிழ்ந் தான்கரம் போலுநட் பென்னு 'முயர்மொழியின்
நடையுடை யாய்மிடி யுற்றுழி நண்பர்க்கு நற்றமிழ்ச்சொற்
படையுடை யார்க்கு நிதியா யினைவெள்ளைப் பங்கயத்தின்
பெடையுடை வேதத் தனஞ்சேர் பெருநகர் பிச்சப்பனே (க)

திருமாது போன்று மனக்காவல் கொண்டெற் றெய்வமென்ன
வுருமாறி னுங்கொண்ட கேள்வனைப் பேணி யுவந்துசெல்வம்
வருமா றறிந்தில் லறவியல் வாய்மை வயக்கியபெண்
பெருமா ளிவளல்ல வோவுழு தாபுரி பிச்சப்பனே (உ)

வாடா மலர்க்குழல் வேங்கம்மை வையத்து மாதர்சென்னி
சூடாவெ ழுங்கற்பின் மேலாள் குலக்கங்கை தோன்றியென்ன
நீடா ரழலிற் குளித்தல கேத்திட நிற்பவள்காண்
பீடார் வளவந்தை யாயுழு தாபுரி பிச்சப்பனே (ங)

தெய்வந் தொழாள்கொழு நற்றொழுவாளெனத் தேவர்சொன்ன
மெய்வந்த செப்பிற் கிசைந்தநற் பெண்மணி வேங்கமைதன்
கைவந்த கேளுடன் முப்பா லுலகமுங் காண்பவள்காண்
பெய்வந்த மைம்முகின் மாதானை வாழ்வுறும் பிச்சப்பனே (ச)

குறிப்பிற் குறிப்புணர் வார்தமைத் தேவர் குறளிலெந்த
உறுப்புங் கொடுத்துக் கொளலென்ற சொல்லுக் குதாரணமா
மறுப்பின்றி மன்னனை வண்டமி ழோனை மகிழ்வித்துப்
பிறப்பிலி யாயினை மாதானை மாபுரி பிச்சப்பனே (ரு)

இலனென்னு மெவ்வ முரையாமை யீத லியல்பகலாக்
குலனுடை யான்கண்ண தென்றமைக் கேற்பக் குறித்துவந்த
புலவர்க் குணவிட்டுப் போற்றிய தும்பர் புகழ்வதன்றிப்
பிலமும் புகழ்ந்திடு மூதூர் வளவந்தைப் பிச்சப்பனே (சு)

பாரதிதேவியும் பார்வதி தேவியும் பார்த்தனுக்குச்
சாரதிதேவியுங் கோபதி தேவியுஞ் சாற்றியலாள்

பூரதிசாந்த கலமுடைவேங்கம்மை புண்யவதி
பேரதிகார முடையாய் பெருநகர் பிச்சப்பனே. (எ)

நன்றாய்விளைந்ததை வேதியர்க்கீந்தந்த நன்மையினாற்
பொன்றான்விளைந்திட நெற்போலவேயதைப் போரடித்துக்
குன்றாக்குவித்ததை நெற்பரிமாற்றங் கொடுத்தளித்தான்
மன்றார்களந்தைக் குடிதாங்கியுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

களத்தூரில் குடிதாங்கிமுதலியார் தனது நன்செய்யுள் நன்றாகவிளைந்த நெல்லையெல்லாம் (வேத சாத்திரங்களை யுணர்ந்து ஒழுக்கங்குன்றாமல் பிறவுயிரையுந் தம்முயிர்போலக்கருதி யன்புபூண்டொழுகுமியல்புள்ள) அந்தணர்க்கேதானங்கொடுத்து வந்த நன்மையால் ஒருவருடம் நெற்கதிரெல்லாம் பொற்கதி ராகவிளைய, அப்பொன்னையும் நெல்போலவேயடித்துக் குன்றம்போலக்குவித்துப் பொன்னென்று மதியாமலே நெல்கொடுக்குமளவாகவே தானங்கொடுத்தார் இத்தகைய குடிதாங்கிமுதலியார் வாழ்ந்தது மித்தொண்டைமண்டலத்திலேயே. (சுஅ)

தீஷ்டாந்தம்.

பொன்னெல்லை யெல்லாம் பொதிப்பொதியாப் பூசுரர்க்குச்
செந்நெல்லே போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
சீரார் மணியைவிலை செய்யானுஞ் செய்யகளத்
தூரானுஞ் செய்கரும மொன்று. என்பதனாற் காண்க

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா யாக்கை பொறுத்த நிலம். என்பதாலறிந்துசெய்யும் தருமத்தால் பெற்றபுகழாலும் மேகங்களுக்கொப்பானவர் செய்யுமுபகாரங்கள் பிரதியுபகாரங்களை வேண்டுவனவல்ல முயற்சிசெய்து சம்பாதித்த பொருளெல்லா முபகாரஞ்செய்யும் பொருட்டு விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் உபகாரத்தைப்போல வேறொன்றில்லை உலக வியல்பையறிந்து நடப்பவன் உயிரோடுவாழ்பவன் அவ்வியல்பையறியாதவன் செத்தவனே அறிவாளர்செல்வமானது ஊராருண்ணும் குளத்திலே நீர் நிறைந்தாற் போலும் செல்வ முபகாரஞ் செய்பவரிடத்திலுண்டாகில் நடுவூரிலே மரம்பழுத்தாற்போலும் என்றிவையெல்லாம் ஓதிகற்றுணர்ந்தோனுதலாலும் பொருளை லக்ஷியமாகவெண்ணி யறியாதவனாகையாலும் இப்படி பொன்னெல்லையெல்லாம் நெல்லாகவே கொடுத்

தானென்பது வயலில் பொன்விளைந்தகாரணத்தால் அவ்வூர்க்குப் பொன்விளைந்த களத்தூரெனவும் பெயர்வழங்குகின்றது.

**மேன்மேலுங்கொடுக்க விரும்புவர் என்பது.**

கடைவாயிலினின் றியாசகர்கூப்பிடக் காதிலது
தடையாகவெம்பசி யால்வருந்தாமற் றடையகற்றி
அடையாதவாச லுடையானெனும்பெய ராதரித்தான்
மடையார்கழனி யிடையாலத்தான்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

யாசகர்கள்வந்துகடைவாயிலிலேநின்றுபசித்திருக்கிறோமென்று கூப்பிட்டுச்சொல்லுஞ் சொல் தனதுகாதுகளில் கேட்பதின்றி யச்சொல் தடைபடும்படியாயும், அவர்கள் பசியால் வருத்தப்படாமலுண்டு மகிழ்ந்துபோம் படியாயுஞ் சத்திரம் மாளிகைகளின்வாயில் களிலெவ்வகைத் தடையும் நேரிடாமற்செய்து பாதுகாத்தமையால் அடையாதவாசலுடையான் எனக் கற்றோரு மற்றோரும் புகழும் பெரும்பெயரை நீர்நிறைந்த வயல்சூழ்ந்த இடையாலமென்னும் பதியில் வாழ்ந்த வேளாளப்பிரபு தரித்திரர்க்குக்கொடுத்தலே கொடையாகுமென்றும் நற்குடியிற் பிறந்தவரிடத்தில் இல்லையென்றுமையும் கொடுத்தலுமுண்டு பொருள்பெற்றவன் வறியவர் பசியைத் தீர்த்தலே அவன் பொருள்வைக்கு மிடமாகும் பொருளைத்தேடி வைத்திழப்பவர் கொடுத்து மகிழும் இன்பத்தையறியார் என்றும் இவைகளைமுற்றும் உணர்ந்தவராதல்பற்றி அடையாதவாசலானிடையாலத்தான் என்னும்பாடலைப்பெற்றான் என்றறிக இப்பிரபுவுந் தொண்டைமண்டலத்தினர். (கூச)

தளையார்மழையுந் தபனனும்போலத் தடையொன்றின்றி
யுளையாதுநீசனொ டுண்டமையாலுமோ ரூனமின்றித்
திளையார்புவியிற் புகழேபடைத்துத் தினந்தினமும்
வளையாதுவள்ளன்மை காட்டுவதாற்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

பூமியின்கண் பெருமை சிறுமை உயர்வு தாழ்வு சுத்தமசுத்தம் பாராம லெப்பொருளிலுங் கலக்கும் மழையையுஞ் சூரியகிரணத்தையும் போல விகற்பமொன்றும் பேசாமலும் நினையாமலும் நந்தன் என்னும் பறையனைத் தன்னுடன்வைத்து ஒரு பரிகலத்திற் சோறுண்டும்

அதனாலும் இழிவடையாமலே சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலே புகழை யேபடைத்து கைம்மாறு கருதாமல் நாடோறுங்கொடுக்குங் கொடைத்தன்மைபூண்டான் பேராவூரில் வாழ்ந்தவேளாளன்"புலையனோடுண்டு புகழ்பெற்ற நாடுடையார்" என்னும் வேளாளர் வாழ்வதித்தொண்டை மண்டலத்திலே. (௬௫)

வரலாறு.

அரசனது பரிவாரத்தாரால் துரத்தப்பட்ட நந்தன்சாம்பான் பேராவூர்ப் பிரபு சாப்பாடு செய்யுஞ்சமயத்தில் அவரது வாயிலிலோடி முறையோவென்றுகூவ தடையின்றி யதிவிரைவி லுள்ளேவருவித்து தன்னோடிருந்து தன்பரிகலத்திலேயே யுடனுண்ணச்செய்தபயங் கொடுத்தார். இதனைக்கண்ட அரசனது பரிவாரத்தார் அஞ்சிச்சென்றனர் என்பதுகதை.

அதிககொடை கொடுப்பபோன்பது.

கூற்றூர்ப்புலவ னொருபரிகேட்பக் கொடைமதத்தா
லாற்றூர்கிழான்பரி யாயிரமீந்தன னுதலினுல்
வேற்றூர்பலவிது நம்மூரெனும்படி வெம்பசியை
மாற்றூர்பலவுள மண்டலங்காண்டொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கூற்றூர் என்னு மூரிலிருந்த புலவனொருவன் ஆற்றூரில்வாழ்ந்த ஆற்றூர்கிழான் என்னும் வேளாளப்பிரபுவினிடத்தில் வந்து ஒருகுதிரைகேட்க பிரபுதன் கொடைமிகுதிக்கு ஒன்றுகொடுத்தல் இழிவாதலால் ஆயிரங்குதிரைகளைக் கொடுத்தான் இத்தன்மையால் வேற்றூர் பலவிருந்தாலு மிதுநமதூரே யென்று பசித்துவந்தோர் சொல்லும்படி அவரது கொடியபசியை மாற்றுகின்ற வேளாளர்வாழும் ஊர்பலவற்றையும் இவ்வாற்றூரோடுடையதித் தொண்டை மண்டலம். (௬௬)

அடுத்தோரை யாதரிப்போனென்பது.

கொத்தலர்கோதை வியன்பாண்டிமண்டலக் கொம்பைத்தன்
வைத்திருந்தாங்கவ டன்கேள்வன்றேடி வரவவற்கே [பால்
யுய்த்திருவோர்க்கும் வரிசையுமாற்றி யுடனுஞ்சென்று
மைத்துனக்கேண்மை படைத்ததன்றோதொண்டை மண்ட
[லமே

[இதன்பொழிப்பு]

தெற்கின்கண்ணுள்ள பாண்டியமண்டலத்திலிருந்த கொத்தா கியமலர்களையணிந்த கூந்தலையுடைய பூங்கொம்புபோலும் அழகியபெ ண்ணொருத்தி திகைதப்பிவந்து ஒருவேளாளன் வீட்டில் அடைக்கல ம்புகுத அவ்வேளாளன்தன்சகோதரியாகப்பாவித்து உபசாரத்தோடு ஆதரித்து வைத்திருந்து அப்பெண்ணைத் தேடிவந்த கணவனையும் மைத்துனமுறைகொண்டு உபசரித்து, அவ்விருவருக்கும் ஆடையாபர ணமுதலிய வரிசைகொடுத்து, அவர்களுடன் தானுஞ்சென்று அவர்க ளூரைச் சேர்வித்து விட்டுவந்தான். இவ்வாறு அறநெறி வழுவாது நின்று பிறர்கற்பையும் மானத்தையுஞ் சிதையாமற் காத்தாதரிக் கும் நல்லொழுக்கமுடைய வேளாளர்க்கிருப்பிடமாகியது இத்தொ ண்டைமண்டலம். (கூஎ)

பாண்டியநாட்டில் கணவனோடு செட்டிப்பெண்ணொருத்தி தல யாத்திரையா காஞ்சீபுரத்தில் திருவிழாவிற்கு வந்தபோது சித்த ப்பிரமையால் திகைதப்பி குன்றவர்த்தனமென்னு மூரில் ஒருவே ளாளன்வீட்டில்வந்து தனதுவரலாற்றைச்சொல்லி, அடைக்கலம்புக அவ்வேளாளன்தங்காய் அஞ்சவேண்டாம் நீயேயென்னுடன்பிறந்தாள் நானே யுன்தமையன் உன்கணவன் வருமளவும் உனதுதாய்வீடா கிய இங்கேயே சுகமாயிருவென்று ஆதரவுசொல்லிப் பாதுகாத்து வந்தான். அவளது கணவன் எங்குந்தேடிக்காணமல், இவ்வேளா ளன் போக்கியசெய்தி கேள்வியுற்றுக் குன்றவர்த்தனம் வந்துசேர அவனை மைத்துனமுறைகொண்டு அளவளாவி, அவவிருவருக்கும் ஆடையாபரணாதி வரிசைகொடுத்து, அவரூருக்குத் தானுமுடன் சென்று அவர்மனையில்விட்டு வந்தானென்பதாம்.

செண்டுகொண்டு குன்றைமோதி யன்றுவென்ற பாண்டியன்
றேசவாச மாதுளந்தி கைத்துசுற்றி சுற்றனை
விண்டுதொண்டை மண்டலத்தை கண்டுகுன்ற வர்த்தனம்
மேவிவாடி தேம்பிநின்ற மின்னையன்னை வீடெனக்
கொண்டுகொண்ட பதிபின்வந்து கூடகூட ஞடதிற்
கொண்டுபோய்நற் சீதனங் கொடுத்துசீர் நடத்தியே
பண்டுபோலி ருத்திதங்கை முறைமைபெற்ற சீலன்பூ
பாலர்தங்கு லத்தில்வந்த பாலகிருஷ்ண சாமியே.

வேலியழித்துக் கரும்பையெல்லாந்தின்ன விட்டிரவோர்
காலில்வணக்கமுஞ் செய்தேத்திப்பின்னுங் கரும்புதின்னக்
கூலியளந்துங் கொடுத்தானொருவன் குமுணனைப்போல்
வாலிதின்மிக்க கொடையாளனுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஒருவேளாளன்தனது கரும்புப்படைப்பையின் வேலியை நாலு புறத்துந்திறந்து விட்டு யாசகர்களை வலியவழைத்து அவர்காலில வணங்கி யுபசாரஞ்சொல்லி, கரும்பையெல்லாந்தின்னச்செய்து, கரும்புதின்றதற்குக் கூலியாகத் திரவ்வயத்தையுமளந்து கொடுத்தான் யாசகர்க்குத்தனது தலையையும் அரிந்துகொடுக்குங் கொடைவள்ளலாகிய குமுணராசனைப்போல, இவ்வாறு வலிந்தழைத்து வணங்கியுங்கொடுக்குங் கொடையாளனை யுடையதல்லவோ வித்தொண்டைமண்டலம். (கூஅ)

உத்தமகங்கா நதிமரபினிற்கண் ணூரின்மாவேலியைத் திறந்தே
இத்தனைமனித னெனுங்கணக்கின்றி யிருநிலந் தனிற்புகழ்வளரச்
சுத்தமாஞ்சுவைசெங்கரும்பினைப்புசிக்கச் சொல்லியேபினுந்தினுங்கூலி
பத்தியாய்க்கொடுததான் றொண்டைமண்டலத்தின் பலத்தினல்வீர
பத்திரனே.

உணலைப்பசும்பொன் முதலானவற்றை யுதவிப்பின்னுங்
குணலச்சையுள்ளவர் கேட்கவுங்கூசுவர் கொல்லெனவே
எணலைக்கருதி யெழுதிவைப்பீரென வின்மறைந்து
மணலைப்பரப்பிய முன்றிலுளான்றொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

வந்தயாசகர்களுக்கு உண்பொருள்கள் பசும்பொன் மணியணி ஆடைகொடுத்து, சங்கைக்குணமுடையோராய்த் தமக்குவேண்டியவற்றை வாய்திறந்து கேட்கக் கூசுவோரு மிருப்பரென்றெண்ணி இன்னுங் கேட்கக் கூசிக்கருத்தில் வைத்திருப்பவையு முளவேல் அவற்றை இதில் எழுதுங்கள் என்றுசொல்லி முற்றத்தில் மணலைப்பரப்பிவைத்து எழுதுமட்டும் வீட்டினுள்மறைந்திருந்து பின் வெளிவந்துபார்த்து எழுதியிருந்தபடி கொடுக்குங் கொடையாளனாகிய ஒருவேளாளன்வாழ்ந்ததுமித்தொண்டைமண்டலத்திலேயே. (கூகூ)

நீணிலத்திலுறு மேழைமாந்தரீர் நீவிர்வேண்டுவன வின்புறீஇ [நீர்
நேரில்கேண்மினவை தருவன்யானலதுன் நினைவிலுன்னுமவை நவில
நாணிலென்னுடைய மனைமுன்வாயிறனி னன்மணன் மிகுதிகொட்
[டியே

நாம் பரப்பியுமிருக்கிறேமதனி ஞடிவந்த தனையெழுதுமின்
காணிலங்குடனே யருள்வமென்ன வவன்கட்டளைப்படியே திட்டமா [ய்க்
கையிஞலெழுதவுவகையோடு பொருள் கண்டளித்த ப்ரபுவாரெனிற்
பூணிலங்குவரநதிகுலத்தில்வரு புண்யஞனவதி கண்யஞம்
புலவர்போற்றுமா கறலின்மேவுமெழில் புண்யகோடி யெனும்பூ [பனே.

பன்னுந்தமிழ்க்கவன் மாமனைத்தாதி பரிசளிப்ப
முன்னம்பிகாளிக்கு நெற்குன்றவாண முதலியென்போன்
பின்னுஞ்சிலபல பொன்னுங்கொடுத்துத்தன் பேர்நிறுத்த
மன்னுந்தமிழு முரைத்தானவன்ரெண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

(நெல் எக்காலத்துந் தன் பண்ணையில் மலைகளைப்போலக் குவிந்திருக்குங் காரணத்தாற் பேர்பெற்ற) நெற்குன்றவாண முதலியார் வீட்டில் நம்பி காளியென்னும் புலவன் வந்து முதலியாருள்ளே யிருப்பதாகக்கருதி, ஆசாரவாசலிலிருந்து, அவர்பேரால் தமிழ்க்கவிதை சொல்லக்கேட்ட அவரது பெருமைபொருந்திய வீட்டுத்தாதி முதலியார் வீட்டிலில்லையென்று சொல்லாமல் முன்னே தக்க பரிசாகப் பொன் முதலியவற்றைக் கொண்டுவந்து கொடுத்து உபசரித்து முதலியார் வருவாரென்று சொல்லிச் சென்றவளவில் முதலியாரும் வெளியேயிருந்துவந்து பலபலவிதமான பொன் மணி முதலியவற்றைப் பரிசாகக்கொடுத்துப் பின்னுந் தன்பேர் உலகமுள்ளளவும் நிலை நிற்கும்படி (வடவேங்கடமும் தென்பொதியமும் மகமேருவும் கங்காநதியும்) எந்நாளும் நிலைத்திருத்தல்போல நமது நெற்குன்றங்களும் நமதுமரபுமாகிய எல்லாம் நம்பியார் குலத்துதித்தகாளமேகனெனும் புலவருக்கு எந்நாளும் நிலையாகநிற்கும்படி விற்றுவிடப்பட்ட அடிமையாவோம் என்னும் பொருளடங்கிய பாடலையும் அப்புலவர்பேராற்பாடிஞர் இத்தன்மைய வேளாளப்பிரபுவாழ்ந்ததுமித் தொண்டைமண்டலத்திலேயே. (௭௦)

அச்செய்யுள் வருமாறு.

கற்குங்கவிவல்லை யந்தணர்கோனம்பி காளிக்கியாம்
விற்கும்பரிசன மாகிவிட்டோம்வட வேங்கடமும்
பொற்குன்றமும்புகழ்க் கங்காநதியும் பொதியமும்போல்
நெற்குன்றமுநம் மரபுமெந்நாளும் நிலைநிற்கவே.

என்பதாய்க்காண்க

சொல்லாயுமௌவை பரிவாய்தனக்கிட்டசோறுலக
மெல்லாம்பெறுமென்று பாட்டோதப்பெற்றவளின்னரு
[ளாற்
கல்லாரற்சுற்றுங் கிணறேறிப்பாயுங் கழனிபெற்றான்
வல்லாண்மைபூத மகிபாலனுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வேதாகம புராணமனைத்தையும் கற்பிப்போரின்றித் தானேமுழு துணர்ந்த ஔவையாருக்கு மழைவறன்ற பஞ்சகாலத்தில் அமுதிட்டு அவரால் (புள்வேளூர்பூதன்புகழ்ந்து பரிந்திட்டசோறெல்லா வுலகும் பெறும்) என்று பாடப்பெற்ற தன்றியும் அவரருளால் கற்சுவர்சூழ்ந்த கிணற்றுநீர்தானே மேலெழும்பிப்பாய்ந்து விளையும் வயலையும் பெற்றவலிய ஆண்மைமிகுந்த பூதனென்னும் பிரபுவாழ்ந்த புள்வேளூர் இத்தொண்டைமண்டலத்தே. (எக)

நேயத்துடன்பிறந் தோன்பிணமூடி நெருப்பவித்துத்
தாயொப்பனவெதிர் கொண்டழைத்தேதன் னுடனெனவே
யாயத்தமிழ்கொண் டருங்கவிராயனுக் கன்புசெய்த
வாயற்பதியில் வடுகப்பனுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தனக்கு அருமைத்துணையாயிருந்த சகோதர னிறந்துபோக, அப்பிரேதத்தைத் தகனஞ்செய்தற்குரிய சடங்குகளைச்செய்து நெருப்புச்சட்டியு மூட்டிச் சித்தமாயிருக்கையிலே, தமிழிற்சிறந்த வோர் புலவர் மிக்கபசியோடு தன்னிடம் வருவதறிந்து, அப்பிணத்தை மூடி மறைத்து நெருப்புச்சட்டியையு மவித்துவிட்டு, மகவினைக்கண்டதாய்போல எதிர்சென் றழைத்துவந்து அவருக்கு உண்ணும்படி விரைந்து விருந்திட்டு, தன்னுடனிருந்துண்ணும்படி யவர்சொல்லியசொற்கடவாமல் தானுமுடனிருந்துண்டு அவருக்குத்தகுந்த பரிசளித்து பரிசுபெற்றபுலவர் பூதத்தாற் சகோதரனை மடியக்கொடுத்திருப்பது தெரிந்து மிகவியந்து "தன்னுடன்" எனப்பாடிய பாடலைப்பெற்ற செங்கலங்கையென்னும் வாயற்பதி வடுகநாதனென்னும் வேளாளப் பிரபு வாழ்ந்தது மித்தொண்டைமண்டலத்தே. (எஉ)

"தன்னுடன்கூடப் பிறந்தவருந்துணைத் தம்பியுயி
ரந்நிலைமாண்டது தோன்றுமன்மூடிவைத் தன்னமிட்டான்
மன்னவர்போற்றிட வாழ்செங்கலங்கை வடுகனுக்குக்
கன்னனுஞ்சோமனு மோவிணையாகக் கழறுவதே".

என்னும்பாட்டானுமுணர்க.

பாடல்பெற அவாவுடையனோன்பது.

தன்னுலிசைபெறக் கூவந்தியாக சமுத்திரமென்
றந்நாளொருவ னெடுந்தூண்டிலிட்டிட வாங்கொருமீன்
பொன்னாலமைத்துப் பொருந்திடச்சேர்த்துப் புகழ்கொண்ட [தான்
மன்னுவுலகத்து மன்னியசீர்த்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கூவமென்னு மூரிலிருந்தவேளாளரில் நாராயண முதலியா ரென்பவரோருவர் தன்பேராற் பாடல்பெறவேண்டுமென் றவா க்கொண்டிருந்ததை யொரு புலவரறிந்து அக்கூவமென்னு மூரை த்தியாகசமுத்திரமென்று பாடினர் அதுதனக்கு மேலுமேலு மகி ழ்வு தூண்டிவிடச் சமுத்திரத்தில் தூண்டிவிட்டதாகப் பாவித்து, அவ்வேளாண் பிரபு பொன்னு லொரு பெருமீன் செய்துத் தியாகங் கொடுத்துப் புகழ்பெற்றனர் இப்புரூளனைத்தாங்கிய இத்தொண் டைமண்டலம். (எரு)

இப்பிரபு விறந்தபின்பு இயமனை இகழ்ந்து பிரபுவைப் புகழ் ந்து பாடப்பட்ட (சரமகவி)

"இடுவோர் சிறிதிங் கிரப்போர் பெரிது
கெடுவாய் நமனே கெடுவாய்—படுபாவி
கூவத்து நாரணனைக் கொன்றாயே கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கரிக்கு".

சொல்லாமலே கொடுப்பனோன்பது.

ஈட்டாலமன்னவன் பின்னையறிய வெனக்கெனமுன்
கேட்டானதற்குமுன் சென்றதவ்வாருயிர் கேட்டவர்க்கு
நீட்டாவிடினும் தனக்கென்னகேட்பினு நெஞ்சமுய்ய
மாட்டாதிரண்டுமுன்கற்றிலதோதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

முன் ஒருகாலத்தில் நீட்டாலம் என்னும் ஊரில்வாழ்ந்த இல்லையென்னது கொடுக்கும் ஒரு வேளாண் பிரபுவினது கொடைத்தன்மையைச் சோதித்தறியும் பொருட்டு அவரிடத்தே ஒரு புலவன்வந்து உமதுயிரைத்தரவேண்டுமென்று கேட்டான். அவன்கேட்பதற்குமுன்னேயே யப்பிரபுவினுயிர்போயிற்று கேட்டோர்க்குடனே கொடாவிட்டாலும் தன்மனது உயிரைவிரும்பினாலும் அவ்வுயிர் பிழைத்திருக்காதுபோலும் அவ்வுயிர் கேட்டோர்க்குக் கொடாதிருக்கவும் தன்னையபிமானிக்கவும் கற்றிலதோ அறியோம் இத்தகைய பிராணத்தியாகி வாழ்ந்ததுமித் தொண்டைமண்டலத்தே. (எசு)

பிறர்மானங் காப்பனோன்பது.

உளத்துத்தனைய்யுற்ற வோர்புலவோனுக் குடையுதவிக்
குளத்துப்புனலை யடுத்துநின்றேபின்பு கூவியவைக்
களத்துப் புகுதக் கலையுடுத்தேகனை யேறிவந்த
வளத்துப்புகழ்பெற்ற வல்லாளனுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

அரசன் தன்சபைக்கு விரைந்து வரும்படி சொல்லியனுப்பியதனால் சபைக்குவிரைந்து சென்று மொரு வேளாளப் பிரபுவை சமையமறிந்துகேளாத குரூரசிந்தைப்புலவனொருவன் இடைவழியிற்றடுத்துத் தனக்குடுக்க உடையில்லையென்றிரக்க அதுகேட்டுவீட்டுக்குவரும்படி சொல்ல மனமின்றி, உடனே தானுடுத்திருந்த ஆடைகளையெல்லா மவிழ்த்துக்கொடுத்துவிட்டு அருகிருந்தகுளத்து நீருளிறங்கி யிருந்து, கரையிற் செல்வோரையழைத்து ஆடைகொணர்வித்துடுத்திக்கொண்டு சபைக்குச்சென்று புகழ்பெற்றான். இவ்வாறுபுகழாளனாகிய வல்லாளமுதலியார் வாழ்ந்ததுமித்தொண்டைமண்டலத்தேயே. (எரு)

பொறுமையுடையனோன்பது.

வில்லைச்செருப்பிட்ட காலாலுதைத்து வியனுலகில்
சொல்லற்கரிய புகழ்கொடுத்தோன்றுட்ட வீரன்றன்னைப்
பல்லக்கிலேயன்றி மண்படுமோவெனும் பாடல்கொண்ட
வல்லப்பதிக்கச்சி யப்பனும்வாழ்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

வல்லமென்னு மூரில் வாழ்ந்த கச்சியப்பனென்னும் பிரபுபல் லக்குச்சாரி செய்துகொண்டுபோம் வழியிலே துடுக்குத்தன்மையு டைய வீரன்என்னு மொருபுலவன் சந்தித்துத் தன்னைக்கண்டு மிற ங்காமற் பல்லக்கிற்சென்றதற்காகப் பல்லக்கை யிறக்கச்செய்து உள் ளிருந்தபிரபுவை வில்லைச்செருப்பணிந்த தனதுகாலினாலுதைத்தான் அப்பிரபு அச்செயலையினைந்து வெறுக்காமற் பொறுத்து அப்புலவ னுக்கு மிகவணக்கமா யுபசாரஞ்சொல்லி யொருபல்லக்குங்கொடுக்க அப்புலவன் மிக்ககளிப்புற்று அப்பிரபுவை மேன்மேற்புகழ்ந்து "பல்ல க்கிலேயன்றி மண்படுமோ" என்னும்பாடலைபாடினான். இவ்வாறு பாடல்பெற்றுப் புகழ்பெற்ற வல்லத்துக் கசசியப்பமுதலியார் வாழ் தற்கிடமாகிய இத்தொண்டைமண்டலம். (எசு)

"மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வன்பாகக் கற்றவர்கள்—மண்புகழ
மெச்சியப்பா லும்புகழும் வீறுவல்லை யாளவந்த
கச்சியப்ப னையுதைத்த கால்".

என்பதனாலறிக.

புறவோடுடற்றசை போக்கியவேந்தன் புரிந்ததிலு
மறவோகொடிது கொடிதுகண்டீரற னன்றுமற்றுப்
பிறவோமறுத்துரை செய்யான்மிகுசிரம் பேர்த்துவைத்த
மறவோனைத்தாங்கிய வையமன்றோதொண்டை மண்டலமே

[இதன்பொழிப்பு]

குன்றையூர் எல்லனென்னும்பிரபு அறநெறியன்றி பிறநெறிசெ ல்லாதாகி சொன்னசொல்லை மறுத்துரையாம லுடனேதனது மிகுதி பெற்ற தலையையரிந்து கொடுத்தான் இச்செயல் புறவின்பொருட்டு த்தனதுடற்றசை முழுவதையுமரிந்து கொடுத் துயிரோடிருந்த சிபி ச்சக்கிர வர்த்தியினது செயலினு மிகப்புகழத்தகுஞ் செயலன்றோ மறுமண்டலத்தீரோகாண்மின் இத்தகைய வீரனைத்தாங்கிய மண்டல மல்லவோ வித்தொண்டைமண்டலம். (எஎ)

பிள்ளைத்தமிழ்த்தாலப்பருவம்.

தலையிந் தாவெனு மைந்தாதாலோ தாலேலோ
தரைகுன்றைப்பதி யெல்லாதாலோ தாலேலோ.

**வெண்பா.**

ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றயிலு
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—சோலைதொறும்
செங்கே தகைமணக்குஞ் செங்குன்றை யெல்லனெங்கே
யங்கே யிரவலரெல் லாம்.

**என்பதினுற் காண்க.**

சத்தியமென்று சொல்லப்படுவது யாதொருதீமையும் சொல்லாது நன்மை சொல்லுதலென்பதே நடவாததைச் சொல்லுதல் நன்மையைத்தராது அதுபொய்மையாம் அது நன்மையைத்தருமாகில் மெய்மையாய் அறிந்ததை பொய்சொலாதிருக்கக்கடவன் சொன்னுல்தன்னெஞ்சே தன்னைச்சுடும் ஒருவனது அறத்தைநோக்கிஉயர்ந்தோர் எப்பொழுதும் அவனையேநினைப்பார் உண்மைசொல்பவன் தவம் தானம் செய்பவரினுந் தலைவனென்பது மெய்யினுலேசெய்யப்படுமவைகளினும் அகமாகிய மனோவாக்குகளாலே செய்யப்படுமிது மிகப்பயனுடையதாம் பொய்சொல்லாமையேபுகழ் அதுஎல்லாத்தருமமுங்கொடுக்கும் எல்லாதருமமென்றது இல்லறம் துறவறம் இவ்விருவகைக்கும் பொய்யாமை என்பதுகாரணமாம் உடம்பு நீராற்சுத்தியாவதுபோல உள்ளம்சத்தியத்தாற்சுத்தியாகும் விளக்கு உலகவிருளைப்போக்கும் அஞ்ஞானமாகிய அகத்திருளைப்போக்குவது சத்தியமானதுபொய்யாவிளக்காகும் வறியவர்க்குக் கொடுத்தலினிது முடியாதவிடத்து இறத்தலேயின்பம் பிறருக்குப்பயன்படாத உடற்சுமைநீக்குதல்நலமாம் என்னுமிவைகளையுணர்ந்து புகழ்நிலைநிறுத்தற்காகவே தனதுயிரை அலக்ஷியமாகவெண்ணி தலையை அறுத்துக்கொடுத்தார் என்பதாம்.

**அடைக்கலமென்றோரை காப்பரோன்பது.**

வெங்கொலைக்கஞ்சி யடைக்கலந்தான்புக வேந்தன்மைந்
னுங்கலையாமலொளித்து வைத்தேதன் னொருமகவை
யிங்கிவன்றானவ னென்றேயடையலர்க் கீந்துவிட்டான்
மங்கலஞ்சேர்கிடங் கிற்பெருமான்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கொடுமையாகக்கொலைசெய்யவருஞ் சத்துருக்களுக்கஞ்சி, யடைக்கலம்புகுந்த இராஜகுமாரனைக் கொல்லப்படாமல் தன் வீட்டினுள்

ளொளித்து வைத்துவிட்டு, ஏகபுத்திரஞ்கிய தனதுபுத்திரனே இவ ன்றான் அவனென்று ஒப்புக்கொடுத்து அரசபுத்திரனைக்காந்த கிட ங்கின்பெருமாள் முதலியார் வாழ்ந்ததுமித்தொண்டை மண்டலத்தி லேயே. (எஅ)

வந்தவுயிர்தனை யளித்தான் கிடங்கின்வேந்தன்
வயலுழா னறமடங்காதென வுரைத்தான்
செந்தமிழோர் கிளைவளர்த்தான் வேலூர்மன்னன்
செம்பியன்முன் வயிறிடந்தான் பேறையூரான்
அந்தமுள நாணளித்தான் வீடுராதி
அடையாத வாசலா னிடையாலத்தான்
நந்தனுட னமுதுண்டான் பேராவூரான்
கலப்பரியா யிரங்கொடுத்தா ளுறையூரனே.

**பஞ்சத்திலுங்காப்பபோன்பது.**

கோலூருழவுக் குடியானவன்றன் குமிழம்பட்டு
வேலூர்க்கிழானொருவேளாளன்பஞ்சம் விடியளவும்
நாலூரிலுள்ள புலவோர்க்குந்தேசத்து நாவலர்க்கு
மாலூரிலன்னங் கொடுத்தளித்தான்றொண்டை மண்டல [மே.

[இதன்பொழிப்பு]

அரசனது செங்கோல்நடத்தற்குக் காரணமாகிய தாற்றுக்கோல் பிடித் துழவுத்தொழி னடத்துங் குடியிற்பிறந்த குமுழம்பட்டு என் னுமூர் வேளாண்மகனொருவன் உலகத்திற்பஞ்சம் வந்தகாலத்து நாலூ ரிலிருந்த வித்துவான்களையும், வேறுதேயத்திலிருந்துவந்த வித்து வான்களையும் அவரிட்டப்படி அன்னமுதலியவற்றைகொடுத்து ஆதரி த்து வைத்திருந்து, உலகம் பஞ்சம்தெளிந்து, செழித்தபின் அவ ர்களுக்குத்தக்க பரிசளித்தனுப்பினன் இத்தகைய பஞ்சந்தாங்கும் பிரபு வாழ்வுக்கிடமாகியது மித்தொண்டைமண்டலம். (எகூ)

**தன்வயிற்றிலிருப்பதையுங் கொடுப்பபோன்பது.**

நறுங்கூழெனையன்றி யுண்டனையோவென நாணிவயி
றிறுங்கூர்நுதிவடி வாளாற்பிளந்திட் டிறுங்கரினை
யுறுங்கூழ்புறத்தி லிருந்தானுக்குய்த்துப் பிலாதபுற்கை
வறுங்கூழ்சொரிந்திட்ட முற்றவுண்டான்றொண்டை மண் [டலமே

[இதன்பொழிப்பு]

பேறையூரானென்னு மோர்வேளாளப்பிரபுதன்வீட்டில் வந்த வித்துவானுக்கு விருந்திட்டுத்தான் உப்பில்லாதகூழையுண்டு வெளியேவந்தபோது நீர்மாத்திரம் நல்லவுணவையுண்டு வந்தீரோவென்று கேட்க, உடனேஅப்பிரபு மிகக்கூர்மைகொண்ட வாளாயுதத்தைகொண்டு தன்வயிற்றைக்கீறி யுள்ளேயிருந்த உப்பில்லாத சோளக்கூழை வெளிப்படுத்தினான். இவ்வாறு தன்வயிற்றைப்பீறி வயிற்றுளிருக்கும் கூழையுங்காட்டி மெய்ப்பித்தான் இப்படி பிறர்பசிதணிக்குங் காருண்யகுணமுள்ளவ னென்பது.அவ்வறிவுண்டானதற்கு அன்பும் அருளும் அவ்வறி வீடைமைக்கு இரக்கமும் கிருபையும் அடையாளமாதலால் இவ்வுணர்வையே யியற்கையாயுடைய ரெனப் பெயர் பெற்ற முதலியார் உலகிலுள்ள புகழையெல்லாம் தாமேகொண்டனர் இத்தகைய வேளாளர்க்கிருப்பிடமாகியது இத்தொண்டைமண்டலம். (அ0)

தன்மனைவியையுங் கொடுப்பாரென்பது.

போதாருந்தண்பொழில் வீரேதிபன் புலவர்க்கெல்லாம்
தாதாவெனக்கொடி கட்டுதலாலவன் றன்மனையை
நீதாவெனவொரு பாவாணன்கேட்ப வந்நேரிழையை
மாதாவெனவழைத் தானென்கொலாந்தொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு]

மலர்கள் நிறைந்து குளிர்ந்த சோலைசூழ்ந்த வீரேரிலவாழ்ந்த வேளாளப்பிரபு புலவோர்விரும்பிய வனைத்தையுந் தன்னிடமிருப்பின் கொடுப்பேனெனக் கொடைக்கொடி கட்டினமையால், அவரதுகொடையைச் சோதிக்கக்கருதி யொருகவிஞன்வந்து உமதுமனைவியைத்தரவேண்டும் எனக்கேட்க அப்பிரபு புலவனால்யாசிக்கப்பட்ட தன்மனைவியைத் தனக்குத்தாயாகக்கருதி, மாதாவே ஐயரழைக்கிறார் அவருடன் நீர்போகக் கிருபைசெய்யவேண்டுமென்ற உடனே கற்புநாயகியும் பிரபுசொல் பொய்படாமைப்பொருட்டு வெளிப்பட, அப்புலவர் நீவிரிருவரும் தந்தை தாயராதலின் தாயைவிரும்பியழைப்பது மைந்தர்க்கியற்கையன்றோ அவ்வாறென் தாயைக்கேட்டால் நீரிப்படிமுறைகொண்டது தகுதியன்று மன்னிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள வேண்டுகோளைமுடிக்கும் விரதியாகையால் பிரபு தன்மனைவியை தானேற்றுக்கொண்டார் தன்னிடத்து யாசித்தவனிடத்தில் இரக்கத்துடன் கொடுப்பவன் தாதா; இந்தகையதாதா

வாழ்வுக்கிடமாகியது மித்தொண்டைமண்டலம். (அக)

**அரியசெயல்களாலு மகிழ்விப்பரென்பது.**

நன்கண்மையாக வயாவுற்றநோய்கண்டு நாடரிய
புன்கண்மைநோக்கியுஞ் சற்றுமெண்ணுதோர்புலவனுக்காத்
தன்கண்மைசூலி முதுகினிற்சோறிட்ட தன்மையினுல்
வன்கண்மைசெய்யவும் வல்லதன்றே தொண்டை மண்டல
[மே.

[இதன்பொழிப்பு]

ஒருவேளாண் மகன் தன்னிடத்துவந்த ஓர்புலவன் நிறைசூன் மடவார் முதுகினிற்சோறிடி னுண்பேனென்ன, அப்புலவனுக்கு, தன்கண்ணைப்போலுந் தன்மையினையுடைய தனதுமனைவி வயாவுற்றிருத்தலை யறிந்திருந்தும், வயாவுயிர்க்குங் காலம் அணித்தாகிளை த்தற்கும் அரியவயாநோயால் வருந்துதல் தெரிந்தும் அவற்றைச் சிறிதுமெண்ணுமல் (தன்குடிப்பிறப்பிற் குரியவண்மை, இயல்வது கரவாமை) முதலியவற்றையே பொருளாகவெண்ணி அம்மாதினைக் குப்புறக் கிடத்தியவண்முதுகில் மகிழ்வோடன்னமிட்டு, அப்புலவனையுவப்பித்தனன் இத்தகைய (நன்னெறிச்செய்கைக் கணுண்டாகுமிடையூற்றுக்குச்சிறிதும்) அஞ்சாமை குணத்தினும் வல்லராகிய வேளாண் மக்கட்குறைவிடமாயது தொண்டைமண்டலம். (அஉ)

**உதாரணம் ஆறைக்கலம்பகம்.**

"பன்றிகோடுழுத நந்திவெற்பனிரு பாரவெற்பினையடக்கிலான்
பாணன்வெம்பிணமெடுத்தவன் கொடியபாணன் வெம்பிண மெடுக்கிலான்
சென்று தென்முளையை வாரிஞேன்புதிய திங்கள்வெண்முளையை வாரிலான்
செட்டிதன்பழிதவிர்த்தவன் பரிவுசெய்துபெண் பழிதவிர்க்கிலான்
அன்றுசூலிமுது கன்னமிட்டவனெ னன்னைகூன்முது கழிக்கிலான்
அங்கையாடரவின்வாயிலிட்டவனெனல்குலாடரவுதீண்டிலான்
வென்றிமேவு துடையாடைகீறினவன் வேலையாடையது கீறிலான்
வீறுலாவுதமிழாறை மேவுபரமேசுரன் புதல்வனெல்லனே".

என்பனவற்றுற்காண்க.

"வரகரிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
மொரமொரொென வேபுளித்த மோரும்—வரிசையால்

புள்வேளூர்ப் பூதன் புகழ்ந்து பரிந்திட்டசோ
றெல்லா வுலகும் பெறும்". என்பது.

ஔவையார் ஓர் பஞ்சகாலத்தில் புள்வேளூரில் பூதன்என்னும் வேளாளன்வீட்டில் உணவுக்காகச்செல்ல, அவன்எதிர்கொண்டழைத்து மிகுமகிழ்வோடு புகழ்ந்து பரிவோடு தனக்கு நன்செய்த் தானியமில்லாமையால், வரகரிசிச்சோறும் கத்தரிக்காய்த்துவட்டலும் புளித்தமோரும் படைத்து உண்பிக்க, ஔவையார் அவற்றையுண்டு பசியாறி அவன் உள்ளன்போடு அசனங்கொடுத்தற்சாக மகிழ்ந்து மேற்கூறிய பாட்டைப்பாடி யதனால், புன்செய்க்கொல்லையி லிருந்த கற்சுவர்க் கிணற்றின் ஆழ்ந்த அடித்தலத்தில் மிகக்குறைந்திருந்தநீர் சுரந்துமேலெழுந்து தானேபாய அப்புன்செயெல்லாம நன்செய் ஆகி உயர்ந்தநெற்பயிர் சிறந்து விளைந்தது: இன்னுங்காட்சி யளவையிலிருக்கின்றது இவர் எப்போதும் விருந்தினர் வரவை எதிர்பார்த்திருப்பவராதலால் தம்மைத்தேடி வருபவரை தூரத்திற்கண்டபோது முகமலர்ச்சியும் அதுகண்டு சமீபத்துவந்தவிடத்து இன்சொற் சொல்லுதலும் அதுகேட்டு உடன்பட்டபோது உபசரித்தலும் எப்போதுமியல்பினராதலால் உபசரிக்கப்பெற்ற ஔவையாரால் பெரும்பயனும் புகழும்பெற்றனர்.

அஞ்சொன்முதுதமிழ் நால்வேந்தர்வைகு மவையிலெளவை
செஞ்சொற்புனைகின்ற வேளாளர்வைகுஞ் சிறப்புடைத்
[தால்
விஞ்சியவேழ முடைத்தென்னும்பாடல் விளம்பிப்பின்னும்
வஞ்சிவெளிய வெனும்பாமொழிதொண்டை மண்டல
[மே

[இதன்பொழிப்பு]

அழகெல்லாமமைந்ததும் காலம் அமைதி பொருள்சுவை முதலியவற்றால் முதிர்ந்ததுமாகிய செந்தமிழுலகத்தில் சேர சோழ பாண்டிய ஆதொண்டைச்சக்கிரவர்த்தி இந்நால்வருங்கூடிய சபையில் ஔவையார் கல்வியறி வொழுக்கங்களால் நிறைந்தவரும், அறிவின்மை வஞ்சம் முதலிய மனக்கருமையில்லாரும் செந்தமிழ்ப் பாமாலை புனைவோருமாகிய வேளாளர்மிகுந்து வாழ்கின்றமையாலேயே தொண்டைநாடு சிறந்துள்ளது என்னுங்கருத்தைக்குறிப்பித்து "வேழமுடைத்து" என்னும் பாட்டையும், "வஞ்சிவெளிய" என்னும்பாட்டையும் பாடப்பெற்றது தொண்டைமண்டலம். (அ௩)

சேர சோழ பாண்டிய ஆதொண்டைச்சக்கிரவர்த்தி இந்நால்வரும் ஓர் விசேடத்தால் காஞ்சிபுரத்தில் கூடியிருந்தசபையில் தெய்வப்புலமை ஔவையார்வர, அவ்வரசர்கள் நால்வரும் உபசரித்துத், தமிழுலகத்து நான்குமண்டலங்களின் சிறப்புகளை விதந்து சொல்லும்படிவேண்ட, யானைமிகுதியால் மலைநாடும், நெல்மிகுதியாற் பொன்னிநாடும், முத்தின்மிகுதியால் வையைநாடும், கல்வியறிவொழுக்கங்களால் நிறைந்தவேளாளர் மிகுதியால் தொண்டைநாடும்சிறந்தன என்னும் பொருள்பட "வேழமுடைத்து மலைநாடு மேதக்க—சோழவளநாடு சோறுடைத்து பூழியர்கோன்—தென்னாடுமுத்துடைத்துத் தெண்ணீரவயற்றொண்டை நன்னாடுசான்றோருடைத்து" என்னும்பாடலைச்சொல்லினள். பின்னும் அம்மண்டலங்களிலுள்ள அரும் பொருள்களைச் சொல்லவேண்டுமென்று மன்னர் நால்வருங்கேட்க, அதற்கு ஔவை சேரமண்டலத்தில் நதிமுதலிய நீர்வளமும் மலைவளமும் வனவளமுமிக்கு நன்னிலப்பயன் சிறந்தமையான், மற்றிடங்கட் கரிய அன்னம் நாரை மயில் கிள்ளை முதலிய பறவைகளனைத்தும் கருவூர்வெளியில் மிக்கன என்பதும், நகரத்தையழிக்கும்படி தேவேந்திரனேவியசத்தமேகவருஷத்தைச் சோமசுந்தரக்கடவுளது திருவருளே நாற்புறத்துங்கூடமாகியிருந்து காக்கநிலைபெற்றமதுரையில், மற்றவிடங்களிலரிய மாணிக்கமுதலிய மணிக்கற்கள் மிகைஅல்லது கல்வலியதன்றி அந்நாட்டு மக்கள் மனம் வலியதன்று மிகவுருகுந் தன்மைத்து என்றும், சோழனது உறையூரில் மருதவளத்தால் கரும்புமிகவினிது அல்லது கரும்புபோன்ற பெண்கள் குணமுதலியவற்றால் மிகவினியர்என்றும், தொண்டைமான் சக்ரவர்த்தியாலாளப்பட்ட காஞ்சீபுரத்தில் காக்கைகரியதன்றி, அந்நாட்டுவேளாளர்மனம் அறியாமை வஞ்சமுதலிய கருங்குணமுடைய தல்ல என்றும் பொருள் படும்படி—"வஞ்சிவெளிய குருகெல்லாம் பஞ்சவன்றன்—நான் மாடக்கூடலில் கல்வலிது சோழனுறைந்தைக் கரும்பினிது தொண்டைமன் கச்சியிற் காக்கைகரிது" என்னும் பாடலைப்பாடினள் என்பது.

"கச்சியிற்காக்கைகரிது" என்றதற்குச்சிலர் - கச்சிக்காக்குமியல் பினையுடைய கரியநிறமுள்ள காமாட்சியம்மையை யுடையது என்றும், சிலர் "காக்கவல்ல திருமாலையுடையது" என்றும், வேறுசிலர் "காக்கைகருப்பன்றி மற்றைப் பொருள்கள் கருப்பல்ல மிகுதியே" என்பதாம்.

கம்பரடியரோன்பது.

பேணியசெந்தமிழ்த் தாய்தனக்கேயன்பு பெற்றமையா
ணியகம்பன் சிவிகையுந்தாங்கி நயந்ததமிழ்
பூணியநின்றதும் பொச்சாப்பிலாது புகுந்துபின்னும்
வாணியத்தாதற்குத் தாதானதுந்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

எல்லாவுலகமும் துதிக்கின்ற செம்மையாகிய தமிழுக்குத்தலைவியும் உலகமாதாவுமாகிய சரச்சுவதிதேவிக்கன்புபூண்டு அவரது திருவருள்பெற்றமையால் வித்வசிரோமணியாகிய கம்பரதுசிவிகையை, அவரதுமனக்கூச்சந்தீர்த்துத்தாமேசுமந்து விரும்பத்தகும் தமிழ்மாலைபூண்டு நின்றமையன்றியும், அவ்வாணியடியராகிய கம்பரைத் தத்தம்வீடுகளில் மறதியின்றிக்கொணர்ந்து தாதாவாய் அவர்வேண்டியவெல்லாங் கொடுத்துப் புகழ்பூண்டவருமாகிய வேளாளரையுடைமையால் தொண்டைமண்டலம் சிறந்தது. (அச)

இதுவுமது.

ஏத்தளித்தாயிரம் பாடல்கொண்டேநிரை யீந்தெருமைப்
போத்தளித்தாடையும் பூணாரமுந்தந்து போதரவாய்க்
காத்தளித்தாதரித் திட்டதல்லாமலுங் கம்பருக்கு
மாத்தளித்தாட்பட்டு வாழ்வதன்றோதொண்டை மண்டல
[மே.

[இதன்பொழிப்பு]

வேளாளர் தம்மைப்புகழ்ந்து ஆயிரம்பாடல்களைக் கம்பர்பாட அவற்றைப்பெற்றுக்கொண்டு, அக்கம்பருக்குப் பசுமந்தைகளும் எருமைக்கடாக்களும் ஆடைகளும் ஆபரணதிகளுங் கொடுத்துப் புறக்காவலாகப் பாதுகாத்து ஆதரித்தது மன்றித், தம்மடிமைகளுக்குள்ளே ஆள்நிரையும் நாள்முறையும் வகுத்துக்கொண்டு, நாடோறுஞ் சிற்சிலராக அடிமைத்தொண்டு செய்வித்து வாழ்ந்தமையும் இத்தொண்டைமண்டலத்திலேயே. (அரு

மழவேந்தனரோன்பது.

அழுவதுங்கொண்டு புலம்பாமனஞ்சுண்ட துமறைத்தே
ரொழுவதுங்கொண்டுபுகழ்க்கம்பநாடனெழுப்பவிசை [யின்

முழுவதுங்கொண்டெழுந் சொற்பேசநெய்யின் முழுகிக்கை
மழுவதுங்கொண்டு புகழ்கொண்டதாற்றொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு]

வெண்குன்றக்கோட்டமென்னு மூரில் ஓர் வேளாளன் தம்புதல்வன் பாம்புகடித்திறந்ததையும் அதனாலுண்டாகும் வியசனத்தையும் புலம்பியழுது வெளிப்படுத்தாமல் மறைத்து, கம்பருக்குவிருந்திட்டு, அவரால் பிழைப்பித்துக்கொண்டு அவர் ஏரெழுபதுபாட அதனால் கீர்த்திமிகப்பெற்று, அரசன் அச்செயல் ஐயுறத்தக்க தென்ற வொரு சொல்லுக்காக, காய்ச்சியநெய்யின் மூழ்கிக் கையின் மழுவையுமேந்தி, ஐயந்தெளிவித்து அரசனாலும் புகழ்பெற்றோராகிய வேளாளரையுடையது தொண்டைமண்டலம். (அசு)

(வரலாறு) குலோத்துங்க சோழராஜன் சபையில் ராஜசேவை (உத்தியோகம்) யிலிருந்த வெண்குன்றமென்னுமூர் வேளாளரில் தவளகிரிமுதலியார் வித்துவான்களிடத்தி லதிக சிரத்தையுடையவராயிருந்தார் கம்பர் ஒருநாளவர் வீட்டில் விருந்தினராய்வந்தபொழுது அம்முதலியார் அவரதுமனைவியும் தம்புத்திரன் மனைப் புறக்கடையில் அச்சமயத்திலே பாம்புகடித் திறந்துபோனது தெரிந்து அருமருதுபோல இன்றுவிருந்தாய் வந்தகம்பர் இச்செய்தி தெரிவாராறல் உணவுகொள்ளாது விடு வதன்றிப் பசித்திருந்து இம்மரணத்துக்காக மனம் வருந்தநேரிடுமே என்றஞ்சி இறந்தபாலனை தனியறையில்மறைத்து வைத்துச் சிறிதும் விசனந்தோன்றாமல் அவர்விருந்திற்காக மிகமனக்களிப்போடு அன்னமுதலியவற்றைப் பாகஞ்செய்து தலைவாழையிற்படைத்து, கம்பரை அமுதுசெய்யும்படி வேண்டினார்கள். அப்போதுகம்பர் நான் வீட்டிலிருந்தசனங்கொள்ளுங்காலத்தெல்லாம் என்குழந்தை கூடவேயிருந்து சாப்பிடுவான். ஆதலால் உடனிருந்துண்ண உங்கள்புத்திரனை யழையுங்களென்றுசொல்ல அவர்கள் மெய்சொல்ல அஞ்சுவதினும் பதின்மடங்கு பொய்சொல்ல அஞ்சிவிம்மிதராய் நிற்பதைக்கம்பர்பார்த்து உற்றது கூறுமின் என்றுகேட்க அப்பெற்றோர்நிகழ்ந்த செயலையும் மறைத்தமைக்குக் காரணத்தையும் சொல்லினார்கள். உடனேகம்பர் அப்பிள்ளையைக்கொண்டுவாருங்கள் அவன் எழுந்து என்னுடனிருந்து உண்டாலன்றி யினி உணவுகொள்ளேனென்று பிரதிக்கினையோடு கொண்டுவருவித்து. [ஆழியான் பள்ளி யணையேயவன் கடைந்த

வாழி வனாயின் மணித்தாம்பே—யூழியான் பூணேயப்பூணுன். புர மெரித்த பொற்சிலேயி ஞணே யகல நட]

என்னும் பாடலேச்சொன்னஉடனே பாலன் உயிர்த்தெழுந் தான் தாய்தந்தையர் மிருகளிப்பில் முழ்கும்படி யப்பிள்ளேயை யருகில்வைத்துண்டு வாழ்த்தி யவர்களால் உபசரிக்கப்பெற்றுப் போ யினர். பின் சிலகாலஞ்சென்றபின், வேளாண்மரபினரது சிறப்பை விளக்கி "ஏரொழுபது" என்னும் எழுபதுபாட்டடங்கிய பிரபந்தஞ் செய்தமையும், அப்பிரபந்தத்தின் சிறப்பும் அரசன் சபையில் பிர ஸ்தாபமாகும்போது, "வேளாளர் அவ்வளவு சிறப்பையுடையரொ ன்று பாடல் பெறத்தக்கவரோ? அக்கம்பர்சொல் மெய்யாமோ" என்று அரசன் சங்கிக்கையில் கம்பரா லுயிர்பெற்றபிள்ளே தவள கிரிமுதலியாருக்கு தக்கவயதுவந்து தனது தந்தையுத்தியோகத்தை தான்பெற்று அரசன்சபையில் அப்போது இருந்தாராகையால், அர சனவ்வாறு சந்தேகமாய்ச் சொல்லியசொல்லேக் கேட்டு, மகாராஜ னேகம்பர்வாக்கு தெய்வீகமும சத்தியமுமுடையது அவர்வாக்கில் பொய் வராது அதற்கு நானேசாக்ஷியென்று தவளகிரிமுதலியார் தனது பாலியவிருத்தாந்தஞ்சொல்ல, அரசன் முன்னேயதிலும் இச் செய்தியில் சந்தேகம் அதிகமென்றுசொல்லியதுகேட்டு, காய்ச்சிய நெய்யில் முழ்கியெழுந்து கையில்மழுவை யேந்திநின்று, அரசன் சந்தேகத்தை நிவர்த்தித்து, அவ்வரசனுல் தான்புகழப்பெற்றதன்றி, கம்பரையும், அவர்பாடல்பெற்ற வேளாளரையும் புகழ்ந்து கொண் டாடச்செய்தான். என் றறிந்தோர் கூறியிருக்கின்றனர்.

விழுமியசொற் கவிகம்பற் கிறந்தசேய்தனேமறைந்து
விருந்துசெய்தே
ரொழுபதொடச் சேயுயிரும் பெற்றளர்தம்மரபினொன்
றியம்பச்சோழன்
பழுதிதுகற்பனேயெனத்தான்பண்ணுவன் சத்தியமெனத்தீ
பறக்குநெய்யின்
முழுகிமழு வேந்திநின்ருன் வெண்குன்றத்தவளகிரி
முதன்மையோனே.

## வேளாளர் அரசனையு மாற்றிவைப்பரென்பது.

நாறுற்றசெந்தமி ழொப்பாரியென்னுந் தமிழ்புனேந்தோன்
சேறைப்பதிசந்த்ர சேகரவாணன்முன் சென்றவந்நாள்

வீறுற்றனொன்று வேளாளரைமன் விலங்கிலிட
மாறற்குவந்து முடிசூட்டினுன்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

செவ்வியதமிழில் பொற்கம்பிபோன்றதும் "ஒப்பாரி" என்னும் முதற் சொல்லையுடையது மாகிய கம்பர்பாடலைப் பெற்றவனுகிய சேறையென்னும் பதியில்வாழ்ந்த சந்திரசேகரவாணன் என்னும் பிரபுவினிடத்தில், காஞ்சிநகரை யக்காலத்து ஆண்டுவந்த சோழ குலத்தரசன்வர, அப்பிரபு எதிர்கொள்ளாதிருந்தமையால் வேளாளர் செருக்கடைந்தார்களென்று கோபித்து வேளாண் குடிகளை விலங்கிலிட்டுச் சிறைசெய்யக்கண்டு அப்பிரபு அவ்வரசனைப்பிடித்துச்சிறைசெய்துவிட்டுப் பாண்டியகுலத்தரச னொருவனைக்கொணர்ந்து முடிசூட்டினுன் இத்தன்மைய சந்திரசேகரவாணப் பிரபு வாழ்ந்திருந்த சேறைப்பதியும் இத்தொண்டைமண்டலத்துள்ளது. (அஎ)

ஒப்பாரியாய்நின் மகவைத்தெருவி லொருத்திகண்டே
யப்பாவெனவெடுத் தாளணைத்தாளன்னைதானுமென்றுள்
தப்பாதுன்மைந்தனென் ருனங்ஙனேதலை சாய்த்து நின்றுள்
செப்பாயவளெவள் காண்சேறைவாழ்சந்த்ர சேகரனே.

சொல்லையிலாகச் சொரிகவிமாரி சுருதிவல்லான்
செல்லையில்சோலைக் குறுங்குடிவாழ்நம்பி சென்றுகண்ட
வெல்லையினீடுங் கரடக்கடாக்களி றென்றுசொன்ன
வல்லையிற்காளத்தி வாழ்வானதுந்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

வேலாயுதம்போலத் தவிராது பயன்படுத்தவல்ல சொற்களமைந்த கவிகளை மழைசொரிவதுபோல மிகுதிபடச்சொல்வதிலும், சாத்திரவுணர்ச்சியிலும் வல்லவராய் மேகஞ்சென்று தேன்குடித்தற்கிடமாகிய சோலைசூழ்ந்த திருக்குறுங்குடியில் வாழ்ந்த நம்பிஎன்னும் புலவர் வல்லமென்னுமூரில் வாழ்ந்த காளத்திமுதலியாரிடஞ்சென்று கண்டவுடனே "கரடக்கடாக்களிற்ருய்" என்னுஞ் சொல்லமைந்த பாடலைத்துரிதமாகச்சொல்ல, அறம் பொருள் இன்பம் வீடென நான்கு உறுதிப்பொருள்களை யுணர்த்தும் நூல்களை குற்றமறக் கற்ருேர்க்குப் பயனும் கணிதமும் இலக்கணங்களும் மனிதருக்கிரண்டு கண்களா மிதனைக்கற்ருலே கண்களுடையவர் எனப்படும் கல்லாதார் கல்லணிலலாதாராகும் கற்றவர் கற்ருேரையே சேரவிரும்புவா

ஆதலால் கற்றோருயர்ந்தோராவர் அழிவில்லாத செல்வம் கல்வியாம் என்றுணர்ந்து யானைமுதலிய பரிசையும் துரிதமாகக்கொடுத்த வல்லமாநகர்க் காளத்திமுதலியார் வாழ்வுந் தொண்டைமண்டலத்துள்ளது. (அஅ)

## அச்செய்யுள்வருமாறு.

பொரடக்கயம்பிடி யென்றுன்மதனுமிப் பூவையுமா
தரடக்கமுஞ்சற் றறிந்திலளேதனைத் தாள்பணியா
முரடக்கவுடக் கெடிமண்டலீகர் முடிபிடுங்குங்
கரடக்கடாக்களிற் றுய்வல்லைமாநகர் காளத்தியே.

கொல்லையிற்பாற்பசு மேய்ப்போன்கறப்பவன் கொண்டுசென் [றே
யெல்லையிற்சேர்ப்பவன் பாலடுவோனிவ ரித்தனையும்
சொல்லையிற்பாவல ஞேரோர்கவிசொல்லி சொல்லநல்கும
வல்லையிற்காளத்தி வாழ்வானதுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

கூரியசொல்லமைந்த கவிபாடும் புலவரொருவர் குழந்தைக்குப் பாலின்மையால் காளத்திமுதலியாரிடம் கறவற்பசுப் பரிசுபெற்றுவரும்பொருட்டு அவர்பேராற்கவிபாடிக் கொண்டுசெல்லும்வழியிலே கொல்லையிற் பசுவினை மேய்ப்பவன், கறப்பவன், கொண்டுபோவோன், பால்காய்ச்சுவோன் இவர்களப்புலவனை யுபசரித்துத் தம்முள் ஒவ்வொருவர்பேரிலும் பாடப்பெற்று, ஒவ்வொருவரும் பசுக்கொடுத்துப் புலவர்வீடுசேர்த்துத் தமதுஎஜமானனுக்கு அக்கவியை தெரிவிக்க, அவரும் அழைத்துப் பசுவினையையுந் திரவியத்தையும் பரிசாகக்கொடுத்தனுப்பினார், இத்தகைய வல்லத்துக்காளத்திமுதலியாருந் தொண்டைமண்டலத்தினர். (அகூ)

## அக்கவி வருமாறு.

பெற்றுளொருபிள்ளை யென்மனையாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்றுதுகஞ்சி குடிக்குந்தரமல்ல பாலிரக்கச்
சிற்றுளுமில்லையிவ் வெல்லாவருத்தமுந் தீரவொரு
கற்றுதரவல்லை யாவல்லைமாநகர் காளத்தியே.
வழிமேல்விழிவைத்து வாடாமலென்மனை யானைமற்றோர்
பழியாமற்பிள்ளையும் பாலென்றழாமற் பசிதொனுஞ்சொன்

மொழியாமலென்னை வரவிட்டபாவி மூசித்துச்சதை
கழியாமலாவளித்தான்வல்லமாநகர் காளத்தியே.
பள்ளமே செய்யுட் பயிரையெல்லாங் கொள்ளுமுடி
வெள்ளமே யும்மையுநாம் வென்றோமே புள்ளலம்பும்
பொற்கா விவல்லைப் பூபதிகா ளத்தியெனு
நற்கார் நெடுமுடியை நட்டு.

பாகொன்றுசொல்லியைப் பார்த்தமையாலன்று பாண்டியன்
[முன்
னோகின்றசிற்றிடை வேழம்பக்கூத்தி நொடிவரையிற்
சாகின்றபோது தமிழ்ச்சேரயன்றைச் சடையன்றன்மேன்
மாகுன்றெனச்சொன்னபாமாலையுந்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

பாண்டியரசனது சபையில் வேழம்பமாது கழைக்கூத்தாடும் போது, பாண்டியன்மனைவி (இக்கழைக்கூத்தியினதழகே நமதரசன் மனத்தைக்கவர்ந்து கொள்வதாயிருக்க இவளது அரியசெயலையுங் கண்டாலரசன் முற்றுமவள் வசப்பட்டு விடுவானென்று கருதிப் பொறாமைகொண்டு) அவள் "விச்சுளிபாடல்" என்னும் அரியவித்தைசெய்யுஞ்சமயத்தில் அரசனது நோக்கந் தன்முகந்திரும்பச்செய்து விட்டமையாலரசன் அவ்வித்தையைப் பார்க்கத்தப்பியதால் பின்னுமவ்வாடலைச்செய்யும்படி அரசன்கழைக்கூத்தியை வற்புறுத்த அவளரசன் கட்டளையை மறுக்கமாட்டாமல் மரணத்துக்குடன்பட்டு, கழைமேலிருந்து லாவகஞ்செய்யுந்தறுவாயில் ஆகாயத்திற் பறக்கின்றபறவைகளைப்பார்த்து (பறவைகாள் புழற்கோட்டத்து அயன்றைப்பதி சடையபாதப்பிரபுவுக்குநான் சாகின்றேன் என்றுசொல்லுங்கள் என்னுங்கருத்தடங்கிய) 'மாகுன்று' என்னும் முதற்சொல்லையுடைய பாடலைப்பாடி அவ்வரிய வித்தையைச்செய்திறந்தாள் அப்பாமாலைபெற்ற வள்ளல் வாழ்பதியித்தொண்டைமண்டலம். (கூ0)

வரலாறு—விச்சுளிபாய்ச்சல் என்னும் வித்தையாடுவதில் வல்லகழைக்கூத்தி ஒருமுறை பாண்டியனது சமுகத்தில் கழைநட்டு அரசன் அரசிமுதலிய வெல்லோரும்பார்க்க வித்தையாடினள். அப்போது அரசன்மனைவி இக்கழைக்கூத்திமிக அழகியாயிருப்பதன்றி இந்த அரிதானவித்தையையும் கண்டால் அரசனிவள் வசப்பட்டுப்போவானென்று நினைத்து கழைத்தி கழையிலேறி யங்கு பலவித வித்தைகளைச்செய்து இருந்தாற்போலத்தன் மூக்கிலிருந்த இரத்தி

னமூக்குத்தியைக்கழன்று நழுவவிட்டு, அதுகீழே சற்றுதூரம்வந்த வுடனே தான் விச்சுளிஎன்னும் பறவைபோலக் கழைமேலிரு ந்து கீழேபாய்ந்து, கையாற்றொடாமல் பாய்ச்சலிலேயே அம்மூக்க ணியை மூக்கிற் கோத்துக்கொண்டு கீழேகுதிக்காமல் அந்தரத்திலி ருந்தபடியே பின்னும் மேலேபாய்ந்து கழைமேலேறிக்கொண்டா ள். இத்தருணத்தில் அரசன்மனைவி அரசனது நோக்கம் அதிற்செ ல்லாமல் தன்முகந் திரும்பும்படி உபாயஞ்செய்தாள். அதனால் அரசனைதைப்பார்க்கத் தப்பினமையாலுடனே மற்றொருதரம் அவ்வி த்தை செய்யச்சொல்லியதுகேட்டு அவள் ஆறுமாதபரியந்தம் சுவா சபந்தனஞ்செய்து தேகத்தை பலப்படுத்தி ஆறுமாதத்துக் கொரு தரமே யிச்செய்கைசெய்வது உடனே மறுதரஞ்செய்வேனானால் இறந்துபோவேனென்று சொல்லியதுங்கருதாமல் உடனே மற்றொ ருதர மவ்வித்தை செய்ய வற்புறுத்தினான் அரசன் கட்டளையை மறுக்கமாட்டாமல் அவள் மரணத்துக்குத்துணிந்து கழையேறி விச் சுளிப்பாய்ச்சல் பாயும்போது ஆகாயத்திலே பறவைகள் பறந்து போவதைக்கண்டு பறவைகளே பாண்டியராசன் தன்மனைவியென் மேற் பொறாமைகொண்டு செய்துவருகிற தன்னோக்கத்தை யவள்முக ந்திருப்பி யென்வித்தையைப் பாராது விட்டமையால் நான்பின்னும் அச்செயல்செய்து சாகிறேன் நீங்கள் தொண்டைமண்டலத்துப் புழ ற்கோட்டத்திற் செல்வீராயின் அயன்றைப்பதியில் வாழ்வோனும் எத்தகையஅரும்பொருள் கேட்பினும் இரப்போர்க்கு இல்லைஎன் றுமற் கொடுக்கும் வள்ளலுமாகிய சடையநாதப்பிரபுவைக்கண்டு இச்செய்தியைச்சொல்லுங்கள் என்னும் பொருளடங்கிய

> மாகுன்றனையபொற் றோளாண்வழுதிமன் வான்கரும்பின்
> பாகொன்றுசொல்லியைப்பார்த்தனைப்பார்க்கிலன்பையப்பையப்
> போகின்றபுள்ளினங் காள்புழற்கோட்டம் புகுதுவிரேல்
> சாகின்றனளெனச் சொல்வீரயன்றைச்சடையனுக்கே.

என்னும் பாடலைச்சொல்லிவிட்டு இறந்தாள்.

இப்பாடல்பெற்ற சடையநாதவள்ளல் அரியபொருளெவற்றைக் கேட்பினுங் கொடுப்போனென்பது.

இரவலாளரோபெருந்திருவுறுக வரவுமிழ்மணியுமலைகடலமிர்தும் திங்கட்குழவியுஞ் சிங்கப்பாலும் குதிரைமருப்பு *மு தி ரை வா லு மீகெனமொழியினு மில்லெனமொழியான் சடையனையயன்றைத் தலைவனைநீர்போ யுடையதுகேண்மின் னுறுதியுள்ளோரே

*முதிரைவால் — காராமணி.

அவரைதுவரை முதலியவற்றிற்கு வாலில்லை இப்படிக்கில்லா தவைகளைக் கேட்கினும் கொடுக்க வுதாரியே.

ஈரக்கருக்கரி வாள்கொண்டுபோகையி லின்புலவோன்
நேரொக்கவேநின்று வண்டோலிடுமென நின்றுதனஞ்
சேரக்கொடுப்பவொன் றில்லாமன்மன்னவன் செம்பொனெ
[ல்லாம்
வாரிக்கொடுக்கத் துணியவல்லான்றொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஒருவேளாளப்பிரபு யாசகர்க்குக்கொடுத்தே கொடைமிகுதியால் வறுமையடைந்து, யாசகர்க்குக் கொடுக்கப் பொருளின்மையால் இரப்போர்க்கில்லை யென்றுசொல்ல அஞ்சி கழுத்தை யரிந்து கொண்டுயிர்விடக்கருதிக் கருக்கரிவாளைக் கையிலெடுத்துக்கொண்டு போகும்போது ஒருபுலவன்வந்து எதிர்மறித்துக்கொண்டு வண்டோலிடுந்தொண்டை மண்டலத்தானே தியாகமுண்டோ விலையோ வுரை என்னும்பாடலைச்சொல்ல அப்பிரபு புலவனுக்குக்கொடுக்கவொன் றுமில்லாமையால் அரசனது பொக்கிஷத்தில் சிறிதுங் காவலுக் கஞ்சாமல் புகுந்து திரவியங்களையெல்லாம் வாரிவாரிக்கொடுக்கத் தலைப்பட்டான் இத்தகையதீரத்தியாகி வாழ்கைக்கிடமாகியது மித் தொண்டைமண்டலம். (கூக)

## திஷ்டாந்தம்.

பெரும்பொருளைத் தேடிவைத்தவனாகி யப்பொருளை யனுபவி யாதவ னிருந்தாலும் இறந்தவனுக்கொப்பாவன் என்பதையும் பொருளை சம்பாதித்தவன் கொடாமல் பிறருடைய பசிகண்டிருந்தபாவத்தால் உணவுகளுண்டாயிருந்தும் பசித்து வருந்தும் பிறப்புவுண்டாமென்றும் பொருளைவிரும்பிப் புகழை விரும்பாதவர் பிறப்பானது பூமிகுப்பாரமென்றும் பிறரால் இச்சிக்கப்படாதவன் செல்வமானது ஊர்நடுவே எட்டிமரக்கனி யிருந்தாற் போலுமென்றும் தேகாபிமான மில்லாமல் தன்னைவருத்தி சம்பாதித்து காப்பாற்றி செலவழியாது உண்ணாது வைத்திருந்தால் அப்பொருளை பிறர்கொள்வர் என்றும் நன்றியில்லாதவர் செல்வமானது எந்நாளும் பயன்படாததென்றறிந்து தனது பொருளெல்லாம் செலவுசெய்துவிட்டு கையிலொன்றுங் கொடுக்கவின்மையால் நாணம்உயிரினுஞ் சிறந்ததென்றும் நாணில்லாதானை அறஞ்சாராதென்றும் ஒழுக்கம்உண்டாயின் நலம் பிறப்பு கல்வி குணம் செயல் இவைஎல்லாமுண்டாம் அதுவழுவுமாயின் அ

வன் குலத்தையுங்கெடுக்கும் நாணமிலான் சஞ்சரிப்பு மரப்பாவைக
யிற்ருல் உயிருடையதாக மருட்டியதுபோலாமல்லது உயிரில்லாதச
பத்தையொக்கு மென்றறிந்தப்பிரபு உயிரைவெறுத்துச்செல்லும்போ
து மரித்திறந்தவனுக்கு இல்லை என்னுது கொடுத்தகையையுடையதிர
ப்பிரபுவாதலால் இப்படியுங்கொடுத்துப் புகழ்ப்பெற்ருனென்பது.

## நன்றிமறவாதவரொன்பது.

உறைவாளரச ஞெறுப்பனென்றஞ்சி யொளித்ததுவும்
பிறவாமல்வைத்தவர் பேணுதலாலவர் பேர்புனைந்து
திறவாணிபர்முதற் சாதியுள்ளோரொன்று செய்தநன்றி
மறவாமலின்னமும் பாராட்டிடுந்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஒருகாலத்துஅரசன் ஒவ்வொருசாதியிலும் ஒவவொருபெண்ணு
எல்லாசாதியிலுங்கலியாணஞ் செய்துகொண்டுவரும்போது, வே
ளாளச்சாதியிலு மொருபெண்ணை கலியாணஞ்செய்யக்கருதி, அழகி
ற்சிறந்தவொரு வேளாளன்பெண்ணைக்கேட்க அவன்அரசன் கோரிக்
கையைத்தடுக்க அஞ்சிமனமில்லாமலே யொத்துக்கொண்டு மணமுகூ
ர்த்தநாள்குறித்து மணப்பந்தல்சிறப்பித்து அன்றிரவே மணப்பந்தற்
காலிலொருபெண்ணுயகியைஅலங்கரித்துக்கட்டிவைத்துவிட்டு உறை
யிலிடப்பட்ட வாளையுடைய அரசன்கொன்றுவிடுவானென்று அஞ்சி
யக்குடும்பத்தா ரனைவரும் வீட்டைவிட்டு பரதேசம்போய் ஒளித்து
க்கொள்ள, அவர்களை வணிகர்முதலிய சாதியார் இவர்கள் செய்தி
வெளிப்படாமல் மறைத்துவைத்துக் காத்தமையால், அவர்களது
செய்நன்றிமறவாமல் நன்றியறிகுறியாகத்தங்கள் தங்களைக்காத்தவர்
களின் பெயரைத்தங்கள் குடிப்பெயராகவழங்கி வருகின்ருர்கள் இவ்
வாறுசெய்நன்றிமறவாத வேளாளர்களை யுடையதித்தொண்டைமண்
டலம். (௯௨)

## திஷ்டாந்தம்.

ஒருவன் பிறருதவிவேண்டாது செய்தவுதவிக்கு மண்ணுலக
த்தையும் விண்ணுலகத்தையும் தந்தாலுமொத்தலரிது பிரதியுபகார
ங்களுக்கெல்லாம் காரணமிருக்கையால் காரணமில்லாத வுபகாரத்
துக்கு அவைபோதாவாயினவென்றும் ஒருவன் ஓர்காலத்தில் செ
ய்தவுதவி சிறிதாயினும் அது விரிந்தவுலகினும் பெரிதென்றும் அக்
காலத்தின்செயலை நோக்கவேண்டுவதேயன்றி செய்தகாரியஞ் சிறி

தென்றெண்ணுமை நன்றென்றும் பின் இன்னபலன் றருமென்றெ ண்ணுது செய்த வுதவியானது கடலினும் பெரிதுஎன்றும் உதவி க்களவில்லை உதவிசெய்யப்பெற்றுக்கொண்டவர் மகிழ்ச்சியளவேய ளவாகும் துன்பத்தைநீக்கினவர் நன்றியை எப்பிறப்பினும் நினைப்பர் பெரியோர் பிறர்செய்த நன்றியைமறப்பது தருமமல்ல அதுபோல் பிறர்செய்த தீமையை மறப்பது தருமமாகும் எவ்வகைத்தருமங்களை யழித்தவர்களுக்கும் ஈடேறும் மார்க்கமுண்டாம் செய்ந்நன்றி மறந்த வர்களுக்கு வேறுவழியில்லையென்பதனையும் அறிந்த பெரியோராத ல்பற்றி மறவாதவர் வேளாளரென்பதாம்.

## தம்மை விற்றுங் கொடுப்பரென்பது.

மிண்டரை வெல்லும் புகழ்ச்சிங்கராயன் விலைகொடுப்பத்
தண்டமிழ்மேக முறந்தூரில்வேதியன் றனும்விற்பக்
கொண்டவன்பின்சென்று மண்டலத்தேபுகழ் கொண்டபி [ரான்
வண்டமிழ்க்கும்ப னனதாரியுந்தொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

தண்ணிய தமிழ்க் கவியைமேகம் மழைபொழிவது போலச்சொ ல்லவல்லானுகி உறத்தூரிலேயிருந்த பார்ப்பனப் புலவனொருவன் தனக்குப் பொருள்வேண்டி வளப்பம் பொருந்திய தமிழ்ப்பெரும் புலவனுகிய வேளாண் குடியிற்பிறந்த கும்பமுதலியார்என்பவர் குமா ரரும் வாயிலென்னுமூரில் வசித்தவரும் தமிழ் பாகவதபுராணம் செய்தவருமாகிய அனதாரியப்பமுதலியாரைவிற்க விலைகொடுத்தவ னும் துட்டரைவென்று புகழ்பெறுவோனுமாகிய சிங்கராயன்பின் னே ஒருவித்துவானைக் காப்பாற்றும்பொருட்டு விலைப்பட்டு உடன் பட்டுச்சென்று புகழ்பெற்றான் இவ்வாறு தன்னை விற்றும் புகழ்கொ ண்டபெருமையுடைய அனதாரியப்ப முதலியார் வாழ்ந்தது மித்தொ ண்டைமண்டலத்திலேயே. (கூ௩)

"கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்த னென்றுங்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ—யம்புவியில்
மன்னு வலர்புகழும் வாயிலன தாரியப்ப
னங்காளி லேயிருந்தக் கால்."

என்பதனுற்காண்க.

## மானமே பெரிதாகக்கொள்வரென்பது.

தாளாண்மையுள்ள புகழ்கிருஷ்ணராயன் சமுகத்திலே
வேளாண்மகளிரைப் போலேவிறேதித்து வேடங்கொண்டு
கோளார்வயிரியர் கூத்தாடத்தங்கள் குடிமையெண்ணி
வாளாலவனுயிர் மாய்ந்ததன்றேதொண்டை மண்டலமே.

[இதன்பொழிப்பு]

சந்திரகிரியிலரசுசெய்த விடாமுயற்சியையும் பெரும்புகழை யுமுடைய கிருஷ்ணராயர் சபையில் கூத்தாடுங் கொள்கையில்வல்ல கூத்தர் வேளாளப்பெண்ணைப்போல வேடிக்கை வேடந்தரித்துக்கொண்டாடக்கண்டு, தமது குடிப்பெருமையை யிகழ்ந்ததைக்கருதி ஓர் வேளாளனேவலாலவ்வேடதாரியை வாளால்வெட்டி விட்டனன் தங்குடிமைக் கிழிவுவரச் சகியாத வீரமுடைய வேளாளர் வாழ்வதித் தொண்டைமண்டலம். (கூச)

### வரலாறு.

சந்திரகிரி நகரத்திலே கிருஷ்ணராயன் அரசுபெற்றியகாலத்திலே மந்திரியாயிருந்த அம்பிலென்னும் ஊர் வேளாளகுலத்தினராகிய அறம்வளர்த்தான் முதலியார் பட்டத்துப் பெருமையுடைய சிலர் முதலாய், சாலிவாகன சகவருடம (கசஙங) ல் கூத்தாடுவோர் வேளாளப்பெண்போல வேடந்தரித்துக்கொண்டு கிருஷ்ணராயன் சபையிலவந்து வேடிக்கையாக ஆட, அதுகண்ட மந்திரியாகிய அறம்வளர்த்த முதலியார்தமது வேளாள குடிமையைப்பரிகாசம்செய்வது பொறுமல் மிகுந்தகோபங்கொள்ளுங் குறிப்பையங்கிருந்த அவரது சேவகன் அறிந்து தாயேதாங்கள் திருமாளிகைவாயில்கடந்து சபையேறி இங்குவந்தகாரணம் யாதென்றுகேட்க வேடதாரியும் பரிகாசமாக நீர்வந்தது போலவே நானும்வந்தேனென்றுசொல்ல அதுகேட்ட அச்சேவகன் எமது எஜமான்கள் சாதிக்குத்தகாத துற்செய்கை செய்தவும்மை யிங்கேயேதண்டிப்பேன் என்று அரசன்கொலுவில்நின்ற கவரைச்சேவகன் தன்கையிலிருந்த வாளாயுதத்தால் அவ்வேடதாரியை யொரேவெட்டாக வெட்டித்தலையைவீழ்த்தினன் அப்படிவெட்டினதற்காக அவனைக்குற்றவாளியாக்காமல் வேடப்பிராந்தியால் மயங்கி இப்படிச்செய்தானென்றுகருதி அபிமானம்பற்றி நின்ற கவரைச்சேவகன் வீரத்தைமெச்சி அந்தச்சமயம் கவரைச்சேவகன்மரபினோரை தங்கள்வேளாளமரபினோர்க்கு அடிமையாகிய

பறையர்களுக்கும் தங்கள் வலங்கைபாணத்திற்சேர்ந்த மற்றைச்சாதி
யர்க்கும் தலைவர்களாக விருக்கும்படித் தேசாயிசெட்டியென்று பேர்
கொடுத்து மணிமுத்திரையும் விருதுங்கொடுத்து வலங்கைபாணத்தா
ரிடத்தில் வரும்படிபெற்று சீவிக்கும்படிச் செப்பேட்டுச்சாசனமும்
காஞ்சீப்புரம்ஆலயத்தில் சிலாசாசனமும் மந்திரியாகிய அறம்வளர்த்தா
ன்முதலியார் செய்துவைத்தனர் அதுமுதல் வளையல்கவரைச்செட்டி
களில் தேசாயிசெட்டிகளென்று பட்டப்பெயர்பெற்று அதேதொழி
லாகவரும்படி பெற்று ஜீவித்துவருகின்றார்கள்.

பயிரைப்பெரும்பன்றி தின்றதற்காகப் பரிசனத்தோ
ருயிரைப்பருகி யுடலவர்க்கீய வொருபுலவன்
செயிரைப்புடைத்ததுந் தானேபொறுத்தந்தச்செய்யுதவு
வயிரப்பனென்பவன் வாழ்வானதுந்தொண்டைமண்டலமே.

[இதன்பொழிப்பு]

ஒருபுலவனதுபயிரை வயிரப்பமுதலியாரது பண்ணைக்காரர்கள் வளர்க்கும் பன்றிகள் மேய்ந்தழித்துவிட, அப்புலவன் அப்பன்றிகளையும் பண்ணைக்காரர்களையுங் கொல்ல, அப்புலவனைச்சமாதானஞ்செய்யவந்த வயிரப்பமுதலியையும் அடித்தான். முதலியார் அப்புலவன் செய்த பெருங்குற்றத்தையன்றித் தன்னையுமடித்தான் என்றெண்ணாமல் தானே பொறுத்து அவ்வித்துவான்செய்தது கொடுமையாயிருந்தாலும் கோபஞ்செல்லுமிடத்துக் காப்பவனே கோபத்தைக்காப்பவன் வலியவர்மேலே கோபிப்பது தனக்கேகெடுதியாம் எளியவர் மேல்கோபித்தல் அதனினுங்குற்றமா மாதலால் கோபத்தையடக்கவேண்டும் அடக்கானாயின் அதனாற் பாவங்களுண்டாம் அன்றியும் அதுமுகமலர்ச்சியையும் உள்ளமகிழ்ச்சியையும் கெடுக்கும் என்றுணர்ந்து தன்னைக் காக்கநினைப்பவன் கோபம்வராமல் காக்கக்கடவன் கோபத்தியை வளர்ப்பானானால் தன்னையுந் தன்னினத்தாரையுஞ் சுடும் என்பதுணர்ந்தும் ஒருவன் துன்பஞ்செய்யினும் அவன்மேற் கோபியாமை நன்றென்றுணர்ந்தவராதல்பற்றி அவ்வித்துவானுக்கு இதஞ்சொல்லிவணங்கி வெட்டுவோரைத்தாங்கு நிலம்போல இகழ்வாரைத்தாங்குவது தருமமென்றும் பிறர்குற்றத்தை பொறுத்தலே நன்றென்றுமதித்து பிறர்குற்றத்தைபபற்றி தண்டிப்பவர்க் கொருநாளையின்பம் பொறுத்தவர்க் குலகமழியுமளவு மின்பமுண்டாமென்பதறிந்த பொறுமையே யியற்கையாகியமுதலியார் வித்துவான்நட்டத்திற்கு மிகவதிகமாகத்தனது விளைநிலங்களையும் பரிசாகக்கொடுத்தார்இத்த

கையபிரபுவாழ்தற்கிடமாகிய இத்தொண்டைமண்டலம். (கூ௫)

குருகுதங்கள்கருவெனவெண்முத்தமிசைகுடியிருக்குமெழில்பழனநீள்
குமுதமல்குதடமேய வென்றிதிருதொண்டை மண்டல வரம்பினுள்
பரவுகால்வளைபல் குன்றகோட்டமெய் யூரமர்ந்தவயிரப்பபூ
பதிதனக்கடிமை வேலை செய்பவர் வளர்த்த பன்றி யொருபாவலன்
விரிநிலத்தில் சிறப்பமிராழிககநனிவெகுளிகொண்டு விறல்கவிவலான்
விளைவிலாங்கதனை யும்வளர்த்தவனை " செருக்க வைரப்பமேள்
கருதிவாணனிகல முனிவுதீர நெடு கதிர்விளைச்சலுத விபுகழ்
கமழ்பெருங்குவளை மாலைசேரிலருககுகையங்குலவே ளாண்கோலோ

தேர்கொடுத்தோனும் பரிகொடுத்தோனுந் திருமனையிற்
றூர்கொடுத்தோனுந் தலைகொடுத்தோனுந் தமிழினுக்கா
வூர்கொடுத்தோனு முயிர்கொடுத்தோனு முறைநகொடுக்க
மார்கொடுத்தோனு மனையோருளார்தொண்டைமண்டலமே

[இதன் பொழிப்பு]

தமிழ்ப்பாமாலைபெற்றுப் புலவோர்க்குத் தேர், குதிரை, சிறப்புப் பொருந்திய மனைவி, மாலை, தனதுதலை, ஊர், தனதுயிர் இவற்றைக் கொடுத்தவரும் ; வித்துவானுதைக்கத்தனது மார்பையேந்தினவனும் போலத்தியாகப் பிரபுக்களித்தொண்டைமண்டலத்திலின்னு மநேகரி ருக்கின்றார்கள். (கூசு)

தேர்கொடுத்தானென்பது—ஓர்வேளாளப்பிரபுவை, (வண்டோ விடுந் தொண்டைமண்டலத்தானே த்யாக முண்டோவிலையோவுரை) யெனக் கேட்டவப்பொழுதே அப்புலவரிஷ்டத்துக் கெண்மடங்கதிக மாகத் தேர் முதலியவற்றைக்கொடுத்துபசரித்தனுப்பினன்.

[மேற்கோள்.]

கடல்கிழிய வோடுங் கலம்போ லொன்று
றுடல்கிழிய வொள்வாள் விதிர்த்து—மடல்கிழியும்
பைம்பொற்றூர் மன்னர் படைநடுவே யோடிற்றே
செம்பொற்றண் டேந்தினன் றேர்.

பரிகொடுத்தானென்பது:-ஆகாயத்தின்கண் சஞ்சரித்திருக்கும்,சகோ ரபட்சியானது, அவ்வாகாயத்திற்றனே முட்டையிட்டு அது கீழேபூமி யில்வந்து விழாமுன்னர் இறகுமுளைத்து விண்மேற்பரந்துபோய் சதா சந்திர கிரணத்தையுண்டிருக்கும் அதுபோல் சாதகபட்சியானது

மழைத்துளிகளையுண்ண அபேட்சித்து மேகத்தையண்ணாந்து பார்த்த படியேவாயைத் திறந்துகொண்டிருக்கும், அப்பறவையின்கண்டத்தில் துவாரமிருப்பதினால் ஒவ்வொருகாலத்தில் அத்துவாரவழியில் மழைத்துளிகள் சிலசிதறி யொழுகிப்போகும் அப்போது பசிமிகுதியால் வருந்தும். அப்படிப்பட்ட சகோரபட்சிகளை, யொத்தபுலவர்கள் வந்து, யாசிக்குங்கால், தேகமெங்கும்பரவக் கனகாபிஷேகஞ்செய்து அவர்கள் போதும் போதுமென்னக் கொடுக்கும் கொடையாளியாதலால் அசுவ லட்சணங்களிற் சிறந்துள்ள, குதிரையொன்றை, அபேட்சித்தவருக்கு, நடைப்பரியாயிரங் கொடுத்தா னுறையானே, என்பதானு முணர்க?

**மனைவியை யளித்தாரோன்பது** :—அந்தமுள னாணளித்தான் வீடுராதிஎன்பதில், ஓர்புலவன், தன்மனைவியைத்தாவென்ன அன்றில் பட்சிகள் ஆண் பெண்ணிரண்டும் பிரியாது உடலுமுயிரும்போலிருந்துவாழும் ஒன்றைவிட்டொன்று பிரியின் உயிர்அக்கணமே நீங்கிவிடும் அதுபோலுள்ள தனது மனைவியைக் கேட்டபொழுதே மனமகிழ்ந்துவகையோடுகொடுத்துப் புகழ்பெற்றான். அவ்வன்றிற்பட்சிகள் உடலொன்று யெப்போதும் பிணைந்து தலைமாத்திரம் இரண்டாயிருப்பதினால் இருதலைப்பட்சி யென்பாருமுளர். (அக) ம் பாடலினுங் காண்க? .

**தலைகொடுத்தாரோன்பது** :—ஒருபுலவன் ஒருபிரபுவின்தலையைக் கேட்கையில அவருள்ளங்களிக்க மகிழ்ந்து தன்றலையையறுத்துக்கொடுத்தார என்பது :—

[மேற்கோள்]

ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றயிலு
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—சோலைதொறுஞ்
செங்கே தகைமணக்குஞ் செக்குன்ற யெல்லனெங்கே
யங்கே யிரவலரெல் லாம்.

(எஎ) ம் பாடலின்கீழ் தலையிந்தாவெனு மைந்தாதாலோவென்னும் உதாரணத்தானுமுணர்க?

**ஊர் கொடுத்தாரோன்பது** :—ஒருவேளாளப்பிரபுவை ஒருவித்துவான் ஒரூரைவேண்டிக்கேட்க மீன்பார்வையும் ஆமையணைப்பும் போல அடுத்த வித்வான்களை ஆதரிக்கவல்லபிரபு அநேகவூரைக் கொடுக்கப்பெற்றதனால் அவ்வித்துவான் பின்னும் பாடியசெய்யுள்

பொருமாகடலிடைத் தோன்றலல்லாது புணரிவெள்ளந்
தருமாமணியொன் று கண்டதுண்டோவையந் தந்தவனுந்
திருமாலும்போற்றுந்தென் ஞருரிற்சம்பந்த தேசிகனு
மொருமாசிலாமணி பேரின்பவாரி யுதவியதே.

உயிர்கொடுத்தானென்பது:—ஒரு கவிஞன் ஓர்வேளாளப்பிரபு வின் உதாரத்துவத்தைச் சோதிக்கவெண்ணி உமதுயிரைத்தாவெ ன்னு முன்னரோ அப்பிரபுவின் உயிர்நீங்கிற்று என்பது உதாரத்தில் மிக்ககீர்த்திபெற்ற ஓர் வேளாளன் இசசெயல் செய்யின் தன்னுயிர் நீங்கிவிடுமென்பதறிந்தும் தன்வயிற்றைப்பீறி யுள்ளிருந்ததையும் கொ டுத்தானென்பது. ஒட்டகமானது தன்முதுகின்முட்டை யியற்கை யாயுள்ள உடலறையில் உணவை சேர்த்துவைத்துக்கொண்டிருந்து பிரயாணமாகுங்கால் எஜமானனுக்கு வருத்தங்கொடாமல் தன்னுட லறையிலிருக்கு முணவைததின்றே தனதுயிரையும்காத்து எஜமான னுக்கு முதவிசெய்கின்றது. அதுபோல் தன்வயிற்றிலிருந்த வுணவை தன்னுயிர் போமென்பதுணர்ந்தும அவ்வயிற்றைப்பீறியுங் கொடுத்தா னென்பது. இஃது. (எஉ-அ0) வது பாடல்களி னுரையாலுங் காண்க?

உதைக்க மார்பை ஏந்தினனென்பது:—ஓர் கவிஞன் கோப த்துடன் றன்காலாலுதைத்தபோது அக்கவிஞன் பாதத்துக்குநேராக தன்மார்பையேந்தி அவ்வுதையைததாங்கினர். ஓர் வேளாளப் பிரபு வென்பது. (மேற்கோள்)

மண்படுமோ வெய்யலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வன்பாகக் கற்றவர்க்கு—மண்புகழு
மெச்சியப்பா லும்புகழும் வீறுவல்லே யாளவந்த
கச்சியப்ப னையுதைததக் கால். (எஉ) ம் பாட்டினுங்காண்க.

இன்னவர்காலத்தி லெத்தனைபேர்மற் றிவர்களுக்கு
முன்னவர்காலத்தி லெத்தனைபேரிம் முதலிகடம்
பின்னவர்காலத்தி லெத்தனைபேர்கள் பிறப்பவர்முன் [லமே.
மன்னவர்காலத் தொடர்புடைத்தாற்றொண்டை மண்ட

[இதன் பொழிப்பு.]

இந்நூலிற் சொல்லப்பட்ட பிரபுக்கள் காலத்திலேயே இன் னும் அனேகம் பிரபுக்களிருந்தார்கள் இவர்களுக்கு முன்னோர்காலத் தில் அப்பர் - சுந்தரர் - சம்பந்தர் - இம்மூவரும் சைவசமயாசாரியர்

களாக விளங்கியிருந்தனர் இவருள் அப்பர் வேளாளத்திருமேனியார் இவர் அம்மூவரிலொருவராகவு மிருந்தாலும் இவர் [illegible]ராலிடப் பட்ட நீற்றறை முதலிய பலதுன்பங்களை யணுகாது அனேக அற்பு தங்களை விளக்கித் தமிழ்வேதமென்னுந் தேவாரங்களையோதி பரம னருள் பெற்றனர். (கஎ)

அறுபத்து நாயன்மார்களுள் வேளாளத் திருமேனியார் பதின் மூவர்கள் முக்திபெற்று ஆலயங்கடோறும் பூஜிக்கப்படுகின்றனர் பர மசிவம் (உலகெலாமுணர்ந்தோதற்கரியவனென) அடியெடுத்துக்கொடு க்கப் பெரியபுராணம்செய்தருளிய சேக்கிழார்சுவாமிகளும் வேளாளத் திருமேனியார். பரமசிவத்தின் திருமுகம எழுதும் பாக்கியம்பெற்ற உமாபதி சிவாசாரியாா அவாகளால இவரது புகழ்விளங்க சேக்கிழார் புராணமும் செய்யப்பட்டிருக்கின்றன திருஞானசம்பந்தசுவாமிகள் காரைக்காலம்மையாா திருவாலங்காடு தேவாரத்திருப்பதிகங்களிலும் பரஞ்சோதிமாமுனிவரால் மதுரைத்திருவிளையாடல்புராணம்வளைஎறி ந்தபடலத்திலும் வேளாளரை வியந்துபாடப்பெற்றிருக்கின்றனர். குருகாபுரியில் காரிமுதலியார் புத்திரராயவதரித்த நம்மாழ்வார் வேத ங்களைத் திருவாய்மொழிப் பிரபந்தமாகச் செய்து வைணவமதோ த்தாரணஞ்செய்தனர் திருவெண்ணெய்நல்லூர்சடையப்பமுதலியார் மரபில் சுவேதவனப்பெருமாள் மெய்கண்ட சிவாசாரியார் முதலி யோர்கள் திருவாவடுதுறை காஞ்சிமாநகர் ஞானப்பிரகாசமடமுத லிய மடாதிபதிகளாக விளங்குகின்றனர். வேளாளர் இப்படி சைவ வைஷ்ணவ மிரண்டுமதங்களையும் உத்தாரணம் செய்துவருவது அநா தியாயுள்ளதென்பது சித்தாந்தமே. இராமாயணஞ்செய்தகம்பநாடர் பாகவதஞ்செய்த அனதாரியப்பமுதலியார், கண்டசுத்திபாடியானைக் கண் வளநாடுபெற்ற கவிவீரராகவமுதலியார், சுப்பிரமண்யரால் பாடல்பெற்ற பொய்யா மொழிப்புலவ ரிவர்கள் வேளாளரில் சிறந்தக விகளாக இருந்தனர். திருவெண்ணெய்நல்லூர் சடையப்பமுதலியார், அயன்றைச்சடையப்பமுதவியுார், வல்லமாநகரம் காளத்திமுதலியார் திருமின்றையூர் காளத்திமுதலியார், ஆற்றூர் ஏகம்பவாணமுதலியார் இச்சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் மற்றையபிரபுக்கள் சரித்திர ங்களாலும் வேளாளகுலத்தாரது பெருமை, சத்தியம், அரியசெயல் களால் என்றும் அழியாவண்ணம் புகழ்ப்பெற்றனர் என்பதின் [illegible] இவர்களுக்கு மிற்காலத்திலும் எத்தனையோ தியாகப்பிரபுக் [illegible]. இவ்வாறே [illegible] [illegible]

ராகிய மநுமாந்தாதாக்கள் காலந் தொடங்கித் தியாகப்பிரபுக்களாய்ப பாரம்பரியராகிய வேளாளர்இத்தொண்டைமண்டலத்தினர்.

குழுவார்குடிமக்க ளானகண்ணாளர் குறும்படக்கி
எழுவாயமைந்த மநுநீதியாற்பதி னெண்மரபு
முழுவானரித்துக் கிடந்துவிடாம லுலகுக்கெல்லாம்
வழுவாதமைக்கவும் வல்லதுதொண்டை மண்டலமே.

[இதன் பொழிப்பு.]

வேளாணகுடிக்கு உதவிமக்களாயிருந்த கம்மாளா கூட்டங்கூடிக்கொண்டு உழவுக்குரிய கருவிகளைச்செய்து கொடாதிருந்த அகந்தை கெட அவர்களையடக்கி தருமநூலிற்சொல்லிய நீதிவழியேபதினெண் மரபினரும் சிதைந்தழிந்து போகாமல் தவறுதலின்றித் தமது உழு தொழிலால் உலகையெல்லாம் உபகரித்துக்காக்கவல்ல வேளாண்மர பினரையுடையது இத்தொண்டைமண்டலம் (கூஅ)

வரலாறு.

கம்மாளாகளெல்லாங் கூடி மார்தை யென்னும் ஊரில்கார தக்கோட்டைக் கட்டி யதனுள்ளே யிருந்துகொண்டு தமதுகடமை யாகிய கைத் தொழில்செய்து வேளாளர்க் குதவிசெய்யாமல் பகைபா ராட்டினமையால் வேளாண்மரபினர்வரகம் வைக்கோலிட்டுஅக்கா ந்தக்கோட்டையைக் கொளுத்தி கம்மாளரைச் செருக்கடக்கித்தமது உழவுதொழிற்குரிய கருவிமுதலியவை செய்து கொடுத்தலாகிய செய் கடன் செய்வித்துக்கொண்டார்கள் என்பது கர்னபரம்பரை.

பதினெண்வருணத்தாரது தொழிலும் ஜீவிதமும் வருமாறு.

அடியில்வரும் பதினெண்சாதியினும் அததில் பலபிரிவுகளுண்டு அதில் வேளாளர்க்குத் தொழில்செய்பவர்களைப்பற்றி மாத்திரம் சொல்லப்பட்டனவென்றறிக. பதினெண்வருணத்தார் குடிமக்கள் என் பதற்குப் பொருள் குடியென்பது வேளாண்குடியே மக்கள் என்பது மநிதர்கள் பொதுப்பெயராகும். இரண்டாவது திவாகரத்திற்கு மக் கட்பெயர்த்தொகுதி யென்பதினுலுமறிக.

(க) கணக்கர்செயல்:—கிராமக்குடியிறை, அரசிறை, கணக் கெழுதுதல், இறற்றுல் பெறப்படும் ஊதியமும் மேனாத்தானியமும் உரு.

(உ) **கம்மாளர்செயல்:**—கருமான் காறுமுதலிய கருவிகள் தச்சர், கலப்பை முதலியனவும், தட்டார், ஆபரணங்கள், மணி, பொன் நாணய முதலியவற்றின் நோட்டம்பார்த்தல், கன்னர், பாண்டபாத் திரங்களாதிகள், சிற்பி மனைமுதலிய கட்டடங்கள் செய்துகொடுத்தல் இவர்களிவற்றால் பெறப்படுமூதியமும் கதிர்விலக்கு மேனாத்தானி யமும் உண்டு.

(௩) **மேய்ப்பன் செயல்:**—மூவினமேய்த்துப் பாதுகாத்தல், பால்கறந்து கொடுத்தல், படிமுதலியவை வாங்கி யுண்ணல், மூவின மென்பது பசு, எருமை, ஆடு.

(௪) **துயவன் செயல்:**—சுபாசுபங்களில் நவபாண்டங் கொ ணர்ந்து கொடுத்து . களத்தில் கதிர்விலக்கு கைபிச்சை மேனா அகத் தன்னமும் உண்டு.

(௫) **பணிச்சவன் செயல்:**—நாடோறும் ஏவல்செய்தல், அசு பத்தில், சங்கு தாரை யூதுதல், கதிர்விலக்கு களத்தில் களப்பிச்சை அக த்தன்னமும் உண்டு.

(௬) **வண்ணான் செயல்:**—தாசுவெளுத்தல், கலியாணத்தில் தீவர்த்திசெய்தல், எண்ணெயிடுதல், வண்ணாத்தி ருது, பிரசவம் முதலி யவற்றில் பெண்களாடை சுத்திசெய்தல். இவற்றால் பெறப்படும் ஊதியமும் கதிர்விலக்கு களப்பிச்சை அகத்தன்னமும் உண்டு.

(௭) **நாவிதன் செயல்:**—வபநம் செய்தல், அம்பட்சி பிரசவ முதலியவற்றில் மருத்துவஞ்செய்தல், அறைகாத்தல், அசுத்தம்நீக் குதல் இவற்றால் பெறப்படு மூதியமும் விளை புலத்தில் கதிர்விலக்கு களத்தில் ஸ்கபிச்சை அகத்தன்னமும் உண்டு.

(௮) **காவலாளர்:**—கிராமத்திலும் விளைபுலங்களிலும் இரவும் பகலும் காவல்செய்தல், ஏவினவேலைசெய்தல், களத்தில் மேனாத்தா னியமுண்டு.

(௯) **தடிமீ:**—விஷதிருஷ்டமானால் ஔஷதங்கொடுத்தல் சுபாசுபங்களுக்கு சமிதை கொணர்ந்து கொடுத்தல், விலக்குப்பிச்சை அகத்தன்னமும் உண்டு.

(௧௦) **தாசி:**—தேவாலயங்களில் பணிவிடை செய்தல், விவா கத்தில் கலியாணப்பெண்களை யலங்கரிததல் முதலிய தாதித்தொழிற்

செய்தல், மணப்பந்தலிலும் ஊர்கோலத்திலும் ஆடல் பாடல் செய்தல், ஆலமேந்துதல், கவரிவீசுதல், அசுபத்திலும் உடந்தையாயிருத்தல் இவற்றானூதியமும் விலக்கு களப்பிச்சையும் மாணிக்கத்தாள் எனப்பெயருமுண்டு.

(கக) பூவாண்டி:—தேவாலயங்களுக்கும் வீடுகளில் உள்ள விக்கிரகங்களுக்கும், மலர்களும் மாலைகளும், சுபாசுபங்களுக்கு மலர்களும் மாலைகளும் கொடுத்தல், களத்தில் விலக்குப்பிச்சை வீட்டிலன்னமும் உண்டு.

(கஉ) மேளக்காரன்-நாவிதன்:—தேவாலயங்களிலும் கிரகங்களிலும் சுபாசுபங்களில் வாத்தியங்கொட்டுதல்; இவற்றானூதியமும் கதிர்விலக்கு களப்பிச்சையுமுண்டு.

(கங) வைரியர்-ஒர்சாதி:—புகழ்பாடுதல், பட்பையடித்தல், கூத்தாடுதல் இவற்றாற்பெறப்படு மூதியமும் களப்பிச்சை முதலியனவும் உண்டு.

(கச) பாணர்:—புகழ்பாடி யாழ்வாசித்துப் பரிசுபெற்றும் தைக்குந் தொழிலால் களப்பிச்சையும் உண்டு.

(கரு) பண்ணைக்காரன்:—ஆண்பெண் கொத்தடிமைமுறிபட்டு இரவும் பகலும் ஏர்த்தொழிலாதி செய்தல், சுபாசுபங்களில் பறையடித்தல், படி களம் களவாசம் சிறப்புப்பணம் ஏவுபடியும் பெறுவர்.

(கசு) பண்ணைக்காரி:—கொத்தடிமையாகி முறிபட்டு பண்ணையமுதலிய விவசாயத்தொழிற்கு புருடனுடன் உடந்தையாயிருந்து தின கூலி முன்வா பின்வா ஒல்லிக்குந்தப்பினது முதலிய தானியங்கள் வரும்படியாகப்பெற்று ஜீவிப்பர்.

முறியென்பது-சாசனம். அஃதாவது:—

ஸ்ரீமன் மஹாமண்டலேசுவர மேதினி மீசுரகண்ட கட்டாரி சாளுவஅரியராயவிபாடன் பாஷைக்குத் தப்புவராயகண்டன் மூவராயகண்டன் இந்தராய சுரதாணன் கண்டநாடு கொண்டுகொண்ட நாடு கொடாதான் துலுக்கதளவிபாடன் துலுக்கமோகந் தவிர்த்தோன் எம்மண்டலமும் ஈழமுந் திறைகொண்டருளிய ராஜாதிராஜன் ராஜபரமேசுவரன் ராஜமார்த்தாண்டன் ராஜதேசோகிதி செஜவேட்டை கொண்டருளிய ஸ்ரீ வீரப் பிரதாபன் ஸ்ரீ ரங்கதேவ மஹாராஜன்

பிருதிவிராச்சியம்பண்ணி யருளாநின்ற சாலிவாகன சகாப்தவருஷம்
௧௭௦௮-க்கு மேல் செல்லாநின்ற ப்லவங்கஸ்ரீ அற்பிசிமீ ௨௯
ஆதிவாரம் அனுஷநக்ஷத்திரம் துதிகை பூர்வபக்ஷம் கூடிய இப்படி
ப்பட்ட சுபதினத்தில் ஜெயங்கொண்ட தொண்டை மண்டலத்தில்
வெண்குன்றக்கோட்டத்தில் அத்திபத்தில் பெருநகர்நாட்டில் பெருந
கரில் பறைத்திடரில் தோட்டிகம்புகட்டி அவன் பெண்சாதி மூத்தி
இவர்கள் மகன் குன்னன் ஓம் என்னுடைய தங்கச்சிமார் ஆறுபேரில்
மூத்தவள் பாதுராள் தளம்ப முதலியாருக்கடிமை அவளுக்கிளையவள்
செல்லி வளவந்தை மாசிலாமணி முதலியாருக்கு அடிமை, அவளுக்
கிளையவள் சடைச்சி குண்டியாந்தாங்கலிலே வாழ்க்கைப்பட்டிருக்கி
றாள் அவளுக்கிளையவள் சின்னபாதுராள் வீட்டிலேயிருக்கிறாள் ஆக
வுரு நாலுபோக நீக்கு சின்னபாதுராளுக் கிளையவளான பார்வதியும்
அவளுக்கிளையவள் மூத்தியும் ஆகவுரு இரண்டு இந்த இரண்டுவுரு
வையும் கொத்தடிமையாக விலைதந்து கொள்வாருளரோவென்று முற்
கூற் இம்மொழிகேட்டு இதற்கு எதிர்மொழிகொடுத்தோன் இம்மண்ட
லத்தில் இக்கோட்டத்தில் இப்பத்தில் இந்நாட்டில் இவ்வூரில் இரு
க்கும் வேளாளரில் சிங்களராயகோத்திரம் சுவாமிநாதமுதலியார்
குமாரன் சேஷாசலமுதலியார் உள்ளிட்டார் ஓம் பிற்கூறி விலைத
ந்துகொள்வோமென்று பிற்கூற முற்கூறியகுன்னனும் பிற்கூறிய
சேஷாசலமுதலியாரும் எம்மிலிசைந்து தம்மில்பொருந்தி பெருநகர்
மண்ணுளர் மனைகொள்வர்முன்பாக என்னுடைய தங்கச்சி பார்வதி
யும் மூத்தியும் விலையாகநிச்சயித்த அன்றாடகம் செல்லும்படி பூரா
கவராகன் ௨ - இந்தவராகனிரண்டிற்கும் என்தங்கச்சி பார்வதியும்
மூத்தியும் விலையறவிற்று பொருளறக்கைக்கொண்டு விற்றவிலைப்பிர
மாணம் பண்ணிக்கொடுத்தேன் இதுவே விலையாவதாகவும் இதுவே
விலைப்பிரமாணமதாகவும் இதுவே இருக்காலாவது முக்காலாவதுவிலை
ப்பிரமாணமதாகவும் இந்தப்பெண்கள் இரண்டும் தங்களுக்கு விற்
றதலைத்தி சீதனங்களுக்குரித்தாகக்கடவதாகவும் எப்பேர்ப்பட்ட அடி
மைத்தொழிலுக்கும் உரித்தாகக்கடவதாகவும் இந்தப்பெண்கள்பார்
வதிக்கும் மூத்திக்கும் வேறொருகலனுமில்லை கலனுளதாய் தோற்று
மளவில் ஏறுமண்டலமேறி நானேகலன் தீர்த்துக்கொடுக்கக்கடவேன்
இப்படி சம்மதித்து என்தங்கச்சி பார்வதியும் மூத்தியும் சேஷாசல
முதலியாருக்கு இந்த வராகனிரண்டிற்கும் விலைப்பிரமாணம்பண்ணி
க்கொடுத்தேன் குன்னன் இதற்கு திரவிய செலவுநோட்டம் சிற்றம்ப

லம் பார்வையில் ரொக்கம் அரைவராகனும் செல்லுவிலை வராகன் ஒ ன்றரையும் ஆகவராகன் ௨-இந்தவராகன் இரண்டும் கணக்குரவேசு பணம் ௧-ம்பற்றிக்கொண்டேன் இந்தசாதனத்துக்கு வெட்டு, செதுக்கு, வாசகப்பிழை, வரிமாறுட்டம், நெரிதல், முறிதல், வாட்டத்தென்று சொல்லப்பட்ட தல்லாதாகவும் இவர்கள் சம்மதியில் இந்தசாதனம் எழுதினநன்மைக்கு பெருநகர் ஊர்கணக்கு இரண்டாம்பங்கு தொண் டைமண்டல பிரம்மாதி ராயரான ஆறுமுகத்தாப்பிள்ளை குமாரன் முருகப்பிள்ளை கையெழுத்து.

இந்த சாசனமானது விடுவிக்காமல் அடியில் மூன்று ஓலை ஒன் றாய்க்கொத்தாகவிருக்கும்படி வாரி மூலைதறித்து மூன்று ஏட்டிலும் எழுதியிருக்கிறது இதை பார்க்கும்போதே கொத்தடிமைச் சீட்டெ ன்றுவிளங்கும் இது வேளாளர் வீடுகடோறும் பலவுள.

(௧௭) பறையரென்பது-நம்புநட்டி:—வயலில் நீர் கட்டுதல், விளைபுலங்காத்தல், மயானங்காத்தல், கட்டை, வரட்டி கொண்டு பிணஞ் சுடுதல், செத்தமாடெடுத்தல் இவற்றாற்பெறப்படுமூதியமும் பெறுவர்.

(௧௮) தோட்டிச்சி. தோட்டிதொழில் யாவற்றிற்கும் உடந் தையாயிருந்து ஊழியஞ்செய்து ஜீவிப்பர்.

இந்தப்பதினெண்மருக்கும் வேளாண் குலத்தினர் சுபத்திற்குத் தாலிகூறையும் அசுபத்திற்கு ஆடை காஷ்ட முதலியனவுங் கொடுத் துதவுவர். இதனால் தொண்டைமண்டல வேளாளர் செத்தாலெடு ப்பிக்கவும் கடமைப்பட்டனர். இப்பதினெண் வருணத்தாருக்கும் மானியமும் உண்டு ஊருருக்குத்தொழில் பலவாறாகவும் வரும்படியும் அப்படியேபலவாறாகவும் இருப்பதினால் அவைகளை விரிக்கில்மிகப்பெரு குமென்று விட்டனம் இப்பதினெண்மரபினரில் பலபிரிவுகளிருப்பதா ல் பிரத்தியக்ஷத்தில் தொழில் செய்பவர்களை மாத்திரம் சொல்லப்ப ட்டதென்றறிக.

படவேங்கடற்கட லன்னதொல்காப்பியப் பாயிரஞ்சொல்
லிடவேங்கடலின்றி யேபனம்பாரர்மற் றெல்லைசொல்லக்
கடவேங்கடலன்ன செந்தமிழ்க்கேயென்று காட்டுதற்கு
வடவேங்கடந்தென் குமரியென்றார்தொண்டை மண்டலமே

[இதன்பொழிப்பு.]

கடல்போல் பரப்பமைந்த தமிழ்ச்சொல்லுக்கு நிலவரைப்புக் காட்டுதற்கு எல்லை யுறிகுறியாக வடக்கின்கண் வேங்கடமலையையுடைய நிலமும் தெற்கின்கண் கன்னியாகுமரி முனையையுடைய நிலமும் அகவெல்லையுமாக சூழ்நிலமாயது தொண்டைமண்டலமென்று நெடுங்கணக்கேற்படுத்திய அக்ஷரகாலமாகிய அகத்தியமென்னும் தமிழிற்கு ஆதிகாலமென்பதாம். இத்தமிழ்ச்செய்த பரமாசாரியராகிய அறுமுககடவுளிடத்து தமிழறிந்த அகத்தியரது மாணக்கர் பன்னிருவருள் திரணதூமாக்கினி யென்னும் இயற்கைப்பெயர்பூண்ட தொல்காப்பியர் தனபெயராற்செய்த தொல்காப்பியமென்னும் நூலுக்கு அகத்தியர் மாணுக்கரும் தன்னேடொருங்குற்றவருமான பனம்பாரனுர்செய்த நூலில வடவேங்கடம் தென்குமரியென்று எல்லைகூறினர். (கூகூ)

இஃது காய்சினவழுதிமுதற் கடுங்கோன் வழுதி ஈருக எண்பத்தொன்பதின்மர்பாண்டியர் 4500-வருடம் ஆண்டமதுரை இரீஇயது கடல் கொள்ளபபட்ட தெக்ஷணமதுரை இச்சங்கத்தில் அகத்தியம் ஒன்றே முதனூலாக வழங்கியது வெண்டேர்ச்செழியன் முதல் முடத்திருமாறன் ஈருக ஐம்பத்தொன்பதின்மர் பாண்டியர் ஆண்ட 3500-வருடகாலம் இடைச்சங்கம் இரீஇயது கபாடபுரம் இவவிடைச்சங்கத்தில் அகத்தியமும் தொல்காப்பியமும் வழங்கிவந்தென்றும் இதுவழி நூலாயிற்று. முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதி ஈருக நாற்பத்தொன்பதின்மர் பாண்டியர் ஆண்ட 2000-வருடம் கடைச்சங்கம் இரீஇயது தற்காலத்துள்ள உத்தரமதுரை இக்கடைச்சங்கத்தில் தொல்காப்பியமே விளங்கியதென்றும்.

இச்சங்கம் திருவள்ளுவராற் பங்கப்பட்டொழிந்தது.சுத்தசந்திரவம்சத்திற்கடையாய் அரசுபுரிந்த கூன்பாண்டியன்காலம் பின்புசோமசுந்தரன்முதல் பராக்ரமன் ஈருக நாற்பத்திரண்டு அனுலோமபாண்டியர் ஆண்டனர். ஆதிகாலத்து அகத்தியராற் செய்த பேரகத்தியம் சிற்றகத்திய மிரண்டினையும் முற்றக்கற்றுத்தத்தம் பெயரால் வேறுவேறிலக்கணமும் மாணக்கர் பன்னிருவருமொருங்குசேர்ந்து புறப்பொருட்பன்னிருபடலமும் எழுதிய காலத்துட் சிறந்த பனம்பாரனாரும் தம[illegible]த்தில் தமிழ்க்கெல்லை வடவேங்கடமென்று

கூறி யிருக்கின்றமையால் பின்னரும் புலவர்களால் காஞ்சிமண்டலம் தொண்டைமண்டலமென்று பாடப்புகுந்தபோதும் வடக்கெல்லை வடவேங்கடமென்று புகழ்ந்து கூறுவாராயின ராதலின் சிறப்புற்ற இத்தொண்டைமண்டலம் என்க.

நிலைவாழ்வுபெற்றிடும் வேளாளர்வாழிநன் னீருழவு
தலைவாழியேகம்பர் சந்நிதிவாழிசங் காழிதண்டு
சிலைவாழிவாழி திருநெடுமாறிரு வேங்கடமா
மலைவாழியெண்ணெண் கலைவாழிவாழ்தொண்டை மண்ட
[லமே.

[இதன்பொழிப்பு.]

பூமியுள்ளளவும் நிலைபெற்று புகழ்வாழ்க்கையையுடைய வேளாளர்வாழி நல்லநீர்வளமிருந்த மருத்தத்திணையையுடைய வுழவுத்தொழிற்றலைமைவாழி கச்சி யேகம்பநாதர்வாழி அவர் வீற்றிருக்கும் திருச்சந்நிதிவாழி பாஞ்சசன்னியம் சுதாசனம் தண்டம் சார்ங்கம் நாந்தகம் ஆகிய பஞ்சாயுதங்கள்வாழி அவற்றையேந்திய நெடுமால் திருவோடுவாழி அவர்க்கிடமாய்த் தமிழ்க்கெல்லையாகியபெருமைபொருந்திய திருவேங்கடமலைவாழி அவ்வெல்லையில்வழங்கும் அறுபத்துநான்குகலைகளும் வாழி அவ்வனைத்துடன் தொண்டைமண்டலம் வாழி



தொண்டைமண்டலசதகம்.

முற்றிற்று.

விக்டோரியா பிரஸ்.—வேலூர்.